# சங்க இலக்கியத்தில் இனக்குழு மரபு

முனைவர் பட்டப்பேற்றிற்காக

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு

அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**ப. கோமளா**

நெறியாளர்

**முனைவர் கோ. பழனி**

உதவிப் பேராசிரியர்



**தமிழ் இலக்கியத்துறை**

சென்னைப் பல்கலைக்கழகம்

பரிதிமாற் கலைஞர் வளாகம்

சென்னை – 600 005.

செப்டம்பர்- 2013

**முனைவர் கோ. பழனி**
உதவிப் பேராசிரியர்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
பரிதிமாற் கலைஞர் வளாகம்
சென்னை – 600 005.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**சங்க இலக்கியத்தில் இனக்குழு மரபு** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் முனைவர் பட்டத்திற்காக எனது மேற்பார்வையில் ஆய்வாளர் ப. கோமளா அவர்களால் எழுதி அளிக்கப்பெற்றது என்றும் இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(கோ. பழனி)**
மேற்பார்வையாளர்

இடம்: சென்னை
நாள்: 06.09.13

ப. கோமளா
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
பரிதிமாற் கலைஞர் வளாகம்
சென்னை – 600 005.

# ஆய்வாளர் உறுதிமொழி

**சங்க இலக்கியத்தில் இனக்குழு மரபு** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் முனைவர் கோ. பழனி அவர்களின் மேற்பார்வையின் கீழ் என்னுடைய சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்குமுன் இவ்வாய்வேடு வேறெந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

(ப. கோமளா)
ஆய்வாளர்

இடம்: சென்னை
நாள்: 06/09/2013

# நன்றியுரை

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் ஆய்வு நிகழ்த்த அனுமதியளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும் தமிழ் இலக்கியத்துறைத் தலைவர் பேராசிரியர் வீ. அரசு அவர்களுக்கும் எனது நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன். என்னை முழுநேர முனைவர்பட்ட ஆய்வாளராகச் சேர்ந்து பயில இசைவளித்து, இவ்வாய்வு முழுமை பெறுவதற்கு எல்லா நிலைகளிலும் உதவி புரிந்து ஆய்வை நெறிப் படுத்திய என் நெறியாளரும் தமிழ் இலக்கியத்துறை உதவிப்பேராசிரியருமான முனைவர் கோ. பழனி அவர்களுக்கு எனது நெஞ்சம் நிறைந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன். என்னைப் பல நிலைகளில் ஊக்கப்படுத்திய தமிழ் இலக்கியத்துறையின் உதவிப் பேராசிரியர்களான முனைவர் ய. மணிகண்டன் மற்றும் முனைவர் ஆ. ஏகாம்பரம் ஆகியோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுக்காலங்களில் பல வகைகளில் உதவிபுரிந்த அலுவலகப் பணியாளர்களாகிய திரு. ம. சுந்தர், திரு. சங்கரன், திரு. இராமச்சந்திரன் ஆகியோருக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

என் முன்னேற்றத்திற்கு வழிகாட்டியாகத் திகழும் எனது பெற்றோர் திரு. பன்னீர் செல்வம், திருமதி. பத்மாவதி, திரு. அன்பழகன், திருமதி. அம்சவள்ளி, எனது சகோதரர்கள், வாழ்க்கையில் நெருங்கிய நண்பனாய் உறுதுணையாய் விளங்கும் கணவர் திரு. சி. இராமச்சந்திரன், பல நேரங்களில் தனிமைப்பட்டுக் கொண்டு ஆய்வேடு உருவாக உதவிய என் அன்பிற்கினிய மகன் சி. ஆர். மிதுல்கிருத்திக்கிற்கு நன்றி சொல்வதைவிட இவ்வாய்வேட்டை அன்பு பரிசாய் அளிக்கின்றேன். பல நிலைகளில் உதவியாய் இருந்த குடும்பத்தினர் அனைவருக்கும் எனது நன்றி உரியது.

இவ்வாய்வேடு உருவாக உதவிய நண்பர்கள் ஏழுமலை, உத்திராடம், தேவராஜ், விஜயகாந்த், சத்யா, அமரேசன், காமாட்சி ஆகியோர்க்கும் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

மேலும், முதுகலையிலிருந்து என்னுடைய வாழ்க்கையில் முன்னேற்றமளிக்கும் வகையில் உறுதுணையாய்த் திகழும் நண்பர்கள் அனைவருக்கும் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு தொடர்பான நூல்களை வழங்கி உதவிய சென்னைப் பல்கலைக்கழக நூலகத்தாருக்கும், மறைமலையடிகள் நூலகத்தாருக்கும், கன்னிமாரா நூலகத்தாருக்கும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகத்தாருக்கும், ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகத்தாருக்கும், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவன நூலகத்திற்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ப. கோமளா

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | — | அகநானூறு |
| ஐங். | — | ஐங்குறுநூறு |
| கலித். | — | கலித்தொகை |
| குறுந். | — | குறுந்தொகை |
| சிறுபாண். | — | சிறுபாணாற்றுப்படை |
| திருமுரு. | — | திருமுருகாற்றுப்படை |
| நற். | — | நற்றிணை |
| நெடுநல். | — | நெடுநல்வாடை |
| ப. | — | பக்கம் |
| பக். | — | பக்கங்கள் |
| பட்டினப். | — | பட்டினப்பாலை |
| பதிற். | — | பதிற்றுப்பத்து |
| பரி. | — | பரிபாடல் |
| புறம். | — | புறநானூறு |
| பெரும்பாண். | — | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | — | பொருநராற்றுப்படை |
| மதுரைக். | — | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | — | மலைபடுகடாம் |
| மேலது. | — | மேற்கண்ட நூல் |

# பொருளடக்கம்

தமிழரின் தொன்மை இலக்கியமாகிய சங்க இலக்கியங்கள் குறிப்பிட்ட ஒரே காலத்தில் தோன்றியவை அன்று. பல்வேறு கால கட்டத்தில் பல்வேறு சூழல்களில் பலரால் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பே சங்க இலக்கியங்கள். அவை அகம் புறம் என்னும் பொருண்மைகளில் பாடப்பட்டிருப்பது சிறப்புக்குரிய ஒன்று. சங்க இலக்கியம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் நில அடிப்படையில் மக்களுடைய வாழ்க்கை முறையைப் பாடியிருக்கின்றது. அகமரபில் பாடப்பட்டுள்ள ஐந்திணை மக்களுடைய வாழ்க்கை, புற மரபில் சுட்டப்பட்டுள்ள ஆட்சியாளர்களின் வாழ்க்கை அனைத்தும் சமமான வாழ்க்கை நெறியினைக் கொண்டிருக்கவில்லை. பல பண்பாட்டுக்கூறுகளைக் கொண்ட இனங்கள் வாழ்ந்த பதிவுகளை சங்க இலக்கியங்கள் நல்குகின்றன. ஐந்திணை மக்கள் ஒவ்வொருவரும் நிலம், உணவு, சடங்கு, நம்பிக்கை, பழக்க வழக்கம், கலை, தொழில் உள்ளிட்ட பண்பாட்டுக்கூறுகளால் வேறுபாடுடையவர்களாகக் காணப்படுகின்றனர். அவ்வாறே இனக்குழு வாழ்க்கையின் அழிவையும் வேந்தர்களின் அரச உருவாக்கத்தினையும் எடுத்துரைக்கும் சங்க இலக்கியங்கள் இனக்குழு மரபு காலந்தோறும் பெற்ற வளர்ச்சி மாற்றம் ஆகியவற்றையும் புலப்படுத்தியுள்ளது.

உலக மனித இனம் உடலாலும் வாழும் புவி அமைப்பாலும் வேற்றுமையுடன் காணப்படுகின்றது. மக்களுடைய வாழ்க்கை முறை, சமூக பழக்க வழக்கம் உள்ளிட்ட பண்பாட்டுக் கூறுகளால் பல குழுக்களாக பிரிந்துள்ளனர். பொருளாதாரம், தொழில் உள்ளிட்ட சமூக காரணிகளால் மேலும் பல உட்குழுக்களாக பிரிந்து காணப்படுகின்றனர். இத்தகைய இனங்களின் குழு வாழ்க்கையைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்திருக்கின்றன. சங்க இலக்கியத்தில் இனக்குழு வாழ்க்கையின் முழு பதிவு காணமுடியவில்லை என்றாலும் அவற்றின் எச்சங்களை கொண்டு மரபாக கட்டமைக்க முடியும்.

## ஆய்வுத் தலைப்பு

சங்க காலத்தில் நிலவிய சமூகத்தை மானிடவியல் கோட்பாட்டு முறையில் அணுகுவது தமிழர் வரலாற்றை மானிடவியல் வரலாற்றோடு வெளிவரச் செய்யும். எனவே சங்க இலக்கியத்தில் இனக்குழு மரபு என்னும் தலைப்புத் தேர்வு செய்யப்பட்டுள்ளது.

## ஆய்வின் நோக்கம்

சங்க இலக்கியம் சுட்டும் ஐந்திணை மரபிற்குரிய மக்கள் அகம் மற்றும் புற வாழ்க்கையில் பல்வேறு வேறுபாடுடையவர்களாகக் காணப்படுகின்றனர். திணை மக்கள் வாழும் இடம், உணவு, தொழில், சடங்கு, கலை, முதலான கூறுகளால் வேறுபட்டுள்ளனர். ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட வாழ்வாதாரமும் நிலமும் காணப்படுகின்றன. இவற்றை சங்க இலக்கியங்களில் தொடர்ச்சியாக காணமுடியவில்லை. தற்போது கிடைக்கக்கூடிய பதிவுகளை அடிப்படையாகக் கொண்டு ஐந்திணை மக்களுடைய வாழ்க்கையை ஆய்வு எடுத்துரைக்கிறது. எட்டுத்தொகையில் ஐந்திணை சார்ந்த பாடல்கள் காணப்படுகின்றன. அவற்றுள் திணை பகுப்பு தொகுப்பாளர்களாலும் சில நூல் அமைப்பிலும் இயல்பாக அமைந்திருக்கின்றன. பத்துப்பாட்டு எட்டுத்தொகையினின்று பாடல் அமைப்பால் வேறுபட்டிருக்கின்றது. அதன் ஒவ்வொரு இலக்கியமும் ஒவ்வொரு ஆசிரியர்களால் பாடப்பட்டுள்ளன. அவற்றில் திணை அமைப்பு இலக்கிய வரிசையிலும் பாடல் வரிகளாலும் பின்பற்றப்பட்டுள்ளன. எனவே எட்டுத்தொகை பத்துப்பாட்டு ஆகிய இலக்கியங்களில் பாடப்பட்டுள்ள ஐந்திணை மக்களுடைய வாழ்க்கையில் காலந்தோறும் ஏற்பட்ட மாற்றங்கள், வளர்ச்சி, இனக்குழு வாழ்க்கையிலிருந்து தொடர்ந்த மரபுகள் ஆகியவற்றை ஆராய்வதே ஆய்வின் நோக்கம்.

## ஆய்வின் எல்லை

**சங்க இலக்கியத்தில் இனக்குழு மரபு** என்னும் தலைப்பிலான ஆய்வுக்கு சங்க காலத்தில் தோன்றிய இலக்கியங்களாகிய எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் ஆய்வின் எல்லைகளாக அமைகின்றன.

## ஆய்வு ஆதாரங்கள்

**சங்க இலக்கியத்தில் இனக்குழு** மரபு என்னும் தலைப்பிலான ஆய்விற்கானத் தரவுகள், இருநிலைகளில் சேகரிக்கப்பட்டுள்ளன. அவை,

1. முதன்மைத் தரவுகள்
2. துணைமைத் தரவுகள்

## 1. முதன்மை தரவுகள்

சங்க கால இலக்கியங்களாகிய எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் முதன்மை ஆதாரங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## 2. துணைமை ஆதாரங்கள்

மானிடவியல் மற்றும் சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வு நூல்கள், கட்டுரைகள், பல்கலைக்கழக ஆய்வேடுகள், கருத்தரங்க ஆய்வுக் கோவைகள், கலைக்களஞ்சியங்கள், அகராதிகள் முதலியன துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

சங்க இலக்கியத்தில் இனக்குழு மரபு என்னும் இந்த ஆய்வு வரலாற்றுமுறை, தொகுப்புமுறை, பண்பாட்டுமுறை ஆகிய ஆய்வு அணுகுமுறைகளைக் கொண்டுள்ளது.

## ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியம் குறித்து பல ஆய்வு நூல்கள் வெளிவந்துள்ளன. குறிப்பாக மானிடவியல் நோக்கில் கா. சுப்பிரமணியன் சங்ககால சமுதாயம், பெ. மாதையன்- சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், சங்க இலக்கியத்தில் குடும்பம், தமிழ்ச் செவ்வியல் படைப்புகள், ராஜ் கௌதமன் - பாட்டும் தொகையும், ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், கா. சிவத்தம்பி - பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி, பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் நாடகம், பக்தவத்சல பாரதி - மானிடவியல் குறித்த நூல்கள் முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

## ஆய்வேட்டின் அமைப்பு

சங்க **இலக்கியத்தில் இனக்குழு** மரபு — என்னும் தலைப்பிலான இந்த ஆய்வேடு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை,

1. தமிழக ஆய்வுச் சூழலில் மானிடவியல்
2. ஐந்திணை மக்களின் வாழ்வியல்
3. இனக்குழு சடங்குமுறைகளும் மாற்றங்களும்
4. இனக்குழு வாழ்வாதாரம் - போர் நடவடிக்கைகள்
5. இனக்குழு கலை மரபுகள் என்பன.

## இயல் - 1 தமிழக ஆய்வுச் சூழலில் மானிடவியல்

மனிதனைப் பற்றிய அறிவியல் ஆராய்ச்சியே மானிடவியல். மானிடவியல் மேலைநாட்டு ஆய்வுத்துறைகளில் ஒன்று. எனவே மானிடவியல் துறையின் தோற்றம், வளர்ச்சி போன்ற வரலாற்றை மேலைநாட்டு மானிடவியல் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு இத்துறை குறித்த வரலாறு கூறப்பட்டுள்ளது. மானிடவியலின் உட்பிரிவாக விளங்கக் கூடிய பண்பாட்டு மானிடவியல் அதன் பிரிவுகள் ஆகியன விளக்கப்பட்டுள்ளது. இந்திய மானிடவியல் துறையின் தோற்றம், வளர்ச்சி, மானிடவியல் அறிஞர்கள், ஏற்படுத்திய நிறுவனங்கள் ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன.

தமிழகச் சூழலில் மானிடவியல் அறிமுகம் நாட்டார் வழக்காற்றியல் துறை சார்ந்து நிகழ்ந்தது, பின்னர் அதற்கான துறை உருவாக்கம், தற்போது நடைபெற்ற ஆய்வுகள் போன்ற தகவல்கள் கொடுக்கப்பட்டுள்ளன. சங்க இலக்கியம் ஒரு இலக்கிய தரவாக இருப்பதினால் அவற்றை மேற்கொள்ள இலக்கிய மானிடவியல் உதவும் பாங்கு, இலக்கிய மானிடவியல் ஆய்வு வரலாறு, அணுகுமுறை முதலான விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இனக்குழு ஆய்வு சங்க இலக்கியத்தில் நிகழ்த்தப்படுவதற்கான தேவை எடுத்துரைக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தை மானிடவியல் நோக்கில் ஆராய்ந்தவர்களுடைய நூல்கள் போன்றவற்றை விவரிப்பதாக இவ்வியல் அமைகிறது.

## இயல் - 2 ஐந்திணைகள் காட்டும் மக்களின் வாழ்வியல்

சங்க இலக்கியங்களாகிய எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் அகம் புறம் என்ற பொருண்மை அடிப்படையில் பாடப்பட்டுள்ளன. இவற்றிற்கு திணை அமைப்பு முக்கிய காரணியாக விளங்குகிறது. இவ்விரு திணை மக்களும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் நிலப்பகுதிகளில் வாழ்ந்துள்ளனர். எனவே சங்க இலக்கியப் பாடல்களில் இடம்பெற்றுள்ள ஐந்திணை மக்களுடைய வாழ்க்கை முறைகளை திணைவாரியாகப் பிரித்து அவர்களுடைய வாழ்க்கை முறைகளை

ஆய்வுச் சுட்டிக்காட்டியுள்ளது. திணை சார்ந்த மக்களுடைய நிலம், இருப்பிடம், தொழில், உணவு, பழக்க வழக்கம், சடங்கு, கலை முதலான கூறுகளைப் பாடும் பாடல்களைத் தொகுத்து இவ்வியல் கொடுத்துள்ளது.

## இயல் - 3 இனக்குழு சடங்குமுறைகளும் மாற்றங்களும்

சங்க இலக்கியம் ஐந்திணை மக்களுடைய வாழ்வியலைச் சுட்டியுள்ளது. அவர்களுடைய வாழக்கையில் நடைபெற்ற சடங்குகள் தொன்மை வாய்ந்தவையாக உள்ளன. இயற்கையிடமிருந்து தங்களைக் காத்துக்கொள்ளவும் தங்களுக்கு வேண்டியவற்றை நிறைவேற்றிக் கொள்ள செய்யப்பட்ட மழைச்சடங்கு திணை வாரியாக எவ்வாறு நிகழ்த்தப்பட்டது என்பதை ஆய்வு எடுத்துரைத்துள்ளது. மேலும் மழைப்பற்றி அக்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட நிமித்தங்கள், மழை பெய்யும் தன்மை அல்லது மழை வருவதற்கான கூறுகள் காலந்தோறும் எவ்வாறு மாற்றமடைந்துள்ளன போன்ற செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. தெய்வீக ஆவி, உயிர்ப் பலி முதலியவற்றில் நம்பிக்கை கொண்ட மக்கள் நிகழ்த்திய வெறியாட்டு சடங்கு, நிகழ்த்து முறை, நிகழத்துநர், நிகழ்த்தப்பயன்படுத்தப்பட்ட பொருட்கள், வெறியாட்டு நிகழ்ச்சியின் தலைவனாக விளங்கக் கூடிய முருகன் காலந்தோறும் அடைந்த மாற்றம் ஆகியன குறித்துரைக்கிறது. திணை மக்களுடைய திருமணச் சடங்கு நிகழ்த்து முறை குறித்து விளக்கப்பட்டுள்ளது. இறந்த வீரர்களின் நினைவாக எடுக்கப்பட்ட நடுகற்கள் மக்களின் வழிபாட்டு மரபிற்குள் வந்தடைந்த முறை சங்கப் பாடல்களின் வழி எடுத்துரைத்துள்ளது.

## இயல் - 4 இனக்குழு வாழ்வாதாரம்- போர் நடவடிக்கைகள்

ஐந்திணை மக்களுடைய வாழ்வாதாரங்களை அகப்பாடல்களில் உணவு என்றும் புறப்பாடல்களில் போர்நடவடிக்கைகளாகவும் ஆய்வு அணுகியுள்ளது. ஐந்திணை மக்கள் நில அமைப்பால் வேறுபட்ட வாழ்வாதாரங்களைக் கொண்டுள்ளனர். திணை மக்களுடைய உணவு சேகரிப்பு, உணவு உற்பத்தி, உணவுப் பகிர்வு ஆகியவற்றில் குழு செயல்பாடு காணப்படுகின்றது. குழுவாக

செயல்படும் இனங்களிடம் ஆண் பெண் பணி பாகுபாடுள்ளது. அவை திணைக் கேற்ப மாற்றம் அடைந்திருப்பதை ஆய்வு சுட்டிக்காட்டியுள்ளது. போர் நடவடிக்கைகளில் இனக்குழு வாழ்க்கை முறையை மேற்கொண்டு வாழ்ந்த சீறூர் மன்னர்களுடைய வாழ்வாதாரம் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. புன்செய் வேளாண்மை, வெட்சி கரந்தை போர்கள் எவ்வாறு முல்லை நில மக்களால் செய்யப்பட்டுள்ளன என்பது விளக்கப்பட்டுள்ளது. குறுநில மன்னர்களின் ஆட்சி முறை பற்றி விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.

### இயல் - 5 இனக்குழு கலை மரபுகள்

சங்ககால மக்கள் கலைகளில் சிறந்திருந்தனர். அக்கலைகளைத் திணை சார்ந்த மக்களுடைய கலை மரபு என்றும் கலையைத் தொழிலாகக் கொண்ட மக்களுடைய கலை மரபு என்றும் இரண்டு வகைகளில் நோக்குகிறது. திணை சார்ந்த மக்களுடைய கலை மரபில் இசை, கூத்து ஆகிய கலைகள் பற்றி ஆராயப்பட்டுள்ளது. தொழில் முறை கலைஞர்களாக விளங்கும் ஆற்றுப்படைக் கலைஞர்களான பாணர், கூத்தர், பொருநர், விறலி ஆகியோரின் கலைப்பணி, வாழ்க்கைமுறை ஆகியவை எட்டுத்தொகை பத்துப்பாட்டு இலக்கியங்களிலிருந்து அறியப்பட்டுள்ளன. இக்கலைஞர்களே அன்றி பிற கலைஞர்கள் பற்றியும் இவ்வியல் ஆராய்ந்துள்ளது.

### மதிப்பீடு

சங்க இலக்கியத்தில் இனக்குழு மரபு என்னும் தலைப்பிலான இந்த ஆய்வில் கண்டறிந்த முடிவுகள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளது.

### துணைநூற் பட்டியல்

ஆய்விற்குத் துணைநின்ற நூல்கள் குறித்தத் தரவுகள் துணைநூற் பட்டியலாகத் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது.

உலகில் தோன்றிய உயிரினங்களுள் சிந்தனையும், ஆற்றலும், அதிகாரமும் பெற்றது மனித இனம். காட்டுமிராண்டி வாழ்க்கையிலிருந்து இன்றுவரை மனித ஆளுமை பல்வேறு பயணங்களை மேற்கொண்டு பல கண்டுபிடிப்புகளைக் கண்டுள்ளது. ஒவ்வொரு காலக்கட்டத்திற்கேற்ப மனித வரலாறு மாற்றமடைந்துள்ளது. மனித வாழ்க்கை வரலாற்றை வாழ்ந்த வாழிடங்களும், பயன்படுத்திய பொருட்களும், படைக்கப்பெற்ற கலைகளும், இலக்கியங்களும், தொன்மங்களும், புராணங்களும், வழக்காறுகளும், தொல்லியல் சான்றுகள் முதலான பிற ஆவணங்களும் பதிவு செய்துள்ளன. இப்பதிவுகளைக் கொண்டு மனித பரிணாமவளர்ச்சி அறிவியல் அணுகுமுறையில் மீட்டுருவாக்கம் செய்யும் முயற்சி நடைபெற்றுவருகிறது.

மனித இனங்களின் வளர்ச்சிவரலாறு குறித்த அறிவார்ந்த துறையாகவும், அறிவியல் துறையாகவும் விளங்குவது மானிடவியல். மேற்கத்திய அறிவுப்புலங்களுள் ஒன்றான மானிடவியல் தமிழில் இடம்பெறக் காரணமாக விளங்கியவர்கள் மேலைநாட்டினர். எனவே இவ்வியல் மேற்கத்திய மானிடவியல் வரலாற்றிலிருந்து தமிழக மானிடவியல் சூழலையும் இணைத்து ஆராய்கிறது.

## மானிடவியல்

மனிதனைப் பற்றிய அறிவியல் ஆராய்ச்சியே மானிடவியல். மனித இனத்தின் தோற்றம், வளர்ச்சி, சமூக அமைப்பு, பழக்க வழக்கம், பண்பாடு, நாகரிக நிலை ஆகியவற்றைப்பற்றி அறிவியல் அடிப்படையில் ஆராய்வது மானிடவியல் எனும் துறையாகும். இது மனித வாழ்க்கையை உயிரியல் நிலையிலும் பண்பாட்டு நிலையிலும் மீட்டுருவாக்கம் செய்யும் வகையில் தோன்றியது என்பர். மானிடவியல் எனும் அறிவுத்துறை மனித இனம், அதன் பண்பாடு, சமூகங்களின் அமைப்புகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், உறவுமுறைகள், மொழிக்கூறுபாடுகள் ஆகியவற்றையெல்லாம் கணக்கிலெடுத்துக் கொண்டு முழு மனிதனை அடையாளங்காண முயலுகிறது. காலத்தாலும் அதன் எல்லைகள் மிக விரிந்தவை[1] என்ற ப. மருதநாயகத்தின் விளக்கம் மானிடவியல் துறையின் நோக்கம் மற்றும் பரப்பை எடுத்தியம்புகிறது.

மனிதனைப்பற்றிய முழுமையான படிப்பாகவும், மனிதனின் சூழல் சார்ந்த வெளிப்பாடாகவும் மானிடவியல் அமைகிறது. சமூகத்தின் தோற்றம், வளர்ச்சி, வளர்ச்சிக்குரிய காரணிகள் முதலானவற்றை வரலாற்று நோக்கிலும், பண்பாட்டு

நோக்கிலும் ஆராய்வதை மானிடவியல் தலையாய நோக்கமாகக் கொண்டுள்ளது எனலாம்.

**மானிடவியல் தோற்றமும் வளர்ச்சியும்**

மனித பரிணாம தோற்றம், வளர்ச்சி குறித்துத் தத்துவார்த்த நிலையிலும், அறிவியல் நிலையிலும் அறிஞர்கள் உருவாக்கிய சிந்தனை மரபே மானிடவியல் தோற்றத்திற்குக் காரணமாய் நின்றன. தொடக்ககால மானிடவியல் ஆய்வு பயணிகளாலும், சமயப் பரப்பிகளாலும், அரசு அதிகாரிகளாலும் நிகழ்த்தப்பட்டது. கல்வி சார்ந்து ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் கி.பி. 1884-ஆம் ஆண்டு சர். எட்வர்ட் பர்னட் டைலர், மானிடவியல் துறைக்குப் பொறுப்பேற்ற பின்னரே முறைப்படியான தோற்றத்தைப் பெற்றது எனலாம். இதனையடுத்து உலகம் முழுவதும் மானிடவியல் துறைக்கெனத் தனி அங்கிகாரம் கிடைத்தது.

கி.பி. 18-ஆம் நூற்றாண்டுவரை மானிடவியல் ஆய்விற்கானத் தரவுகள் இரண்டாம் நிலையில் பல்வேறு தரப்பில் சேகரிக்கப்பட்டன. கி.பி. 17,18-ஆம் நூற்றாண்டுகளில் தத்துவார்த்த நிலையில் பல்வேறு துறைசார்ந்து அறிஞர்கள் சிந்தித்து ஆய்வு மேற்கொண்டனர். அதன் விளைவாக ஆய்விற்கான சில விதிகள் உருவாக்கப்பட்டன. மனித சமூகம் பற்றிப் பல்வேறு நிலையில் ஆராய்ந்தமையால் இந்நூற்றாண்டு அறிஞர்கள் மானிடவியல் முன்னோடிகள் என்றும் தொன்மை மானிடவியலாளர் என்றும் அழைக்கப்பட்டனர். மானிடவியல் சார்ந்து மனித வரலாறு மூன்று வகையாக பாகுபடுத்தப்பட்டது.

1. வேட்டை நிலை (அ) விலங்காண்டி நிலை (Hanting or Saragery)

2. ஆயர் நிலை (அ) காட்டாண்டி நிலை (Herding or Borbarism)

3. நாகரிக நிலை (Civilization)[2]

மேலும், கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் மானிடவியலாளர்கள் திணைக்குடிகள் பற்றிய ஆய்வில் ஈடுபட்டனர்.

கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் மானிடவியல் ஆய்விற்கான பல்வேறு நிறுவனங்கள் தொடங்கப்பட்டு ஆய்வுகள் நடைபெற்றன. குறிப்பாக இக்காலத்தில் டார்வின் பரிணாமக் கொள்கை (Evaluations) வெற்றிபெற்று மானிடவியல் ஆய்வுப்புலம்

விரிவடையக் காரணமாக இருந்தது. கி. பி. 20-ஆம் நூற்றாண்டில் மனிதத் தொடர்புகளும், பல்வேறு கண்டுபிடிப்புகளும் பெருகியதின் காரணமாகப் பல்வேறு துறைசார்ந்து கோட்பாடுகள் உருவாக்கப்பட்டன. இவற்றின் பயனாக மானிடவியல் ஆய்வு நெறிமுறைகள் மிகத் துல்லியமாக வரையறுக்கப்பட்டன. மானிடவியல் துறை விரிவடையும் பொருட்டுப் பல்வேறு கழகங்களும், நிறுவனங்களும் உருவாக்கப்பட்டன. அத்துடன் மானிடவியல் பயிற்சி மையங்களும் தொடங்கப்பட்டன. இவ்வாறு வளர்ச்சியடைந்த மானிடவியல்துறை இன்று பல்வேறு பிரிவுகளாக விரிந்துள்ளது. ஆதிகாலம் தொடங்கி இன்றுவரை சமூகம் அடைந்த பரிணாமவளர்ச்சி வரலாற்றைப் பண்பாட்டு நோக்கில் பகுத்தறிவு அணுகுமுறையில் ஆராயும் போக்கு சமகாலத்தில் நிலவுகிறது.

புத்தாய்வுக் காலத்திற்கு முந்தைய அறிஞர்களும், புத்தாய்வுக்கால அறிஞர்களும், அறிவொளிகால சிந்தனையாளர்களும் உருவாக்கிய அறிவார்ந்தக் கொள்கை மானிடவியல் வளர்ச்சிக்கு அடிப்படையாய் அமைந்தது. இதனைத் தொடர்ந்து ஐரோப்பியக் காலனி ஆதிக்க அதிகாரிகள் மேற்கொண்ட நடவடிக்கைகள் மானிடவியலின் வளர்ச்சிக்குத் துணைநின்றன. இக்காலக்கட்டத்தில் அறிவுத்துறையில் ஏற்பட்ட வளர்ச்சிக் காரணமாக மானிடவியல்துறை பல்வேறு புத்தாய்வுகளைச் செய்துவருகிறது.

### இந்திய மானிடவியல் வளர்ச்சி

ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னரே இந்தியாவில் மானிடவியல் துறை உருவானது. மனிதனையும் இயற்கையையும் அறிவியல் முறைப்படி ஆராயும் நோக்கில் மானிடவியல் கழகம் வங்க ஆசிய கழகத்தோடு இணைந்து (Asiatic Society Bengal) தோற்றுவிக்கப்பட்டது. இந்திய மானிடவியல் கல்விச் சார்ந்து முறைப்படியாகக் கல்கத்தா பல்கலைக்கழகத்தில் முதன் முதலில் 1920-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இதன் பின்னர் இந்திய மானிடவியல் மதிப்பாய்வகம் (Anthropological survey of India) உருவாக்கப்பட்டது[3].

இந்திய மானிடவியல் துறையை வளர்த்தெடுத்து இந்திய மானிடவியல் துறையின் தந்தையாக விளங்குபவர் சரத் சந்திர ராய்; இவருடன் ரைஸ்லி, தஸ்டன், வெர்ரிஸர் எல்வின், ரஸ்ஸல், குரூக், மில்ஸ், அனந்த கிருஷ்ண ஐயர், ஏரன்பெஃல்ஸ், மஜூம்தார், எஸ். சி. தூபே, குர்ரே சுர்ஜித் சின்கா ஆகியோர் இந்திய மானிடவியல்

வளர பணியாற்றினர். இத்துறைக்காக இவர்கள் செய்த பணிகளை நூல்களாக வெளியிட்டனர்[4].

இந்திய இனக்குழுவியல் ஆய்வு தொடக்ககாலத்தில் பழங்குடி மக்களின் பண்பாட்டையும், ஊரக மக்களின் வாழ்க்கைமுறைகளையும் பற்றியத் தரவுகளே சேகரிக்கப்பட்டன. அவ்வாறு தொகுத்தச் செய்திகளைத் தனி நூல்களாகவும், வங்க ஆசியக் கழகத்தின் ஆய்விதழ் (Journal of the Asiatic Society of Bengal), இந்தியப் பழம்பொருள் (Indian Antiquary)[5] ஆகிய ஆய்விதழ்களில் கட்டுரைகளாகவும் வெளியிட்டனர்.

இரண்டாம் உலகப்போருக்கு முன்னர் தனித்தியங்கிய இந்திய மற்றும் அமெரிக்க மானிடவியலாளர்கள் பின்னர் ஒன்றிணைந்து புதிய அணுகுமுறைகளை உருவாக்கினர். அதன்படி கள ஆய்வின்மூலம் தரவு சேகரித்தல், மக்களோடு வாழ்ந்து பண்பாட்டுக்கூறுகளை உற்றுநோக்கல் முதலான கொள்கைகள் செயல்படுத்தப்பட்டன. அமெரிக்கர்களின் பங்களிப்பிற்குப் பிறகு இந்தியமானிடவியல், இந்தியச் சூழலுக்கேற்ப நெறிப்படுத்தப்பட்டதோடு சமூக நலப்பணித் திட்டங்கள் குறித்த எடுகோள்களும் ஏற்படுத்தப்பட்டன. காலமாற்றத்திற்கேற்ப இந்திய மானிடவியல் தரவுகள் தொகுக்கப்பட்டு கொள்கைசார்ந்து பகுத்தாராயப்பட்டன.

**மானிடவியல் உட்பிரிவுகள்**

பல்துறை சார்ந்த அறிவுத்தேடலாக மானிடவியல் செயல்படுவதினால் அவற்றுள் பல உட்பிரிவுகள் உருவாகின என்று மானிடவியல் அறிஞர்களும், மானிடவியல் பற்றிய ஆராய்ச்சி நூல்களும், கட்டுரைகளும் தெரிவிக்கின்றன. மானிடவியல் உட்பிரிவுகளை நான்கு பிரிவுகளாக பிரித்துக்காட்டுகிறார் பக்தவத்சல பாரதி. அவை,

1. உடல்சார் மானிடவியல் (Physical anthropology)
2. பண்பாட்டு மானிடவியல் (Cultural anthropology)
3. தொல்லியல் (Archaeology)
4. மொழியல் (Linguistics)[6]

மானிடவியல் உலக அளவில் மக்களை ஆய்வுக்குட்படுத்துவதால் ஆய்வுத் துறைகள் நாளுக்கு நாள் விரிவடைந்துக்கொண்டே செல்லும் என்கின்றனர் ஆய்வாளர்கள்.

பண்பாட்டு மானிடவியல் பிரிவை அடிப்படையாகக் கொண்டு ஆய்வு நிகழ்த்தப்படுவதால் அவை குறித்த விளக்கங்கள் மட்டும் இங்கு விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**பண்பாட்டு மானிடவியல்**

மானிடவியலின் முக்கியப் பிரிவாகப் பண்பாட்டு மானிடவியல் விளங்குகிறது. பண்பாடு மட்டுமே ஏனைய உயிர்களிடமிருந்து மனிதனைத் தனித்துவப்படுத்திக் காட்டுகிறது. பல்வேறு இனமக்களிடையே நிலவும் பண்பாடுகளைத் தொடக்கக் காலம் முதல் இம்மானிடவியல் ஆராய்கிறது. பண்பாட்டு வளர்ச்சிகளையும் அதன்மூலம் நிகழ்ந்த மாற்றங்களையும், சமகாலச்சமூக நடத்தைகளோடு பொருத்திப் பார்க்கிறது. பண்பாட்டு மானிடவியலின் தலையாய பிரிவுகளாக இனக்குழுவியல் (ethnography), இனக்குழு ஒப்பாய்வியல் (ethnology) ஆகியவற்றைக் கூறுகிறார் பக்தவத்சல பாரதி. மேலும், பண்பாட்டுமானிடவியல் ஆய்வு அறிஞர்களின் அணுகுமுறைகளில் வேறுபாடுகள் காணப்பட்டதால் அவை பண்பாட்டு மானிடவியல், சமுதாய மானிடவியல் என்னும் இரு பிரிவுகளில் விளங்கியதாகக் குறிப்பிட்டுள்ளார்.

பண்பாட்டு மானிடவியல் அமெரிக்க மானிடவியல் மரபையும், சமுதாய மானிடவியல் ஆங்கிலேய மானிடவியல் மரபையும் கொண்டிருந்தது. அமெரிக்க மானிடவியலானது உடல்சார் மானிடவியல், இனக்குழு ஒப்பாய்வியல், தொல்லியல், மொழியியல் ஆகிய பிரிவுகளைப் 'பண்பாடு' என்னும் கோட்பாட்டின்கண் ஒன்றிணைத்துப் புதிய முறையியலுடன் ஒரு முழுதளாவிய, விரிவானத் துறையாக வளர்ச்சி பெற்று[7] ஆங்கிலேய மானிடவியல் சமுதாயத்தை ஆராய்வதில் அதிகம் ஆர்வம் காட்டியது. சமுதாய மானிடவியலார் சமுதாய உறவுகளைப் (social relations) படிப்பதையே முதன்மையான ஆய்வுப் பரப்பாகக் கொண்டுள்ளனர். குறிப்பாக, குடும்பம், உறவுமுறை, வயது அடிப்படைக் குழுக்கள் (age groups), அரசியல் அமைப்புச் சட்டம், சமயம், பொருளாதாரச் செயல்கள் போன்றவற்றை ஆராய்வர். அவை அனைத்தையும் சமுதாய அமைப்பு (social structure) என்ற பெருந்தலைப்பின் கீழ் ஆராய்கின்றனர்[8]. அமெரிக்க மற்றும் ஆங்கிலேய மானிடவியல் ஆய்வு முறையைக் கொள்கைகளுக்கேற்ப வேறுபாடுகளைக் கொண்டிருந்தாலும் ஆய்வுக்குரிய தளம் இனக்குழுவியல், இனக்குழு ஒப்பாய்வியல் ஆகியவற்றைச் சார்ந்திருந்தது எனலாம்.

**இனம் - வரையறை**

பல்வேறு இனங்களின் வாழ்வியல் விழுமியங்கள் பண்பாடாக உருவாவதால் இனங்குறித்து விளக்குவது இன்றியமையாததாயிற்று. இனம் என்னும் சொல்லுக்கு நிகரான Race எனும் ஆங்கிலச் சொல்லிற்குத் தமிழில் வர்க்கம், குலம், சுற்றம், நிரை, ஒப்பு[9] என்று பொருள் வழங்கப்படுகின்றது. இவற்றுள் இனம் என்பது வர்க்கம் என்ற பொருளில் பயன்படுத்தப்படுகிறது. ஆங்கிலத்தில் Race என்ற சொல்லிற்கு பொதுமரபில் இணைந்த குழு, மூலக்குடி மரபுக்குழு, கால்வழிக்குழு, வழிமரபு, பொதுமரபுடைய குலத்தொகுதி, பொதுவான சிறப்புக் கூறுகளையுடையவர்களின் தொகுதி என்று சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலம் தமிழ் அகராதி விளக்கம் அளிக்கிறது.

மனித இனம் புவி மற்றும் வாழ்வியல் கூறு முதலான சூழல்களால் வேறுபட்டுக் காணப்படுகிறது. இவற்றால் உடலமைப்பிலும் மாறுபட்டுக்காணப்படுகிறது. இத்தகைய வெவ்வேறு கூறுகள் குறித்தும் மானிடவியல்துறை ஆராய்கிறது. மனித இனம் (Mankind) பல வேறுபாடுகள் உள்ள மக்களைக்கொண்டது. இந்த வேறுபாடுகள் உடல் அமைப்பையோ (Morphological fealure) அல்லது உடல் அளவையோ அடிப்படையாகக் கொண்டிருக்கலாம். இவை இணக்கத்துக்கு உட்படாதவை (Non adaptive) களாகவும், ஒரு பொதுக்கால் வழி (Common Descent) வந்தவைகளாகவும் இருக்கும். இப்படிப்பட்ட பிரிவுகளையே இனம் என்கிறோம்.[10] இனங்களின் தோற்ற வேறுபாட்டை அடிப்படையாக வைத்தே பண்பாட்டாய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதன்மூலம் ஒவ்வொரு இனக்குழுவுக்கும் தனித்தப் பண்பாடுகள் உருவாகின்றன.

**இனக்குழு உருவாக்கம்**

உலக மக்கள் உடலியல் அமைப்பிலும் சூழல் அடிப்படையிலும் பல வேறுபாடுகளுடன் காணப்படுகின்றனர். இவ்வேற்றுமைகள் அவர்களைப் பல குழுக்களாக அடையாளப் படுத்துகின்றன. இவ்வாறு உருவாகும் குழுக்களைப் பொருளாதாரம், தகுதி, தொழில் அடிப்படையில் சமூகப்படிகள் ஏற்படுத்தப்பட்டு மேலும் பல உட்குழுக்களாகப் பகுக்கப்படுகிறது.

இனங்களிடம் நிலவும் வேறுபாடுகள் பல இனக்குழுக்களை உருவாக்குகின்றன. இனமும் பண்பாடும் நேரடித் தொடர்பு கொண்டுள்ளமையால் பண்பாடு தொடர்பான ஆய்வுகள் நிகழ்த்த ஏதுவாக அமைகிறது. இரு இனத்திற்குரிய பண்பாட்டில் காணப்படும் ஒற்றுமை, வேற்றுமை, அவற்றிற்கிடையேயான தொடர்ச்சி போன்றவற்றை மானிடவியலாளர்கள் ஆராய்வது முதன்மை நோக்கமாக அமைந்தது.

**இனக்குழுவியல் வரையறை (Ethnography)**

பண்பாட்டுமானிடவியல் ஆய்விற்குரிய அடிப்படைகளுள் ஒன்று இனக்குழு வியலாகும். இனவரைவியல் எனும்சொல் Ethnography எனும் ஆங்கிலச்சொல் ethnos, graphien ஆகிய கிரேக்க மூலச் சொற்களிலிருந்து உருவானது. Ethnos எனும் சொல் race, ethnic group, people, என்ற பொருள்களை உடையது[11]. புவியமைப்பாலும், மொழியாலும், வாழ்முறை உள்ளிட்ட சூழல்களாலும் உருவான இனக்குழுக்களைப்பற்றி எழுதுதலே இனவரைவியல் (Ethnography) எனப்படுகிறது.

இனவரைவியலானது ஓர் இனக்குழுவைப் பற்றிய முழுமையான படிப்பு என்றும், ஒரு தனிப்பட்ட சமூகத்தின் பண்பாட்டை முழுமையாகப் புரிந்துகொண்டு அவற்றை முறையாகத் தொகுத்து வழங்கல் என்றும் பொருள் கொள்ளலாம்[12] என்கிறார் அரு. பரமசிவன். ஓர் இனக்குழுவைப் பற்றிய முழுமையான புரிதல் என்னும் நிலையில் இப்பிரிவு ‘இனக்குழுவியல்’ என்று அழைக்கப்படுகிறது[13] என்று வரையறுத்துள்ளார் பக்தவத்சல பாரதி.

ஒரு குறிப்பிட்ட பண்பாட்டுச் சூழலைக்கொண்டு கூட்டு வாழ்க்கையை மேற்கொள்ளும் இனக்குழுக்களுடைய ஒட்டுமொத்த வாழ்வியற்கூறுகளை வரையறுப்பதே இனக்குழுவியல் என்று மேற்காணும் அறிஞர்களின் கருத்துக் களிலிருந்துப் பெறமுடிகிறது.

**இனக்குழு ஆய்விற்கான முதன்மைக் கூறுகள்**

மக்கள் வாழுமிடங்களை ஆய்வுக் களமாகக் கொண்டு இனக்குழுவியல் செயல்படுகிறது. ஒவ்வொரு சமூகத்தினுடைய அகப்புறப் பண்பாடுகளையும் அறிவியல் நோக்கில் ஆராய்வது இனக்குழுவியலின் தலையாய நோக்கமாகும். சமூகத்தைப் பற்றிய விரிவான, முழுமையான அறிவினை எடுத்தியம்பும் இனக்குழுவியல் ஆய்வுத்

தொகுப்பில் இடம்பெற வேண்டிய முக்கியக் கூறுகள் குறித்து சமூகப் பண்பாட்டு மானிடவியலாளர் தொகுத்துரைத்துள்ளனர். ஒரு குறிப்பிட்ட இனக்குழு பற்றிய ஆய்வினை மேற்கொள்ளும்போது அவ்வினக்குழுவின் புவிச்சூழல் (topography), சுற்றுச்சூழல் (environment), காலநிலை (climate), குடியிருப்பு முறை (settlement pattern), பொருள்சார் பண்பாடு (material culture), குடும்ப அமைப்பு, உறைவிடமுறை (residence pattern), வாழ்வியற் சடங்குகள், குழந்தை வளர்ப்பு முறை, பண்பாட்டுவயமாக்குமுறை (enculturation), மக்களின் உளவியற் பாங்குகள், மணக்கொடை, மணவிலக்கு முறை, வாழ்க்கைப்பொருளாதாரம் (subsistence economy), தொழிற்பகுப்பு (division of labour), உற்பத்தி முறை, நுகர்வு முறை, பங்கீட்டு முறை, பரிமாற்ற முறை, கைவினைத் தொழில்கள், அரசியல் முறை, அதிகார உறவுகள், சமூகக் கட்டுப்பாடு, மரபுசார் சட்டங்கள் (customary laws) சமய நம்பிக்கைகள், சடங்குகள், வழிபாட்டு முறைகள், மந்திரம், சூனியம், விழாக்கள், இசை, விளையாட்டுகள், அழகியற் சிந்தனைகள், வழக்காறுகள் (lore), ஈமச்சடங்குகள், பிற தொடர்புடைய செய்திகள்[14] முதலியன இனக்குழுவியலில் இடம்பெற வேண்டும் என்கின்றனர்.

மேற்சொன்ன இனக்குழுவியல் கூறுகளுடன் வாழ்வியற்களஞ்சியம் அளிக்கும் பழங்குடிச் சமூகம், கிராமச்சமூகம் முதலான சிறு சமூகங்களின் இடவியல்பு விளக்கம், மக்களின் உருவத்தோற்றம், வாழிட அமைப்பு, வாழ்க்கை முறை, பேசும் மொழி, சமூக அமைப்பு, பொருளாதாரம், சமயம், சட்டமுறைகள், தொழில் நுட்பம், கலை மற்றும் பண்பாட்டின் அனைத்துக் கூறுகளையும் தனித்தனியாக ஆராய்ந்து, அப்பண்புகளை முறைப்படுத்தி இனக்குழுவியல் விளக்கும் என்ற கருத்து ஒன்றுபடுவதைக் காணமுடிகிறது[15].

மேலும், இனக்குழுக்களின் குடும்பம், உறவுகள் முதலான ஒட்டுமொத்தச் செயல்பாடுகளின் மூலம் அந்தச் சமூகத்தினர் கொண்டிருக்கும் நம்பிக்கைகள், உணர்வுகள், மதிப்பீடு, உலகத்தின்பால் அவர்கள் கொண்டுள்ள கருத்து ஆகியவற்றோடு, பண்பாட்டுக் கூறுகளனைத்தும் ஒன்றோடொன்று பெற்றுள்ள தொடர்பினையும் இத்தொடர்புகளையும் இவர்கள் விரிவாக ஆராய்வர்[16] என்ற

வாழ்வியற் களஞ்சியத்தின் கருத்து இனக்குழுவியல் சார்ந்த விரிவான புரிதலுக்கு இட்டுச்செல்கிறது.

**இனக்குழு ஒப்பாய்வியல்** (Ethnology)

பண்பாட்டு மானிடவியலின் மற்றொரு பிரிவு இனக்குழு ஒப்பாய்வியலாகும். உலகில் உள்ள மனித இனங்களின் ஒவ்வொரு பண்பாட்டுக் கூறுகளையும் ஆராய்ந்து ஒற்றுமை, வேற்றுமை, செயற்பாட்டியல் போன்றவற்றை வெளிக்கொண்டுவருவதே இனக்குழு ஒப்பாய்வியலின் பணியாகும். பல்வேறு இனமக்களைப் பற்றியும், அவர்களின் பண்பாட்டைப் பற்றியும், அவர்களின் வரலாற்றைப்பற்றியும் பண்பாட்டிடை நிலையில் ஆராயும் அறிவியலே இனக்குழு ஒப்பாய்வியல் (Ethnology) என்பார் குரோபர்[17].

இனக்குழு ஒப்பாய்வியல் பல்வேறு இனக்கூறுகளை ஒன்றுடன் ஒன்றை ஒப்பிடுகிறது; அவற்றை வரலாற்று ரீதியில் எடுத்தியம்புகிறது. ஆய்வின்போது கொள்கை சார்ந்த செயல்பாடுகளை எடுத்தாண்டு அதற்குரிய எடுகோள் அமைப்புகளை உருவாக்குகிறது. அவ்வெடுகோள்களைச் சோதனைமூலம் நிறுவுதல் இனக்குழு ஒப்பாய்வியல் ஆய்வு அணுகுமுறையாகவும், அதற்குரிய தனித்தன்மையாகவும் காணப்படுகிறது. மேலும், ஒவ்வொரு காலக்கட்டத்திலும் சமூகம் அடைந்த பண்பாட்டுப்படிநிலை வளர்ச்சியைக் கண்டறிந்து அவற்றிலிருந்து ஒரு பொதுவான பண்பாட்டு விதியையும் இனக்குழு ஒப்பாய்வியல் நிலைப்படுத்துகிறது.

**இனக்குழுவியலும் இனக்குழு ஒப்பாய்வியலும்**

இனக்குழுவியலும் இனக்குழு ஒப்பாய்வியலும் அடிப்படையில் ஒன்றையொன்று சார்ந்துள்ளது. ஏனெனில் இனக்குழுவியல் ஒவ்வொரு சமூகத்திற்கும் உள்ள பண்பாட்டுக் கூறுகளை வரையறை செய்கிறது. அதில் மக்களின் வாழ்க்கைச்சூழல், நம்பிக்கை, மரபுவழிசார்ந்த கோட்பாடுகள், சமூக இயக்கத்திற்குரிய அடிப்படைகள், சமூகப் பின்புலங்கள் முதலியன வெளிப்படும். இத்தகைய அணுகுமுறை ஓர் இனக்குழு சார்ந்த பண்பாட்டைமட்டும் வெளிப்படுத்தும். இனக்குழு ஒப்பாய்வியலை அடிப்படையாகக்கொண்டு ஒரு இனத்தில் உள்ள பண்பாட்டை இன்னொரு இனப்பண்பாட்டோடு ஒப்பிட்டு ஆராய்வதன்மூலமே பொதுவானபண்பாடு அல்லது சமநிலைப் பண்பாட்டைத் தெரிந்துகொள்ள முடியும்.

மேலும், இனக்குழுவியலில் சேகரிக்கப்பட்டத் தரவுகளே ஒப்பாய்வியல் அனுகுமுறைக்குப் பயன்படுகிறது. அதுபோன்று இனக்குழு ஒப்பாய்வியல் ஆய்வு இனக்குழுவியலாளர் கொள்கை சார்ந்து செயல்படவேண்டிய தேவையையும், எதிர்காலத்தில் தரவு சேகரிக்கத் தேவையான குறிப்புகளையும் கொண்டுள்ளது. அதனால்தான் இனக்குழுவியலும், இனக்குழு ஒப்பாய்வியலும் ஒன்றோடொன்று தொடர்புடையன என்று கூறப்படுகிறது. இவ்விரு அனுகுமுறைகளும் பண்பாட்டு மானிடவியலின் அடித்தளமாய் செயல்படுகின்றன. இக்கோட்பாடுகளின் ஆய்வாளர்களும் அனுபவத்தின் அடிப்படையில் ஒத்த தன்மையுடையவர்.

## இனக்குழுவியலின் வரலாறும் வளர்ச்சியும்

ஐரோப்பியர்கள் புதிய இனங்களைக் கண்டறிய மேற்கொண்ட உலகப் பயணங்களையும், அச்சமயம் தாம் சென்ற பகுதிகளில் வாழ்ந்த பல்வேறு மக்களின் பண்பாட்டுக்கூறுகளையும் கையெழுத்துப் பிரதியில் எழுதிவைத்தனர். இத்தரவுகளோடு கி. பி. 15-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் இயற்கைவியலாரும், அரசு ஆட்சியாளர்களும், சமயப்பரப்பிகளும் சேகரித்தத் தரவுகள் பிற்கால இனக்குழுவியல் ஆய்விற்கு அடித்தளமாய் அமைந்தன.

கி. பி. 19-ஆம் நூற்றாண்டில் இனக்குழுவியல் ஆய்வு தனித்த உத்திகளை ஏற்படுத்திக்கொண்டு நன்கு வளர்ச்சி பெற்றது. இக்காலத்தில் அமெரிக்க, ஆங்கிலேய, ஐரோப்பிய மானிடவியலாளர்கள் அவரவருக்கென்று தனித்த அனுகுமுறைகளையும், கொள்கைகளையும் கொண்டிருந்தனர் என்றாலும் புத்தாய்வுக் காலத்திற்கு முந்தைய கால அறிஞரான ஹைரோடாட்டஸ் புவியியல், உள்ளிட்ட இயற்கைக் கூறுகளையும் மக்களின் ஒட்டு மொத்த வாழ்வியலையும் ஆராய்ந்தமையால் இவர் கிரேக்க இனக்குழுவியலின் தந்தை என்று பாராட்டப்படுகிறார். புத்தாய்வுக் காலத்தில் கொலம்பஸ், மார்க்கோபோலோ போன்ற அறிஞர்கள் பல்வேறு மனித இனங்கள் குறித்துச் சேகரித்தத்தரவுகள் இனக்குழுவியல் வகையினதாக அமைந்துள்ளன என்பர். இதனைத் தொடர்ந்து அறிவொளிக்கால அறிஞர்களின் சிந்தனையால் இனக்குழுவியல் தரவுகள் பெருமளவு தொகுக்கப்பட்டு அறிவார்ந்த பண்பாட்டிடை ஆய்வுகள் மேற்கொள்ள வழிசெய்தது.

கல்வியியல் சார்ந்து மானிடவியல்துறை வளர்ச்சி பெற்றபோது இனக்குழுவியல் ஆய்வுகளுக்கென்றுக் கீழ்க்காணும் கழகங்களும் நிறுவனங்களும் உருவாக் கப்பட்டுள்ளன.

- அமெரிக்க இனக்குழு ஒப்பாய்வியல் கழகம் (American Ethnological Society )
- அமெரிக்க இயற்கை வரலாற்று அருங்காட்சியகம் (American Museum of Natural History)
- அமெரிக்க மானிடவியல் சங்கம் (American Anthropological Association)
- இலண்டன் பொருளியல் பள்ளி (London School of Economics)
- பிரிட்டன் அயர்லாந்து நாடுகளின் அரசு மானிடவியல் நிறுவனம் (Royal Anthropological Institute of great Britain and Ireland )

இனக்குழு, இனக்குழு ஒப்பாய்வியல் ஆய்வுகளில் ஈடுபட்ட அறிஞர்களால் இத்தகைய நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டன.

இனக்குழுவியல் என்பது பண்பாட்டை ஆழமாக விவரிக்கும் ஓர் ஆய்வு முறைமை என்பதால் அதன் முக்கியத்துவம் 2-ஆம் உலகப் போருக்குப் பின்னர் உணரப்பட்டது. இக்கால மானிடவியல் அறிஞர்கள் இனக்குழுவியலின் பரப்பினையும், ஆழத்தினையும் விரிவாக்கும் பொருட்டுச்சில விதிகளை வகுத்தனர். அவை பண்பாட்டாய்வில் குறிப்பிடும்படியான மாற்றத்தை ஏற்படுத்தின.

## இலக்கிய மானிடவியல்

1997-ஆம் ஆண்டு/பெர்னாண்டோ போயாட்டோஸ் முதன்முதலில் இலக்கிய மானிடவியல் என்ற சொல்லை ஆ.செல்லப்பெருமாள் அறிமுகப்படுத்தினார். இலக்கிய மானிடவியலானது மக்களைப்பற்றியும் அவர்களது பண்பாட்டு வெளிப்படுத்துதல்களையும் இலக்கியத்தின்மூலமாகப் படிப்பது[18] என்று வரையறுக்கப்பட்டுள்ளது.

கள ஆய்வை மையப்படுத்தி மேற்கொள்ளப்பட்ட மானிடவியல் ஆய்வுகள் காலச் சூழலுக்கேற்ப மாற்றமடைந்து இலக்கியத்தையும் மானிடவியல் ஆய்வுக்குரிய தரவுகளாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற நிலையை எட்டின. இலக்கியம் என்பது வாசிப்பை மட்டும் குறிக்கோளாகக் கொண்டு எழுதப்படுவதில்லை. இலக்கியத்தில் மொழி, காலச்சூழல், மக்களின் பண்பாடு முதலான கூறுகள்

இயல்பாகவே புனைந்திருக்கும். ஆதலால் இலக்கியத்தை மானிடவியல் ஆய்விற்கு உட்படுத்த வேண்டிய அவசியம் உள்ளது என்பதான கருத்து வலுத்ததின் விளைவே இலக்கிய மானிடவியல் என்ற பிரிவு தோன்றியமைக்குக் காரணமாகக் கொள்ளலாம்.

## இலக்கிய மானிடவியலும் இனக்குழுவியல் ஆய்வு முறையும்

இலக்கியமும் மானிடவியலும் வரலாற்று ரீதியில் நெருங்கிய தொடர்புடையன. இலக்கியம் மானிடவியல் ஆய்விற்கு உட்படுத்தப்படலாமா? வேண்டாமா எனும் விவாதங்களே மானிடவியல் வரலாற்றை எடுத்துரைக்கிறது. குறிப்பாக கி.பி. 19-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட மானிடவியல் வரலாறு இரண்டாம் நிலைத்தரவுகளைக் கொண்டு செயல்பட்டது. இக்கால ஆய்விற்குரிய தரவுகளாக மானிடவியலின் முன்னோடிகள், இலக்கியம், பயணக்குறிப்புகள், மக்களின் நாட்குறிப்புகள், நாட்டார் வழக்காறுகள் இப்படி எந்தத் தரவுகள் கிடைப்பினும் அவற்றை மானிடவியல் ஆய்விற்கு உட்படுத்தினர்[19].

கி.பி. 20-ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் மனித தொடர்புகள் பெருகின. பல்துறை சார்ந்த ஆய்வுகளும் கண்டுபிடிப்புகளும், கோட்பாடுகளும் உருவாயின. இவற்றின் எதிரொலி மானிடவியல் துறையிலும் புகுந்தது. ஆதலால் இலக்கியவழி மானிடவியல் தரவுகள் சேகரிப்பதை விடுத்துக் கள ஆய்வின் மூலம் பண்பாட்டாய்வுகள் நிகழ்த்தப்படவேண்டும் எனும் அணுகுமுறை பின்பற்றப்பட்டது. பண்பாட்டின் முழுமை, செயல்பாடு, பன்முகத்தன்மை முதலானவற்றை அறிய பயன்படாது என்று இலக்கியத்தை விலக்கிவிட்டனர்.

இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் இப்போக்கு மாற்றமடைந்தது. மீண்டும் இலக்கியம் மானிடவியல் அணுகுமுறைக்குட்பட்டது. காரணம், போரினால் சில நாடுகளுக்குச்செல்ல மானிடவியலாளர்கள் தடைசெய்யப் பட்டிருந்தனர். இச்சூழலில் தடைசெய்யப்பட்ட நாடுகளின் இலக்கியங்கள் மானிடவியலாய்விற்குப் பயன்படுத்தப்பட்டன.

இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் மானிடவியலும் இலக்கியமும் இணைந்துப் பண்பாட்டுத் தளத்திலும் வரலாற்றுத் தளத்திலும் குறிப்பிடத்தக்க ஆய்வுகளை மேற்கொண்டது[20] என்கிறார் ஆ. செல்லப்பெருமாள்.

## இலக்கிய மானிடவியலின் நோக்கம்

இலக்கியப்பிரதி சூழல் சார்ந்து அனுகப்படும்போது அவ்வனுகுமுறை மானிடவியலுக்கானத் தரவுகளை அளிக்கக்கூடியதாக மாறுகிறது. இலக்கியத்தை ஒரு கருவியாகக் கொண்டு மானிடவியல் தரவுகளைக் கண்டறிவது இலக்கிய மானிடவியலின் நோக்கமாக இருக்கிறது. இலக்கிய வகைகளில் ஏதாவது ஒன்றை எடுத்து ஆய்வதைவிட ஒரு சமூகக்குழு அல்லது இனக்குழு என்ற ரீதியில் ஆய்வெல்லையை வகுத்துக் கொள்ளுதல் இலக்கிய மானிடவியலுக்கு பயனளிப்பதாகும்[21] எனும் ஆ.செல்லபெருமாள் கருத்து இலக்கிய மானிடவியல் நோக்கம், இனக்குழு ஆய்வு முறையினால் ஏற்படும் பயன் போன்றவற்றை முதன்மைப்படுத்துகிறது.

இலக்கிய மானிடவியல் இனக்குழுவியல் அனுகுமுறையில் செயல்பட்ட குறிப்பாக தொன்மை இலக்கியங்களில் பொருத்திப் பார்த்தல் போன்ற போக்கு ஆய்விற்குப் புதிய பயனைத் தரும். இலக்கியம் உருவான காலத்திற்குரிய பண்பாட்டுத் தொடர்புகள் சமகாலத்தில் அதன் நீட்சி, சமூக மாற்றத்தைப் பதிவு செய்துள்ள பாங்கு, அரசியல் செயல்பாடுகள், சமூக மற்றும் பண்பாட்டுத் தளத்தில் இலக்கியம் வகிக்கும் இடம் முதலானவை இத்தகைய ஆய்வின்வழி வெளிப்படும். இலக்கியம் சுட்டும் மக்களின் வாழ்க்கைச்சூழல் சார்ந்த எச்சங்கள் சமகால இனங்களிடம் செயல்படுவதை எடுத்துக்கூறல் போன்றவற்றை ஆராய இலக்கிய மானிடவியல் பயன்படும் எனலாம்.

## தமிழில் மானிடவியல்

தமிழ்ச்சூழலைப் பொருத்தவரை மானிடவியல் குறித்த ஆய்வுகள் முதன்முதலில் நாட்டார் வழக்காற்றியல் மரபிலேயே எழுந்தன. பின்னர் இலக்கியம் சார்ந்தும் பிற நூல்கள் சார்ந்தும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. பிற நாடுகளைப்போன்று தமிழக மானிடவியல் விரிவடையும் பொருட்டுத் தனிப்பட்ட நிறுவனங்களோ, கழகங்களோ நிறுவப்படவில்லை யென்றாலும் சில நிறுவனங்களில் கல்விச்சார்ந்தத் துறை நிறுவப்பட்டது. மானிடவியல் குறித்த அறிமுகம் உளவியல், சமூகவியல் போன்று தனித்து செய்யப்படவில்லை என்பது அறிஞர்களின் கருத்து. மானிடவியல் பற்றிய அறிமுகம் பிற சமூக அறிவியல் துறைகளைப்போலவே தமிழ் மொழி - இலக்கியம் வழியேதான் ஏற்பட்டுள்ளது. நாட்டார் வழக்காற்றியல் துறையின் குறிப்பிடத்தகுந்த வளர்ச்சி மானிடவியல் கோட்பாடுகள் பற்றிய அறிமுகத்தை வழங்கியதோடு,

மானிடவியலின் ஆய்வுப் பொருளையும் அதனளவில் கையாண்டது என்று சொல்லலாம்[22] என்கிறார் ஆ. இரா. வெங்கடாசலபதி.

தொடக்கக் காலத்தில் மானிடவியல் குறித்த அறிமுகத்தை ஏற்படுத்தச் சில இதழ்களும், நூல்களும் வெளியிடப்பட்டன. அத்தகையபணியை நாட்டார் மற்றும் இலக்கிய அறிஞர்கள் ஏற்படுத்தினர். அவர்களுள் நா. வானமாமலை தொடங்கி ஆ. சிவசுப்பிரமணியன், தே. லூர்து, ம. வேலுசாமி, சரசுவதி வேணுகோபால், இ. முத்தையா முதலானோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

## மானிடவியல் நூல்கள்

தமிழில் மானிடவியல் அறிமுகம் ஏற்படும்வகையில் தற்போது பல நூல்கள் வெளிவந்துள்ளன. இதற்கு முன்னரும் சில நூல்கள் எழுதப்பட்டன. 1950-இல் தர்ஸ்டனின் நூல்களைத் தழுவி ந. சி. கந்தையாப்பிள்ளை சிறு நூலொன்றை எழுதியுள்ளார். 1963-ஆம் ஆண்டு மானிடவியல் என்ற அறிமுக நூலை ம. சு. கோபாலகிருஷ்ணன் வெளியிட்டுள்ளார். 1999-இல் ஆ. சிவசுப்பிரமணியன் 'மந்திரமும் சடங்குகளும்' எனும் நூலை எழுதியுள்ளார். 'சனங்களும் வரலாறும்' எனும் நூல் ச. பிலவேந்திரன் அவர்களால் பதிப்பிக்கப்பட்டது. இது மானிடவியல் அணுகுமுறையில் உருவான தொகுப்புநூலாகும். தர்ஸ்டன், எட்கர் ரூ ரங்காச்சாரி (1986-2005) இவர்களின் ஆங்கில நூலை 'தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் (7தொகுதிகள்)' எனும் பெயரில் தமிழில் க. ரத்னம் மொழிபெயர்த்துள்ளார். ஆ. செல்லப்பெருமாள் அவர்களின் 'சமூக மானிடவியல் கோட்பாடு' எனும் நூல் மானிடவியல் கோட்பாட்டினை அறிமுகம் செய்வன.

தற்காலத்தில் மானிடவியல் துறைக்குறித்த அறிமுகத்தைக் கோட்பாடு சார்ந்து விரிவான புரிதலை பக்தவத்சல பாரதியின் நூற்கள் ஏற்படுத்துகின்றன. அவரின் தமிழர் மானிடவியல் (2002), பண்பாட்டு மானிடவியல் (1990), மானிடவியல் கோட்பாடுகள் (2005), இலங்கை இந்திய மானிடவியல், தமிழகப் பழங்குடிகள் (2007) போன்ற நூற்கள் குறிப்பிடத்தக்கன. மேலும், அரு. பரமசிவத்தின் தென்னிந்திய இன ஒப்புமையியல், என். எஸ். சசியின் இந்தியாவில் ஆயர் சமுதாயம் முதலானவை மானிடவியல் ஆய்வு குறித்த நூல்களாகும். அதனை தொடர்ந்து சி. ஜே. ஜெயதேவின் பழங்காலப் பண்பாடும் பழங்குடிகள் பண்பாடும் எனும் நூல் பண்பாட்டு நோக்கில் அமைந்தது. இ. முத்தையாவின் நாட்டுப்புறச் சடங்குகளும் மனித உறவுகளும் என்ற

நூலும், ஞா. ஸ்டீபனின் பண்பாட்டு வேர்களைத்தேடி எனும் கட்டுரைத் தொகுப்பு நூலும், ஆ. தனஞ்செயனின் குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும் எனும் நூலும் மானிடவியல் ஆய்வுத்துறைக்கு வளம் சேர்ப்பன.

உலக உருவாக்கம், மனித பரிணாம வளர்ச்சி உள்ளிட்ட பிரபஞ்ச பரிணாமம் குறித்தும், ஆதிகாலச் சமூகம் தொடர்பாக பல்வேறு நூல்கள் எழுதப்பட்டும் தமிழாக்கம் செய்யப்பட்டுமுள்ளன. அவற்றுள் பிரபாகர் சான்ஸ்கரியின் மனிதக்கதை (தமிழில் க.மாதவ்), எஸ்.ஏ. பெருமாளின் ‘மனிதகுல வரலாறு’ எனும் நூல்கள் குறிப்பிடத்தக்கன. எலிபெத்/பிக்ஷ்ரின் Womens creation எனும் நூலை க. பஞ்சாங்கம் ‘பெண்ணெனும் படைப்பு’ என்ற தலைப்பில் மொழிபெயர்த்துள்ளார். மேலும், வெரியர் எல்வினின் இரண்டு நூல்களும் கே.எஸ். சிங்கின் பிர்சா முதலானோரின் நூல்களும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

மேற்கூறப்பட்ட நூற்கள் ஒவ்வொரு நிலையில் மானிடவியல் தோற்றம், வளர்ச்சி, கோட்பாடு, நடைபெற்ற ஆய்வுகள், நடைபெற வேண்டிய களங்கள் முதலானவற்றை வெளிப்படுத்தும் வகையில் எழுந்தவை.

இனக்குழுவியலின் வரலாறும் வளர்ச்சியும், மானிடவியல் துறையின் தோற்றம், வளர்ச்சியோடிணைந்தவை என்றாலும், ஆய்வு நோக்கில் பிரித்தறிய வேண்டிய தேவையுள்ளது.

## இலக்கிய மானிடவியல் நூற்கள்/ஆய்வுகள்

இலக்கிய வரிசையுள் சங்க இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டெழுந்த ஆய்வு வரலாறுமட்டும் சுட்டப்படுகிறது. சங்ககால வாழ்க்கைச்சூழலை வெளிக்காட்டும் பல்வேறு கட்டுரைகளும், நூற்களும், ஆய்வேடுகளும், ஆய்விதழ்களும் வெளிவந்துள்ளன; வெளிவந்துக் கொண்டிருக்கின்றன. இப்பணியைப் பல்வேறு ஆய்வாளர்கள் செய்கின்றனர். அவற்றுள் தொடக்கக்கால ஆய்வு மரபை உருவாக்கிக் கொடுத்தவர்களுள் மயிலை.சீனிவேங்கடசாமி, க.கைலாசபதி, பி.எல்.சாமி, நா.வானமாமலை, கா.சிவத்தம்பி முதலானோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

தமிழியற்துறை விரிவடையக் காரணமாக நின்ற இலங்கை அறிஞர்களுள் கா. சிவத்தம்பி அவர்களின் ஆய்வுகள் தமிழர்வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்யும்

போக்கில் அமைந்துள்ளன. அவருடைய தமிழ்ச்சமூகமும் பண்பாட்டின் மீள்கண்டுபிடிப்பும், பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம் முதலான நூற்கள் தமிழியல் ஆய்விற்குரிய குறிப்பிடத்தகுந்த கருவிநூற்களாகத் திகழ்கின்றன. நா. வானமாமலையின் தமிழர் வரலாறும் பண்பாடும், தமிழர் பண்பாடும் தத்துவமும் ஆகிய நூற்கள் தமிழுக்கான மானிடவியல் அணுகுமுறையை உணர்த்தியுள்ளன. சங்க இலக்கியத்துள்ளே நிலவிய இனக்குழு உயிரியல் நிலை விளக்கும் நோக்கில் பி. எல். சாமியின் ஆய்வுகள் அமைந்துள்ளன. இவருடைய சங்க இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு, தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு ஆகியன சமூக வரலாற்றை அடிப்படையாகக் கொண்டவை. இம்மரபில் உருவான கா. சுப்பிரமணியனின் சங்க காலச் சமுதாயம் எனும் நூல் சங்க இலக்கியத்தில் பயின்றுவந்துள்ள இனக்குழு சமுதாயத்தை அடையாளப்படுத்துகிறது.

மேலும், ஆ. சிவசுப்பிரமணியனின் தமிழகத்தில் அடிமைமுறை, தொ. பரமசிவனின் பண்பாட்டு அசைவுகள், பக்தவத்சல பாரதியின் தமிழகத்தில் நாடோடிகள், சு. தட்சிணாமூர்த்தியின் தமிழர் நாகரிகமும் பண்பாடும் முதலான நூற்கள் தமிழர் பண்பாட்டை வரலாற்றுமுறையில் கூறுவன. இவ்வாய்வு நூல்களேயன்றி மனோன்மணி சண்முகதாஸ் அவர்களின் பண்டைத் தமிழர் வாழ்வியற் கோலம், இருப்பிடம், உணவு ஆகிய நூற்களும், ஆ. வேலுப்பிள்ளையின் தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், சிலம்பு ந. செல்வராசுவின் சங்க இலக்கிய மறுவாசிப்பு, ராஜ்கௌதமனின் பாட்டும் தொகையும், ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், கு. வெ. பாலசுப்பிரமணியனின் சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள் போன்றவை மனித சமூக வளர்ச்சியை வெளிப்படுத்துகின்றன.

மாதையனின் சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசுருவாக்கமும், சங்க இலக்கியத்தில் குடும்பம் ஆகிய நூற்கள் மானிடவியல் அணுகுமுறையில் வெளிவந்தவை. ச. மாடசாமியின் தமிழர் திருமணம்: அன்று முதல் இன்றுவரை. கா. ராஜனின் தொல்லியல் நோக்கில் சங்ககாலம் முதலான நூற்கள் சங்ககாலச் சமூக வரலாற்றை, வாழ்வியலை எடுத்துக் கூறுகின்றன.

இலக்கிய மானிடவியல் குறித்தெழுந்த நூற்களைப் போன்று மிகுதியான கட்டுரைகளும் எழுதப்பட்டுள்ளன. பரமசிவனின் பண்பாட்டு மானிடவியல் நோக்கில் தமிழிலக்கிய ஆய்வுகள், பக்தவத்சல பாரதியின் பண்பாட்டு மாற்றமும் மரசுவசதி

நம்பிக்கையும்: பழங்குடிப்பண்பாட்டில் ஓர் ஆய்வு, சங்ககால இனக்குழுச் சமூகக் கட்டமைப்பு, சங்க காலக் காட்டெரிப்பு வேளாண் சமூகம், சாலினி வாக்குரைத்தல்: அகநிறைவும் புறநிறைவும், தே. லூர்துவின் பண்டைத் தமிழிலக்கியங்களும் பண்பாட்டாய்வுகளும், ஆ. செல்லபெருமாளின் தமிழகப் பழங்குடிகளின் இன வரலாறு, இலக்கியத்திற்கான மானிடவியல் அணுகுமுறை முதலானவை மானிடவியல் ஆய்விற்கு வளம்சேர்க்கும் வகையில் அமைந்துள்ளன. இத்தகைய ஆய்வு நூல்கள் வரிசையில் இந்த ஆய்வேடு சங்க இலக்கியத்தில் அகமரபில் ஐந்திணையாகப் பிரிக்கப்பட்டுள்ள மக்களின் வாழ்வியலை தொகுத்துரைக்கின்றது. அவர்களுடைய சடங்கு, வாழ்வாதாரம், கலை போன்றவை காலந்தோறும் அடைந்த மாற்றம் வளர்ச்சி போன்றவற்றை எடுத்துரைக்கின்றது. அந்தவகையில் சங்க இலக்கியத்தில் திணை சார்ந்த ஆய்வு முறைமையாக இவ்வேடு எடுத்துச் செல்வதோடு மானிடவியல் வரலாற்றில் சங்க இலக்கியம் எத்தகைய இடத்தை வகிக்கிறது என்பதை அறிய வாய்ப்பளிக்கிறது.

## இனக்குழுவியலும் சங்க இலக்கியமும்

தமிழரின்/தமிழின் தொன்மை இலக்கியங்களாகத் திகழ்பவை எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும். இவை சங்க இலக்கியம் என்றும் அழைக்கப்படுகின்றன. சங்க இலக்கியம் பதிவு செய்யப்பட்ட காலம் இனக்குழு சமூகம் அழிந்து அரசுருவாக்கம் நிகழ்ந்த ஒரு சமச்சீரற்ற சமூக அமைப்புடைய காலமாகும். இவ்விரு நிலைக்கும் இடைப்பட்ட சமூக வளர்ச்சியினை சங்க இலக்கியம் பதிவு செய்துள்ளது. தமிழகத்தில் பழங்குடிச் சமூகங்களின் வளர்ச்சிநிலைகள் அனைத்தும் சங்க இலக்கியங்களில் பதிவாகியிருப்பது பெரும்வியப்பளிக்கிறது. பாட்டையும் தொகையையும் மானிடவியல் கண்கொண்டு நோக்குபவர்கள் உலகளாவிய பழங்குடிச் சமூகம் அடைந்த சமூகப் படிமலர்ச்சிக் கட்டங்கள் அனைத்தும் சங்க இலக்கியத்தில் மிகத்தெளிவாகவே பதிவாகியிருப்பதை நன்கு அறியமுடியும்[23] என்பார் பக்தவத்சல பாரதி.

தமிழகத்தின் தொன்மை இனங்களைத் திணை அடிப்படையில் சங்க இலக்கியம் அறிமுகப்படுத்தியுள்ளது. எனவே முதலில் சங்க இலக்கியப் பாடல்களைத் தொகுப்பு நூல் அடிப்படையில் அணுகாமல், திணைவாரியாகப் பகுத்துக்கொண்டு ஒவ்வொரு திணை சார்ந்த பாடல்களின் ஊடாக, அப்பாடல்களில் பதிவாகியுள்ள இடம், தொழில், உணவுமுறைமை, பண்பாட்டு விதிமுறை முதலான காரணிகளை

அடிப்படையாகக் கொண்டு அந்தந்தத் திணைகளில் பதிவாகியுள்ள இனக்குழுச்சமூகம் சார்ந்த கூறுகளைத் திணை நிலையில் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

மேலும், ஒவ்வொரு திணைசார்ந்த பாடல்களில் இருந்தும் எடுக்கப்பெற்ற இனக்குழுச்சமூகம் சார்ந்தப் பதிவுகளை மற்ற திணைசார்ந்த பாடல்களிலிருந்து தொகுக்கப்பெற்ற இனக்குழுவியல் சமூகம்சார்ந்த பதிவுகளோடு ஒப்பிடுவதாகவும் இவற்றின் அடிப்படையில் சங்ககால இனக்குழுச் சமூகத்தின் வளர்ச்சிப் படிநிலைகளை ஆராய்வதாகவும் பின்வரும் இயல்கள் அமைந்துள்ளன.

## தொகுப்புரை

- உலகில் தோன்றிய உயிரினங்களுள் சிந்தனையும், ஆற்றலும், அதிகாரமும் பெற்றது மனித இனம். காட்டுமிராண்டி நிலையில் தொடங்கிய மனித இனம் காலங்காலமாக அடைந்து வந்த மாற்றங்களை அவர்கள் விட்டுச் சென்றுள்ள வரலாற்றுத்தரவுகள் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

- மேற்கத்திய அறிவுப்புலங்களில் ஒன்றான மானிடவியல் துறையைத் தமிழ் ஆய்வுலகிற்கு அறிமுகப்படுத்தியவர்கள் மேலைநாட்டினர்.

- மனிதனைப் பற்றிய அறிவியல் ஆராய்ச்சியே மானிடவியலாகும். இது மனிதவாழ்க்கையை உயிரியல் மற்றும் பண்பாட்டு நிலையில் மீட்டுருவாக்கம் செய்யும் வகையில் தோன்றியதாகும்.

- சமூகத்தின் தோற்றம், வளர்ச்சி, வளர்ச்சிக்குரியக் காரணிகள் முதலானவற்றை வரலாற்று நோக்கிலும், பண்பாட்டு நோக்கிலும் ஆராய்வதை மானிடவியல் தலையாய நோக்கமாகக் கொண்டுள்ளது.

- தொடக்ககால மானிடவியல் ஆய்வுகள் பயணிகளாலும், சமயப் பரப்பிகளாலும், அரசு அதிகாரிகளாலும் நிகழ்த்தப்பட்டன.

- கல்விசார்ந்து ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் கி.பி. 1884-ஆம் ஆண்டு சர். எட்வர்ட் பர்னட் டைலர் மானிடவியல் துறைக்குப் பொறுப்பேற்ற பின்னரே மானிடவியல் துறை முறைப்படியான தோற்றத்தைப் பெற்றது எனலாம்.

- கி.பி. 17, 18-ஆம் நூற்றாண்டுகளில் மனித சமூகம் பற்றிப் பல்வேறு நிலையில் ஆராய்ந்தமையால் இந்நூற்றாண்டு அறிஞர்கள் மானிடவியல் முன்னோடிகள் என்றும் தொன்மை மானிடவியலார் என்றும் அழைக்கப்பட்டனர்.

- கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் மானிடவியல் துறைக்கெனப் பல்வேறு நிறுவனங்கள் தொடங்கப்பட்டு ஆய்வுகள் நடைபெற்றன.

- கி.பி. 20-ஆம் நூற்றாண்டில் மானிடவியல் துறை விரிவடையும் பொருட்டுப் பல்வேறு கழகங்களும், நிறுவனங்களும் உருவாக்கப்பட்டதுடன் மானிடவியல் பயிற்சி மையங்களும் தொடங்கப்பட்டன. இவ்வாறு வளர்ச்சியடைந்த மானிடவியல் துறை இன்று பல்வேறு பிரிவுகளாக வகைப்படுத்தப்பட்டு ஆராய்ச்சி நடைபெற்றுவருகின்றன.

- ஐரோப்பியர்களின் வருகைக்குப்பின்னரே இந்தியாவில் மானிடவியல் துறை உருவானது. இந்திய மானிடவியல் துறையின் தந்தையாக விளங்குபவர் சரத் சந்திர ராய் ஆவார்.

- அமெரிக்கர்களின் பங்களிப்பிற்குப் பிறகு இந்திய மானிடவியல் இந்தியச் சூழலுக்கேற்ப நெறிப்படுத்தப்பட்டதோடு சமூக நலப்பணித் திட்டங்கள் குறித்த எடுகோள்களும் ஏற்படுத்தப்பட்டன.

- மானிடவியலின் முக்கியப் பிரிவாகப் பண்பாட்டு மானிடவியல் விளங்குகிறது. பண்பாட்டு மானிடவியல் இனக்குழுவியல், இனக்குழு ஒப்பாய்வியல் என்னும் இரு பிரிவுகளைக் கொண்டுள்ளது.

- இனம் என்ற சொல்லுக்குப் பொதுமரபில் இணைந்த குழு என்று பொருள் கூறி இனம் குறித்த சொல்லுக்கான விளக்கங்கள் எடுத்துக்காட்டுடன் கொடுக்கப்பட்டுள்ளன.

- மனித இனம் உடல் அமைப்பாலும் வாழும் சூழல் உள்ளிட்ட கூறுகளாலும் வேறுபாட்டுடன் காணப்படுகின்றது. இத்தகைய வேறுபாடு சமூக, பொருளாதாரம், வாழ்க்கைமுறை முதலான காரணிகளால் மேலும் பல உட்குழுக்களைத் தோற்றுவிக்கிறது.

- பண்பாட்டு மானிடவியலின் மற்றொரு பிரிவான இனக்குழு ஒப்பாய்வியல் இனக்குழுவியல் ஆய்வில் திரட்டப்பட்ட குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு இனங்களுடைய பண்பாட்டை ஒப்பிட்டு ஆராய்ந்தது.

- இனக்குழு ஒப்பாய்வியலைப் பயன்படுத்தி ஒரு இனத்தில் உள்ள பண்பாட்டை இன்னொரு இனப்பண்பாட்டோடு ஒப்பிட்டு ஆராய்வதன் மூலமே பொதுவான பண்பாடு அல்லது சமநிலைப் பண்பாட்டைத் தெரிந்துக் கொள்ளமுடியும் என்பது குறிப்பிடத்தக்கது.

- ஐரோப்பியர்கள் புதிய இனங்களைக் கண்டறிய மேற்கொண்ட உலகப் பயணங்களையும், அச்சமயம் தாம் சென்ற பகுதிகளில் வாழ்ந்த பல்வேறு மக்களின் பண்பாட்டுக் கூறுகளையும் கையெழுத்துப் பிரதியில் குறித்து வைத்தனர் என்பதை அறியமுடிகிறது.

- புத்தாய்வுக் காலத்திற்கு முந்தையகால அறிஞரான ஹைரோடாட்டஸ் புவியியல், உள்ளிட்ட இயற்கைக் கூறுகளையும் மக்களின் ஒட்டு மொத்த வாழ்வியலையும் ஆராய்ந்தமையால் இவர் கிரேக்க இனக்குழுவியலின் தந்தை என்று பாராட்டப்படுவதைக் காணமுடிகிறது.

- புத்தாய்வுக் காலத்தில் கொலம்பஸ், மார்க்கோபோலோ போன்ற அறிஞர்கள் பல்வேறு மனித இனங்கள் குறித்துச் சேகரித்தத் தரவுகள் இனக்குழுவியல் வகையினதாக அமைந்துள்ளன.

- மக்களுடைய வாழ்க்கை, பண்பாடு உள்ளிட்ட கூறுகளை வாசிப்பிற்குரிய இலக்கியத்தின் வழியாக ஆராய்ந்த முறைக்கு இலக்கிய மானிடவியல் என்று பெயரிடப்பட்டது.

- கள ஆய்வு மானிடவியல் ஆய்விற்கு உதவுவதுபோல இலக்கியங்களும் மானிடவியல் ஆய்விற்கு பயன்படுத்தப்பட்டன.

- இலக்கிய மானிடவியல் இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் பல நாடுகளுக்குச் செல்லமுடியாத நிலை ஏற்பட்டபோது பல மானிடவியல் அறிஞர்களால் மேற்கொள்ளப்பட்டது.

- தமிழ்ச் சூழலைப் பொருத்தவரை மானிடவியல் குறித்த ஆய்வுகள் முதன்முதலில் நாட்டார் வழக்காற்றியல் மரபிலேயே எழுந்தன. பின்னர் இலக்கியம் சார்ந்தும் பிறநூல்கள் சார்ந்தும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது.

- தமிழகத்தில் ஆரம்ப காலகட்டத்தில் மானிடவியல் குறித்த அறிமுகமாக சில இதழ்களும் நூல்களும் வெளிவந்தன. அப்பணியைச் செய்தவர்களாக நாட்டார் வழக்காற்றியல் துறை சார்ந்த அறிஞர்கள் விளங்குகின்றனர்.

- தமிழில் மானிடவியல் குறித்த நூல்கள் வெளியிடத்தொடங்கிய போது சங்க இலக்கியமும் மானிடவியல் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டு ஆய்வு நூல்களும் கட்டுரைகளும் வரத்தொடங்கின.

- சங்க இலக்கியங்கள் தமிழரின் தொன்மை இலக்கியமாக விளங்குவதோடு அக்கால மக்களுடைய வாழ்வியல் கூறுகளை எடுத்துக்கூறும் வரலாற்று ஆதாரமாகவும் விளங்குகின்றன.

- சங்க இலக்கியம் மானிடவியல் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டு ஐந்திணை சார்ந்த மக்களுடைய வாழ்க்கையை எடுத்துரைக்கும்விதமாக சங்க இலக்கியத்தில் இனக்குழுமரபு என்னும் தலைப்பில் ஆய்வு அமைகிறது.

குறிப்புகள்:

1. பக்தவத்சலபாரதி, அணிந்துரை, தமிழர் மானிடவியல், ப. vi
2. மேலது, பண்பாட்டு மானிடவியல், ப. 41
3. மேலது, தமிழர் மானிடவியல், ப. 55
4. மேலது, பண்பாட்டு மானிடவியல், ப. 55
5. மேலது. ப. 55
6. மேலது. ப. 68
7. மேலது. ப. 114
8. மேலது. ப. 114
9. University of Madras, Tamil lexicon, P. 870
10. கோபாலகிருக்ஷ்ணன், ம. சு., மானிடவியல், ப. 19
11. பரமசிவன், அரு., தென்னிந்திய இன ஒப்புமையியல், ப. 17
12. மேலது. ப. 17
13. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல். ப. 117
14. மேலது. ப. 119
15. வாழ்வியற் களஞ்சியம் ப. 561, தொகுதி தொகுதி -4
16. மேலது. ப. 562
17. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல். ப. 119
18. தமிழ் ஆய்வு மையம், ஆய்வு மலர், ப. 142
19. மேலது. ப. 144
20. மேலது. பக். 145-146
21. மேலது. ப. 153
22. வெங்கடாசலபதி, ஆ. இரா, தமழர் மானிடவியல் கருத்துரை, பக். 421-422
23. பக்தவத்சல பாரதி, தமிழகப் பழங்குடிகள், முன்னுரை, பக். 9-10

சங்க இலக்கியம் நிலவியல் அடிப்படையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் திணை அமைப்பினைக் கொண்டுள்ளது. இத்திணை அமைப்பு மனித சமூகம் பெற்ற வளர்ச்சியை எடுத்தியம்புவதாக உள்ளது. வேட்டை, மேய்ச்சல் முதலான சமூகங்களின் எச்சங்கள் இலக்கிய வடிவில் இனக்குழு மரபுகளாகத் தொடர்ந்துள்ளன. திணை மக்களுடைய தொழில், உணவு, இருப்பிடம் சார்ந்து இத்தகைய மரபு வெளிப்படுகிறது. எனவே திணைக்கோட்பாட்டின் சமூக அடிப்படைகள் எனும் கட்டுரையில் கா.சிவத்தம்பி அவர்கள் குறிப்பிட்டுள்ள திணை வைப்பு முறையைப் பின்பற்றி

- குறிஞ்சி
- முல்லை
- மருதம்
- நெய்தல்
- பாலை

என்பதாக ஐந்திணை மக்களுடைய வாழ்வியல் கூறுகள் எடுத்துரைக்கப்படுகிறது.

## குறிஞ்சி

மலையும் மலைசார்ந்த பகுதியும் குறிஞ்சி என்று அழைக்கப்பட்டுள்ளது. குன்றவர், குறவர் என்பன பொதுவாகக் குறிஞ்சி மக்களுக்குப் பெயர்களாய் அமைந்தன. குறிஞ்சி நிலத்தவருள், கானகத்தில் வாழ்வோர் கானவர் என்றும், குறிஞ்சியில் வாழ்வோர் குறவர் என்றும், குன்றுகளிலும் கொடுமுடிகளிலும் வாழ்வோர் குன்றவர், கொடிச்சியர் என்றும் வழங்கப் பெறுவர்[1]. சங்க இலக்கியத்தில் குறிஞ்சி நில மக்களாக விளங்கும் கானவர், வேட்டை சார்ந்திருந்த சூழல்களில் அவர்கள் பயன்படுத்திய கருவி, வேட்டைக்குச் சென்ற தோற்றம் ஆகியவற்றை அடையாளப்படுத்தும் வகையில் அன்புஇல் கானவர்[2], கொடுவில் கானவன்[3], வல்விற் கானவர்[4], சிலைவிற் கானவன்[5], வன்கட் கானவர்[6], வன்கைக் கானவன்[7], கடுங்கைக் கானவன்[8], இரும்பு வடித் தன்ன கருங்கைக் கானவன்[9], தொடுந்தோற் கானவன்[10] என்று அழைக்கப்பட்டுள்ளனர். அவ்வாறே குறவர்கள் வாழும் பகுதியான குன்றங்களை அடையாளப்படுத்தும் வகையில் குறவர்கள் அழைக்கப்பட்டுள்ளனர்.

சங்க இலக்கியத்தில் அக மற்றும் புறப்பாடல்களில் இடம்பெற்றுள்ள குறிஞ்சி நில மக்களின் வாழ்வியல் பின்வருமாறு பகுக்கப்படுகிறது. அவை,

குறிஞ்சி நில மக்கள் தொழில்

குறிஞ்சி நில மக்கள் உணவு

குறிஞ்சி நில மக்கள் இருப்பிடம்

என்பன.

## குறிஞ்சி நில மக்கள் தொழில்

குறிஞ்சி மக்கள் வேட்டை, கிழங்ககழ்தல், தேனெடுத்தல், தினை பயிரிடுதல் ஆகிய தொழில்களைச் செய்துள்ளனர். இவர்களின் தொழிலை இரண்டு வகைகளில் கூறலாம்.

1. உணவு சேகரிப்பு
2. உணவு உற்பத்தி

என்பன.

இத்தகைய தொழில்கள் மக்களுடைய கூட்டு உழைப்பில் செய்யப்பட்டன. அங்கு வாழ்ந்த மக்கள் தனிநிலையில் தனிமனிதனாய்க் கற்றதைவிடக் கூட்டமாக இருந்து அதன் வழியே பெற்ற அறிவே மிகுதி. வேட்டம் போதல், பயிரிடல், தினைக்காத்தல், அறுவடை செய்தல் போன்றவற்றில் கூட்டமாகக் கூடிப்புரிந்த செயல்கள் கூட்டுச் சமுதாயம் உருவாகக் காரணமாக இருந்தன[11]. எனவேதான் பிறதிணை மக்களைக் காட்டிலும் குறிஞ்சித் திணையில் ஆண், பெண் பணிச்சூழல்கள் நிறைந்து காணப்படுகின்றன.

## உணவு சேகரிப்பு

குறிஞ்சி நில மக்களுடைய உணவு சேகரிப்பு, மனித சமூகப் படிநிலை வளர்ச்சியாகிய நாடோடிச் சமூகம், வேட்டைச் சமூகம் இரண்டின் எச்சங்களாகவும், அச்சமூகத்தின் தொடர்ச்சியாகவும் காணப்படுகின்றது. அவர்களுடைய உணவுச் சேகரிப்பு இரண்டு வகைகளில் அமைந்துள்ளன. அவை,

1. இயற்கை உணவு சேகரிப்பு
2. வேட்டை உணவு சேகரிப்பு

என்பன.

## இயற்கை உணவு சேகரிப்பு

குறிஞ்சி நில மக்கள் மலையிலும் மலைசார்ந்த காடுகளிலும் வாழ்ந்திருப்பதினால் அப்பகுதியில் கிடைக்கக்கூடிய இயற்கை உணவுப் பொருட்களாகிய தேன், கிழங்கு, மூங்கிலரிசி, பலா ஆகியவற்றைச் சேகரித்துள்ளனர். இயற்கை உணவுச் சேகரிப்பில் ஆண், பெண் இருவரின் பங்களிப்பும் காணப்படுகின்றது. இயற்கையாகக் கிடைக்கக் கூடிய இவ்வுணவை உழவர் உழாமல் கிடைத்ததாகப் புலவர்மரபு பாடியிருக்கின்றது. இதனைக் கீழ்வரும்பாடல் எடுத்தியம்புகிறது.

**உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே;**
**ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல் விளையும்மே;**
**இரண்டே, தீம் சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே;**
**மூன்றே, கொழுங் கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே;**
**நான்கே, அணி நிற ஓரி பாய்தலின், மீது அழிந்து,**
**திணி நெடுங் குன்றம் தேன் சொரியும்மே. (புறம். 109:3-8)**

குறிஞ்சி நில மக்கள் சேகரித்த இயற்கை உணவை,

1. தேனெடுத்தல்
2. கிழங்ககழ்தல்
3. பலா, மா சேகரித்தல்

எனப் பிரிக்கலாம்.

### தேனெடுத்தல்

மலைவிளைப் பொருட்களுள் ஒன்றாகிய தேன், குறிஞ்சி நில மக்களின் வாழ்வில் பல விதங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. தேன், மயக்கம் தரும் வகையில் மதுவாக உருவாக்கப்பட்டுள்ளது. நறவு[12] என்று அழைக்கப்பட்ட தேன், மதுவாக உருவாக்கப்பட்ட நிலையில் தேக்கட்தேறல் என வழங்கப்பட்டுள்ளது. இதனைப் பாணர்கள் மண்டை நிறையுமாறு பெற்றுள்ளனர்[13] .

தேன் எடுக்க மரத்தின்மீதும், மலையின் மீதும் ஏறியுள்ளனர். சந்தன மரத்தில் சுற்றியிருந்த தமாலக் கொடியைத் தேனெடுத்தவர்கள் அறுத்துவிட்டுச் சென்றதை

நற்றிணை குறிப்பிடுகிறது[14]. மலைகளில் ஏணி வழியாக ஏறிச்சென்று கானவர் தேனெடுத்ததை,

**கலை கையற்ற காண்புஇன் நெடு வரை,**

**நிலை பெய்து இட்ட மால்பு நெறி ஆக,**

**பெரும் பயன் தொகுத்த தேம்கொள் கொள்ளை (மலைபடு. 315-317)**

என்று மலைபடுகடாம் குறிப்பிடுகிறது. குரங்கும் ஏறமுடியாமல் கைவிட்ட மலையுச்சியிலேயே கண்ணேணி வழியாகக் கானவர்கள் ஏறிச்சென்று அங்குள்ள தேன் அடையிலிருந்து தேனைக் கைக்கொண்டு மகிழ்ந்து ஆரவாரித்துள்ளனர்.

**கிழங்ககழ்தல்**

கானவர்கள் கிழங்கிற்காகக் குழிகளைத் தோண்டியுள்ளனர். அக்குழிகளில் வேங்கை மலர்கள் நிறைந்து கிடந்ததை,

**---------------------- கானவா**

**கிழங்கு அகழ் நெடுங்குழி மல்க வேங்கை (ஐங். 208:1-2)**

என்னும் பாடல் வரிகள் தெரிவிக்கின்றன. இக்குழியில் எவ்வகையானக் கிழங்கு எடுக்கப்பட்டது என்ற குறிப்பில்லை. ஆனால், வள்ளிக் கிழங்கு மலையின் இயற்கை வளமாகக் காணப்படுவதிலிருந்து வள்ளிக்கிழங்கு குறிஞ்சி நில மக்களின் உணவில் பெற்றிருந்த இடத்தை அறியமுடிகிறது[15]. வள்ளிக்கிழங்கு படர்ந்த காட்டிற்கு உரிமையுடைய ஒருவனாகத் தலைவன் இருப்பதை,

**மணி வரைக் கட்சி மட மயில் ஆலும் நம்**

**மலர்ந்த வள்ளி அம் கானம் கிழவோன் (ஐங். 250:2-3)**

என்று ஐங்குறுநூறு குறிப்பிட்டுள்ளது. வள்ளிக்கிழங்கு படர்ந்தகாடு தனிப்பட்டவர்களுக்கு உரிமையுடையதாக இருந்தது போன்று கிழங்கிற்காக அகழப்பட்டக் குழி அகழ்ந்தவர்களுக்கே உரிமையுடையதாக இருந்துள்ளது. அவற்றில் பிற மக்கள் கிழங்கு அகழும் உரிமை பெற்றிருக்கவில்லை என்பதை,

**----------------------- குன்றத்துப்**

**பழங்குழி அகழ்ந்த கானவன் கிழங்கினொடு**

**கண்அகன் தூமணி, பெறூஉம் நாடன் (குறுந். 379:1-3)**

என்ற பாடல்வரிகளால் அறியலாம். குறிஞ்சி நில மக்கள் வாழ்க்கையில் குழுச் செயல்பாடு நிறைந்திருக்கக்கூடிய நிலையில் கிழங்கு படர்ந்த காடு, கிழங்கு அகழும் குழி மட்டும் ஒருவருக்கே உரிமையுடையதாகக் கருதப்பட்டிருப்பது ஆய்விற்குரியது. இவை, தனி உடைமையாளர்களாக மக்கள் மாறிய காலச்சூழலை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

கிழங்கு அகழும் இடம் தனிப்பட்டவர்களுக்கு உரிமையுடையதாக இருப்பினும் மக்களால் சேகரிக்கப்பட்ட கிழங்கு சிறுகுடியில் உள்ளவர்களுக்குப் பொதுவாகப் பகிர்ந்தளிக்கப்பட்டதை,

**கானவன் எய்த முளவு மான் கொழுங் குறை**
**தேம் கமழ் கதுப்பின் கொடிச்சி, கிழங்கொடு**
**காந்தள்அம் சிறுகுடிப் பகுக்கும் (நற். 85:8-10)**

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

மேற்கண்ட பாடல்களின் வழி, குறிஞ்சி நில மக்கள் கிழங்கு விளையும் இடத்தைத் தனிப்பட்டவர்களுக்கு உரிமையுடையதாகக் கொண்டிருந்ததும் அதில் விளைந்த கிழங்கை அனைவருக்கும் பங்கிட்டுக் கொடுக்கும் குழுவின் பகிர்வு முறையும் வெளிப்படுகிறது.

**மா, பலா சேகரித்தல்**

மலைப் பக்கங்களில் மா, பலா ஆகிய மரங்கள் செழித்து வளர்ந்திருந்த இயற்கைக் காட்சிகளைச் சங்கப் பாடல்களில் காணலாம். குறிஞ்சி நில மக்கள் அவைகளில் இருந்து கிடைக்கக் கூடிய விளைபொருட்களை உணவிற்காகச் சேகரித்துள்ளனர்.

பலாப்பழங்களைப் பயன்படுத்தித் தேறல் என்னும் கள்ளினைத் தயார் செய்துள்ளனர்[16]. எனவே, பலாப்பழங்கள் கள்ளிற்காகச் சேகரிக்கப்பட்டுள்ளன என்பதை அறியமுடிகிறது. கானவன், பலாப்பழங்களைக் குரங்குகள் உண்ணாதிருக்க மரங்கள்தோறும் வலைகளைக் கட்டியதையும்[17] குறவர்கள் பழுத்த பழங்களைச் சேகரிக்கும் பொருட்டு மரங்கள் இருந்த இடத்தில் குடிசை நாட்டியதையும்[18] குரங்குகள் உண்டுபோட்ட பலாக் கொட்டைகளைச் சேகரித்துள்ளதையும்[19] இக்கொட்டைகளிலிருந்து மாவு எடுத்து சமையலுக்குப் பயன்படுத்தியுள்ளமையும்[20] சங்க

இலக்கியத்தில் காணமுடிகிறது. மலையில் உதிர்ந்த மா வடுக்களைச் சேகரித்துள்ளதை ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது[21]. மலை வாழ் உயிரினங்களுடன் குறிஞ்சி நில மக்கள் போட்டியிட்டு அவர்களுக்குரிய உணவைச் சேகரித்த பணிச் சூழலை இத்தகைய நிகழ்வு வெளிப்படுத்துகின்றது.

**வேட்டை உணவு சேகரிப்பு**

நாடோடிகளாக வாழ்ந்த மனித இனம் உயிர்வாழ முதலில் கற்றுக்கொண்ட தொழில் வேட்டைத் தொழிலாகும். குறிஞ்சி நில மக்கள் உணவிற்காகவும், தன்னுடைய இருப்பிடத்திற்கு இடையூறு செய்யும் விலங்குகளையும் வேட்டையாடினர். வேட்டையாடுவதற்கு வில், அம்பு, பொறி போன்ற கருவிகளையும் வேட்டைக்காக நாய்களையும் பயன்படுத்தியுள்ளனர். இசைக்கருவிகளுடன் வேட்டைக்குச் சென்றுள்ளனர். இளையர் என்று அழைக்கப்படும் வேட்டையர்கள் பலர் சேர்ந்து குழுவாக வேட்டைக்குச் சென்றிருக்கின்றனர்.

குடும்ப அமைப்பில் தந்தை, தமையன் ஆகிய இருவரும் வேட்டையில் ஈடுபட்டுள்ளனர். ஆண்கள் வேட்டையில் தலைமை தாங்கிச் சென்று வேட்டையாடுவது வேட்டைத்தொழிலுக்குரிய மரபாக உள்ளது.

**------------------- என்னையும்-**
**களிற்று முகம் திறந்த கல்லா விழுத் தொடை**
**ஏவல் இளையரொடு மா வழிப்பட்டென (நற். 389:3-5)**

எனும் பாடல், எம் தந்தை களிற்றின் முகத்தைப் பிளக்குமாறு சிறந்த அம்பெய்யும் தொழிலன்றிப் பிற தொழிலுணராத ஏவல்செய்யும் இளையருடன் விலங்கு வேட்டையாடச் சென்றுள்ளான் என்று தலைவி கூறுவதிலிருந்து குறிஞ்சி நில மக்களின் முக்கியத்தொழிலாக விலங்கு வேட்டை இருந்துள்ளது என்பது தெரிகிறது. முருகனது சீற்றத்தைப் போன்ற கோபத்தையும், வலிமையையும் உடைய தந்தை வேட்டைக்கு நாய்களோடு சென்றதையும்[22] தலைவி கூற்றிலிருந்து அறிந்துகொள்ளமுடிகிறது.

## வேட்டைக்குச் சென்ற தோற்றம்

சங்ககால மக்கள், தாங்கள் மேற்கொள்ள இருக்கும் பணியை அறிவிக்கும் விதமாக பூக்களை மாலையாகத் தொடுத்தணிந்துள்ளனர். அப்பூக்கள் அவர்களுடைய நிலம் சார்ந்ததாக அமைந்திருந்தன. அவ்வாறே குறிஞ்சி நில மக்களும் தம்முடைய அடையாளமாக விளங்கக்கூடிய வேங்கை மலர்களை அணிந்து வேட்டைக்குச் சென்றுள்ளனர். வேட்டையில் தலைமை தாங்கிச் சென்ற தலைவனின் வேட்டைத் தோற்றத்தை அகநானூறு குறிப்பிட்டுள்ளது. வேட்டைத் தலைவன் வேங்கையின் மலரைச் சூடினான். மூங்கிலால் செய்யப்பட்ட வில்லைத் தோளில் கிடத்தினான். பலாவின் கள்ளினைத் தம் இளையோருடன் குடித்தான். தப்பாது விலங்குகளை விரட்டிப் பிடிக்கும் வேட்டை நாய்கள் பின்னேவர வேட்டைக்குச் சென்றான். இதனை,

**பூங்கண் வேங்கைப் பொன்இணர் மிலைந்து,**
**வாங்கு அமை நோன்சிலை எருத்தத்து இரீஇ,**
**தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்**
**வீளை அம்பின் இளையரொடு மாந்தி,**
**ஓட்டு இயல் பிழையா வய நாய் பிற்பட,**
**வேட்டம் போகிய குறவன் காட்ட**
**குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர,**
**முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட! (அகம். 182:1-8)**

என்ற பாடலால் அறியலாம்.

குறிஞ்சி நில மக்கள் யானை, பன்றி, முள்ளம்பன்றி ஆகிய விலங்குகளை வேட்டையாடியுள்ளனர். இவற்றை வேட்டையாட வில், அம்பு, பொறி, வலை, கவண்கல் ஆகிய கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

## யானை வேட்டை

யானை வேட்டை உணவிற்காகச் செய்யப்படவில்லை. யானையிடமிருந்து தந்தம் முதலான பொருட்களைப்பெற வேட்டையாடப்பட்டுள்ளது. மேலும், தம்முடைய வேட்டைத் திறமையை நிரூபிக்கும் வகையிலும் யானை வேட்டை செய்திருக்கலாம். தினைக்கதிரை உண்ணவரும் யானை மக்களால் விரட்டியடிக்கப்பட்டுள்ளது. குறிஞ்சி நில மக்கள், பெரிய மலையின் பக்கங்களில் யானை வேட்டைக்குச் சென்றுள்ளனர்[23].

இவர்கள், யானையினை கொம்பிற்காக வேட்டையாடியதைப் பின்வரும் பாடல் தெரிவிக்கின்றது.

**இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்**
**விரிமலர் மராஅம் பொருந்தி, கோல்தெரிந்து,**
**வரிநுதல் யானை அருநிறத்து அழுத்தி,**
**இகல்அடு முன்பின் வெண்கோடு கொண்டு, தன்**
**புல்வேய் குரம்பை புலர ஊன்றி (அகம். 172:6-10)**

இரும்பை உருக்கி வார்த்துத் திருத்தமாகச் செய்தது போன்ற வலிமைமிக்க கையினையுடைய கானவன், மலர்ந்த மலரினையுடைய வெண்கடப்ப மரத்தின்மீது சாய்ந்து நின்ற வண்ணம், கையில்கொண்ட அம்பினை ஆய்ந்து எடுத்து, யானையின் மருமத்தில் எய்துக்கொன்றான். அந்த யானையின் கொம்பினை எடுத்து வந்து புலால் நாற்றம் வீசக் குடிசையில் ஊன்றி வைத்தான்.

கானவன் முன்பு, தன்னோடு போரிட்டு இறந்த யானையின் வெண்ணிறக் கொம்பினைக் கருவியாகக் கொண்டு நீர்வளம்மிக்க நெடுவரையில் பொன்னை அகழ்ந்தெடுத்தான். அவ்விடத்தில் மணிகளும் உடன் தோன்றின. தோண்டுவதற்குப் பயன்படுத்தப்பட்ட யானையின் கொம்பு ஒடிந்ததால் ஆலங்கட்டி போன்ற முத்துக்கள் அதிலிருந்து விழுந்தன. அவ்வாறு கிடைத்த பொன்னும், முத்தும், மணியும், அரும் பண்டங்களையும் சந்தன மரக்காவடியில் வைத்து ஒருசேர சுமந்துக் கொண்டு வந்தான்[24]. அவன் நறைக்கொடி நாரினால் கட்டப்பட்ட வேங்கை மலர் மாலையைத் தலையில் சூடியிருந்தான்.

கானவர்கள் தாங்களே யானை வேட்டையில் ஈடுபடாத நேரங்களில், காட்டு விலங்குகள் யானையிடம் சண்டையிட்டுப் புண்பட்டபோது யானையின் கொம்பினை எடுத்து வந்துள்ளனர். இது,

**புலியொடு பொருத புண் கூர் யானை**
**நற் கோடு நயந்த அன்பு இல் கானவர் (நற். 65:5-6)**

என்று கானவனை அம்பு இல்லாதவனாகக் காட்டியுள்ளது.

யானையின் கொம்பினைப்பெற யானைவரும் வழிகளில் குழிகள் எடுத்து வைத்திருப்பது ஒருவகை வேட்டைமுறையாக இருந்துள்ளது[25]. யானையை

வேட்டையாட அம்பு பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆகையால் கானவனின் அம்பிற்கு யானைகள் அஞ்சியோடியுள்ளன[26]. கொம்பிற்காக யானை வேட்டையாடப் பட்டிருப்பதை இப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

## தினையை உண்ண வரும் யானையை விரட்டல்

தினைப்புனத்தில் யானைகள் இரவில் சென்று கதிர்களை உண்டன. அவை தினையை உண்ணாதிருக்க ஆண்களால் இரவுநேரக் காவல் பார்க்கப்பட்டது. தினைக்காவல் புரிந்த ஆண்கள் யானையை விரட்டப் பரண்மேல் இருந்து கவண் கற்களைப் பயன்படுத்தி விரட்டியுள்ளனர்[27]. தினைக் கொல்லையில் புகுந்த யானையை விரட்டக் கருவிகளுடன் குறவர்கள் சென்றதை,

**மலை அயற் கலித்த மைஆர் ஏனல்**
**துணையின் தீர்ந்த கடுங்கண் யானை**
**அணையக் கண்ட அம் குடிக் குறவர்**
**கணையர், கிணையர், கை புனை கவணர்**
**விளியர், புறக்குடி ஆர்க்கும் நாட!** **(நற். 108:1-5)**

என்னும் பாடல் விவரிக்கின்றது.

## பன்றி வேட்டை

குறிஞ்சி நில மக்கள் பன்றியை உணவிற்காக வேட்டையாடியுள்ளனர். பன்றி காட்டிலும் தினையைக் கவரவரும் இடங்களிலும் வேட்டையாடப்பட்டுள்ளது. தன்னை வேட்டையாட வருவோரை நேருக்குநேர் நின்று பார்க்கும் பன்றி அவர்களை விரட்டியடிக்கும் திறமை பெற்றுள்ளதையும் அத்தகைய பன்றி கானவனால் வேட்டையாடப்படாமல் விடப்பட்டதையும்[28] அகநானூற்றுப் பாடல்வழி அறிந்துகொள்ளமுடிகிறது. பன்றிகள் கிழங்குகளை உண்பதற்காக நிலங்களைக் கிளரியதைப் பல பாடல்கள் தெரிவிக்கின்றன. பன்றியைப் பொறி வைத்துப் பிடித்துள்ளனர்.

சேற்றில் உழுததால் ஆண்பன்றி சேறு படிந்து காணப்பட்டது. அத்தகைய பன்றி, சுருக்கு வார்வைத்த பிளவிலே விழுந்தது. விழுந்தவுடன் அவ்வாரினை விளக்கிக் காட்டு நாய்கள் சூழ்ந்து பன்றியைக் கொன்றன. நாய்கள் பற்றிய தசையை விலக்கிய கானவர் பன்றியைச் சிறுகுடிக்குக் கொண்டு சென்றனர்[29].

கானவர் உழுது விளைவித்த தினைக்கதிரைச் சிறிய கண்ணும் பெரிய சினமும் உடைய பன்றிகள் தின்று பக்கத்தில் உள்ள மலைப்பிளவுகளில் தங்கியிருந்தன[30]. இப்பன்றிகளை அறிந்த கானவன் கல் நெருங்கிய அறியவழியிடையே தங்கிப் பதுங்கி ஆண்பன்றியை அம்பெய்திக் கொன்றான். அப்பன்றியின் தசை கானவர்களுடைய சிறுகுடியில் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டுள்ளது[31].

## முள்ளம்பன்றி வேட்டை

முளவு மான் என்று சுட்டப்பட்ட முள்ளம்பன்றி, உணவிற்காக வேட்டையாடப்பட்டுள்ளதை சங்கப் பாடல்கள் வழி அறியமுடிகிறது. காட்டில் உள்ள முள்ளம் பன்றியைக் கானவர் அம்பெய்தி வேட்டையாடியுள்ளனர்[32]. வேங்கைமலர் சூடி இளையருடன் சென்று முள்ளம்பன்றியைக் கொன்றுள்ளனர்[33]. அவை சமைத்து உண்ணப்பட்டுள்ளதை மலைபடுகடாம் குறிப்பிட்டுள்ளது[34].

## வேட்டை வெற்றி

குறிஞ்சி நில மக்கள் வேட்டையில் கிடைத்த வெற்றியைக் கொண்டாடும் பாடல்கள், அவர்களுடைய வேட்டைத் திறனைப் பாராட்டும் விதத்தில் அமைந்துள்ளன. அவர்களுடைய வெற்றி குழுவாகப் பகிர்ந்து கொள்ளப்பட்டுள்ளது. அச்சமயம், வேட்டையில் கிடைத்த உணவு மக்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது. கள் குடிப்பது குழுப் பண்பாடாக விளங்குகிறது.

யானையை வேட்டையாடிய மகிழ்ச்சியில் கானவன் யானையினுடைய கொம்பினை நட்டுவைத்துக் குடிசையின் முற்றத்தில், நீண்ட மத்தளத்தைப் போன்ற பலாப்பழத்தினின்றும் பிழிந்தெடுத்த மதுவினை உண்டு ஆடிப்பாடி மகிழும் மலைப்பகுதியைப் போன்று[35] நாட்டில் வாழ்பவன் அடைந்த வேட்டை மகிழ்ச்சியை,

**வன் கைக் கானவன் வெஞ் சிலை வணக்கி,**
**உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு,**
**மனைவாய் ஞமலி ஒருங்கு புடை ஆட,**
**வேட்டு வலம் படுத்த உவகையன், காட்ட**
**நடு காற் குரம்பைத் தன் குடிவயிற் பெயரும் (நற். 285:3-7)**

என்ற பாடல்வரிகளால் அறியலாம். இப்பாடல், வலிய கையை உடைய கானவன், கொடுமைமிக்க அம்பை எய்து நெஞ்சிடத்தே பாய்ச்சிக் கொன்ற முள்ளம்பன்றி ஏற்றை கைக்கொண்டு, மனையிடத்தே உள்ள நாய்கள் ஒருசேர பக்கத்திலே குரைத்து விளையாடிவர வேட்டையிலே வெற்றியடைந்த மகிழ்ச்சிக்குரியவனாகக் காட்டிடத்து உள்ள தம்முடைய குடிசையில் இருந்ததைக் குறிப்பிட்டுள்ளது.

இவ்வாறு வேட்டையில் கிடைத்த முள்ளம்பன்றி, பன்றி ஆகிய விலங்குகளைக் கானவன் அம்பெய்திக் கொன்று, இல்லத்தில் உள்ள மனைவியிடம் கொடுத்தான். அவற்றை இல்லத்தலைவி தம் சிற்றூரில் வாழும் பலருக்கும் பகிர்ந்து அளித்தாள்[36].

குறிஞ்சி நில மக்கள் உணவிற்காகவும், மதிப்புடைய பொருட்களுக்காகவும், வேட்டையாடியிருப்பதைச் சங்க இலக்கியங்கள் வழி அறிந்துகொள்ள முடிகிறது.

## உணவு உற்பத்தி

இயற்கை உணவை சேகரித்தும், விலங்குகளை வேட்டையாடியும் வாழ்ந்த குறிஞ்சி நில மக்கள், உணவை உற்பத்தி செய்து உண்ணும் வாழ்க்கை நிலைக்கு மாறிய காலக்கட்டத்தையும் குறிஞ்சித்திணை எடுத்துரைக்கின்றது. குறவர்களும் கானவர்களும் தினையைப் பயிரிட்டுள்ளனர். தினை விதைப்பிற்குப் பயன்படுத்தப்பட்ட நிலம், தினைவிதைப்பு, தினைப் பாதுகாப்பு, அறுவடை ஆகியவற்றைச் சங்கப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. இப்பணிகள் ஆண், பெண் இருவரின் கூட்டு உழைப்பால் செய்யப்பட்டுள்ளன. ஆண்கள் நிலத்தை உருவாக்குதல், விதைத்தல் ஆகிய பணிகளைச் செய்துள்ளனர். பெண்கள் தினைப் பாதுகாத்தல், அறுவடை, அவற்றை உலர்த்துதல், தினையைக் குற்றுதல், அவற்றைச் சமைத்தல் ஆகிய பணிகளைச் செய்துள்ளனர். குறிஞ்சி நில வேளாண்மையைப் பின்வருமாறு பகுத்து நோக்க வேண்டியுள்ளது.

1. விளை நிலம் பதப்படுத்தும் முறை
2. தினை விதைப்பு
3. களையெடுப்பு, நீர்ப்பாசனம்
4. தினை பாதுகாப்பு
5. அறுவடை
6. தினை உலர்த்துதல்

7. தினை குற்றுதல்

**விளைநிலம் பதப்படுத்தும் முறை**

மலையும் காடும் சார்ந்த நிலப்பகுதியாகிய குறிஞ்சி நிலத்தைத் தினை விதைப்பிற்கு ஏற்றவாறு மாற்றியிருக்கின்றனர். விளை நிலம் பதப்படுத்தப்பட்டுத் தினை விதைத்த நிலை கீழ்வருமாறு காணப்படுகின்றது.

1. காட்டெரிப்பு
2. கருவிகளால் நிலத்தை சீரமைத்தல்
3. பன்றி உழுத நிலம்

**காட்டெரிப்பு வேளாண்மை**

காட்டை எரித்து நிலத்தை உருவாக்கிய முறைக்குக் காட்டெரிப்பு வேளாண்மை என்று பெயரிடப்பட்டுள்ளது. வேட்டைச் சமூகம் உணவு தேடிய சமூகம் ஆகும். காட்டெரிப்பு வேளாண் சமூகம் உணவு உற்பத்தி செய்த சமூகம் ஆகும். கானக் குறவர்களே முதல் தமிழ் விவசாயிகள். ஆக, உணவு உற்பத்தியென்பது முதன்முதல் மனிதச் சமூகத்தில் பயிரிடுதல் எனும் புதிய தொழில் நுட்பத்தோடு ஏற்பட்டது. இது மனிதச் சமூகத்தில் ஏற்பட்ட இரண்டாம் கட்ட புரட்சியாகும். சங்க காலத்தில் காட்டெரிப்பு வேளாண்மை இருந்ததால் தமிழ்ச் சமூகம் மனிதகுலப் படிமலர்ச்சியின் இக்கட்டத்தையும் கொண்டதாக உள்ளது[37] என்கிறார் பக்தவத்சல பாரதி.

குறவர்கள் கொளுத்திய நெருப்பின் காரணமாக எழுந்த புகை, குறிஞ்சி நிலச் சூழலை விளக்கும் வகையில் பாடப்பட்டுள்ளது. காட்டை எரித்ததினால் எழுந்த புகை மலைப்பகுதிகளில் சூழ்ந்தது. அவ்வாறு கொளுத்திய நெருப்பிற்கு அஞ்சி, மயில்கள் தம் கூடுகளுக்குச் சென்றதாக ஐங்குறுநூறு[38] குறிப்பிட்டுள்ளது. குறிஞ்சி மக்கள் பயிரிட, நிலையான நிலத்தைப் பயன்படுத்தவில்லை. நிலங்களை மாற்றி மாற்றிப் பயிரிட்டதற்குச் சங்கப் பாடல்களே சான்றுபகர்கின்றன. புதுக்கொல்லை வேண்டிய குறவன் பழைய கொல்லையில் உள்ள மரங்களைச் சுட்டெரித்ததினால் உண்டாகிய புகை உப்பு வணிகரது வண்டிகளில் கட்டப்பட்ட எருதுகளுக்குத் துன்பம் அளித்தது[39].

சந்தனம், அகில், நறைக்கொடி, யாமரம் முதலானவற்றை வெட்டி எரித்து விளை நிலம் உருவாக்கப்பட்டுள்ளது. குன்றக்குறவன் சந்தனமரத்தை வெட்டிச் சுடுதலால் எழும் புகை மலைப்பக்கங்களில் தவழ்ந்ததை,

**குன்றக் குறவன் சாந்த நறும் புகை (ஐங். 253:1)**

**குன்றக் குறவன் ஆரம் யறுத்தென**

**நறும் புகை சூழ்ந்து காந்தள் நாறும் (மேலது. 254:1-2)**

என்ற பாடல்வரி தெரிவிக்கின்றது.

நறைக் கொடிகளையும், அகில் மரங்களையும் எரித்த புகை குறவர்களின் சிற்றூர்களில் எழுந்தது[40]. யாமரம் எரிந்ததைக் குறுந்தொகை[41] குறிப்பிட்டுள்ளது. வெட்டப்பட்டு எரிக்கப்பட்ட கொல்லை நிலத்தில் துண்டுகளாக்கப்பட்ட மரங்கள் அடுக்கி வைத்திருந்ததை,

**எறி புனக் குறவன் குறையல் அன்ன**

**கரிபுற விறகின் ஈம ஒள் அழல் (புறம். 231:1-2)**

என்கிறது.

சுட்டெரித்துத் திருத்திய நிலத்தில் தினை விதைத்ததைப் பற்றிக் குறுந்தொகை 198, 291, அகநானூறு 288, 368 ஆகிய பாடல்கள் குறிப்பிடுகின்றன. ஐவனம் விதைத்ததைப் புறநானூறு 159- வது பாடல் குறிப்பிடுகிறது. இவ்வாறு பயிரிடுவதற்கு முன் செழித்து வளர்ந்த சந்தனம் முதலிய மரங்களை எரித்து, எரித்தவற்றின் சாம்பலையே உரமாகக் கொண்டு பயிரிடும் முறை பழைய கற்கால (palaeolithic) முறையாகும்[42]. அவற்றின் சாம்பல் சில நாட்களுக்கு அப்படியே விட்டு வைக்கப்பட்டிருந்தன. அவ்வாறு விட்டு வைத்த இடத்தில் கொளுத்திய நிலத்தின் தன்மையை அகநானூற்றுப் பாடல் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது.

**தொடுதோற் கானவன் சூடுறு வியன்புனம்,**

**கரிபுறம் கழீஇய பெரும்பாட்டு ஈரத்து (அகம். 368:1-2)**

காலில் செருப்பணிந்த கானவன் சுட்டெரித்த அகன்ற கொல்லையில் பெய்த மழை, நீர் கரிந்த இடங்களைக் கழுவிச் சென்றது என்பதிலிருந்து எரிந்த இடம் அப்படியே விட்டு வைக்கப்பட்டிருந்ததை இதன் மூலம் அறியமுடிகிறது.

காடுகளை எரித்து விளைநிலம் உருவாக்குவது கானவர்களின் தொன்மையான வேளாண்மையாகும். வாழ்வில் உணவுப் பற்றாக்குறையைப் போக்க இனக்குழுக்கள் செய்த காட்டெரிப்பு, தொடர்ந்து வேந்தர்களின் ஆட்சிக்காலத்தின் போதும் நடைபெற்றுள்ளது. ஆனால், இவ்விருவருடைய செயல்களிலும் வேற்றுமை

காணப்படுகின்றது. வேந்தர்கள் தங்களுடைய நாட்டின் எல்லைகளைப் பெருக்கிக் கொள்ள இத்தகைய வேலைகளைச் செய்துள்ளனர்[43]. இத்தகைய போக்கு இனக்குழு வாழ்க்கையிலிருந்து வேந்தர்களின் நாட்டுருவாக்கச் செயல்பாட்டை எடுத்துரைக்கின்றது.

**கருவிகளால் நிலத்தை சீரமைத்தல்**

உலோக காலத்தில் நிலத்தை உழுது பயிர் செய்வதற்குரிய கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டன[44]. அக்கருவிகளைப் பயன்படுத்தித் தினை விதைப்பிற்கான நிலம் உருவாக்கப்பட்டது. இனக்குழு விவசாயம் காட்டை எரித்தும், வெட்டி எறிந்தும், நிலங்களை உழுதும் செய்யப்படுவனவாகும். காட்டை எரித்து நிலம் உருவாக்கியது போன்று மரம் முதலியவற்றை வெட்டிஎறிந்து உழுது பயிரிடும்முறையும் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

குறவர்கள், மூங்கில் நெருங்கி வளர்ந்துள்ள மலைச் சாரலில் சந்தன மரத்தை வெட்டினர்[45], நறைக் கொடிகளை வெட்டினர்[46]. அவ்வாறு சீரமைக்கப்பட்ட அகலமாகவும் வளையவும் உள்ள கொல்லையில் மழைபெய்து பதமான பின்னர் உழுதனர்[47]. பெரிய கற்களையுடைய பக்கமலையில் எம்முடைய தமையன்மார்கள் உழுத தினைப்புனம் என்று தலைவி கூறுவதிலிருந்து விதைப்புக்கான நிலத்தை உழும் பணியைத் தமையன்மார்கள் செய்திருக்கின்றனர் என்பது புலப்படுகின்றது[48].

பத்துப்பாட்டு இலக்கியங்களில் ஒன்றாகிய மதுரைக்காஞ்சி, குறிஞ்சியின் நில வளம் பற்றிப் பாடியிருக்கின்றது. அவ்விலக்கியம் கூறும் வேளாண்மை, வெட்டி எறிந்துப் பின் பயிரிடும் வேளாண்மையாக உள்ளது.

அகிலையும், சந்தனத்தையும் வெட்டி, மேட்டு நிலங்களில் விதைக்கப்பட்ட குறுகிய கதிர்களையுடைய தோரை என்னும் நெல்லும், நெடிய தாளினையுடைய வெண்சிறு கடுகும், ஐவனநெல், வெண்ணெல் இவற்றுடன் பிணைந்து பிணைந்து வளர்ந்த இஞ்சியும், மஞ்சளும், பசுமை வாய்ந்த மிளகுக்கொடியும், ஒழிந்த பல்வேறு பண்டங்களும் பாறையில் குவிக்கப்பட்டிருந்தன[49]. தினைக்காவல் புரிந்த கிளிகடி ஆரவாரம், அவரையைத் தின்னவரும் காட்டுப்பசுவை விரட்டும் ஆரவாரம், சேணோன் பன்றியைக் கொன்றதால் எழுந்த ஆரவாரம்[50] போன்ற ஒலிகள் குறித்தும் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும், சேம்பையும் மஞ்சளையும் விதைத்து, அவை

வளர்ந்தப்பின், அவற்றின் கிழங்குகளைப் பன்றிகள் அகழாமல் பாதுகாப்பவர்கள், பன்றிகளை ஓட்டுவதற்காக அடிக்கும் பறை ஓசை மலைகளில் கேட்டது. இதனை,

**சேம்பும் மஞ்சளும் ஓம்பினர் காப்போர்**

**பன்றிப் பறையும்** (மலைபடு. 343-344)

எனும் பாடல்வரிகளால் அறியமுடிகின்றது. எட்டுத்தொகை இலக்கியங்களில், காட்டெரிப்பு வேளாண்மையில் உணவிற்காகத் தினையைப் பயிர்செய்த கானவர்கள் பத்துப்பாட்டில் சேம்பு, மஞ்சள் முதலான பயிர்களை விளைவித்துக் காவல் புரிந்துள்ளனர். இப்பயிர்கள் வாழ்க்கையின் அன்றாட உணவுத்தேவையை நிறைவேற்றும் பொருட்டுச் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. மாறாக, உணவு உற்பத்தி பெருகிச் சேகரிப்பு நிலை உருவாகியிருப்பதை எடுத்துரைப்பதாகவும், கானவர் வேளாண்மை அடைந்த அடுத்தக்கட்ட வளர்ச்சியைக் குறிப்பிடுவதாகவும் இவ்விலக்கியக் காலம் இருந்துள்ளது.

## பன்றி உழுத நிலம்

கிழங்கு வேண்டிப் பன்றி கிளறிய புழுதியில் கானவர் தினை விதைத்தனர். இவை இயற்கையாகக் கிடைத்த நிலம். இந்நிலங்களைப் பயன்படுத்தித் தினை விதைப்பு நடைபெற்றிருப்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

**கொழுங் கிழங்கு மிளரக் கிண்டி, கிளையொடு,**
**கடுங் கண் கேழல் உழுத பூழி,**
**நல் நாள் வரு பதம் நோக்கி, குறவர்**
**உழாஅது வித்திய பரூஉக் குரற் சிறு தினை (புறம். 168:3-6)**

எனும் பாடல், மலைச்சாரலில் காந்தளின் கிழங்கைத் தோண்டிய பன்றி உழுத புழுதியில் குறவர் நல்லநாள் பார்த்து உழாமலேயே தினையை விதைத்தனர். தினையும் விளைந்தது. புதுவருவாயாகிய தினைக்கதிரை நல்லநாளில் புதிதுண்ணவேண்டி அரிந்ததைக் குறிப்பிடுகிறது. மேற்சொன்னவாறே பன்றி உழுத நிலத்தில் தினை விதைத்து அறுக்கப்பட்டமுறையை ஐங்குறுநூறு[51] எடுத்துரைக்கிறது.

## தினை விதைப்பு

காட்டை எரித்து உழுத நிலத்திலுள்ள ஈரத்தைப் பயன்படுத்தி, களைக் கோட்டினால் களையை நீக்கிக் கருந்தினையை விதைத்துள்ளனர். இதனை,

**மரம் கொல் கானவன் புனம் துளர்ந்து வித்திய(குறுந். 214:1)**

என்ற பாடல்வரி விளக்குகின்றது. மலைப்பக்கத்தில் என் ஐயன்மார்கள் உழுது விதைத்த தினை[52] என்றும், தந்தை வித்திய மென் தினை பைய[53] என்றும் எம் தமையன்மார்கள் உழுத தினைப்புனத்தே தினையைக் கிளிகள் உண்ணும் பொருட்டு வந்தன என்றும் மலைச் சாரலில் உள்ள கொல்லைகளில் பலவகைக் கூலங்கள் விதைக்கப்பட்டு விளைந்திருக்கும்[54] என்றும் கூறப்படுவதிலிருந்து விதைப்புப் பணி தந்தை, தமையனால் செய்யப்பட்டுள்ளமை புலப்படுகின்றது.

**களையெடுப்பு, நீர்ப்பாசனம்**

பரந்த நிலப்பரப்பில் மலை நெல்லை விதைப்போர், அவற்றிடையே வளர்ந்துள்ள களையாகிய காட்டுமல்லிகை, மரல் ஆகியவற்றைப் பறித்தெடுத்ததை,

**அருவிப் பரப்பின் ஐவனம் வித்திப்**

**பருஇலைக் குளவியொடு பசுமரல் கட்கும் (குறுந். 100:1-2)**

என்ற பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன. தேனடைகளை உடைய மலைநாட்டுத் தோட்டத்தில் விளைந்தத் தினைகளின் இடையே வளர்ந்த களைகளைக் களைக்கொட்டினால் எறிந்தமையால் நுண்ணிய புழுதி எழுந்ததை[55] அறியமுடிகிறது.

**நீர்ப்பாசனம்**

குறிஞ்சி மக்கள் விதைத்தத் தினை விளைவதற்குரிய நீர்ப்பாசனவசதி ஏதும் செய்ததாகக் குறிப்புகள் காணப்படவில்லை. இவர்களுடைய விவசாயம் மழையை நம்பி நடைபெற்றதற்கான சான்றுகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. குறிஞ்சி நில விவசாயம் வானம்பார்த்த பூமியில் நடைபெற்றிருக்கின்றது என்பதை உறுதியாகக் கூறலாம்.

**--------------------- சூடுறு வியன்புனம்,**

**கரிபுறம் கழீஇய பெரும்பாட்டு ஈரத்து,**

**தோடுவளர் பைந்தினை நீடுகுரல் காக்கும்**

**ஒண்தொடி மகளிர்க்கு (அகம். 368:1-4)**

இப்பாடலில், கானவன் சுட்டெரித்த அகன்ற கொல்லையில் பெய்த மழைநீர் கரிந்த இடங்களைக் கழுவிச் சென்றது, அம்மழை ஈரத்தில் இதழ்கள் தழைத்து வளர்ந்த

தினையின் விளைந்த கதிர்களை, ஒளி பொருந்திய வளையல் அணிந்த மகளிர் காவல் காத்திருந்தனர் என்று மலைநாட்டின் இயல்பு குறித்துக் கூறப்பட்டுள்ளது. இங்குப் பயிரிடப்படும் தினை மழைநீரினால் விளைவிக்கப்பட்டது என்பதும் புலப்படுகின்றது. விதைக்கப்பட்ட பின்னர் வாடியபயிர்கள் குறித்த பதிவுகளும் காணப்படுகின்றன. அத்தகைய நிகழ்வைக் கீழ்க்காணும் பாடல்,

**-------------------------- கானவர்**

**கரி புனம் மயக்கிய அகன் கண் கொல்லை,**

**ஐவனம் வித்தி, மையுறக் கவினி,**

**ஈனல் செல்லா ஏனற்கு இழுமெனக்**

**கருவி வானம் தலைஇ (புறம். 159:15-19)**

என்று குறிப்பிடுகின்றது. சுடப்பட்டுக் கரிந்த புனத்தை உழுத அகன்ற இடமுடைய கொல்லையில் வேடர் ஐவனநெல்லை விதைத்தனர். கதிர் ஈனாது கோடையில் வாடிய அத்தினைக்கு மழை பெய்தது என்ற பாடலின் மூலம் விதைப்பு, அவை வளர தேவையான நீர் ஆகியவற்றை மழைநீர் மூலமாகக் குறிஞ்சி நில மக்கள் நிறைவேற்றிக் கொண்டதை அறிந்துகொள்ளமுடிகிறது.

மேலும், வேளாண்மைக்கு அருவிநீரும் பயன்படுத்தப்பட்டுள்ளது. காட்டெரிப்பு வேளாண்மையிலிருந்து குறிஞ்சி நில மக்கள் அடைந்த அடுத்தகட்ட வேளாண் வளர்ச்சியாக இதனை நோக்குகின்றனர் மானிடவியல் ஆய்வாளர்கள். இதனை, மலைப்பக்கத்தில் மலைநெல்லை விதைத்து, மலையருவியின் நீரினால் விளைவிக்கின்ற நாடு[55] என்னும் குறிப்பினால் அறியலாம்.

**தினைக்காவல்**

குறிஞ்சி நில வேளாண்மையில் முக்கியமானது தினை விளைச்சல். விதைத்து வளர்ந்து முற்றிய தினைக் கதிர்களைக் கிளி, பன்றி, யானை முதலியவைகளிடம் இருந்து பாதுகாக்க ஆண்களும், பெண்களும் தினைக்காவல் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். புனம் காக்கப்பல கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். பெண்களின் காவல், குறிஞ்சித் திணைக்குரிய காதல் களமாகப் புனையப்பட்டுள்ளது. ஆண்களின் காவல், விலங்குகளை நோக்கிய வேட்டையாக அமைந்திருப்பதிலிருந்து இவர்களின் காவல் நேரமும் கருவிகளும் வேறுபட்டிருப்பதை அறிந்துகொள்ள முடிகிறது. தினைக்காவலுக்குத் தட்டை, தழல், குளிர், கவண்கல், விடுகொள்ளி, அம்பு ஆகிய

கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். அக்கருவிகள் மூங்கிலினால் செய்யப்பட்டதாகும். பரண் ஆண், பெண் இருவருக்கும் பொதுவாக இருந்துள்ளது. அவர்களுக்குரிய நேரத்தில் பரண்மேல் ஏறி காவல் புரிந்துள்ளனர்.

### பெண்கள்

தினைப்புனத்தின் பகற்பொழுது காவல் பெண்களுடையது. பெண்களைத் தாய், தந்தை, தலைவன் ஆகியோர் காவல் காக்குமாறு கூறியுள்ளனர். பெண்கள் கிளி கடிய மரபான உடை உடுத்திச் சென்றனர். ஆண்களுக்கு இந்த மரபு இல்லை. பெண்கள் தட்டை, தழல், குளிர், கவண்கல் ஆகியவற்றைப் பயன்படுத்திக் காவல் புரிந்துள்ளனர். சங்ககாலத்தே தினைப்புனக்காவல் முழுக்கமுழுக்கப் பெண்களால் குறிப்பாகக் கன்னிப்பெண்களால் பார்க்கப்பட்ட உழவுத்தொழில் கூறாக இருந்துள்ளது. இது பெண்டிர் தலைமையில் ஆரம்ப காலத்து நிகழ்ந்த உழவுத்தொழிலின் எச்சமாகவே உள்ளது[57].

### கிளிகடியும் பருவம்

பஞ்சுபோன்ற நுனியையுடைய தினைகள் யாவும் கதிர்விட்டன. அக்கதிர்கள் பால்முற்றி வளைந்து அலையும் பருவத்தினை எய்தின. அக்கதிர்களைக் கிளிகள் உண்ணும், எனவே நீ கிளி கடியும் கருவிகளோடு செல்க எனத் தந்தை கூறியதை,

**'துய்த் தலைப் புனிற்றுக் குரல் பால் வார்பு இறைஞ்சி,**
**தோடு அலைக் கொண்டன ஏனல் என்று,**
**துறு கல் மீமிசைக் குறுவன குழீஇ,**
**செவ் வாய்ப் பாசினம் கவரும்' என்று, (நற். 206:1-4)**

என்ற பாடல்வரிகளால் அறியலாம். தலைவி புதிய தினைப்புனத்திற்கு அன்னையால் காவல் காக்குமாறு அனுப்பப்பட்டாள். அதனால் பழைய கொல்லையில் கோழிகள் தம் துணையோடு சென்று நிலத்தைக் கிளறின.

**-------------------- சேவலொடு**
**சிலம்பின் போகிய சிதர் கால் வாரணம்**
**முதைச் சுவல் கிளைத்த பூழி, மிகப் பல**
**நன் பொன் இமைக்கும் (நற். 389:7-10)**

இப்பாடல், தினைப்புனம் புதிதுபுதிதாக உருவாக்கப்பட்டிருப்பதை உணர்த்துகின்றது.

**கிளி கடிய செல்லும் தோற்றம்**

கிளியை விரட்டப் பெண்கள் தழையாடை உடுத்தித்தம் தோழியருடன் சென்று காவல் காத்ததை,

**--------------------------- பொன்என**
**மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சி,**
**பொலிந்த ஆயமொடு காண்தக இயலி,**
**தழலை வாங்கியும், தட்டை ஓப்பியும்,**
**அழல்ஏர் செயலை அம்தழை அசைஇயும்,**
**குறமகள் காக்கும் ஏனல் (அகம். 188:8-13)**

என்ற பாடலால் அறியலாம். பொன்போன்று மலர்ந்த வேங்கைப் பூக்களால் செறிவாகத் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்துக்கொண்டு தோழியர் கூட்டத்துடன் தழலினையும், தட்டையினையும் அடித்து, அசோகின் அழகிய தழையினாலான ஆடையினை உடுத்திக்கொண்டு குறமகள் தினைக் காவல் இருந்தாள். இத்தழையாடை தலைவனால் கொடுக்கப்பட்டுள்ளது. இதனை,

**---------------------------- முறியும் தந்து, இவை**
**ஒத்தன நினக்கு எனப் பொய்த்தன கூறி (குறுந். 223:4-5)**

என்ற பாடல் மூலம் அறியலாம்.

**கிளி கடி கருவிகள்**

கிளிகடிய தழல், தட்டை, குளிர், கவண்கல் ஆகிய கருவிகள் பயன்படுத்தப்பட்டன.

**தட்டையும் புடைத்தனை, கவணையும் தொடுக்க என**
**எந்தை வந்து உரைத்தனனாக (நற். 206:5-6)**

எனும் பாடல், தந்தை தட்டையைப் புடைத்து ஒலியெழுப்பியும், கவண்கல் கொண்டு விரட்டியும் தினையைக் காக்கக் கூறியதையும்,

**தழலும் தட்டையும் முறியும் தந்து, இவை (குறுந். 223:4)**

எனும் பாடல்வரி தலைவன் தட்டையும் தழலையும் கொடுத்ததையும் குறிப்பிடுகின்றது.

தாய் தட்டையைக் கையில் கொடுத்துக் கிளி கடிய அனுப்பினாள். தந்தையும் உடன் இருந்து அனுப்பினான்[58]. இத்தகைய கிளிகடிவதற்குரிய கருவிகளைக் குறிஞ்சிப்பாட்டு வரிசைப்படுத்தியுள்ளது.

**தழலும் தட்டையும் குளிரும், பிறவும்,**
**கிளிகடி மரபின, ஊழ் ஊழ் வாங்கி,**
**உரவுக் கதிர் தெறூஉம் உருப்பு அவிர் அமையத்து (குறிஞ். 43-45)**

மலைப்பகுதிகளில் விளைந்த பிரம்புகளால் செய்யப்பட்ட பரண்மீது ஏறித் தழல், தட்டை, குளிர் போன்ற கருவிகளைக் கொண்டு பெண்கள் கிளிகளை விரட்டினர்.

மூங்கிலால் செய்த தட்டையைப் புடைத்த மகளிரின் ஆரவாரம் மலைகளின் பக்கங்களில் ஒலித்தது[59]. தட்டை: மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளிடம் நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாகுமாறு ஒன்றில் தட்டும் கருவி[60] என்கிறது பத்துப்பாட்டு உரை.

தழல், தினைப்புனத்தில் கிளி ஓட்டுகின்றவர், மூங்கிலை வில் போல் கட்டித் தெறிக்கும் கருவி என்பதை உரைவழியாக அறியமுடிகிறது.

**ஏனல், உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே (குறுந். 360:5-6)**
**படுகிளி கடியும் கொடிச்சி கைக்குளிரே (மேலது. 291:2)**
**குளிர்படு கையள், கொடிச்சி (நற். 306:3)**

என்ற பாடல்வரிகள் கொடிச்சியின் குளிர் கருவிபற்றிக் குறிப்பிடுகின்றன. மேலும், குறிஞ்சி நிலப் பெண்கள் பாடல்கள் பாடிக் கிளிகளை விரட்டியுள்ளனர். இதனை,

**புலர்குரல் ஏனல், கிளிகடி பாடலும் (அகம். 118:12-13)**

என்ற குறிப்பால் அறியலாம். பெண்கள் தினைப்புனம் காத்ததுபற்றிய பல குறிப்புகள் பாடல்களில் காணப்படுகின்றன (ஐங். 230, 281, 282, 283, 285, 289, குறுந். 72, 141, 142, 214, 291, 333, 346, நற். 22, 102, 128, 134, 156, 204, 209, 259, 288, 306, 344, 373, 376, 389, அகம். 92, 242, 308).

**ஆண்கள்**

தினைப்புனத்தில் இரவுக் காவலுக்குரியவர்கள் ஆண்கள். தினைப்புனத்தை அழிக்கவரும் யானை, பன்றி மற்றும் பிற விலங்குகளை விரட்டுவது இவர்களுடைய பணியாகும். கவண்கற்கள், அம்பு, விடுகொள்ளிகள் ஆகியவை ஆண்கள் பயன்படுத்திய கருவிகளாகும். பன்றிகளுக்குப் பொறி வைத்துத் தாக்கும் பழக்கமும் காணப்படுகின்றது. பரண்மேல் இருந்து ஆண்கள் கவண்கற்களை வீசினார்கள். அக்கவண் மூங்கிலினால் செய்யப்பட்டது. அவற்றில் கற்களை வைத்து அடித்து விலங்குகளை விரட்டினர்[61]. இதனை,

**புலந்து, புனிறு போகிய புனம்சூழ் குறவர்,**
**உயர்நிலை இதணம் ஏறி, கை புடையூஉ,**
**அகல் மலை இறும்பில் துவன்றிய யானைப்**
**பகல் நிலை தளர்க்கும் கவண்உமிழ் கடுங்கல் (மலைபடு. 203-206)**

என்ற பாடல்வரிகள் உணர்த்துகின்றன.

கானவர்கள் தினைப்புனத்தில், பரண்மேல் இருந்து கொளுத்தி எறிந்த விடுகொள்ளிகள் விண்மீனைப்போல் காட்சியளித்தது என்பதை,

**சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி**
**வான மீனின் வயின்வயின் இமைக்கும் (குறுந். 150:1-2)**

என்ற பாடல்வழி அறியமுடிகிறது. நற்றிணை இத்தகைய எரிகொள்ளி விழுவது, எரி நட்சத்திரம் தன்னுடைய நிலையிலிருந்து விழுவதுபோல உள்ளதாகக் குறிப்பிட்டுள்ளது[62]. கனல்வாய் கொள்ளி[63], ஞெகிழி[64] என்றும் விடுகொள்ளிகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. மேலும், காவலுக்கு விளக்குகளை வைத்து ஒளியை ஏற்படுத்தியுள்ளனர். இதனை,

**புருவைப் பன்றி வரு திறம் நோக்கி,**
**கடுங் கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய**
**நெடுஞ் சுடர் விளக்கம் நோக்கி, வந்து, நம் (அகம். 88:4-6)**

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன. இப்பாடல், கானவன் பன்றியினை விரட்டுவதற்கு விளக்கினைக் கொளுத்தி வைத்திருந்ததைக் குறிப்பிட்டுள்ளது. காவலின்போது அம்புகளை எய்து விலங்குகளை விரட்டியதை,

**ஏனல் காவலர் மா வீழ்த்துப் பறித்த**

**பகழி அன்ன சேயரி மழைக்கண் (நற். 13:3-4)**

என்ற பாடல் வரிகள் தெரிவிக்கின்றன. மேலும், தினைக்கவர வந்த யானைகளை விரட்டிப் பிடித்ததை மலைபடுகடாம் குறிப்பிடுவதோடு, கானவர்கள் தினைக் கவர வந்த விலங்குகளின் உடம்பிலிருந்து அம்பினை எடுத்ததை உணர்த்தியுள்ளது. கானவர் தினைக் காவலுக்குப் பயன்படுத்திய உத்திகளை,

**ஓளிதிகழ் ஞெகிழியர், கவணையர், வில்லர்**

**'களிறு' என ஆர்ப்பவர், ஏனல் காவலரே (கலி. 52:13-14)**

என்ற பாடல் விளக்குகின்றது.

**கானவர் கருவிகள்**

கானவர்கள் அம்பு, கிணைப்பறை, கவண் ஆகியவற்றைத் தினைக்காவலின் போது வைத்திருந்ததை நற்றிணை விளக்குகிறது. தினைப்புனத்தில் ஆண் யானை புகுந்ததைக் கண்ட குறவர்களுள் அம்பினை உடையாரும், கிணைப்பறையை உடையாரும், கைவிரலில் கோத்த கவணுடையாரும், கூவிப் பேரிரைச்சலிடுவாராகிக் கூடிக் குடியிருப்புகளில் ஆரவாரிப்பர்[65].

தினைப்புனத்தில் மேயவரும் பன்றியைப் பிடிக்க இயந்திரம் பயன்படுத்தியுள்ளனர். இதனை, சிறு பொறிபோல் அமைத்து வைத்த பெரிய கற்பலகையின் கீழ் புலி புகுந்து இறந்தது[66] என்னும்பினால் அறியமுடிகிறது.

தினைக்காவல் போன்று அவரைக்கும் காவல் காக் குறிப கப்பட்டதைப் பின்வரும் பாடல் விளக்குகின்றது.

**காய்ந்த அவரைப் படு கிளி கடியும் (ஐங். 286:2)**

இதற்கானக் காவல் கிளிகளை ஓட்டுவதாக அமைந்துள்ளது. எனவே கிளிகளை ஓட்டியது பெண்களின் பணியாக இருப்பதினால், இப்பாடல் சுட்டிய காவல், பெண்கள் புரிந்ததாக எடுத்துக்கொள்ளலாம்.

**அறுவடை**

தினை முற்றிய நிலையில் அறுவடை செய்யப்பட்டுள்ளன. வேங்கை மரமுடைய மேட்டு நிலத்தில் கார்காலமழை பெய்தது. அம்மழையால் பதமாகிய ஈர நிலத்தில், புழுதி கலக்கும்படி பலசால்பட உழுது விதைக்கப்பட்டது. களைகள் அடியினின்றும் எடுத்தமையால், இலைகள் தழைத்து வரகானது செழிப்புடன் வளர்ந்தது. அவ்வாறு விளைந்த புதிய வரகை அறுக்கவும், தினையை அரியவும், எள்ளிளங்காய் அறுக்கவும், கொடி அவரையின் வெள்ளைக்காய் அறுக்கவுமாக அந்நாடு ஆரவாரம் உடையதாயிருந்தது[67]. குறிஞ்சி நில மக்கள் அறுவடையிலும் இசைக்கருவிகளை இசைத்துள்ளனர்.

**சிறுதினை விளைந்த வியன்கண் இரும்புனத்து**
**இரவு அரிவரின், தொண்டகச் சிறுபறை**
**பானாள் யாமத்தும் கறங்கும் (குறுந். 375:3-5)**

என்ற பாடல், இரவுப் பொழுதில் தினையின் தாள்களை அரிபவர் முழங்குகின்ற தொண்டகப்பறையின் ஓசையானது சிறுகுடியில் பக்கங்கள்தோறும் கேட்டதைக் குறிப்பிட்டுள்ளது. தினை அறுவடைக்குப்பின் மறுகாலில் கொழுவிய அவரை பயிரிடப்பட்டுப் பூக்கள் பூத்திருந்தன. இதனை,

**---------------------- சிறுதினை மறுகால்**
**கொழுங்கொடி அவரை பூக்கும் (குறுந். 82:4-5)**
**கொய்பதம் உற்றன, குலவுக் குரல் ஏனல்**
**விளைதயிர்ப் பிதிர்வின் வீஉக்கு, இருவி தொறும்,**
**குளிர் புரை கொடுங்காய் கொண்டன, அவரை (மலைபடு. 108-110)**

என்னும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

**தினை உலர்த்துதல்**

பெண்கள், மலையின் அகன்ற பாறையில், செவ்விய தினையை உலர்த்துவதற்காகப் பரப்பிவிட்டு, சுனையில் நீராடச் சென்றதை,

**நிரைவளை முன்கை நேர்இழை மகளிர்**
**இருங்கல் வியல்அறைச் செந்தினை பரப்பிச்**

**சுனைபாய் சோர்வுஇடை நோக்கி (குறுந். 335:1-3)**

எனும் பாடலும், காய வைத்த தினையைத் தொகுக்கும் பணியை,

**செந் தினை உணங்கல் தொகுக்கும், (நற். 344:11)**

என்ற பாடல்வரியும் புலப்படுத்துகின்றன. பெண்கள் புலியும் யானையும் முழங்கிய முழக்கத்தினை இடி என்று கருதி, காயவைத்த தினையைத் தொகுத்ததாகப் பாடல் குறிப்பிட்டுள்ளது.

## தினைக் குற்றுதல்

வீட்டின் முற்றத்தில் தந்தையின் மலையைப் பாடிக்கொண்டே ஐவனமாகிய நெல்லைத் தலைவி குற்றியதை,

**---------------------------- தந்தை**

**மை படு மால் வரை பாடினள் கொடிச்சி,**

**ஐவன வெண்ணெல் குறூஉம் (நற். 373:2-4)**

என்ற வரிகள் மூலம் அறியலாம். தினைக் குத்தும் மகளிர் பாடும் இசையோடு கூடிய வள்ளைப்பாட்டு மலைகளில் கேட்டது. இதனை,

**தினைகுறு மகளிர் இசைபடு வள்ளையும் (மலைபடு. 342)**

என்னும் பாடல் வரியினால் அறியமுடிகின்றது.

## குறிஞ்சி நில மக்களின் உணவு

குறிஞ்சி நில மக்கள் மலை மற்றும் காடுகளில் கிடைக்கக்கூடிய உணவுகளை உண்டனர். தேன், கிழங்கு, பலா, மா, மூங்கில் அரிசி, கள், ஊன், தினை முதலான உணவுகளை உண்டனர். இவர்களுடைய உணவுமுறை உணவு சேகரிப்பில் பகுத்தவாறே அமைந்துள்ளது. அவை,

1. இயற்கை உணவு
2. வேட்டை உணவு
3. உற்பத்தி உணவு

என்பன.

தேனினையுடையராய், கிழங்கினையுடையராய், தசைநிறைந்த பெரிய பெட்டிகளை உடையராய் சிறிய கண்ணினைக் கொண்ட பன்றியின், பழுதாயினவற்றை நீக்கிய தசையையும், மற்றுமுள்ள தசைகளோடு நிரம்பிய வட்டிகளையும் உடையராய்க் கானவர், தம்முள் பொருதுபட்ட யானையின் கொம்புகளைக் காவு மரமாகக் கொண்டு, தாம் கொண்டுவந்த பொருள்களை அவற்றில் தொங்கவிட்டுச் சுமந்து வருவர்[68]. இவ்வுணவுகளை மக்கள் உண்டமுறையை இரண்டு வகைகளில் காணமுடிகின்றன. அவை,

1. பச்சை உணவு
2. சமைத்த உணவு

என்பன.

## பச்சை உணவு

தேன், கிழங்கு, மா, பலா, தினைமாவு போன்ற இயற்கை உணவுகள் சமைக்கப்படாமல் உண்ணக்கூடியது. அவற்றைச் சங்ககால மக்கள் பதப்படுத்தி உண்டுள்ளனர். குரங்குகள் கிழித்து உண்டதால் பிளவுபட்ட முழவு போன்ற பலாப்பழம், வில்லையுடைய குறவர்க்குச் சில நாளைக்கு வைத்திருந்து உண்ணும் உணவாக இருந்துள்ளது[69]. குறமகள் தினை மாவை உண்டு ஐவனநெல் பாதுகாப்பிற்குச் சென்றாள்[70]. தேனீக்களால் தேன் கசிந்து கற்குழிகளிலே வடிந்ததைக் குறவர்களுடைய பிள்ளைகள் வழித்து உண்டுள்ளனர்[71]. மாவடு சமைக்காமல் உண்ணக்கூடிய உணவாக இருந்துள்ளது[72]. இப்பொருட்களிலிருந்து பதப்படுத்தித் தயாரிக்கப்பட்டக் கள் சங்ககால மக்களின் வாழ்க்கையில் முக்கிய இடம் பெற்றுள்ளது.

### கள்

சங்ககால மக்களுள் பெரும்பான்மையோர் கள் குடிக்கும் பழக்கம் கொண்டவர்களாக இருந்துள்ளனர். கள் பலவித பொருட்களில் இருந்து உருவாக்கப்பட்டுள்ளது. தங்களுக்கு வேண்டிய கள்ளைத் தாங்களே தயாரித்தும், கள் விற்கும் மகளிரிடம் சென்று வாங்கியும் குடித்துள்ளனர். இத்தகைய கள் தயாரிக்கும் முறைகுறித்தும் அவை ஏற்படுத்தும் மயக்கம் குறித்தும் பல பாடல்கள் பதிவுசெய்துள்ளன. அத்தகைய காட்சி அகநானூற்றில் இடம்பெற்றுள்ளது.

**என்ஆ வதுகொல் தானே-முன்றில்,**
**தேன்தேர் சுவைய, திரள்அரை, மாஅத்து,**
**கோடைக்கு ஊழ்த்த, கமழ்நறுந் தீம்கனி,**
**புயிர்ப்புறப் பலவின் எதிர்ச்சுளை அளைஇ,**
**இறாலொடு கலந்த, வண்டுமூசு, அரியல்**
**நெடுங்கண் ஆடு அமைப் பழுநி, கடுந்திறல்**
**பாம்புக் கடுப்பு அன்ன தோப்பி வான்கோட்டுக்**
**கடவுள் ஓங்குவரைக்கு ஓக்கி, குறவர்,**
**முறித்தழை மகளிர் மடுப்ப, மாந்தி**
**அடுக்கல் ஏனல் இரும்புனம் மறந்துழி (அகம். 348:1-10)**

இப்பாடலில், கானவன் தழையாடை அணிந்த பெண் கள்ளைக் கொடுக்க, அதை அருந்திவிட்டுத் தினைப்புனம் காத்தலையே மறந்து விட்டான். இத்தகைய கள்ளின் மயக்கம் ஆண்களுக்கு மட்டுமல்ல குறமகளுக்கும் உரியது என்பதை,

**செம் பொறி அரக்கின் வட்டு நா வடிக்கும்**
**விளையாடு இன் நகை அழுங்கா, பால் மடுத்து,**
**அலையா, உலவை ஓச்சி, சில கிளையாக்**
**குன்றக் குறவனொடு குறு நொடி பயிற்றும்**
**துணை நன்கு உடையள், மடந்தை (நற். 341:2-6)**

என்னும் பாடல், குறமகள் கள்குடித்து மரக்கிளைகளை ஓச்சி, கையால் சிறு நெடி பயிற்றி அங்கும் இங்குமாக அலைந்ததைக் கூறுகின்றது. குறிஞ்சி நில மக்களின் வாழ்வியலோடு கலந்திருக்கின்ற தெய்வத்திற்கும் கள் படைக்கப்பட்டுள்ளது.

குறிஞ்சி நில மக்கள் வாழ்வில் கள் முக்கிய இடம்பெற்றுள்ளது. இவர்கள் வேட்டையில் பெற்ற வெற்றியைக் கொண்டாடும்போதும், விழாவின்போதும், சடங்கின் போதும் கள்ளைக் குடித்துள்ளனர். தன்னை நாடிவந்த விருந்தினர்களுக்கும் கள்ளைக் கொடுத்துள்ளனர். குறிஞ்சி நில மக்கள் கள்ளினைத் தயாரிக்கப் பழம், தேன், மூங்கில்நெல் ஆகிய பொருட்களைப் பயன்படுத்தியுள்ளனர். கள்ளினைத் தயாரிக்க மூங்கிலாலான குழாயினைப் பயன்படுத்தியுள்ளனர். அம்மூங்கில் குழாய் அமை, வேய் என்ற பெயர்களால் சுட்டப்பட்டுள்ளது. மூங்கில் குழாயில் நாட்பட்டு அடைத்து வைத்த கள் தோப்பிகள் என்றழைக்கப்பட்டுள்ளது. தேறல்[73], நறவு[74] என்ற

பெயர்களும் கள்ளிற்கு உண்டு. வேய் எனும் மூங்கிற் குழாயினுள் தேனால் செய்த தேறல் என்னும் கள்ளினைப் பதப்படுத்தி அருந்தியுள்ளனர். இதனை,

**வேய்ப் பெயல் விளையுள் தேக்கட் தேறல்**

**குறைவு இன்று பருகி, நறவு மகிழ்ந்து (மலைபடு. 171-172)**

என்னும் பாடல்வரிகள் மூலம் அறியமுடிகின்றது.

கள்குடிக்கப் பாரியின் பறம்புமலையில் பனங்குடை பயன்படுத்தப்பட்டுள்ளது[75]. குறமகள், புள்ளிகளையுடைய அரக்கினால் செய்யப்பட்ட வட்டுச்சாடியின் நாவிலிருந்து ஊற்றப்பட்ட கள்ளினை மகிழ்ச்சியுடன் அருந்தியுள்ளாள்[76]. ஆகவே குறிஞ்சி நில மக்கள் கள்ளினைக் குடிக்கப் பனங்குடை, வட்டு, மூங்கில்குழாய் ஆகியவற்றைப் பயன்படுத்தி இருப்பதை அறியமுடிகிறது.

## சமைத்த உணவு

வேட்டையில் கிடைத்த இறைச்சியை நெருப்பில் சுட்டும், பானையிலிட்டுச் சமைத்தும் உண்டுள்ளனர். வெண்மையானக் கொழுப்புடைய உணவு[77], தீ மூட்டும் நுட்பம் அறிந்த கானவர்களால்[78] சமைத்து உண்ணப்பட்டுள்ளது. உணவு சமைக்கும் பணியைப் பெரும்பான்மையாகப் பெண்களும் சிலநேரங்களில் ஆண்களும் செய்துள்ளனர். ஆண்களும் சமைத்துள்ளனர். பெண்கள் அடுப்புமூட்டி இறைச்சி முதலானவற்றைச் சமைத்துள்ளனர். ஆண்கள் அவைகளை நெருப்பில் வாட்டி உண்ணும் முறையைப் பின்பற்றியுள்ளனர். ஆண்கள் இறைச்சியைச் சுட்டு உண்ணுவதைப் பாலைத்திணைப் பாடல்களிலும், பாணர் முதலான கலைஞர்களுக்குச் சுட்ட இறைச்சி கொடுக்கப்பட்டதைப் புறப்பாடல்களிலும் காணமுடிகிறது. கிளாட்-லெவி-ஸ்த்ராங் உண்ணும் முறைபற்றி, நெருப்பில் சுடுதல், பானையில் நீரிட்டு வேகவைத்தல் (roasting and boiling) என்ற இரண்டு முறைகளைக் கூறி சுடுவது இயற்கையான முறை என்றும், பானையில் நீரோடு இட்டு வேகவைத்தல் கலாச்சார வயமானது என்றும் பாகுபடுத்தினார். சுடுவது ஆண்களின் வேட்டையோடு, சுற்றித்திரியும் வாழ்க்கையோடு தொடர்புடையது. நீரில் இட்டு வேகவைப்பது பெண்களின் சமையலோடு, ஓரிடத்தில் நிரந்தரமாகத் தங்கும் வாழ்க்கையோடு தொடர்புடையது. இவற்றில் வேகவைக்கும் முறை முன்னேறிய நாகரிக செயல்முறையாகும்[79] என்று விளக்கியுள்ளார் என ராஜ் கௌதமன் குறிப்பிடுகிறார்.

அருவிநீரில் அடித்துவரப்பட்ட பலாப்பழத்தின் கொட்டையிலிருந்து எடுக்கப்பட்ட மாவையும், புளியம்பழத்தின் புளிப்பையும், உலையாக வார்த்த மோருக்கு அளவாகக் கலந்து, மூங்கில் வளர்ந்து முற்றிய நெல்லரிசியை, மலைச்சாரல்களில் மணம் வீசும்படி துழாவிச் சமைத்த சோற்றினை,

**வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை,**
**முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை,**
**பிணவுநாய் முடிக்கிய தடியொடு விரைஇ,**
**வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனின்**
**இன் புளிக் கலந்து மா மோர் ஆக,**
**கழை வளர் நெல்லின் அரி, உலை ஊழத்து,**
**வழை அமல் சாரல் கமழத் துழைஇ,**
**நறுமலர் அணிந்த நாறுஇரு முச்சிக்**
**குறமகள் ஆக்கிய வால் அவிழ் வல்சி (மலைபடு. 175-183)**

என்னும் பாடல் விளக்குகிறது.

செம்புற்றின் ஈயலை, இனிய மோரோடு கூட்டிச்சமைத்த புளிங்கறியை உடைத்துப் பாரி நாடு என்கிறது கீழ்வரும் புறநானூற்றுப் பாடல்.

**செம் புற்று ஈயரின் இன் அளைப் புளித்து;**
**மென் தினை யாணர்த்து; நந்தும் கொல்லோ-(புறம். 119:3-4)**

புதுவரவாகிய தினையை உண்பதற்காக மானிறைச்சி சமைத்த புலால் நாறும் பானையைக் கழுவாதே, மரையாவைக் கறந்த நுரைகொண்ட இனிய பாலை உலைநீராக வார்த்து ஏற்றி, சந்தன விறகால் எரியூட்டித் தினையைச் சமைத்துள்ளனர். கூதாளியால் அழகுபெற்ற மலைமல்லிகை நாறும் முற்றத்திடத்து, வாழையின் இலையிலே, பலருடன் பகுத்து உண்ணுவர்[80]. சமைப்பதற்குச் சந்தனம், அகில் முதலான மரங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. சந்தன விறகால் தீமூட்டிச் சமைக்கப்பட்ட ஊன் கலந்தச் சோற்றைத் தம்முடைய சுற்றத்தாருடன் உண்டு ஆடிப்பாடி மகிழ்ந்துள்ளனர்[81]. இவர்கள் பிறநிலம் சார்ந்த மக்கள் வந்தாலும் ஆட்டிறைச்சியுடன் நெய்கலந்து வெண்மையானச் சோற்றில் வெள்ளெலியின்

சூட்டிறைச்சியைச் சேர்த்து நிறையதருவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை அறியமுடிகின்றது[82].

குறிஞ்சி நில மக்கள் உணவை சமைத்தும், பச்சையாகவும் தம்முடன் வாழும் மக்களுக்குப் பகிர்ந்து அளித்துள்ளனர். பிறபகுதியில் இருந்து மக்கள் வந்தாலும் அவர்களுக்கும் உணவைப் பகிர்ந்து கொடுத்துள்ளனர். கானவர் தங்களால் கொல்லப்பட்ட யானையின் கொம்பினைக் காவு மரமாகக் கொண்டு தேன், கிழங்கு, பன்றியின் பழுதடைந்தத் தசையைநீக்கி மற்றதசைகள் ஆகியவற்றைச் சுமந்து தங்களது சிறுகுடிக்குக் கொண்டுவருவர். இப்பொருட்களை எடுத்துச் செல்லப் பனை ஓலையால் செய்யப்பட்ட வட்டிகையைப் பயன்படுத்தினர். அவ்வாறு கொண்டுவரப்பட்ட உணவைத் தம் சுற்றத்தாருடன் பகிர்ந்து உண்பர். தம்மை நாடி வருவோர்க்கும் கொடுப்பர். இதனை,

**மணஇல் கமழும் மாமலைச் சாரல்**
**தேனினர், கிழங்கினர், ஊன்ஆர் வட்டியர்,**
**சிறுகட் பன்றிப் பழுதுளி போக்கி,**
**பொருதுதொலை யானைக் கோடு சீர் ஆக**
**தூவொடு மலிந்த காய கானவர்** (மலைபடு. 151-155)

என்ற பாடல்வரிகளால் அறியலாம். மேலும், இனக்குழு வாழ்க்கையில் பகிர்வு அல்லது பங்கீடு முக்கியமான பண்பாட்டுக் கூறாக விளங்கியிருப்பதையும் அறியமுடிகிறது.

## குறிஞ்சி நில மக்களின் இருப்பிடம்

குறிஞ்சி நில மக்களின் இருப்பிடம் குறித்தப் பதிவுகள், அவர்கள் வாழ்ந்த நிலத்தின் அமைப்பு, குடிசையின் தன்மை, பயன்படுத்தப்பட்ட பொருட்கள் ஆகியன சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

குறிஞ்சி நிலம் மலை சார்ந்த பகுதியாக விளங்குவதால் மலை, கல், பாறை, காடு ஆகியவைகளை ஒட்டி இருப்பிடம் அமைக்கப்பட்டுள்ளது. இதனை,

**---------------------------- கானவர்**
**வரை ஓங்கு உயர் சிமைக் கேழல் உறங்கும்** (ஐங். 268:2-3)
**கல் கெழு சிறுகுடிக் கானவன்** (அகம். 7:22)

**கல் அகத்தது எம் ஊரே (நற். 276:7)**

**கல்கெழு குறவர் (மேலது. 353:5)**

**காடு காத்து உறையும் கானவர் உளரே (மலைபடு. 279)**

என்ற வரிகளால் அறியலாம். குறவர்களின் இருப்பிடம் குரம்பை என்று அழைக்கப்பட்டுள்ளது. அக்குரம்பை, நிலத்தில் ஊன்றிக் கட்டபட்டிருந்தது[83]. காட்டிடத்து நட்ட காலிற் சேர்த்துப் பிணித்தும் குரம்பை அமைந்திருந்தது[84]. தினைக்காவலுக்குப் பரண்மீதும் அவை அமைக்கப்பட்டிருந்தன. அவை பிரம்பு முதலான பொருட்களாலும் கட்டப்பட்டிருந்தன. புலித்தோலால் கட்டப்பட்டவை 'குறும்புடை' என்று அழைக்கப்பட்டுள்ளது[85].

## முற்றம்

குரம்பை முற்றமுடன் கட்டப்பட்டிருந்தது. அம்முற்றம் பாறைகளால் ஆனதாகவும்[86], மரங்கள் நெருங்கியும் இருந்துள்ளன. மூங்கில் பூக்களும்[87], வேங்கைப்பூக்களும்[88] முற்றத்தில் உதிர்ந்து கிடந்தன. முற்றத்தின் அருகில் பழங்கள் நிறைந்த பலாமரங்கள் மிகுதியாக இருந்தன. முற்றத்தில் கிடக்கும் குண்டு கற்களின்மீது விலங்குகள் உராய்ந்துத் தம் உடல் தினவைப் போக்கிக்கொள்ளும், அக்கற்களின்மீது குரங்குகள் துள்ளித்திரிந்துள்ளன என்பதை,

**குறவர் முன்றில் மா தீண்டு துறுகல்**

**கல்லா மந்தி கடுவனோடு உகளும் (ஐங். 277:1-2)**

என்ற பாடல்வரிகளால் அறியலாம். அம்முற்றங்களில் குறவர்கள் கூடி விளையாடியுள்ளனர்[89]. வேங்கைப்பூக்கள் நிறைந்த முற்றத்தில் கள்ளுண்டு ஆண்களும் பெண்களும் குரவைக் கூத்தாடியுள்ளனர்[90].

## கூரை

குறவர் தங்கும் குரம்பைகளின் கூரைகள் புல், இலை, தினைத்தாள் ஆகியவற்றால் வேயப்பட்டிருந்ததை,

**புல்வேய் குரம்பை புலர ஊன்றி (அகம். 172:10)**

**குன்றக் குறவன் புல் வேய் குரம்பை (ஐங். 252:1)**

**கொன்நிலைக் குரம்பை (குறுந். 284:7)**

**இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பை (குறிஞ். 153)**

என்ற வரிகளால் அறியலாம். குரம்பை குறுகிய கால்களையுடையனவாக இருந்தன என்பதை,

**குறிஇறைக் குரம்பைக் குறவர் மாக்கள் (புறம். 129:1)**

**குறிஇறைக் குரம்பைநம் மனைவயின் புகுதரும் (அகம். 272:11)**

என்னும் பாடல்வரிகள் தெரிவிக்கின்றன.

**ஊர்**

குரம்பைகளில் வாழ்ந்த குறிஞ்சி நில மக்களின் ஊர் சிறுகுடி, பாக்கம் என்று அழைக்கப்பட்டுள்ளது. அவை, கானல் நண்ணிய சிறுகுடி[91] என்றும், குன்றங்களை வேலியாக உடையமையால் குன்ற வேலிச் சிறுகுடி[92] என்றும், மரங்களால் பெற்ற வேலியால் வேரல் வேலிச் சிறுகுடி[93] என்றும், பாக்கம்[94] என்றும் அடையாளப் படுத்தப்பட்டுள்ளன. அச்சிறுகுடியில் உள்ள தெருக்கள் புலால் நாற்றமுடையதாக இருந்துள்ளன[95]. மலையில் உள்ள அருவிகளின் ஓசை கேட்ட வண்ணம்[96] அமைந்திருந்த இருப்பிடங்கள் ஓவியன் எழுதி வைத்தது போல காட்சி அளிப்பதாகப் பாடப்பட்டுள்ளது[97].

குறிஞ்சி நில மக்களுடைய இருப்பிடம் இயற்கைச் சூழலில் கிடைக்கக்கூடிய பொருட்களை வைத்து மலை சார்ந்த இடத்தில் கட்டப்பட்டுள்ளது. தொல்பழங் காலத்தில் மலையில் வாழ்ந்த மக்கள் குகைகளிலும், பிளவுகளிலும், மரப் பொந்துகளிலும் உறைந்தனர். பின்னர் விலங்கின் தோல், புல், மரம், கல் முதலியற்றைப் பயன்படுத்தி தம் உறையுளை அமைக்கத் தலைப்பட்டனர்[98]. குறிஞ்சி நில மக்கள் பிறமக்களுடைய இருப்பிட அமைப்பு, இருப்பிடம், அதற்குப் பயன்படுத்தப்பட்ட பொருட்கள் என அனைத்து நிலைகளிலும் மாறுபட்டுத் தொன்மையான மரபை எடுத்துரைக்கும் இனக்குழு வாழ்க்கையின் எச்சங்களோடு வாழ்ந்திருப்பது வெளிப்படுகின்றது.

குறிஞ்சித் திணை சார்ந்த பதிவுகள் எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு ஆகிய தொகுப்புகளில் விரவியுள்ளன. எட்டுத்தொகை, குறிஞ்சி நில மக்களை மலை, காடு சார்ந்து உணவு சேகரித்தும், உணவு உற்பத்தி செய்தும் வாழக்கூடியவர்களாகவும் பதிவு செய்திருக்கின்றது. பத்துப்பாட்டில் குறிஞ்சித் திணைப் பெயரால் குறிஞ்சிப்பாட்டு அமைந்துள்ளது. இவ்விலக்கியத்தில் இலக்கண முறைப்படி

பாடப்பட்ட களவு வாழ்க்கையைக் காணமுடிகிறது. களவிற்கு ஏற்ற வகையிலும் அதனை விவரிக்கும் போக்கிலும் குறிஞ்சித்திணை சூழல்கள் பாடப்பட்டுள்ளன. தலைவன் தலைவி இருவரும் சந்திக்கும் இடமாகத் தினைப்புனம் இருப்பதினால் தினைப்புனம், தினைக்காவல், கிளிகடி கருவிகள் போன்ற காட்சிகள் குறிஞ்சிப்பாட்டில் இடம் பெற்றுள்ளன.

மலைபடுகடாம் குறிப்பிடும் குறிஞ்சி நில மக்களின் உணவு, தொழில், கருவிகள் வாழிடச்சூழல் போன்ற எடுத்துரைப்புகள் எட்டுத்தொகை இலக்கியங்களுடன் ஒத்துக்காணப்படுகின்றன. மதுரைக்காஞ்சி, குறிஞ்சி நில வேளாண்மையைப் பாடியுள்ளது. எட்டுத்தொகையில் பயிரிடப்பட்ட பயிர் வகைகளைவிட முன்னேறியவகையில் அவ்விலக்கியம் கூறும் வேளாண்மை அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. இத்தகைய வாழ்வியலை மேற்கொண்ட குறிஞ்சி நில மக்களைப் பெரும்பாணாற்றுப்படை, கானவர் என்ற பெயருடையோராய் பாலை நில வேட்டுவர்களாகக் குறிப்பிடுகிறது. அவர்களை ஆறலைத் தொழில் செய்பவர்களாகவும் காட்டப்பட்டிருப்பதிலிருந்து, பிற இலக்கியங்களிலிருந்து இவ்விலக்கியம் குறிஞ்சி நிலச்சூழலை விவரிப்பதில் மாற்றம் பெற்றுள்ளது.

## முல்லை

காடும் காடுசார்ந்த பகுதியும் உடையது முல்லைநிலம். இடையர், கோவலர், அண்டர், ஆயர், பொதுவர், ஆயமகள், கொல்லை உழவர் முதலானோர் அத்திணைக்குரிய மக்களாகக் காணப்படுகின்றனர். கால்நடை வளர்ப்பும், புன்செய் வேளாண்மையும் இம்மக்களுடைய முக்கியத் தொழில்களாக இருந்துள்ளன. இத்திணை சார்ந்த மக்களின் வாழ்க்கைப்பதிவுகள் கீழ்க்காணுமாறு வகைப்படுத்தப்பட்டுள்ளன.

1. இடையர்
2. கோவலர்

எனும் வகைப்பாடு கலித்தொகை, பத்துப்பாட்டு ஆகியவை நீங்கலாக அமைந்துள்ளன. எனவே அவ்விலக்கியங்களையும் சேர்த்து

1. கலித்தொகையும் முல்லை நில மக்களும்
2. பத்துப்பாட்டும் முல்லை நில மக்களும்

3. புன்செய் வேளாண்மை

என்றும் பகுக்கப்பட்டுள்ளன. இத்தகைய பகுப்புமுறை சங்க இலக்கியக் கால முல்லை நில மக்களின் வாழ்வியற்கூறுகளை எளிதாக விளங்கிக்கொள்ள வகை செய்யும்.

**இடையர்**

முல்லைநில மக்கள் இடையர் என்ற பெயராலும் அழைக்கப்பட்டுள்ளனர். கால்நடை சார்ந்த வாழ்க்கை முறையைப் பின்பற்றி வாழும் முல்லை நில மக்களாகக் கோவலர், இடையர் முதலானோர் காணப்படுகின்றனர். மேலும், முல்லை நிலம் சார்ந்த இனக்குழு வாழ்க்கையின் எச்சங்களை ஆடுகள் மேய்த்த இடையர்களிடம் காணமுடிகிறது. கோவலரின் வாழ்க்கை முறையிலிருந்து ஆடுமேய்க்கும் தொழிலை மேற்கொண்ட இடையர்களின் வாழ்க்கைமுறை சற்று வேறுபட்டுள்ளது. இடையர் குறித்தப் பதிவுகளை எட்டுத்தொகை இலக்கியங்களில் கலித்தொகை நீங்கலாகப் பிற இலக்கியங்கள் ஒரு வகையிலும், கலித்தொகை மற்றொரு வகையிலும் பதிவு செய்துள்ளது. பத்துப்பாட்டில் இடையர்பற்றி பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, ஆகிய இலக்கியங்களில் ஒரு வகையாகவும் பிற இலக்கியங்களில் மற்றொரு வகையிலும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**இடையன் தோற்றம்**

இடையனின் உடல் தோற்றம் பற்றிய முழுமையான வருணனைச் சங்க இலக்கியங்களில் இடம்பெறவில்லை. முல்லை நிலச்சூழலை விளக்குகின்ற முல்லைத்திணைப் பாடல்களிலும் பிற திணைப்பாடல்களிலும் முல்லைநிலக் குறிப்பு வருகின்ற இடங்களிலிருந்து பெறப்பட்டத் தகவல்களின் அடிப்படையில் இடையனின் உருவம் பற்றி ஓரளவிற்கு உணர்ந்துகொள்ளமுடிகிறது.

காடுசார்ந்த நிலமாகிய முல்லையில், ஆடுகளை மேய்க்கும் சூழலில் இடையனின் தோற்றத்தைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. பால் விலையைக் கூறும் இடையன், கையில் உறியை வைத்திருந்தான். தீக்கடையும் கோல் முதலானவைகளை இட்டு தோற்பையைச் சுருக்கிக் கட்டிக்கொண்டான். அவற்றைப் பனையோலைப் பாயோடு சேர்த்துக் கட்டி முதுகில் சுமந்துச் சென்றான். அங்ஙனம் செல்லுகையில், அவனுடைய உடம்பு வியர்த்து நனைந்தது. கையிலிருந்த கோலையூன்றி ஒடுங்கிநின்ற அவ்விடையன், நாவை மடித்து வீளை என்னும் ஒலியை

எழுப்பினான். அதைக்கேட்ட ஆட்டுக்கூட்டம் காட்டில் வேறிடங்களில் திரியாமல், தாம் தங்கும் காட்டுப்பகுதியிலேயே இருந்தன. இதனை,

**பாணி கொண்ட பல் கால் மெல் உறி**
**ஞெலி கோல் கலப் பை அதளொடு சுருக்கி,**
**பறிப் புறத்து இட்ட பால் நொடை இடையன்**
**நுண் பல் துவலை ஒரு திறம் நனைப்ப, (நற். 142:2-5)**

என்னும் நற்றிணைப் பாடலுக்கு வலுச்சேர்க்கும் விதமாக அகநானூற்று 274-ஆம் பாடல் அமைந்துள்ளது. மேற்சொன்ன பாடற் பொருண்மையோடு ஒத்த பொருளுடையதாக உள்ள அப்பாடல், காட்டில்தங்கி இரவில் ஆடுகளைக் காக்கும் இடையன், நெருப்பு மூட்டிக்காவல் தொழிலில் ஈடுபட்டதை விரிவாகக் கூறுகிறது.

**கோல்**

ஆடுமேய்க்கும் தொழில் மேற்கொண்டிருக்கும் நேரங்களில் இடையன் தன் கையில் கோல் வைத்திருந்ததைப் பல சங்கப்பாடல்கள் பதிவு செய்துள்ளன. இதனை,

**தண்டு கால் வைத்த ஒடுங்கு நிலை மடி விளி (நற். 142:6)**
**தண்டு கால் ஊன்றிய தனிநிலை இடையன் (அகம். 274:8)**

என்னும் பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன.

**தீக்கடைக்கோல்**

காட்டில் தங்கி வாழும் இடையர்களுக்கு நெருப்பு அடிப்படைத் தேவைகளுள் ஒன்றாக இருந்துள்ளது. தங்களுக்குத் தேவையான பயன்பாட்டுப் பொருட்களைத் தங்களுடனேயே சுமந்துச்சென்ற இடையர்களின் தோற்பையில் தவறாமல் தீக்கடையும்கோல் வைத்திருந்ததைப் பல பாடல்கள் வழியாக அறிந்துகொள்ளமுடிகிறது.

**ஞெலி கோல் கலப் பை அதளொடு சுருக்கி (நற். 142:3)**

என்ற பாடல்வரி தீக்கடைக்கோல் இடையர்கள் பயன்பாட்டுப்பொருளாக இருந்துள்ளதைக் குறிப்பிடுகிறது.

தீ மூட்டுதல் அல்லாது பிறதொழிலறியாத இடையன் என்ற அடையாளத்தோடு ஒரு பாடல்,

**புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியும்**

**கல்லா இடையன் போல (புறம். 331:4-5)**

என்ற வரிகள், இடையர்கள் தீ மூட்டும் நுட்பத்தை அறிந்து வைத்திருந்ததை எடுத்துரைக்கின்றது. அவற்றிலிருந்து பெறப்பட்டத் தீ எத்தகையச் சூழல்களில் உபயோகப்படுத்தப்பட்டது எனும் குறிப்புகளும் காணப்படுகின்றன.

**கடைகோல் சிறுதீ அடைய மாட்டி (அகம். 274:5)**

என்ற பாடல், இடையன் இரவு நேரத்தில் தீக்கடைக் கோலால் கடைந்தெடுத்தத் தீயினை விறகில் சேர்த்து எரித்ததைக் குறிப்பிடுகிறது. அவ்வெளிச்சத்தில் இடையன் தன்னுடைய ஆட்டுக்கூட்டத்தை நரிகளிடம் இருந்துக் காப்பாற்றும் பொருட்டு ஆடுகள் தங்குமிடத்திற்கு அழைத்துக்கொண்டான். அந்நெருப்பில் இடையன் தன்னுடைய கைகளைக் காட்டிக் குளிர் காய்ந்தான்.

**ஐது படு கொள்ளி அங்கை காய (அகம். 94:7)**

என்னும் பாடல் வரிகளால், காட்டில் தங்கி ஆட்டு மந்தைகளுக்குக் காவல் காத்த இடையனின் குளிரினைப் போக்கிக்கொள்ளவும் நெருப்பு பயன்பட்டுள்ளது என்பதை அறியமுடிகிறது.

காட்டில், இடையன் வெள்ளாடுகளின் கூட்டத்தினையுடைய பந்தரின் கீழ் தீக்கடைக்கோலால் சிறிய தீயை மூட்டினான். அந்நெருப்பின் வெளிச்சத்தில் சீறூர் மன்னன், பாணர் குழுவோடு இரவில் அமர்ந்திருந்தான். இதனை,

**குமிழ் உண் வெள்ளை பகுவாய் பெயர்த்த**

**வெண்காழ் தாய வண் காற் பந்தர்,**

**இடையன் பொத்திய சிறுதீ விளக்கத்து,**

**பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தகை (புறம். 324:9-12)**

என்னும் பாடல்மூலம் இடையன் ஆட்டு மந்தைகளோடு காட்டில் நெருப்புமூட்டி தங்கியிருந்ததையும், காட்டு வழிகளைக் கடந்துச் சென்றவர்கள் அவற்றைப் பதிவு செய்திருப்பதிலிருந்து இடையர்களின் மேய்ச்சல் நடைமுறைகளை அறிந்துகொள்ள

முடிகிறது. காட்டுமிராண்டியாக வாழ்ந்த காலகட்டத்திலேயே தீயின் உபயோகத்தை மனிதன் தெரிந்து வைத்திருந்தான்[99]. கால்நடை மேய்ச்சலைத் தொழிலாகக் கொண்ட முல்லை நில மக்கள், உணவு சமைத்து உண்ணவும், மேய்ச்சல் தொழிலில் பாதுகாப்பையும் வெளிச்சத்தையும் ஏற்படுத்திக்கொள்ளவும் அந்நுட்பத்தைப் பயன்படுத்திக் கொண்டனர் என்பதை அறியமுடிகிறது.

**தோற்பகுதியில் சுமந்த பொருட்கள்**

மேய்ச்சல்நிலம் நோக்கிச்சென்ற முல்லை நிலமக்கள் அன்றாட வாழ்க்கைக்குரிய அடிப்படைத் தேவைகளாக உள்ள சில பொருட்களைச் சுமந்துச் சென்றுள்ளனர். உறி, பானை, பாய், தோற்பைப் போன்ற பொருட்களை இடையர் சுமந்துச் சென்றிருப்பதைப் பல பாடல்களில் காணமுடிகிறது.

**உறி, பானை**

பல்கால் மெல் உறி[100], திண்கால் உறியன[101]. இத்தகைய பதிவுகள் இடையன் உறியைப் பயன்படுத்தியிருந்தான் என்பதை உறுதிசெய்கின்றன. பானையினை வைத்திருந்தான் என்பதைப் பானையன்[102] என்றே இடையன் அடையாளப்படுத்தப் பட்டிருப்பதிலிருந்து அறிந்துகொள்ளமுடிகிறது.

**படுக்கை**

ஓலைப்பாயால் செய்யப்பட்டக் குடலை முதுகிற்போட்டுக் கொண்டுச் சென்றான்[103], பறி ஓலையைக் கையில் கொண்ட இடையன்[104], தோற்படுக்கையைக் கொண்டவன்[105] என்று கூறப்பட்டிருப்பதிலிருந்து ஓலை, தோள் ஆகிய பொருட்களால் செய்யப்பட்ட படுக்கைகளை இடையன் பயன்படுத்தினான் என்பது புலப்படுகிறது.

**ஆடை**

முல்லைநிலச் சூழலுக்கும், மேய்ச்சல் தொழிலுக்கும் ஏற்ப இடையர் எவ்வித ஆடை உடுத்தினர் என்பது குறித்த விரிவான பதிவுகள் காணப்படவில்லை.

**நுண்பல் துவலை ஒருதிறம் நனைப்ப (அகம். 274:7)**

இப்பாடலில், மழைநீர் இடையனின் ஒருபக்கத்தை நனைத்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. பிற குறிப்புகள் காணப்படவில்லை. பல இடங்களுக்குச் சென்று

மேய்த்தல்தொழிலை மேற்கொண்ட இடையனின் ஆடை அழுக்கேறி இருந்துள்ளது. இதனை,

**பாசிலைத் தொடுத்த உவலைக் கண்ணி,**

**மாசு உண் உடுக்கை, மடி வாய், இடையன்** (புறம். 54:10-11)

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

**அணிகலன்**

இடையன் மேய்ச்சலின்போது கிடைத்த பலவித பூக்களாலான மாலைகளைத் தொடுத்து அணிந்துள்ளான்.

**தண் கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ,**

**வண்டு படத் தொடுத்த நீர் வார் கண்ணியன**

(அகம். 94:5-6)

என்ற பாடல், இடையன் முல்லை, செங்காந்தள் ஆகிய பூக்கள் விரவிய கண்ணியினை அணிந்திருந்தான் என்ற பதிவை அளிக்கின்றது. முல்லைப் பூவினைத் தலையில் சூடியிருந்ததாகக் குறுந்தொகைப் [106] பாடல் குறிப்பிடுகிறது.

இடையன் முல்லை மலரைப் பறித்து, பனங்குருத்தின் போழுடன் மாலையாகத் தொடுத்து அணிந்திருக்கின்றான். இதனை,

**மீமிசைக் கலித்த வீ நறு முல்லை**

**ஆடு தலைத் துருவின் தோடு தலைப்பெயர்க்கும்**

**வன் கை இடையன்** (நற். 169:5-7)

என்ற பாடல்வரிகள் தெரிவிக்கின்றன. பசுமையான தழையால் ஆன மாலையை அணிந்ததைப் புறநானூறு[107] குறிப்பிடுகிறது.

இடையர் தம்மை அழகுபடுத்திக்கொள்ள விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களை அணிந்திருந்ததற்கானச் செய்திகளை எந்தப்பாடலிலும் காணமுடியவில்லை. அவர்கள் அணிந்த பூக்களால் ஆகிய மாலைகள்கூட, மேய்ச்சல் தொழிலில் கிடைத்த ஓய்வின்போது உருவாக்கப் பட்டவைகளாக இருக்கின்றன.

## இடையர் இருப்பிடம்

முல்லைத் திணை காடு சார்ந்த நிலப்பகுதிகளையுடையது. அக்காடுகளில் மேய்ச்சல் தொழிலைச் செய்த இடையர்கள் தம்முடைய செல்வமாகக் கருதிய ஆடுகள் எங்குத் தங்கினவோ அங்கேயே அவர்களும் தங்கினர். இடையர்கள் நிலையான இருப்பிடங்களில் வாழ்ந்ததற்கான பதிவுகள் இல்லை. மாடுகள் ஊருக்குள் வருகின்ற வாய்ப்பினைப் பெற்றுள்ளது. ஆனால், ஆடுகள் ஊருக்கு வெளியே காட்டில் தங்கி இருந்ததாகவே குறிப்புகள் காணப்படுகின்றன.

இடையன் ஊருக்குள் வராமல் காட்டுப் பகுதியில் தங்கியதாக நற்றிணை 169-ஆம் பாடல் குறிப்பிடுகின்றது. குறுந்தொகைப் பாடலில் 221, ஊர்ப்பகுதியில் மனைகளுக்குப் பாலைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு உணவைப் பெற்றுச் சென்றதாகப் பாடப்பட்டுள்ளது. எனவே, இடையன் காட்டில் தங்கினான் என்பதும், அங்குச் சமைத்து உண்ணாமல் ஊர்ப்பகுதிகளில் பண்டமாற்றாக உணவைப் பெற்றுச் சென்றான் என்பதும் புலப்படுகின்றது.

## இடையர் வீளை ஒலி

இரவில் காட்டில் மேயும் ஆடுகளை நரிகள் கவர்ந்துச் செல்லாதிருக்க இடையர்கள், தீமூட்டி வெளிச்சத்தை உண்டாக்கினர். நெருப்பு, நரிகளுக்கு அச்சத்தை விளைவிக்கக்கூடிய ஒன்று. அந்நெருப்பிற்கு அருகே ஆடுகளை வரவழைக்க இடையர்கள் கையாண்ட உத்தியே வீளை எனும் நீண்ட ஒலிக்குறிப்பு. வாயால் வீளை என்ற ஒலியை எழுப்பினர்[108], நீண்ட ஒலியெழுப்பி[109] ஆடுகளை நெருப்பின் அருகே வரவழைத்தனர் என்னும் பதிவுகள் கோவலர்களின் வாழ்க்கையில் காணப்படவில்லை. ஒரு பாடலில் மட்டும் பசுக்களை நீர் உண்ண வாயால் ஒலியெழுப்பி அழைத்தான்[110] என்ற குறிப்பு காணப்படுகின்றது. எனவே, வீளை ஒலிக் குறிப்பைக் கோவலரைக் காட்டிலும் இடையர் மிகுதியாகப் பயன்படுத்தினர் என்று கூறலாம். மேய்ச்சல் தொழிலில் ஈடுபட்ட இடையர்கள் ஆடுகளைத் தங்களுடைய வாழ்வாதாரமாகப் பெற்றிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

## கோவலர்

முல்லை நில மக்களாகக் கோவலர் உள்ளனர். ஆநிரை மேய்த்தல் அவர்களுடைய வாழ்வாதாரங்களில் முக்கியமானத் தொழிலாகும். பாற்படு

பொருட்களைத் தரும் பசு, எருமை முதலிய விலங்குகளைக் கூட்டமாகத் திரட்டி, அவற்றைப் பாதுகாத்து, அவைதரும் பால், தயிர், மோர், நெய் முதலான பொருட்களைப் பண்டமாற்றாகப் பிற திணைசார்ந்த மக்களிடம் விற்று, வாழ்வதற்குரிய வருமானத்தைத் தேடிக்கொண்டவர்களாகக் கோவலர்கள் காணப்படுகின்றனர்.

**பல் ஆ தந்த கல்லாக் கோவலர் (நற். 364:9)**

என்ற நற்றிணைப் பாடல், கோவலர்பற்றி ஒரு வரியில் கூறியிருப்பது அவர்களுடைய ஒட்டுமொத்த வாழ்வியலையும் எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது. ஆநிரைகளை ஊரிலே செலுத்திவந்த கோவலர்கள் நிரை ஓம்பலைத்தவிர பிறதொழில் அறியாதவர்கள் என்று இப்பாடலடிக்கு உரை கூறப்பட்டுள்ளது.

கோவலர் பற்றியத் தோற்றம் அவர்களுடைய மேய்ச்சல் தொழிலோடு இணைத்தே பாடப்பட்டுள்ளது. மேய்ச்சல் தொழிலில் அவர்கள் பயன்படுத்திய பயன்பாட்டுப் பொருட்களை அடிப்படையாகக் கொண்டு கோவலர்களுடைய புழங்கு பொருட்பண்பாடு ஆராயப்படுகிறது.

**கோல்**

இடையர்களைப்போன்று கோவலர்களும் கையிலே கோலை வைத்திருந்தனர். கோவலர்களுடைய கோல் வளைந்த கோல் என்று கூறப்பட்டுள்ளது[111]. இதனை,

**கொடுங் கோற் கோவலர் (நற். 69:8, நெடு. 3)**

என்ற பாடல் அடியால் அறிந்துகொள்ளமுடிகிறது. கால்நடை மேய்ச்சலைத் தொழிலாகக் கொண்ட முல்லை நில மக்கள் கையில்வைத்திருந்த கோல், மேய்ச்சல் நிலம்நோக்கி ஆடுமாடுகளை நடத்திச் செல்வதற்கும், அவை ஒன்றோடு ஒன்று முட்டிக் கொள்ளும்போது விலக்குவதற்கும் பயன்படும். சிலர் கையிலே வளைந்த கோல்களை வைத்திருப்பர்; இவை ஆடுமாடுகளுக்கு வேண்டிய இலை, தழை போன்றவற்றைப் பெறக் கிளைகளை வளைத்து ஒடிப்பதற்கு உதவும்[112] என்று கூறப்படுகிறது.

**குழல்**

கோவலர்கள் குழல் ஊதும் பழக்கமுடையவர்கள். ஆநிரைகளை மேய்க்கும்போதும், ஆநிரைகளுக்குத் தண்ணீர் காட்டுவதற்கு அழைக்கும்போதும், மாலை நேரங்களில் ஊர்க்கண் திரும்பும் போதும், இரவுப் பொழுதிலும் குழல்

இசைக்கப்பட்டுள்ளது[113]. இதற்காக எந்தப்பயிற்சியையும் இவர்கள் மேற்கொண்டதில்லை. இதனை,

**பல் ஆன் கோவலர் கல்லாது ஊதும்**

**சிறுவெதிர்ந் தீம்குழற் புலம்புகொள் தெள்விளி (அகம். 399:11-12)**

என்ற பாடலும், அதன் உரையில் கோவலர்கள் இசை அறிவு அற்றவர்கள், ஆனாலும் இவர்களின் குழல் ஓசையைக்கேட்டுப் பசுக்கள் வரும் என்று கூறப்பட்டிருப்பதிலிருந்து அவர்களுடைய குழல் ஊதும் பயிற்சியை அறிந்து கொள்ளமுடிகிறது. இத்தகைய குழல் மாலை நேரங்களில் ஊதப்பட்டதை,

**புன்கண் மாலையோடு பொருந்தி, கொடுங் கோற்**

**கல்லாக் கோவலர் ஊதும்**

**வல் வாய் சிறு குழல் வருத்தாக்காலே! (அகம். 74:15-17)**

என்ற பாடல்வரிகளால் அறியலாம். குழல் மூங்கிலால் செய்யப்பட்டது என்ற குறிப்பு பல இடங்களில் காணப்படுகின்றது. மேலும், கொன்றைப் பழத்தினால் ஆன குழலினையும்[114] இசைத்துள்ளனர்.

**ஆடை**

கோவலர், வளைந்த மடிகோலிய உடையினை உடையவராகக் காட்டப்பட்டுள்ளனர். இதனை,

**கொடு மடி உடையர் கோற் கைக் கோவலர்**

**(அகம். 54:10)**

என்ற பாடல்வரி அவர்களுடைய மடிகோலிய உடையை பற்றிக் குறிப்பிடுகிறது.

**அணிகலன்**

முல்லை நில மக்கள் மிகுதியாக அணிந்தது மலர்களால் ஆன மாலைகளே. அவற்றைத் தலை, மார்பு ஆகிய இடங்களில் அணிந்துள்ளனர். கோவலர்கள் பசுக்களை முல்லை நிலத்தில் மேயவிட்டுப் பூக்களைப் பறித்து மாலையாகக் கட்டி மார்பிலே அணிந்து மகிழ்ந்திருந்ததை,

**கோவலர், குறும் பொறை மருங்கின் நறும் பூ அயர**

**(அகம். 14:7-8)**

என்ற பாடல் விளக்குகிறது. இவர்கள் குருந்தமலர்களால் ஆன கண்ணியைத் தலையில் சூடியுள்ளனர். இதனை,

**குருந்தங் கண்ணிக் கோவலர் (ஐங். 439:2)**

என்றும், முல்லைக் கண்ணியை அணிந்ததைப் பதிற்றுப்பத்து,

**முல்லைக் கண்ணிப் பல் ஆன் கோவலர் (பதிற். 21:20)**

என்றும் குறிப்பிட்டுள்ளது.

**பருவம் செய்தன பைங்கொடி முல்லை;**
**பல் ஆன் கோவலர் படலை கூட்டும் (ஐங். 476:2-3)**

என்ற பாடல், பலவாகிய ஆன் இனத்தையுடைய கோவலர், மழை பெற்றமையின் அரும்பி மலரும் பருவத்தினை எய்திய பைங்கொடி முல்லையின் மலர்களைத் தம் இலை மாலைகளோடு கூட்டித் தொடுக்கும் மாலைப் பொழுதை பற்றிக் குறிப்பிட்டுள்ளது. முல்லையோடு இலைகளையும் சேர்த்துப் படலையாகக்கட்டி கோவலர்கள் நடுகல்லுக்கும் சூட்டியுள்ளனர். அப்படலையில் வேங்கை மலர்களையும் தழைகளையும் விரவித் தொடுத்துள்ளனர். மேலும், பனையோலையால் அலங்கரித்து மாலையாகச் சூட்டியுள்ளனர்.

கோவலர்கள் தங்களுடைய ஆநிரைகளுக்கு மணிகளை அணிந்து அழகு பார்த்துள்ளனர். இம்மணியின் ஓசை மாலை நேரங்களில் முல்லை நில மக்களைத் துன்பமடையச் செய்யும் அளவிற்கு ஒலித்ததைப் பல பாடல்கள் குறிப்பிட்டுள்ளன. மணியினுள் ஒலிக்கும் தன்மையைக் கொண்ட சிறிய செவ்விய நாவானது பொருத்தப்பட்டிருந்ததை,

**உரும் இசை அறியாச் சிறு செந் நாவின்**
**ஈர் மணி இன் குரல் ஊர் நணி இயம்ப (நற். 364:7-8)**

**மதர்வை நல் ஆன் மாசு இல் தெண் மணி,**
**கொடுங் கோற் கோவலர் குழலோடு ஒன்றி (மேலது. 69:7-8)**

என்று நற்றிணையும்,

**படுசுவற் கொண்ட பகுவாய்த் தெள்மணி (அகம். 214:11)**

என அகநானூற்றுப் பாடலும் ஆநிரைகளுக்குக் கட்டப்பட்ட மணிகள் பற்றிக் கூறியுள்ளது. பசு, எருது ஆகிய இரண்டிற்கும் மணி கட்டப்பட்டிருக்கிறது. இந்த மணியானது தெண்மணி[115], படுமணி[116], கொடுமணி[117], கறங்குமணி[118] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆடுகளுக்கும் மணிகள் அணிவிக்கப்பட்டுள்ளன[119]. கலித்தொகை தவிர்த்துப் பிற இலக்கியங்களில் கோவலர்களுடைய ஆடை, அணிகலன் குறித்தபதிவுகள் பிற மக்களைக்காட்டிலும் பெரிதாகக் காணப்படவில்லை. குறிப்பாக ஆண்களின் ஆடைபற்றிய விரிவானத் தகவல்கள் தேடியவரை கிடைக்கவில்லை என்றே கூறலாம்.

### கிணறு தோண்டுதல்

கோவலர்கள் தங்களுடைய கால்நடைகளுக்குத் தேவையான நீரினைப் பெற, நீர்த்தேக்கச் செயல்பாடுகளில் ஈடுபட்டுள்ளனர். அவையே கிணறுகளைத் தோண்டுவதற்கும் நீரினைப் பத்தலில் சேமித்து வைப்பதற்கும் வழிகோலின. கோவலர்கள் குந்தாலி, கோல் ஆகியவற்றைக் கொண்டு மண்ணைத்தோண்டி நீரினைப் பெற்றனர். நீரோட்டம் உள்ள இடங்களைத் தெரிவு செய்வதிலும் இவர்கள் வல்லவர்களாக இருந்துள்ளனர். கோவலரின் இத்தகைய திறமைகள் சங்கப் பாடல்களில் பல இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

தம் குடித்தொழிலில் இயல்பாகத் தேர்ச்சிபெற்ற கோவலர், தம் கோல்களாலே தோண்டிய நீர்ப்பத்தல் பற்றி,

**கல்லாக் கோவலர் கோலின் தோண்டிய**
**ஆன் நீர்ப் பத்தல் யானை வெளவும் (ஐங். 304:1-2)**

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. சில பகுதிகளில் குந்தாலியால் குழித்தோண்டி நீரினைப் பெற்றுள்ளனர்.

**கடற்றுஅடை மருங்கின் கணிச்சியின் குழித்த**
**உடைக்கண் நீடுஅமை ஊறல் உண்ட (அகம். 399:6-7)**

என்ற பாடல்வரிகள், பசுக்கூட்டங்கள் பலவற்றையுடைய கோவலர் பெருமக்கள் மலங்காடு எனும் பகுதியில், குந்தாலியால் தோண்டிய குழியில் ஊறிய நீரைப் பசுக்கள் உண்டதைக் குறிப்பிட்டுள்ளன. கோவலர், வறண்ட பாலை நிலங்களில் ஆநிரைகளை மேய்க்கும் வேளைகளில் நீருக்காகக் குந்தாலியால் கிணறு தோண்டினர். அவ்வாறு

தோண்டிய கிணற்றில் நீர் ஊறாமலும் போகலாம். அத்தகைய குழிகள் மூடப்படாமலேயே கிடக்கும் வழி பற்றி,

**பரல் மண் சுவல முரண் நிலம் உடைத்த**

**வல் வாய்க் கணிச்சி, கூழ் ஆர், கோவலர்**

**ஊறாது இட்ட உவலைக் கூவல் (அகம். 21:21-23)**

எனும் அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது.

கோவலர்கள், வறண்ட பகுதியில் நீருண்ண நீண்ட ஒலியெழுப்பிப் பசுக்களை அழைத்துள்ளனர். இங்குத் தாம் தோண்டிய கிணற்றிலிருந்து வளைந்த வாயினையுடைய பத்தலால் நீரை இறைத்துச் சிறுகுழியை நிரப்பினர். இம்முறையை,

**நெடுவிளிக் கோவலர் கூவல் தோண்டிய**

**கொடுவாய்ப் பத்தல் (அகம். 155:8-9)**

என்னும் பாடல் விளக்குகிறது. நீர் சேமிக்கும் பத்தல்பற்றி நற்றிணை 92, 240-ஆம் பாடல்

**பய நிரைக்கு எடுத்த மணி நீர்ப் பத்தர் (நற். 92:6)**

**ஆன் வழிப் படுநர் தோண்டிய பத்தல் (நற். 240:8)**

என்று குறிப்பிட்டுள்ளது. மேலும், காட்டு வழிகளிலும், பாலை நிலங்களிலும் ஆநிரைகளின் நீர் வேட்கையைப் போக்க நீர் பிடித்து வைத்திருந்ததற்கானச் சான்று அகநானூறு 21, 79, 155, 321, பதிற்றுப்பத்து 22-ஆகிய பாடல்களில் கிடைக்கின்றன.

கோவலர்கள் ஆநிரைகளுக்காக நீர்நிலைகளை ஏற்படுத்தினர் என்றாலும் வறண்ட பகுதிகளில் நீர் ஊறாது பொய்த்துப்போன இடங்களும் உண்டு. அருவி நீர்க்கூட இல்லாத நிலையில் ஆநிரைகளின் உணவு மற்றும் நீர்த்தேவையைப் போக்க வேங்கை மரத்தின் தழைகளை வெட்டிக் கொடுத்திருக்கக்கூடிய நிலையும் சங்க இலக்கியத்தில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. இதனை,

**அருவி மாறி, அஞ்சு வரக் கருகி,**

**பெரு வறங் கூர்ந்த வேனிற் காலை,**

**பசித்த ஆயத்துப் பயன் நிரை தருமார்,**

**பூ வாட் கோவலர் பூவுடன் உதிரக்**

கொய்து கட்டு அழித்த வேங்கையின் (புறம். 224:12-16)

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகின்றது. முல்லை நிலத்தோடு இயைந்து வாழும் இயல்பினையுடைய கோவலர்கள் காலத்திற்கு ஏற்பவும் பருவமாற்றத்திற்கு ஏற்பவும் தம்மைத் தகவமைத்துக் கொள்ளும் உத்தியையும் அனுபவ அறிவையும் பெற்றிருந்தனர். இது அச்சூழலிலேயே வாழும் ஒவ்வொரு உயிரினமும் இயல்பாகப் பெறும் ஒரு திறமையே. இதனைக் கல்லா என்னும் சொல்லைப் பயன்படுத்தி அவர்களை அடையாளப்படுத்துகிறது புலவர் மரபு. மேலும், அவர்கள் வழுவிய சொற்களைப் பேசுபவர்களாகவும்[120], கன்றுகளைப் பசுவிடம் இருந்து பிரித்து வைத்தமையால் பண்பு இல் கோவலர்களாகவும்[121] அழைக்கப்பட்டுள்ளனர்.

## கலித்தொகையும் முல்லை நில மக்களும்

எட்டுத்தொகை இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள முல்லைநில மக்களைக் குறித்த பதிவுகளிலிருந்து கலித்தொகை கூறும் முல்லை நில மக்களைக் குறித்த பதிவுகள் சில புதிய மரபுகளோடு காணப்படுகின்றன.

கலித்தொகையில் இடையன், கோவலர் ஆகிய இருவரும் ஆயர் என்ற சொல்லால் குறிக்கப்பட்டுள்ளனர். மேலும், மக்கள் கால்நடைகளின் பிரிவுகளுக்கேற்பக் கோட்டினத்து ஆயர் (எருது), கோவினத்து ஆயர் (பசு), புல்லினத்து ஆயர் (ஆடு) (கலி. 103,107) எனப் பெயரிடப்பட்டுள்ளனர்.

பிற சங்க இலக்கியங்கள் கூறாத புதிய மரபாக ஏறுதழுவுதல் எனும் மரபைக் கலித்தொகை பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. அவற்றுள் ஏறுதழுவும் முல்லை நில மக்களைப் பற்றியும், ஏறுகளின் வகைகள், ஏறுதழுவச் செய்யப்படும் சடங்குகள், ஏறு தழுவுதல், ஏறுதழுவிப்பெற்ற வெற்றியின் பொருட்டுத் தலைவியை மணத்தல், ஏறு தழுவிய வெற்றிக்குப்பின்னர் குரவை அயர்தல் போன்ற செய்திகள் இடம்பெற்றுள்ளன. முல்லைக்கலியில் பெரும்பான்மையான பாடல்கள் ஏறுதழுவுதலைக் குறித்துப் பாடப்பட்டதாகும். மேற்கூறிய மூன்று இனத்து ஆய இளைஞர்களும் ஏறுதழுவியுள்ளனர். இவர்களைப் பொதுவன் என்ற பொதுப்பெயரினைக் கொண்டு அடையாளப் படுத்தியிருக்கின்றனர்.

**ஏறுதழுவல் ஒப்பனை**

ஏறுதழுவச் செல்லும் ஆய இளைஞர்கள் விதவிதமான பூக்களால் ஆகிய கண்ணி, மாலை முதலியவற்றால் தங்களை அழகுபடுத்திக்கொண்டு சென்றுள்ளனர்.

ஆய இளைஞர்கள் பிடவம், செங்காந்தள், காயா இன்னபிற பூக்களைக் கண்ணியாக சூடியதை,

> **முளி முதல் பொதுளிய, முட்புறப் பிடவமும்;**
> **களி பட்டான் நிலையே போல் தழவுபு துடுப்பு ஈன்று,**
> **ஞெலிபு உடன் நிரைத்த ஞெகிழ் இதழ்க்கோடலும்;**
> **மணிபுரை உருவின காயாவும்; பிறவும்;**
> **அணிகொள மலைந்த கண்ணியர் தொகுபு (கலி. 101:2-6)**

என்னும் வரிகள் குறிப்பிட்டுள்ளன. ஆநிரைகளை உடைய பொதுவர், கல்லிடத்தும் காட்டிடத்தும் மலர்ந்த மெல்லிய கொத்துகளை உடைய கொன்றை, மெல்லிய மலர்களை உடைய காயா, புல்லிய இலைகளை உடைய வெட்சி, பிடா, முல்லை, குருந்து, கோடல், பாங்கர் முதலிய மலர்களாலான மணங்கமழும் கண்ணியைச் சூடியவராக வந்தனர். இதனை,

> **மெல்இணர்க் கொன்றையும், மென்மலர்க் காயாவும்,**
> **புல்இலை வெட்சியும், பிடவும், தளவும்,**
> **குல்லையும், குருந்தும், கோடலும், பாங்கரும் -**
> **கல்லவும் கடத்தவும்- கமழ்கண்ணி மலைந்தனர்,**
> **பல்ஆன் பொதுவர், கதழ்விடைகோள் காண்மார் (கலி. 103:1-5)**

என்ற பாடல் விளக்குகிறது. ஏறுதழுவலின்போது தலைவன் தலையில் அணிந்த முல்லைப்பூவை காளை கொம்பினால் குத்தி வீசியது, அது என் தலையில் வந்து வீழ்ந்தது[122] என்று தலைவி கூறுவதிலிருந்து தலைவன் முல்லைப்பூ அணிந்துகொண்டு ஏறுதழுவச் சென்றுள்ளான் என்பதை அறியமுடிகிறது.

**பறை அறைதல்**

சீறுகின்ற ஏற்றைத்தழுவ வாருங்கள் என ஆயர்கள் பறையறைந்து அழைத்துள்ளனர்[123]. இத்தகைய வழக்கம் ஏறுதழுவுதலுக்கு ஏற்பட்டிருப்பது புதிய தகவலாக அமைந்துள்ளது.

**ஏறுதழுவல் வழிபாடு**

ஏறுதழுவுவதற்கு முன்னர் வழிபாடு செய்துவிட்டு நிகழ்ச்சியைத் தொடங்குவது ஆயர்களின் மரபாகக் காணப்படுகின்றது. இவ்வழிபாடு இரண்டு வகைகளில் அமைந்துள்ளது.

1. ஆயர்கள் செய்த வழிபாடு
2. ஆய இளைஞர்கள் செய்த வழிபாடு.

**ஆயர்கள் செய்த வழிபாடு**

பெருங்குடியிற் பிறந்த ஆயர்கள், பாண்டியன் தீமையின்றிப் பொலிவானாக என்பதை மனதில் கொண்டு தெய்வத்திற்குச் சிறப்புகளைச் செய்து வழிபட்டுள்ளனர். பின்னர் வருத்தமில்லாத உள்ளத்தோடு, ஆர்வமுடன் ஏறு தழுவுவதற்கான ஏற்பாடுகளைச் செய்துள்ளனர். இதனை,

**ஆர்கலி உவகையர் ஒருங்கு உடன் கூடி,**
**'தீது இன்று பொலிக!' எனத் தெய்வக்கடி அயர்மார்,**
**வீவு இல் உள்ளமொடு துவன்றி, ஆய்வு உடன் (கலி. 105:5-8)**

எனும் பாடல்வழி ஆயர் வழிபாடு பற்றி அறிந்துகொள்ளமுடிகிறது. ஆயர் என்ற இனம் தங்களுடைய இனத்திற்கே உரிய மரபான ஏறுதழுவல் நிகழ்ச்சிக்குரிய வழிபாட்டில், பாண்டிய மன்னனின் வளம் மேம்பட, வேண்டுதல் செய்து தெய்வத்திற்கு வழிபாடு செய்திருப்பது, கலித்தொகை காலத்தில் அரசர்கள் பெற்றிருந்த செல்வாக்கை எடுத்துரைக்கிறது.

**ஆய இளைஞர்கள் செய்த வழிபாடு**

இளைஞர்கள் ஏறுதழுவச் செல்வதற்கு முன்பாகத் தெய்வத்தை வழிபட்டுவிட்டுச் சென்றுள்ளனர்.

**துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்**

**முறையுளி பராஅய், பாய்ந்தனர், தொழூஉ (கலி. 101:13-14)**

என்ற பாடல், இளைஞர்கள் நீர்த்துறையிலும், ஆலமரத்தின் கீழும், பழைய வலியுடைய மரங்களின் கீழும் உறையும் தெய்வங்களை முறையாகப்பரவி வழிபட்டுத் தொழுவினுள் சென்றனர் என்பதைத் தெரிவிக்கின்றது. இங்கு வழிபடப்பட்டுள்ள நீர்த்துறை, ஆலமரம், பழைய மரங்கள் ஆகியவை தொன்மையான வழிபாட்டு மரபைக் கூறுவதாக உள்ளன.

மரங்கள் இவர்களுக்குரிய வழிபாட்டுத் தெய்வங்களாக விளங்கியிருப்பதை உறுதி செய்வதாகக் கீழ்வரும் பாடல் உள்ளது. ஏறுதழுவிய இளைஞர்களின் குடல்களை எருதுகள் குத்திச் சரித்தன. அக்குடல்களைப் பருந்துகள் மேலே கொண்டு சென்றன. அப்பொழுது குடல்கள் தவறி ஆலமரத்தின் மீதும் கடப்ப மரத்தின்மீதும் விழுந்தன. அக்காட்சி அங்கு உறையும் தெய்வங்களுக்கு மாலை அணிவித்திருப்பது போல இருந்தது என்று கூறும் இப்பாடல்,

**ஏறுதம், கோலம் செய் மருப்பினால் தோண்டிய வரிக்குடர்**

**ஞாலம் கொண்டு எழூஉம் பருந்தின் வாய் வழீஇ,**

**ஆலும் கடம்பும் அணிமார் விலங்கிட்ட**

**மாலை போல், தூங்கும் சினை (கலி. 106:26-29)**

என்கிறது. இங்குக் கூறப்பட்ட தெய்வங்கள் தொன்மையான மரபை எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளன.

ஏறுதழுவும் நிகழ்ச்சி நடந்து முடிந்த பின்னர் வெற்றிபெற்ற தலைவனையும் தலைவியையும் மையப்படுத்தி ஊர் மன்றத்தில் குரவை ஆடப்பட்டுள்ளது. அதன் பின்னர் அவர்களுக்குத் திருமணம் நடத்தி வைக்கப்பட்டுள்ளது. இத்தகைய திருமண முறையை முல்லைத் திணை மக்கள் கடைபிடித்திருப்பது கலித்தொகையில் மட்டுமே காணப்படுகிறது. சங்க காலத்தில் நடைபெற்ற திருமண முறையிலிருந்து மாறி ஏழுதழுவுதல் மூலமாகத் திருமணம் நடைபெறுதல் கால மாற்றத்தால் விளைந்த வளர்ச்சியாக உள்ளது.

## பத்துப்பாட்டும் முல்லை நில மக்களும்

### பெரும்பாணாற்றுப்படை

ஆற்றுப்படை இலக்கியங்களுள் ஒன்றான பெரும்பாணாற்றுப்படையில் ஐந்திணை மக்களைப்பற்றிக் கூறும்பகுதி இடம்பெற்றுள்ளது. அப்பகுதியில் முல்லைத் திணையிலுள்ள மக்களின் இயல்புகளை எடுத்துரைக்கும் விதமாகக் கோவலர், இடையர், முல்லை நில உழவர் ஆகியோரின் வாழ்வியல் பாடப்பட்டுள்ளது. பிற இலக்கியங்களைக் காட்டிலும் இவ்விலக்கியம் முல்லை நில மக்களின் வாழ்வியலைக் குறித்துச் சற்று விரிவாக எடுத்துரைத்துள்ளது.

### கோவலர் ஊர்

கோவலர் வாழ்ந்த இருப்பிடம், அங்கு நடைபெறும் பணிகள் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆடுகள் நின்று தின்னும் பொருட்டு அவற்றிற்குரிய தழைகளைத் தாம்பால் கட்டின குறிய காலையுடைய குடில், அக்குடிலினது சிறு வாயில், கழியாற் செறிக்கப்பட்ட கதவினைக் கொண்டுள்ளது. வரகுகயிற்றால் வேயப்பட்ட கழிகளையுடைய முற்றம், அதன்கண் தோற்பாயினை விரித்துப் படுத்துத் துயிலுகிறான் முல்லை நிலத்திற்குரியவன். குறிய முளைகளையுடைய முற்றத்தின்கண், செம்மறியாடுகளும் வெள்ளாடுகளும் நீண்ட கயிற்றால் கட்டப்பட்டுக் கிடக்கும், இடுமுள்வேலியினை உடைய எரு மிகுகின்ற ஊர் பற்றி,

**-------------------------- மறிய,**
**குளகுஅரை யாத்த குறுங்கால் குரம்பை,**
**செற்றை வாயில், செறிகழிக் கதவின்,**
**கற்றை வேய்ந்த தழித்தலைச் சாம்பின்,**
**அதளோன் துஞ்சும் காப்பின் உதள,**
**நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்,**
**கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்**
**இடுமுள் வேலி எருப்படு வரைப்பின் (பெரும்பாண். 148-155)**

எனும் பாடல் குறிப்பிட்டுள்ளது. இப்பாடல், ஆடுகளை வீட்டில் நீண்ட கயிற்றால் கட்டி வளர்க்கும் நிலையினைக் காட்டுகிறது. முல்லைத் திணைப்பாடல்களில் இது புதிய பழக்கமாக இருப்பது குறிப்பிடத்தக்கது. மேலும், தோற்படுக்கையில் உறங்கும்

இடையன் என்று உரை குறிப்பிடுகிறது. இப்பாடல் வரிகளின் தொடக்கம், ஆடுகள் நின்று தழை உண்ணுவதற்கு ஏதுவாகத் தாழ்வாகக்கட்டப்பட்ட குரம்பையின் தோற்றத்தைக் கூறி, அக்குரம்பையின் அமைப்பு, குரம்பைக்குரிய ஆண் முதலியவற்றைக் குறிப்பிட்டு, அதன் பாதுகாப்பான வேலியை எடுத்துரைக்கிறது. பின்னர் இத்தகைய ஊர் என்று அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. இங்குக் கூறப்பட்டுள்ள புனைவுகள் முல்லை நில இடையனுக்குரிய புனைவுகளோடு ஒத்திருப்பதினால் இவ்வூர் இடையரும் கோவலரும் சேர்ந்து வாழ்ந்த இருப்பிடங்கள் நிறைந்ததாக இருந்திருக்கலாம். பின்னர்வரும் பகுதியில் முல்லை நிலப் பெண்ணான ஆயமகளின் தொழிலைப் பற்றிக்குறிப்பிட்ட புலவர், ஆயமகள் உறைகின்ற இருப்பிடத்தைக் கோவலர் குடியிருப்பு என்று பாடியிருப்பதும் ஆய்வுக்குரியது.

### கோவலர் குடியிருப்பு

ஆயமகள் மோர் கடைந்து விற்றுக் கிடைத்த நெல் முதலிய உணவுகளைத் தம் சுற்றத்தினர் உண்ணும்படிச் செய்துள்ளாள். நெய்க்கு ஈடாக எருமையையும், நல்ல பசுக்களையும் அவற்றின் கன்றுகளோடு வாங்கிக்கொண்டு வந்துள்ளதைக் கீழ்வரும் பாடல் குறிப்பிட்டுள்ளது.

**-------------------------- ஆய்மகள்**
**அளைவிலை உணவின் கிளைஉடன் அருத்தி,**
**நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்,**
**எருமை, நல் ஆன், கருநாகு பெறூஉம்**
**மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின் (பெருமபாண். 162-166)**

இத்தகைய ஆயமகள் உறைகின்ற இருப்பிடம், மடித்த வாயை உடைய கோவலருடைய குடியிருப்பு என்று கூறப்பட்டுள்ளது.

### இடையனின் மேய்ச்சல் தொழில் தோற்றம்

பெரும்பாணாற்றுப்படை கூறும் இடையனின் தோற்றம், எட்டுத்தொகை இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளதைப் போன்று காணப்படுகின்றது. இதனைக் கீழ்க்காணும் பகுதி எடுத்துரைக்கின்றது. செருப்பு விடாமற் கிடந்ததனால் வடு அழுந்தின வலிய கால்களையும், உறுதியான கோலை ஊன்றிய கோடரித் தழும்பு இருந்த வலிய கைகளையும், கொம்பின் இரு தலைகளிலும் உறிகளையுடைய காக்கள்

மேலே இருந்ததினால் உண்டாகிய தழும்புமிக்க மயிர் எழுந்த தோள்களையும், மேன்மையுடைய ஆன்பாலைத் தடவின மயிரினையும், கழுத்தில் உயர்ந்த மலர்களையும் கலந்து தொடுத்த மாலையையும், ஒற்றை ஆடையையும், பாற்சோற்றினையும் உடையவன் இடையன் என்பதை,

**தொடுதோல் மரீஇய வடுஆழ் நோன்அடி,**
**விழுத்தண்டு ஊன்றிய மழுத்தின் வன்கை,**
**உறிக்கா ஊர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல்,**
**மேம்பால் உரைத்த ஓரி, ஓங்குமிசைக்**
**கோட்டவும் கொடியவும் விரைஇ, காட்ட**
**பல்பூ மிடைந்த படலைக் கண்ணி,**
**ஒன்றுஅமர் உடுக்கை, கூழ்ஆர் இடையன்**

**(பெரும்பாண். 169-175)**

என்ற பாடல் தெரிவிக்கின்றது.

### இடையன் ஆநிரை மேய்த்தல்

இடையன் கன்றுகளைப் பெரிதும் விரும்புகின்ற பசுத்திரளுடன் காட்டில் தங்கியிருக்கும் வேளையில், நுண்புகைக் கமழும்படி தீக்கோலைக் கையால் கடைந்து தீ உண்டாக்கி அப்புல்லாங்குழலை ஊதி இனிய ஓசையை எழுப்புகின்றான், பாலைப் பண்ணில் இன்னிசைப் பாடிப்பாடி அலுத்தபொழுது, அதைவிடுத்து, குமிழங்கோட்டை வளைத்துக்கட்டி மரல் கயிற்றை நரம்பாகக்கொண்டு யாழ் உருவாக்கி, அவ்யாழிலே குறிஞ்சிப் பண்ணை விரலால் தெறித்து எழுப்புகின்றான், அவ் இசையைக் கேட்ட வண்டுகள் தம்முடைய இனத்தின் ஓசை என்று கேட்கும் புல் நிறைந்த அகன்ற முல்லை நிலம் என்கிறது கீழ் வரும் பெருப்பாணாற்றுப்படை பாடல்.

**கன்றுஅமர் நிரையொடு கானத்து அல்கி,**
**அம்நுண் அவிர்புகை கமழ, கைம்முயன்று**
**ஞெலிகோல் கொண்ட பெருவிறல் நெகிழிச்**
**செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்**
**இன்தீம் பாலை முனையின், குமிழின்**
**புழற்கோட்டுத் தொடுத்த மரல்புரி நரம்பின்**

**வில்யாழ் இசைக்கும், விரல் எறி, குறிஞ்சி,**

**பல்காற் பறவை கிளைசெத்து, ஓர்க்கும்**

**புல்ஆர் வியன்புலம்** **(பெருமபாண். 176-183)**

இங்குச் சுட்டப்பட்டுள்ள இடையன் கன்றுகளோடு சேர்த்து ஆநிரைகளைக் காட்டில் கொண்டு மேய்த்துள்ளான். இப்பாடலில் குழல், யாழ் ஆகிய கருவிகளைச் செய்து இசைத்து மகிழும் காட்சி புதிதாக இடம்பெற்றுள்ளது. மேலும், ஆடுகளை மேய்க்கும் இடையன் என்று பல இலக்கியங்களில் அடையாளப்படுத்தப்பட்ட இடையன் இவ்விலக்கியத்தில் கன்றோடு கூடிய பசுக்களை விரும்புபவனாகக் காணப்படுகின்றான். பெரும்பாணாற்றுப்படையில் வருணிக்கப்பட்டக் கோவலர் குடிசைகள், ஆயமகள், இடையனின் தொழில், வன்புல உழவர் ஆகிய விசயங்கள் எட்டுத்தொகையிலுள்ள அகப்பாடல்களில் மொழியப்பட்ட விசயங்களில் இருந்து பேரளவிற்கு மாறுபடவில்லை. இடையன் என்ற சொல் ஆடுமேய்ப்பவன் என்ற அளவோடு சுருங்காமல் ஆநிரைகளை மேய்ப்பவன் என விரிவடைந்துள்ளது[124] என்று கூறும் ராஜ் கௌதமன் கோவலர்களின் குடிசையைப் பற்றிய வருணனை விரிவாக்கம் இடையருக்குத் தரப்படவில்லை என்று கூறுகின்றார்.

## மலைபடுகடாம்

ஆற்றுப்படைகளில் கூத்தராற்றுப்படை என்று அழைக்கப்படும் மலைபடுகடாம் முல்லைத்திணை சார்ந்த மக்களைப் பற்றிய புனைவுகளையும், அவர்களுடைய விருந்துபேணும் முறைகள் குறித்தும் பாடியுள்ளது. மலைபடுகடாம் கூறும் முல்லை நில மக்கள் குறித்தப் பதிவுகள் பெரும்பாணாற்றுப்படையில் உள்ளதைப் போலல்லாமல் முற்கூறப்பட்ட சங்க இலக்கியமரபோடு இணைந்துக் காணப்படுகின்றது.

## கோவலர் குடியிருப்பு

வேற்றுப்புலங்களில் சென்று மேய்ந்த ஏறுகளையுடைய பசுக்கூட்டங்களில் சங்கு போன்ற வெண்ணிறப் பசுக்களின் இனிய பாலை, ஆநிரைகளைக் காவல் புரியும் கோவலர், வளையலையுடைய மகளிர் மனம் மகிழும்படிக் கொண்டுவந்து தருவர். இதனை,

**வேறுபுலம் படர்ந்த ஏறுடை இனத்த**

**வளை ஆன் தீம்பால், மிளைசூழ் கோவலர்,**

வளையோர் உவப்ப, தருவனர் சொரிதலின்,

பலம் பெறு நசையொடு பதிவயின் தீர்ந்த நும்

புலம்பு சேண் அகல, புதுவிர் ஆகுவிர் (மலைபடு. 408-412)

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

### இடையர் விருந்து

பண்டங்களை விற்றுப்பெற்ற பல்வேறு நெல்லின் அரிசி விரவப்பெற்றமை போலக் கிடாய்களோடு செம்மறியாடு, வெள்யாடு ஆகியவை தம்முள் கூடிக் கல்லென்ற ஓசையையுடைய காட்டின்கண் கடல்போல ஒலிக்கும். அந்தப் பகுதியில் தங்கச் சென்றால், இடையர்கள் நுமக்கென்று சமைக்காமல் தமக்கென்று சமைத்தப் பாலும் பாற்சோறும் தரப்பெறுகுவீர் என்று கலைஞர்களை ஆற்றுபடுத்துவதாகக் கீழ்வரும் பாடல் அமைந்துள்ளது.

பல்யாட்டு இனிநிரை எல்லினர் புகினே,

பாலும் மிதவையும் பண்ணாது பெறுகுவிர்

(மலைபடு. 416-416)

### இடையர் இரவு வாழ்க்கை

ஆடுகளின் தோலை உரித்து ஒன்றாகச் சேர்த்துத் தைத்து வாரால் இறுக்கிக் கட்டப்பட்ட தோல்படுக்கையில், கொடிய விலங்குகள் வராதபடி, இடையர்கள் கொளுத்திய தீயின் துணையாகத் தங்கிச் செல்லுங்கள் எனக் கூத்தர்கள் வழிநடத்தப்பட்டனர். இதனை,

துய்ம் மயிர் அடக்கிய சேக்கை அன்ன,

மேய் உரித்து இயற்றிய மிதி அதட் பள்ளி,

தீத் துணையாகச் சேந்தனிர் கழிமின் (மலைபடு. 418-420)

என்கிறது மலைபடுகடாம்.

### முல்லைப்பாட்டு

முல்லைப்பாட்டு திணைப் பெயரால் எழுந்த இலக்கியமாகும். இதில் முல்லை நிலத்திற்குரிய மக்களுடைய வாழ்க்கை, பிற இலக்கியப் பதிவுகள் போன்று

நிறைந்திருக்கவில்லை. இடையர், கோவலர் பற்றிய குறிப்புகள் சிலவே இடம்பெற்றுள்ளன.

வாடையால் கோவலர்கள் தம் கைகளை நெருப்பில் இட்டுச் சூடேற்றி கன்னங்களில் ஒற்றிக்கொண்டனர். அவர்களின் பற்கள், பறையடிப்பது போன்று அடித்துக்கொண்டன[125]

எனும் பகுதி, கார்காலத்தில் வாடையின் கொடுமையால் நிலத்தில் நிகழும் செயல்களை விவரித்துச் செல்லுகின்ற சூழலில், கோவலர்கள் மேய்ச்சல் தொழிலில் அனுபவித்த இன்னல்களை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

முல்லைப்பாட்டு, முல்லைத் திணையின் இயல்புகளை மட்டுமல்லாமல், வஞ்சி தானே முல்லையது புறனே (தொல். புறத். நூ. 61) எனத் தொல்காப்பியம் கூறுவதற்கேற்ப, அதற்குப் புறனாய வஞ்சித்திணை இயல்புகளையும் இயைத்துப் பாடுகின்றது. இவ்வகையில், அகத்திணை ஒன்றினை முதன்மையாகக் கொண்டு, அதற்கு இயைபான புறத்திணையையும் தொடுத்துப் பாடும் ஓர் அரிய நூலாக முல்லைப்பாட்டு விளங்குகின்றது[126] என்னும் நூல் குறித்த அறிமுகத்திலிருந்து இவ்விலக்கியம், முல்லைத்திணை மக்களுக்காகப் பாடப்படவில்லை என்பதை அறியமுடிகின்றது.

பத்துப்பாட்டுத் தொகுப்புகளில் ஒன்றாகிய குறிஞ்சிப்பாட்டில், கோவலர் குழல் ஊதிப் பசுக்களை அழைக்கும் மாலைக்காலம் பற்றிக் கூறப்பட்டுள்ளது[127].

## புன்செய் வேளாண்மை

மேய்ச்சலோடு வேளாண்மையும் இணைந்த கலப்புப் பொருளாதாரமே சங்ககால ஆயர் இனக்குழுக்களின் முக்கிய பொருளாதார முறையாக இருந்தது எனலாம். எந்த ஒரு இனக்குழுச் சமூகமும் தனித்த ஒரு வாழ்வாதாரத்தைக் கொண்டு வாழ முற்படாது என்னும் வகையிலேயே சங்க கால ஆயர்களும் இரண்டு முக்கிய வாழ்வாதாரங்களைக் கொண்டிருந்தனர்[128]. அவ்வாறே கால்நடை மேய்ச்சலோடு வன்புல வேளாண்மை முறையையும் முல்லை நில மக்கள் கொண்டிருந்தனர்.

வன்புலமுடைய முல்லை நில மக்கள் மழையை எதிர்பார்த்து வரகு முதலியவற்றைப் பயிரிட்டனர். பிற திணை மக்களைப்போல நீரினைத் தேக்கி வைத்து வேளாண்மை செய்யும் நில அமைப்பு இவர்களுக்கு இல்லை. மழையை

எதிர்பார்த்திருக்கும் இவர்களுக்கு மழை பெய்தல் பெருமகிழ்ச்சியை உண்டாக்கியது. இதனை,

**நீலத்து அன்ன நீர்பொதி கருவின்,**
**மாவிசும்பு அதிரமுழங்கி, ஆலியின்**
**நிலம் தண்ணென்று கானம் குழைப்ப,**
**இனம்தேர் உழவர் இன்குரல் இயம்ப (அகம். 314:1-4)**

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகிறது. இப்பாடல், மேகம் கரிய வானத்திலே இடியினை முழக்கி மழையினைப் பெய்ததனால், நிலம் குளிரக் காடு தழைத்தது, உழு தொழிலுக்கு இனமாவாரையும், எருதினங்களையும் ஆராயும் உழவர்கள் இனியகுரல் கொண்டு ஒலி எழுப்பி மகிழ்ச்சியை வெளிப்படுத்தியதைக் குறிப்பிட்டுள்ளது.

**உழவு**

தரிசாகக்கிடந்த பழைய கொல்லையை உழுது மகிழ்ச்சியடைந்த உழவர், காலையில் விதைப்பதற்காகச் சிறிய கூடைகளில், விதைகளை எடுத்துச் சென்று விதைத்துவிட்டுப் பொழுதுடனே வீடு திரும்பியதைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகிறது.

**முதைப் புனம் கொன்ற ஆர்கலி உழவர்**
**விதைக் குறு வட்டி போதொடு பொதுளப்**
**பொழுதோ தான்வந்தன்றே (குறுந். 155:1-3)**

முல்லை நில உழவர் பயிரிட்ட நிலத்தின் நிறம் சுட்டப்பட்டுள்ளது. காலைப் பொழுதில் பெருமழை பெய்தது. ஈரங்கொண்ட செம்மண் நிலத்தின் இருபுறமும் புழுதி கீழ்மேலாகப் புரண்டு விழுந்து புலருமாறு, கொல்லை உழவர் ஏர் கொண்டு உழுதனர். ஊனைக் கிழித்தாற்போன்ற சிவந்த மேட்டு நிலத்தைப் பிளந்து சென்ற நெடிய உழவுச் சாலிடத்தே விதைத்த விதைகள் முளைத்து வளர்ந்தன. கொம்புடைய ஓலைக் குடையைத் தலையில் கவிழ்த்துக் கொண்ட கொல்லை உழவர்கள், பறையை முழக்கி ஒலியை எழுப்பிக் களைக் கோட்டினால் களையினைப் பறித்துப் புனத்தினைத் தூய்மை செய்தனர். அவ்வுழவர்கள் கூழ் உண்ணும் பொருட்டுக் குருந்த மரத்தின் கீழ் தங்குவர் எனக் கூறுகிறது கீழ்வரும் அகநானூற்றுப்பாடல்.

**ஏர்இடம் படுத்த இருமறுப் பூழிப்**
**புறம்மாறு பெற்ற பூவல் ஈரத்து,**

**ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்,**

**வித்திய மருங்கின் விதைபல நாறி,**

**இரலைநல் மானினம் பரந்தவை போல்,**

**கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்,**

**கறங்குபறைச் சீரின் இரங்க வாங்கி,**

**களைகால் கழீஇய பெரும்புன வரகின்**

**சுவைக்கதிர் இரும்புறம் கதூஉ உண்ட (அகம். 194:2-10)**

இப்பாடலில், வரகு விதைப்பதற்காக நிலம் உழப்பட்ட முறை, வரகு விதைப்பு, களை எடுத்தல், கதிர் முற்றியபயிர் ஆகியவற்றைப்பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

நிலம் பலமுறை பண்படுத்தப்பட்டு பயிரிடப்பட்டதாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

**விதையர் கொன்ற முதையல் பூழி,**

**இடு முறை நிரப்பிய ஈர் இலை வரகின்**

**கவைக் கதிர் கறித்த காமர் மடப் பிணை, (நற். 121:1-3)**

விதை விதைக்கும் முல்லை நில உழவர் உழுது பண்பட்ட பழங்கொல்லைப் புழுதியில் நிறைவுற வரகினை விதைத்தனர். அவை முளைத்துப் பசிய கதிர்களை ஈன்றது. அவை பார்ப்பவர் கண்களைக் கவரும் வண்ணம் அமைந்திருந்தது.

## களையெடுத்தல்

களைக் கோட்டினைக் கையிற்கொண்டு களைபறித்து எறியும் தொழிலையுடையவர் கள்ளை அருந்திக் களிப்புடன் திரிந்துள்ளனர்[129].

## உழவர் சீறூர்

முள்வேலி மற்றும் காடுகளை வேலியாகக் கொண்ட சிறிய ஊரின் கண், குடியிருப்புகள் காணப்படும். அவ்வீடுகளின் முற்றத்தின் கண் நெற்கூடுகள் நிற்கும், முற்றத்தை ஒட்டிய மரப்பந்தரில் வரகு திரிக்கின்ற திரிகை நடப்பட்டிருக்கும், குறிய வண்டிகளோடு கலப்பையும் சார்த்தி வைப்பதால் சுவர் தேய்ந்து காணப்படும், புகை சூழ்ந்த கொட்டில்களும் வரகு வைக்கோலால் வேயப்பட்ட கூரையையும் உடையன அவ்வீடுகள்[130]. இத்தகைய முற்றமும் புழங்கு பொருட்களும் பெற்றிருந்தது பற்றி

முல்லை என்ற வன்புலத்தில் வரகு வேளாண்மை செய்த கொல்லை உழவர்களின் வீடுகள், அங்கிருந்த சிறுவண்டி உருளை, கலப்பை ஆகியவை அவர்களது வளர்ச்சியை எடுத்துக்காட்டுகின்றன. வன்புல வேளாண்மையின் விரிவாக்கத்தைப் பெரும்பாணாற்றுப்படை சுட்டுகிறது எனக் கொள்ளலாம்[131] என்கிறார் ராஜ்கௌதமன். கொல்லை உழவர்களின் வாழ்வியல் மட்டுமின்றி முல்லைத்திணை சார்ந்தப் பதிவுகள் பலவற்றில் இந்த மாற்றத்தைக் காணமுடிகிறது. வரகினது சிறிய சோற்றை, அவரை விதையின் பருப்பைப்போட்டுத் துழாவிய இனிய சுவையுடைய பூரலைப் பெறுகுவீர் என்று பாணர்களுக்கு வழிகாட்டப்படுவதிலிருந்து முல்லை நில உழவர்களின் உணவுமுறையைப் பற்றி அறியமுடிகிறது[132]

**மருதம்**

வயலும் வயல் சார்ந்த பகுதியும் மருதம் எனப்பட்டது. மருத நில மக்களாக உழவர், உழத்தியர் விளங்குகின்றனர். இயற்கையைத் தமது ஆற்றலுடன் பயன்படுத்திக் கொள்ள தெரிந்த மருத நில மக்கள் காட்டைத் திருத்தி கழனியாக்கினர். ஆற்றைத் திருப்பி நீரைத் தேக்கினர். வேளாண்மையில் ஈடுப்பட்டனர். தங்களின் விளை நிலங்களுக்கு அருகிலேயே சற்று மேடான பகுதிகளில் ஊர்களை உருவாக்கிக் கொண்டு குடும்பம் குடும்பமாக வாழத்தலைப்பட்டனர். உணவைத்தேடி வாழ்ந்த குறிஞ்சி, முல்லை, நிலமக்களைப் போலல்லாமல் இவர்கள் உணவை உற்பத்தி செய்தனர்[133]. இத்திணைப் பாடல்,

**நெல் பல பொலிக! பொன் பெரிது சிறக்க! (ஐங்.1:2)**
**விளைக வயலே! வருக இரவலர்! (மேலது.2:2)**
**பால் பல ஊறுக! பகடு பல சிறக்க! (மேலது.3:2)**

என்ற வாழ்த்துகளை மையக்கருத்தாகக் கொண்டு அமைந்துள்ளன. மேலும், இவ்வரிகளில் மருத நிலத்தின் விளைவையும், நாட்டின் பொன்பொருட் சிறப்பையும், கால்நடைச் செல்வங்களையும் முக்கியத்துவப் படுத்தியிருப்பதிலிருந்து இந்நிலத்தில் நிலவிய பொருளாதார மேம்பாட்டையும், மக்களின் வாழ்க்கைத்தரத்தையும் அறிந்துகொள்ளமுடிகிறது.

மருத நில வயல்களில் உழுதல், விதைத்தல், களையெடுத்தல், நெல் அறுத்தல், நெல் கடாவிடுதல், கரும்பு பயிரிடுதல் ஆகிய பயிர்களை உழைப்பாளர்களாகிய உழவர்கள் செய்தனர். இவர்களுக்கென சொந்த நிலமின்றி பிறருடைய நிலத்தில்

உழைத்தனர். நிலவுரிமையற்ற விவசாய உழைப்பாளர்கள் செந்நெல் வினைஞர், நோன்ஞான் வினைஞர், வெந்நெல் அறிஞர், கழனி உழவர், கலிமகிழ் உழவர் என அகநானூற்று மருதப்பாக்களிலும் கைவினை மாக்கள், பகடு புறந்தருநர், மனைக்களர் எனக் குறுந்தொகை மற்றும் புறநானூற்றுப் பாக்களிலும் சுட்டப்படுகின்றனர்[134].

## விதைப்பு

நிலத்தில் ஈரமாகிய பருவம் நீங்கும் முன்னர் உழுவதற்கு உழவு எருதுகளை ஆராய்ந்த உழவன்[135], மருத நிலத்தில் நெல்லறுத்து விடப்பட்ட வயலை மீண்டும் உழுது ஈரமான சேற்றில் விதைக்கும் பொருட்டு, விதைகளைக் கடகப்பெட்டியில் கொண்டு வந்து விதைத்துள்ளனர். இதனை,

**அரிகால் மாறிய அம் கண் அகல் வயல்**
**மறு கால் உழுத ஈரச் செறுவின்,**
**வித்தொடு சென்ற வட்டி பற்பல**
**மீனொடு பெயரும் யாணர் ஊர! (நற். 210:1-4)**

என்ற பாடல் தெரிவிக்கின்றது. உழவர்கள் மறுகால் உழவு செய்யும் மரபு இப்பாடலினால் வெளிப்படுகிறது. மேலும், விதையை எடுத்துச்சென்ற உழவர்கள், திரும்பி வரும்போது கடகப்பெட்டியைப் பலப்பல மீன்களுடன் நிரப்பி வந்தனர் என்பதிலிருந்து விதைகளை விதைக்கவும் மீன்களைப் பிடித்து எடுத்துவரவும் கடகப்பெட்டிகளைப் பயன்படுத்தியிருப்பது புலப்படுகிறது. இவ்வாறு விதை கொண்டு சென்ற கடகப்பெட்டியில் அரும்புகளைக் கொண்டு மாலையில் திரும்பினர், முல்லை நிலக் கொல்லை உழவர்[136]. இவ்விருநில உழவர்களும் கடகப்பெட்டியை ஒரே காரணத்திற்காகப் பயன்படுத்தியிருக்கின்றனர்.

## நாற்று நடுதல், களையெடுத்தல்

உழவன் வரால்மீன் குழம்பையும், சோற்றையும் உண்ட மயக்கத்தில் உழத்தியோடு சேற்றிலே நாற்றுநடச் சென்றான். அங்கு வளர்ந்துள்ள கோரைகளையும் நெய்தலையும் களையாக எடுக்கும் பணியும் அவர்களுக்கிருந்ததை,

**நீர் உறு செறுவின் நாறு முடி அழுத்த, நின்**
**நடுநரொடு சேறிஆயின், அவண**
**சாயும் நெய்தலும் ஓம்புமதி (நற். 60:7-9)**

எனும் பாடல் குறிப்பிட்டுள்ளது. அயிரைமீன் மேயும் நீர் அறாத வயல்களில் களையாக வளர்ந்துள்ள ஆம்பல் மலர்களைக் கிள்ளி எறிவர். இதனை,

**அயிரை பரந்த அம்தண் பழனத்து**
**ஏந்துஎழில் மலர தூம்புடைத் திரள்கால்**
**ஆம்பல் குறுநர் நீர்வேட்டாங்கு (குறுந். 178:1-3)**

என்ற பாடலால் அறியமுடிகிறது.

### நெல் அறுவடை

நெற்கதிர்களை அரிவோர், நெல்லறுத்து, நெற்கட்டுகளையும், கோரைகளையும் களத்தில் கொண்டுவந்து குவித்துள்ளனர்.[137] அவ்வாறு கொண்டுவந்த நெற்கதிர்களைக் கட்டுகளிலிருந்து பிரித்துக் கடாவிட்டுள்ளனர். கள்ளுண்டுக் களித்திருந்த அவ்வுழவர்கள் காளைகளை மாற்றி மாற்றிக் கடாவிட்டுள்ளனர். பின்னர் காற்று வீச நெல்லைத் தூற்றியுள்ளனர். அவ்வாறு தூற்றிய தூசியானது காற்றில் பரதவர்களுடைய உப்பளத்திலுள்ள சிறிய பாத்திகளில் விழுந்தது. இதனை,

**தாழ்சினை மருதம் தகைபெறக் கவினிய**
**நீர்சூழ் வியன்களம் பொலிய, போர்புஅழித்து,**
**கள்ஆர் களமர் பகடுதலை மாற்றி,**
**கடுங்காற்று எறிய, கோகிய துரும்புஉடன்**
**காயல் சிறுதடிக் கண்கெடப் பாய்தலின் (அகம். 366:1-5)**

என்ற பாடல்வரிகள் தெரிவிக்கின்றன. நெல்லை அரிந்த உழவர்கள் வயலில் கிடந்த மயிற் தோகைகளையும் சேர்த்துக் கட்டியுள்ளனர்[138]. நெற்குவியல்களையுடைய மிழலைக் கூற்றம் என்னுமூரில் நெல்லரிந்தோர், வெப்பம் தாங்காமல் வெறுப்புற்றுக் கடல் அலைமீது பாய்ந்துள்ளனர்[139]. உழவர்கள் நெல் மட்டுமல்லாது உழுந்தும் பயிரிட்டுள்ளனர். அதனை அறுவடைசெய்து காயவைத்து, அடிப்பதற்காகப் பயன்படுத்தப்பட்ட தடியின் நுனிப்பகுதி பருத்தும் வழுவழுப்பாகவும் இருந்தது என்பதைக் குறுந்தொகைப்பாடல்வழி அறியமுடிகிறது[140]. இப்பணியில் ஈடுபட்டோர் ஆண்களா, பெண்களா என்பது தெரியவில்லை.

**அறுவடை இசை**

அறுவடையின்போது இசை எழுப்புவது பிற திணைகளிலும் நிகழ்வதுண்டு. இந்நிகழ்வு அக்கால மக்கள் இசையோடு கொண்டிருந்தத் தொடர்பை எடுத்துக் காட்டுகின்றது.

**வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ**

**பழனப் பல் புள் இரிய, கழனி (நற். 350:1-2)**

எனும் பாடல்வரிகள் வெண்ணெல் அரிகின்ற உழவர்கள் முழக்கும் தண்ணுமைக்கு அஞ்சி, வயலில் உள்ள பலவாகிய பறவை இனங்கள் வயலைவிட்டு மருதமரத்தில் சென்று தங்கியதைக் குறிப்பிட்டுள்ளது.

**உழவர் எருமை வளர்ப்பு**

உழவர்கள் ஆநிரைகளை வளர்த்து உழவிற்காகப் பயன்படுத்திக் கொண்டுள்ளனர். உழவர்களுடைய நெல்வளம் போன்று எருமைகளும் செல்வமாகக் கருதப்பட்டிருக் கின்றன[141].

தாழ்ந்த கொம்பினையுடைய எருமையாகிய ஈன்றணிமையுடைய ஆன், உழவனால் கட்டப்பட்ட கன்றின் பக்கத்திலிருந்து நீங்காமல், அருகில் உள்ள பயிர்களை மேய்ந்துள்ளது. இதனை,

**இருமருப்பு எருமை ஈன்றணிக் காரான்**

**உழவன் யாத்த குழவியின் அகலாது**

**பாஅல் பைம்பயிர் ஆரும் (குறுந். 181:3-5)**

என்ற பாடலால் அறியலாம்.

**கருவிகள்**

உழவிற்காக ஏர் பயன்படுத்தப்பட்டுள்ளது. அரிவாள் பயன்பாடும் உள்ளது. இருப்பினும் உழவில் இயல்பாகச் செய்யும் தொழிலை உழவர்கள் கையினாலேயே செய்திருக்கின்றனர் என்பதை,

**கைவினை மாக்கள் தம்செய்வினை முடிமார் (குறுந். 309:1)**

என்கிறது குறுந்தொகைப் பாடல்.

### உழவர் உணவு

வயல்களில் உழைத்த உழைப்பாளர்களாகிய உழவர்கள் அவர்களுடைய உணவினை வேலை நேரத்தின்போதே சேகரித்துக் கொண்டனர். அவர்கள் சேகரித்ததில் ஏராளமான மீன்வகைகள் அடங்கும். அவ்வாறு பெற்ற உணவை அவ்விடத்திலேயே உண்டுள்ளனர். மருத நில மக்கள் உணவை நீரில் வேகவைத்து உண்டுள்ளனர். மீன்களைச் சமைத்தும் நெருப்பில் சுட்டும் உண்டுள்ளனர்[142]. நெருப்பில் சுடுவது மருதநில வழக்கமாகக் காணப்படுகின்றது. சோறு, மீன், கள் போன்றவற்றை உண்ட உழவர்களால் விதைப்பதற்காக வைக்கப்பட்ட விதையைச் சமைத்து உண்பது அறிவார்ந்த செயலாகக் கருதப்படவில்லை. அவற்றைச் சமைத்து உண்டவர்கள் அறிவற்றவர்களாகக்[143] கருதப்பட்டுள்ளனர். ஆனாலும், வாழ்வதற்கு அடிப்படையாய் அமைந்த விதையை வறுமையால் தளர்ந்த உழவர்குடி சமைத்து உண்டுள்ளது[144].

நெல்விளைந்த வயலில் பறவைகளை விரட்டும் உழுகுடியோர், கீழே விழுந்த பனங்கருக்கை விறகாகக் கொண்டு கழியிடத்துப் பிடித்த மீனைச் சுடுவர், அதனுடன் விரும்பிய கள்ளைக் குடிப்பர், அவ்வாறு உண்ட பின்னும் அடங்காது, தென்னையின் இளநீரை உதிர்ப்பர்[145]. நெல்லறுக்கும் உழவர் கள்ளைக் குடிக்க ஆம்பல் இலையைப் பயன்படுத்தியுள்ளனர்[146].

களமர்-உழவர்கள் அரிக்கப்பட்ட முதிர்ந்த மதுவை ஆமை இறைச்சியோடு வேட்கைத்தீர உண்டுள்ளனர். ஆரல் மீனினது வேகவைத்த கொழுப்பமைந்த துண்டைத் தம் கன்னத்தினுள்ளே அடக்கிக் கொண்டு மதுவுண்டு மயங்கி இருந்துள்ளனர்[147]. இவை சோழ நாட்டின் வளத்தைக் குறிப்பதாக உள்ளது.

**மணிமருள் மலர முள்ளி அமன்ற,**
**துணிநீர், இலஞ்சிக் கொண்ட பெருமீன்**
**அரிநறக் கொழுங்குறை வெளவினர் மாந்தி,**
**வெண்ணெல் அரிநர் பெயர்நிலைப் பின்றை,**
**இடைநிலம் நெரிதரு நெடுங்கதிர்ப் பல்சூட்டுப்**
**பனிபடு சாய்ப்புறம் பரிப்ப, கழனி (அகம். 236:1-6)**

இப்பாடல், நெற்கதிரை அரிவோர், முள்ளிச் செடிகள் கிடக்கும் மடுவில் உள்ள மீன்களைப் பிடித்துவந்து, அதன் துண்டங்களைக் களத்தில் இருந்தவாறே கடித்து வயிறார உண்டதைக் குறிப்பிடுகிறது.

கடைசியர் என்று கூறப்படும் உழத்தியர் களை பறிக்கும் வயலில், வயலைச் செப்பம் செய்யும் தளம்பு என்னும் கருவியால் வாளை மீனைத் துண்டித்துள்ளனர். அதனைப் புதியநெல் சோற்றிற்குக் கறியுணவாகக் கொண்டு உழவர், உழத்தியர் வயிறுபுடைக்க உண்டு கதிரை இடுமிடம் அறியாது தடுமாறினர்[148]. உழவர்கள் பிற திணை மக்களைப் போன்றே கள்ளுண்ணும் பழக்கம் உடையவர்கள்[149] ஆவர்.

## உழவர் விருந்து

உழவர்களை நாடி அவர்களுடைய சுற்றங்களும், பாண் சுற்றங்களும், பிறதிணை மக்களும் (பண்டமாற்று) சென்றுள்ளனர். அவர்களுக்கு வேண்டும் பொருள் கொடுத்து உபசரிப்பவர்களாக உழவர்கள் இருந்துள்ளனர்.

நெல் அறுப்பவர் வாளை மீனையும், உழவர்தம் கருவியால் கொண்ட ஆமையையும், கரும்பு வெட்டுவார் கரும்பிடமிருந்து பெற்ற தேனையும், பெரிய நீர்த் துறையில் நீரை முகக்கும் பெண்டிர் பறித்தச் செங்கழுநீர் மலர்களையும் வன்மையான நிலங்களில் இருந்து வரும் சுற்றத்தாருக்குக் கொடுத்துள்ளனர். இதனை,

**------------------------- அரிநர்**
**கீழ் மடைக் கொண்ட வாளையும், உழவர்**
**படை மிளிர்ந்திட்ட யாமையும், அறைநர்**
**கரும்பில் கொண்ட தேனும், பெருந்துறை**
**நீர் தரு மகளிர் குற்ற குவளையும்,**
**வன்புலக் கேளிர்க்கு வரு விருந்து அயரும்** (புறம். 42:12-17)

என்னும் பாடல்வரிகளால் அறியமுடிகின்றது.

புறநானூற்றில் மகட்பாற்காஞ்சிப் பாடல்கள், மருதநிலத்தை ஆண்ட முதுகுடி மன்னர்களின் வளங்களைத் தெரிவிக்கின்றன. மருத நிலங்களை எரியூட்டி அழித்த வேந்தர்கள் வளமான மருத நிலத்தில் நீர்நிலைகளை ஏற்படுத்திக்கொண்டு மென்புல விளைவாகக் கருதப்படும் நெல், கரும்பு முதலான பொருட்களை விளைவித்துள்ளனர். புன்செய் வேளாண்மை, வேந்தர்களின் நிலையான ஆட்சிக்கு ஏற்றது அல்ல என்பதை

ஒரு புலவர் வேந்தனுக்கு எடுத்துக் கூறியுள்ளார்[150]. இங்கு வளமாகக் கருதப்பட்ட நீர், வளம் சார்ந்த நெல் இரண்டும் வேந்தர்களின் ஆட்சியின் காரணமாக,

**நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே;**
**மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம்** (புறம். 186:1-2)

என்று கீழ்நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளதையும் அறியமுடிகிறது. அவ்வாறே பதிற்றுப்பத்தும் புன்புல வேளாண்மையை விரும்பவில்லை என்பதையும், ஆனால் சேர நாட்டில் நெல் விளைச்சல் வேந்தர்களின் நல்லாட்சியால் சிறப்புற்றிருந்தது என்பதையும் காணமுடிகிறது.

## பத்துப்பாட்டும் மருத நிலமும்

ஆற்றுப்படை இலக்கிய அமைப்பில் ஐந்திணை மக்களுடைய நில அமைப்பு, அங்கு விளையும் பொருட்கள், செய்த தொழில், கிடைக்கும் உணவு முதலானவை இடம்பெற்றுள்ளன. இது எட்டுத்தொகை இலக்கியங்களைப் போலல்லாமல் நீண்ட தொடர்ச்சியான மக்கள் வாழ்க்கை முறையை எடுத்துரைக்கிறது.

பெரும்பாணாற்றுப்படை மருத நிலத்தில் நடைபெறும் வேளாண்மையில், எருதுகளைக் கொண்டு கலப்பையினால் உழுது, விதைத்து, பின்னர் களைக்கோட்டினால் களைகளைக் களைந்து பயிரை விளைவித்துள்ளனர். அறுவடையின்போது இவர்கள் செய்யும் ஆரவாரத்திற்கு அஞ்சிக் குறும்பூழ்ப் பறவைகள், தம் குஞ்சுகளுடன் காட்டிடத்தே சென்று தங்கியதாகப்[151] பாடப்பட்டுள்ளது.

### நாற்று நடுதல்

காரேறுகள், தம்முள் போரிட்டு நண்டு வளைகளைச் சிதைத்தும், கோரைகளைக் குத்திக் கோட்டு மண்ணைக் கிளரினமையால் சேறாகிய வயலில் உழவர்கள் அந்தச் சேற்றை மிதித்துச் சமன்படுத்தி முடிநாற்றை நட்டுள்ளனர்[152]. இவ்வுழவுமுறை, குறிஞ்சியில் பன்றி உழுத நிலத்தில் தினை விதைப்பதைப் போன்று அமைந்துள்ளது.

### நெல் அறுவடை

முற்றிய நெல்லினை அறுத்த உழவர்கள், மருத மரத்தின் நிழலிலே போராகக் குவித்து வைப்பர். அவற்றில் சிலந்தியின் நூல் பின்னப்பட்டு நின்றது. அப்போரில் கடா

அடித்துப் பின்னர், தூசி போக்கி, குவித்து வைக்கப்பட்ட நெற்கூடு மேரு மலையினைப்போன்று காட்சி அளித்தது[153]. இத்தகைய நெற்கூடுகள் மலைக்கு ஒப்புமையாக்கப்பட்டுள்ளதை மலைபடுகடாமும் குறிப்பிட்டுள்ளது.

உழவர்கள் ஞெண்டுகள் ஆடித்திரியும், வயல்களுக்கு அருகில் உள்ள மேட்டுநிலத்தில் அமைக்கப்பட்ட மலையைப் போன்ற நெற்போர்களை அடிமுதல் அழித்துக் கடாவிட்டுள்ளனர். களத்திலிருந்தே வலையருடைய மகளிருக்கு நெல்லை அளந்து கொடுத்துள்ளனர். அவற்றால் மகிழ்ந்த மகளிர் மிடாவிலிருந்துக் கள்ளை வார்த்துக் கொடுத்துள்ளனர்[154] என்பதை அறியமுடிகிறது.

பெரும்பாணாற்றுப்படை மருத நிலத்தைப்பற்றி எடுத்துரைத்த பின்னர், தோப்பு உழவர் என்னும் உழவர்கள் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. இவ்வுழவர்களுடைய குடியிருப்பு, இவர்களுடைய விருந்து ஆகியன இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன. இவர்கள் தண்டலை உழவர் என்று அழைக்கப்பட்டுள்ளனர். இதனை,

**-------------------------- கறை அடிக்**
**குன்றுஉறழ் யானை மருங்குல் ஏய்க்கும்,**
**வண்தோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த,**
**மஞ்சள் முன்றில், மணம்நாறு படப்பை,**
**தண்டலை உழவர், தனிமனைச் சேப்பின்** (பெரும்பாண். 351-355)

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகிறது. தென்னையின் வாடிய மடலால் வேயப்பட்ட மனையில் மஞ்சனையுடைய முற்றம், மணம் கமழ்கின்ற பூந்தோட்டங்கள் சூழத் தோப்புகள்தோறும் தனித்தனியாக இருக்கும் தோப்பு உழவர் மனைகள் அமைந்திருக்கும்.

மதுரைக்காஞ்சி, பாண்டியனுடைய நாட்டின் ஐந்நில வளங்களைப் பற்றிப் கூறும் பகுதியில், மருத நிலத்தின் வளத்தைப் பற்றிப் பின்வருமாறு பாடியுள்ளது.

- கரும்பு சாறு பிழியும் ஆலைகளில் எழும் ஓசைகள்.
- மூப்பு காரணமாகச் சேற்றில் செல்ல வலிமையில்லாத எருதுகளை நீக்கும் உழவர் கள்ளை உண்டு ஆரவாரிக்கும் ஒலி.
- நெல் வயல்களில் நெல்லறுப்போர் தம் கைகளால் அடிக்கும் பறை ஓசை.
- திருப்பரங்குன்றத்தில் விழா கொண்டாடும் ஆரவாரம்

- புதுப்புனலாடும் மகளிர் ஒலி.
- மீனைத் தூய்மை செய்துகொண்டிருக்கும் பாணர்களின் குடியிருப்புகளிலிருந்து அவர்களுடைய பாடலொடு ஆடல் ஒலி கேட்ட வண்ணம் இருக்கும்[155].

இவ்வோசைகள் மருதநில மக்களின் வாழ்வியல், பொருளாதாரம், தொழில், பொழுதுபோக்கு முதலானவற்றை எடுத்துரைக்கின்றது.

பட்டினப்பாலை, சோழ நாட்டு வயல்வளம், மருதநில செல்வந்தர்களுடைய வீடு, பகைநாட்டு மருதநில அமைப்பு, ஊர் அம்பலம், மன்றம், மருதநில வீடுகள் போன்றவற்றை எடுத்துரைக்கின்றது.

சோழ நாட்டில், மருதநிலம் விளைச்சல் நீங்காத பகுதியாக விளங்கியுள்ளது. அங்கு எருமையின் கன்று முற்றிய நெற்கதிர்களைத் தின்று நெற்கூடுகளின் நிழலில் படுத்துறங்கும். அப்பகுதியில் குலைகளையுடைய தென்னை, வாழை, பனை, காய்களையுடைய பாக்கு மரங்கள், மஞ்சள், மாமரங்கள், சேம்பு, இஞ்சி ஆகியவற்றின் விளைச்சல் எப்போதும் இருக்கும்[156]. அங்கு வாழ்ந்த செல்வந்தர்களுடைய வீட்டிலிருந்த பெண்கள் உலருகின்ற நெல்லைத்தின்ன வரும் கோழியை விரட்டத் தம்முடைய காதுகளில் இருந்த மகரக்குழைகளைப் பயன்படுத்தியுள்ளனர். அவர்கள் எறிந்த மகரக்குழை அங்கு விளையாடிக்கொண்டிருந்த பிள்ளையின் சிறுதேரின் ஓட்டத்தைத் தடுத்து நிறுத்தியதாகப் பாடப்பட்டுள்ளது[157].

திருமாவளவன் பகைக்கொண்டு படையெடுத்துச் சென்ற நாட்டில் மருத நிலங்களில் கரும்புகளும், நெல்லும் வளர்ந்திருந்தன. குவளைகளும், பெரிய இதழ்களைக் கொண்ட நெய்தலும் கொண்ட பொய்கையில் முதலைகள் செருக்குடன் திரிந்ததை,

**-------------------------- தண் பணை எடுப்பி,**
**வெண் பூங் கரும்பொடு செந்நெல் நீடி,**
**மாஇதழ்க் குவளையொடு நெய்தலும் மயங்கி,**
**கராஅம் கலித்த கண்அகன் பொய்கை (பட்டினப். 239-242)**

எனும் பாடல்வரிகள் குறிப்பிட்டுள்ளன. அவ்வூர்களில் தெய்வம் உறையும் அம்பலங்கள் இருந்துள்ளன என்பதை அறியமுடிகிறது. மன்றங்களில் விலை கூறமுடியாத நறுமணப் பூக்களைத் தூவி, அறிவு வாய்க்கப் பெற்ற கூத்தரின் முழவோசைக்கு ஏற்ற,

முறுக்குடைய நரம்பினைக் கொண்ட இனிய யாழின் இசையைக் கேட்டு மகிழ்ந்துள்ளனர்[158].

மருதநிலத்திலுள்ள வீடுகளில் உள்ள வளைந்த திண்ணைகளையுடைய மாடங்களின் நெடிய வாயிலில், விருந்தினர்கள் திரண்டு குழுமியிருந்து, பின்னர் வீட்டினுள் சென்று, உணவு உண்டு, நீங்கிய பின்னரும் மிகுதியாகக் கிடக்கும் பெருஞ்சோற்றினை உடைய அடுக்களையைக் கொண்டிருந்தன. திண்ணைகளில் கிளிகள் பேசும் பால்வளம் மிகுந்த ஊர்கள் பற்றிப் பாடப்பட்டுள்ளது[159].

**உழவர் விருந்து**

நல்லியக்கோடனுடைய ஆமூரில் எருதுகளையுடைய உழவரின் தங்கை சிறிய முதுகினையும், தொடியணிந்த கையினையும் உடையவள். அவள் உங்களைத் தடுத்து, வெண் சோற்றினை, நண்டினது கலவையோடு உண்ணத் தருவாள். அதனைப் பெறுங்கள் என்று பாண் சுற்றம் வழிநடத்தப்பட்டுள்ளது.

**இருங்காழ் உலக்கை இரும்புமுகம் தேய்த்த**
**அவைப்பு மாண்அரிசி அமலை வெண்சோறு,**
**கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுவீர்**

**(சிறுபாண். 193-195)**

இப்பாடல், உழவர்களுடைய உணவாக இருந்த அரிசிச் சோறு, நண்டுக் கலவை ஆகியன பற்றிய குறிப்பை நல்குகின்றது.

முள்ளைநீக்கி ஆக்கிய கொழுப்பினால் வெள்ளை நிறத்தையுடைய தசைத்துண்டுகள் கலந்த வெள்ளிய சோற்றினை நின் சுற்றத்தாருடன் உண்டு, எருதுகளை அடித்து ஓட்டிச் செல்லும் உழவர் ஓசையொடு பொருந்தும்படி, யாழில், மருதப்பண்ணை வாசித்து, இளைப்பாறிச் செல்லுங்கள் என்று உழவர்களுடைய விருந்துபற்றி மலைபடுகடாம் குறிப்பிடுகிறது[160].

**தோப்பு உழவர் விருந்து**

தோப்பு உழவர்களுடைய மனைகளிடத்துத் தங்கினால் பலாப்பழத்தையும், தெங்கின் இளநீரையும், முதிர்ந்த வாழைப் பழத்தையும், பனையின் நுங்கையும், பிற

பண்டங்கள் பலவற்றையும் கொடுப்பார்கள். அவற்றைத் தின்று வெறுத்தால், சேம்பு முதலிய கிழங்குகளைத் தின்பீர்கள் என்பதை,

**தாழ்கோட் பலவின் சூழ்சுளைப் பெரும்பழம்**
**வீழ்இல் தாழைக் குழவித் தீம்நீர்**
**கவைமுலை இரும்பிடிக் கவுள்மருப்பு ஏய்க்கும்**
**குலைமுதிர் வாழைக் கூனி வெண்பழம்,**
**திரள்அரைப் பெண்ணை நுங்கொடு, பிறவும்**
**தீம்பல் தாரம் முனையின், சேம்பின்**
**முளைப்புற முதிர்கிழங்கு ஆர்குவிர் . (பெரும்பாண். 356-362)**

என்னும் பாடல் தெரிவிக்கின்றது.

தோப்புகளை உழுது பயன்படுத்தித் தென்னங்கீற்றால் வேய்ந்த மனைகளில் வாழும், தோப்பு உழவர்கள் தங்கும் மனைகள், தோப்புக்கு ஒன்று எனத் தனித்தனியே இருந்துள்ளன. அவர்களுடைய உணவுகளும் தோப்புகளில் விளைவித்த இயற்கை உணவாக இருந்திருக்கின்றது. இந்த இயற்கை உணவு குறிஞ்சி நிலத்தில் கிடைக்கக்கூடிய உணவு வகைகளோடு ஒத்திருப்பது கவனிக்கத்தக்கது.

## கள்விற்கும் மகளிர் விருந்து

வலைவீசுவோர் கொண்டுவந்து கொடுத்த வாளை மீன் தசையை, தூண்டிலில் பிடித்த வரால்மீன் தசையோடு கலந்து, பகன்றைப்பூவால் செய்த கண்ணியை அணிந்த, கள்விற்கும் வலையருடைய மகளிர் தருவர்.

**கண்பு மலி பழனம் கமழத் துழைஇ,**
**வலையோர் தந்த இருஞ்சுவல் வாளை,**
**நிலையோர் இட்ட நெடுநாண் தூண்டில்,**
**பிடிக்கை அன்ன செங்கண் வராஅல்,**
**துடிக்கண் அன்ன குறையொடு விரைஇ,**
**பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர் (மலைபடு. 454-459)**

இப்பாடல், வலைஞர்களுடைய உணவுப் பழக்கத்தைக் கூறுவதாக உள்ளது. மேம், கள்விற்கும் தொழில் செய்தவர்களாக வலைஞர்களுடைய மகளிர் விளங்கியிருப்பதும்

புலப்படுகின்றது. இவர்கள், நெல் கடாவிடும் களங்கள்தோறும் கள்ளைக்கொடுத்து உழவர்களிடமிருந்து நெல்லைப் பெற்று வந்துள்ளனர்[161].

**பாணர்**

பாணர்கள் இனிய பாடல் பாடுவதிலும், இசைக்கருவிகளை இசைப்பதிலும் வல்லவர்களாக இருந்துள்ளனர். அவர்கள் மீன்பிடித்து அதன்மூலம் பொருள் பெற்றும் வாழ்க்கையை நடத்தியுமுள்ளனர் என்பதை அகப்பாடல்கள் எடுத்தியம்புகின்றன. பாடும் திறன் இல்லாதவர்கள் மீன்பிடித் தொழில் செய்தவர்களாக இருந்திருக்கலாம். மீன்பிடித் தொழிலில் பாண்மகளும் ஈடுபட்டிருக்கின்றாள். மீன் பிடித்தல், தம் குடும்பத்தார் பிடித்து வந்த மீன்களை விற்பது ஆகிய பணிகளைப் பாணர் பெண்கள் செய்துள்ளனர்.

பாண்மகளின் அண்ணன்மார் இருளில் சென்று, மறுநாள் விடியலில் வாளை மீனைப் பிடித்துக் கொண்டு வந்துள்ளனர்[162]. பாணர்கள் மீன் விற்ற விலையில் கள் குடித்து மயங்கி, மீன்பிடிக்கச் செல்வதை மறந்துள்ளனர்[163]. பாணர்கள் மீன் பிடிப்பதை மட்டும் தொழிலாகச் செய்திருக்கின்றனர் என்பதை இதன்மூலம் அறியமுடிகிறது.

பாணர்கள் பிடித்துவந்த மீன்களைப் பாண்மகள் நெல், முத்து, பிற கலன்களுக்கு ஈடாக விற்றுள்ளாள். நெல்லிற்கு ஈடாக விற்பதே பெரும்பான்மையாக உள்ளது. சங்க காலத்தில் நெல் பிறதிணை மக்களால் பண்டமாற்றாகப் பெறப்பட்டுள்ளது. அவ்வாறே மருதநிலமாக இருந்தாலும், பாணர்கள் நெல் விளைவிப்பவர்களாக இல்லை. இதனால் நெல்லை மீனுக்கு ஈடாகப் பெற்றுள்ளனர். இதனை,

**அம் சில் ஓதி அசைநடைப் பாண்மகள்**
**சில் மீன் சொரிந்து, பல் நெற்பெறூஉம் (ஐங். 49:1-2)**
**வலைவல் பாண்மகன் வால் எயிற்று மடமகள்**
**வராஅல் சொரிந்த வட்டியுள், மனையோள்**
**யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் ஊரா!(மேலது. 48:1-3)**

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

சுவைமிக்க கெடிற்றுமீனுக்கு ஈடாக, மனைக்கிழத்தி, மீன் கொண்டுவந்த பெரிய வட்டி நிறைய அறுவடை செய்த நெல்வயலில் விளைந்த பெரும்பயற்றை நிறைய பெற்றதை,

**முள் எயிற்றுப் பாண்மகள் இன் கெடிறு சொரிந்த**

**அகன் பெரு வட்டி நிறைய, மனையோள்**

**அரிகாற் பெரும் பயறு நிறைக்கும் ஊர! (ஐங். 47:1-3)**

என்னும் பாடல் குறிப்பிட்டுள்ளது. பழைய நெல்லைப் பெறாமல், கழங்கு உறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்[164] பாண்மகளும் உண்டு. மேலும், பாண் மகள் மண்டை[165], வட்டி[166] ஆகிய பாத்திரங்களை மீன்கள் வைப்பதற்காகப் பயன்படுத்தியிருப்பது புலப்படுகின்றது.

**பாணர் உணவு முறை**

பாணர்கள் சோறு, மீன், கள் ஆகிய உணவுகளை உண்டுள்ளனர். இவைகளை நெருப்பில் சுட்டும், நீரில் வேகவைத்தும் உண்டுள்ளனர். சோற்றினை உண்ண ஆம்பல் இலையைப் பயன்படுத்தியுள்ளனர்.

பாண்மகள், மீன் விற்ற பொருளால் கள் குடித்து மயங்கிய பாணனுக்கு, ஆம்பல் இலையில் சுடுகின்ற சோற்றுத்திரளோடு, பிரம்பின் புளிப்பும் இனிப்பும் கலந்த திரட்சியானப் பழத்தினைக் கொண்டு ஆக்கிய புளியங்கறியை இட்டு உண்பித்தாள். இதனை,

-------------------------- **கொழுநர்க்குப் பாட்டி**

**ஆம்பல் அகல்இலை, அமலை வெஞ்சோறு**

**தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து,**

**விடியல் வைகறை இடூஉம் ஊர! (அகம். 196:4-7)**

என்ற பாடலால் அறியமுடிகிறது. அவ்வாறே தூண்டில் கோலினால் வரால் மீனைப் பிடித்த பாண்மகள், வஞ்சி மரத்தின் விறகைக் கொண்டு சுட்டுக் கள் குடித்து மயங்கிக்கிடக்கும் தந்தைக்கு, வாயில் ஊட்டியுள்ளாள்[167]. இந்த இரண்டு பாடல்களிலும் பாணர் இனத்து ஆண்கள் கள் குடிப்பவர்களாகக் காணப்படுகின்றனர்.

## நெய்தல்

மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல் ஆகியன கடல் சார்ந்த வாழ்வாதாரத்தைப் பெற்ற நெய்தல் நில மக்களின் முக்கியமானத் தொழில்களாக இருந்துள்ளன. குறிஞ்சி, முல்லைத் திணைகளைப் போன்று நெய்தல் நிலத்திலும் ஆண், பெண் என இருவரும் உழைப்பைப் பகிர்ந்துகொண்டுள்ளனர். ஆண்களின் உழைப்பு கடலினை மூலாதாரமாகக் கொண்டு பொருட்களைப் பெற்று வந்திருப்பதாக உள்ளது. ஆண்கள் கொண்டு வந்தவற்றை விற்பனை செய்தல், பதப்படுத்துதல் முதலான பணிகளைப் பெண்கள் செய்துள்ளனர். குறிஞ்சி நிலப் பெண்களைப் போன்று முல்லை, நெய்தல் நிலப் பெண்களுக்கு நேரடியாக உற்பத்தியில் பங்குகொள்ளும் வாய்ப்பு இருந்ததற்கானச் சான்றுகள் காணப்படவில்லை. எனினும் முல்லை நில பெண்ணுக்கு ஒருவகையான உற்பத்தி முறையும் (தயிர், மோர், நெய் - தயாரித்தல்), நெய்தல் நிலப் பெண்களுக்கு மற்றொரு வகையான உற்பத்தி முறையும் (மீன் உணங்க வைத்தல் முதலானவை) காணப்படுகின்றன.

## பரதவர்

நெய்தல் நில ஆண்கள் பரதவர், நுளையர் போன்ற பெயர்களில் அழைக்கப்பட்டுள்ளனர். தந்தை, தமையன் ஆகிய உறவுமுறைகளில் சுட்டப்பட்டுள்ள பரதவர்களின், மீன் பிடிக்கச் சென்ற தோற்றம், மீன் பிடித்தற்குரிய கருவிகள், பிடித்த மீன் வகைகள், மீன் விற்பனை, மீன் வேட்டையால் அடைந்த மகிழ்ச்சி முதலானவைகளைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

## மீன் பிடித்தல்

பரதவர்கள் கடலில் சென்று மீன்பிடிக்கும் செயல் 'வேட்டம்' என்றே அழைக்கப்பட்டுள்ளது. குறிஞ்சி, பாலை ஆகிய திணை மக்கள் தங்களுடைய உணவுத் தேவைக்காக வேட்டையாடச் சென்றுள்ளனர். பரதவர்கள் தங்களுடைய உணவுத் தேவையோடு பொருளாதார மேம்பாட்டிற்காகவும் மீன் வேட்டைக்குச் சென்றுள்ளனர். மீன்பிடிக்கத் தந்தை, தமையன் சென்றுள்ளனர். பரதவச் சிறார்களும் மீன்பிடிக்கச் சென்றுள்ளனர். பரதவ முதியவர்கள், குடியிருப்பில் இருந்துகொண்டே மீன்பிடி வலைகளைப் பழுதுபார்த்து சரிசெய்யும் பணிகளைச் செய்துள்ளனர். பரதவர்கள் தம் தொழிலன்றிப் பிறதொழில் தெரியாதவர்கள்[168] என்பதிலிருந்து அவர்களுடைய கடல்சார்ந்த வாழ்க்கையை அறிந்துகொள்ளமுடிகிறது.

**மீன் பிடிக்கச் செல்லும் தோற்றம்**

மீன் இனத்தை வேட்டையாடச் செல்லும் பரதவர்கள், உப்பங்கழிகளில் மலர்ந்திருக்கும் கொழுவிய இதழ்களையுடைய நீலப் பூக்களைப் புலிநகக் கொன்றைப் பூக்களுடன் சூடிச் சென்றுள்ளனர். இதனை,

**இருங்கழி மலர்ந்த வள்இதழ் நீலம்,**
**புலாஅல் மறுகின் சிறுகுடிப் பாக்கத்து**
**இனமீன் வேட்டுவர்** **(அகம். 270:1-3)**

என்ற பாடலால் அறியலாம்.

**மீன்பிடி கருவிகள்**

மீன்பிடிக்கப் பல கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. கடலில் சென்று மீன் பிடிக்க அடிப்படைத் தேவையாக இருந்தது படகு. பரதவர்கள் பயன்படுத்திய படகுகள் திமில் என்று அழைக்கப்பட்டுள்ளன. அவர்களுடைய படகுகள் வளைந்த படகுகள் என்றும் கூறப்பட்டுள்ளன. கொடுந்திமிற்[169], திண்திமில்[170] என்ற பெயர்களில் திமில்கள் சுட்டப்பட்டுள்ளன.

பரதவர்கள் பிடித்த மீன் வகைகளில் சுறா மீன் வேட்டை குறித்துப் பல பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. அச்சுறாவினைப் பிடிக்க வலை, தூண்டில், உளி முதலிய கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். பரதவர்கள் பிடித்த பிற மீன் வகைகள் பற்றிய பதிவுகள் குறைவாகவே காணப்படுகின்றன. சுறா என்னும் கொடிய மீனோடு வேட்டையாடிய பதிவுகள் அதிகமாக இடம்பெறக் காரணம், பரதவர்களின் வீரத்தைச் சுட்டுவதாக இருந்திருக்கலாமோ என்று கருதமுடிகிறது.

சுறாவினைப் பிடிக்கத் தூண்டில், வளைந்த படகு பயன்படுத்தியமையை,

------------------------- **வளை நீர்க்**
**கடுஞ் சுறா எறிந்த கொடுந் திமிற் பரதவர்**
**வாங்கு விசைத் தூண்டில்** **(நற். 199:5-7)**

என்னும் பாடல்வரிகள் தெரிவிக்கின்றன.

பரதவர்கள் வலைகளைப் பயன்படுத்தியுள்ளனர். அதனால் நுண்வலை பரதவர்[171] என்றழைக்கப்பட்டுள்ளனர். சுறாவினைப்பிடிக்க வலை பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

-------------------------- **செங்கோல்**

**கொடு முடி அவ் வலை பரியப் போகிய**

**கோட் சுறா குறித்த முன்பொடு**

**வேட்டம் வாயாது அமர் வாரலரே (நற். 215:9-12)**

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகிறது.

சுறா மீனைத் தாக்க உளி எடுத்துச் செல்லப்பட்டுள்ளது. அவ்வுளி, கயிற்றின் முனையில் கட்டப்பட்டிருந்தது. விரைவாகச் செலுத்தக்கூடிய வகையில் கயிறும் கொல்லும் கூரிய முனையும் கொண்ட கருவி பயன்பாட்டில் இருந்துள்ளது. இதனை,

-------------------------- **நோன் புரிக்**

**கயிறு கடை யாத்த கடு நடை எறி உளித்**

**திண் திமில் பரதவர் (நற். 388:2-4)**

என்று நற்றிணையும்,

**கொல் வினைப் பொலிந்த கூர்வாய் எறிஉளி**

**முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்**

**தாங்குஅரு நீர்ச்சுரத்து எறிந்து, வாங்கு விசைக்**

**கொடுந்திமிற் பரதவர் (குறுந். 304:1-4)**

எனக் குறுந்தொகையும் குறிப்பிடுகின்றன.

கூர்மையான உளியால், விசையுடன் எறிந்தமையால், பரதவர்களுடைய மீன்பிடி வலைகள் கொல்லும் தொழிலுடைய சுறா மீன்களால் கிழிக்கப்பட்டுள்ளன. அவ்வலைகள் பரதவர்கள் வீட்டின் முற்றத்தில் தாழ்ந்து வளர்ந்த தாழை மரங்களின்மீது இட்டு வைக்கப்பட்டிருந்ததை,

-------------------------- **திண்திமில்**

**எல்லுத்தொழில் மடுத்த வல்வினைப் பரதவர்**

**கூர்உளிக் கடுவிசை மாட்டலின், பாய்புஉடன்,**

**கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை**

**தண்கடல் அசைவளி எறிதொறும், வினைவிட்டு,**

**முன்றில் தாழைத் தூங்கும் (அகம். 340:18-23)**

என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

சுறா வேட்டையின்போது பரதவர்களுடைய மீன்பிடி வலைகள் சேதமடைந்ததோடு பரதவர்களும் தாக்கப்பட்டுள்ளனர். இதனை,

**வயச்சுறா எறிந்த புண்தணிந்து, எந்தையும்**

**நீல்நிறப் பெருங்கடல் புக்கனன் (குறுந். 269:3-4)**

என்ற பாடல் தெரிவிக்கின்றது. என் தந்தை, வலிமைவாய்ந்த சுறாமீனால் தாக்கப்பட்ட புண் ஆறி, நீலநிறமுடைய கடலில் மீன் வேட்டைக்காகச் சென்றுள்ளார் என்கிறாள் தலைவி. இதிலிருந்து பரதவர்கள் சுரா மீனால் தாக்குண்டிருப்பது தெரிகின்றது.

இரவு நேரங்களில் மீன் பிடிக்கச் சென்ற பரதவர்கள், படகுகளில் விளக்குகளை ஏற்றிச் சென்றுள்ளதை,

**திண் திமில் பரதவர் ஒண் சுடர்க் கொளீஇ,**

**நடு நாள் வேட்டம் போகி, (நற். 388:4-5)**

என்ற வரிகள் உணர்த்துகின்றன. அவ்விளக்குகள் காற்றில் சாய்ந்து எறியும் காட்சி வானத்தில் உள்ள விண்மீன்களைப்போல இருந்ததாக நற்றிணை குறிப்பிட்டுள்ளது[172].

படகுகளில் எறிந்த விளக்குகளை ஊர்களில் உள்ள மக்கள் எண்ணுவதாகக் கீழ்வரும் பாடல் குறிப்பிடுகிறது.

**திண் திமில் விளக்கம் எண்ணும்**

**கண்டல் வேலிக் கழி நல் ஊரே (நற். 372:12-13)**

பரதவர்கள் அனைத்து நாட்களிலும் வேட்டைக்குச் செல்வதில்லை. இவர்கள், சுறா மீன் வேட்டையில் ஏற்பட்ட மகிழ்ச்சியின் காரணமாக வேட்டைக்குச் செல்லாமல் வீட்டில் இருந்துள்ளனர்[173] என்பதால், சிற்சில நாட்கள் வேட்டைக்குச் செல்லாது வீட்டில் தங்கியது புலப்படுகிறது. உப்பங்கழிகளிலும் மீன் பிடிக்கப்பட்டுள்ளன. அங்கு

மீன் பிடிப்போர் மனையில் இருந்து வீட்டிற்குத் தேவையான மீனைப் பிடித்ததாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**-------------------------- மனை இருந்து,**

**இருங் கழி துழவும் பனித் தலைப் பரதவர் (நற். 372:10-11)**

என்னும் வரிகளால் அறியலாம். மேலும், பரதவர்கள் முத்தெடுக்கும் பணி செய்திருப்பதையும் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

**வலை சரிசெய்தல்**

பரதவர்கள் தங்களுக்கு வேண்டிய வலைகளை எவ்வாறு பெற்றனர் என்பது பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை. ஆனால், பழுதடைந்த வலைகளைத் தாங்களே சரிசெய்துள்ளனர். அப்பணி, குழுவாக இணைந்து செய்யப்பட்டுள்ளது. இதனை,

**-------------------------- அல்கல்,**

**இளையரும் முதியரும் கிளையுடன் குழீஇ,**

**கோட் சுறா எறிந்தென, சுருங்கிய நரம்பின்**

**முடி முதிர் பரதவர் (நற். 207:7-9)**

என்ற வரிகள் தெரிவிக்கின்றன.

**பரதவர் உணவுப் பகிர்வு**

பரதவர்கள், வேட்டையில் கிடைத்த பொருட்களைப் பகிர்ந்து கொள்ளும் குறிஞ்சி, பாலை நில மக்களைப்போன்று, தங்களுக்குக் கிடைத்த பொருட்களைப் பகிர்ந்து கொண்டுள்ளனர்.

பரதவர்கள் கரை ஒதுங்கிய சுறா மீனை அறுத்துத் தின்றதோடு பாக்கத்தில் உள்ள அனைவருக்கும் பகுத்துக் கொடுத்துள்ளனர். இதனை,

**பழந் திமில் கொன்ற புது வலைப் பரதவர்**

**மோட்டு மணல் அடைகரைக் கோட்டு மீன் கெண்டி,**

**மணம் கமழ் பாக்கத்துப் பகுக்கும் (அகம். 10:10-12)**

என்ற பாடல் சுட்டுகிறது. இவ்வாறே, வலையில் பிடித்த மீன்களையும் பகிர்ந்து கொண்டுள்ளனர். பரதவர்கள் மீன் வேட்டை நன்றாக வாய்க்கப்பட்டால், புலால்

நாறும் சிறிய குடிகளையுடைய தம் ஊரில் வலையின் பயன்பாட்டைப் பாராட்டி, சிறிய கண்களையுடைய அயிலை மீனை எல்லோருக்கும் பகுத்துக் கொடுத்துள்ளனர். இதனை,

**கொடுந் திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென,**

**இரும் புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்**

**குறுங் கண் அவ் வலைப் பயம் பாராட்டி,**

**கொழுங் கண் அயிலை பகுக்கும் துறைவன் (அகம். 70:1-4)**

என்ற பாடலால் அறியலாம்.

**பரதவர் இருப்பிடம்**

பரதவர்கள் வாழ்ந்தப்பகுதி பாக்கம் என்று அழைக்கப்பட்டுள்ளது. அவர்களுடைய குடியிருப்புகள் சிறுகுடி என்றும் சிற்றூர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இனக்குழு வாழ்க்கையின் எச்சங்களை எடுத்துரைக்கும் குடிசைகளும், அங்குப் பயன்படுத்தப்பட்டப் புழங்கு பொருட்களும், அம்மக்களின் வாழ்வியலும் பற்றி சங்க இலக்கியங்கள் விரிவாகப் பதிவு செய்துள்ளன. நற்றிணை, பரதவர் ஊர் பற்றியும் அவர்களுடைய வேட்டை, அதனால் உருவான மகிழ்ச்சிபற்றியும் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது.

காண்டவாயில் என்னும் ஊரில் பனையோலையோடு முட்களைச் சேர்த்துக் கட்டிய வேலி இருக்கும். அங்குப் பனைமரங்கள் சூழ்ந்திருக்கும் பக்கங்கள் உள்ளன. அவ்வூரில் கடலில் மீன்வேட்டைக்குச் செல்வோருக்கு வேட்டை வாய்க்கப் பொய்க்காமல் மழைபெய்யும். அதனால், வலைவளம் சிறக்கும். அவற்றால் கிடைத்தவற்றைப் பரதவர்கள் பிறநாடுகளுக்குச் சென்று விற்பர். அப்பொருளைக் கொண்டு பனையின் கள்ளை உண்டு மகிழ்ந்திருக்கும் ஆரவாரம் உடையது அவ்வூர்[174].

பரதவர்களுடைய இருப்பிடங்களில் வேலிகள் இருந்தன. அவ்வேலிகள் செயற்கையாக ஏற்படுத்தப்பட்டதாகவும், இயல்பாக வளர்ந்த தாழை முதலிய மரங்களாலும் சூழப்பட்டிருந்தது. இதனை,

**ஒலி காவோலை முள் மிடை வேலி (நற். 38:8)**

**கண்டல் வேலிக் கழி சூழ் படப்பை (மேலது. 207:1)**

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

பரதவர்களின் குடியிருப்பு குறுகிய கூரையையுடையதாக இருந்துள்ளது. அக்குடிசை குறியிறைக் குரம்பை[175] என்று அழைக்கப்பட்டுள்ளது. அதன் கூரைகள் முள்ளிச் செடிகளால் வேயப்பட்டதாகவும், தாழையின் தூறுகளால் வேயப்பட்டும் காய்ந்த புல்லால் வேயப்பட்டும் இருந்துள்ளன. அவற்றை,

**முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பை (நற். 207:2)**

**காயல் வேய்ந்த தேயா நல்இல் (அகம். 370:5)**

**புல்வேய் குரம்பை (மேலது, 200:2)**

என்னும் பாடல் வரிகள் தெரிவிக்கின்றன. அத்தகைய குடிசையின் முற்றம் பற்றி நற்றிணைப் பாடல்,

**அலவன் ஆடிய புலவு மணல் முன்றிற் (நற். 239:4)**

என்றும், மணலையுடைய முற்றத்தில் நண்டுகள் வந்து விளையாடியதாகவும் குறிப்பிட்டுள்ளது. பரதவர்கள் வாழ்ந்த பகுதி புலால் நாற்றம் வீசியுள்ளது. புலால் நாற்றம் வீசும் முற்றமும், தெருக்களும், ஊர்களும் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன. புலால் நாறும் தம்முடைய ஊர், பிறருக்கு எத்தகைய விருப்பத்தினை அளிக்கும் என்று ஒரு தலைவி குறிப்பிடுகிறாள். இதனை,

**நிலாவின் இலங்கு மணல்மலி மறுகில்,**
**புலால்அம் சேரி புல்வேய் குரம்பை,**
**ஊர்என உணராச் சிறுமையொடு, நீர்உடுத்து,**
**இன்னா உறையுட்டு ஆயினும், இன்பம்**
**ஒரு நாள் உறைந்திசி னோர்க்கும், வழிநாள்**
**தம்பதி மறக்கும் பண்பின் எம்பதி (அகம். 200:1-6)**

எனும் பாடல், மணல் மிகுந்த தெருக்களில் புல்லால் வேயப்பட்ட குடிசைகளையுடைய புலால் நாறும் சேரி ஆகும். காண்போர் இது ஊர் என்று நினைப்பதற்கு இல்லாத சிறுமையுடையது. நீரால் சூழப்பட்டுத் துன்பத்தைத்தருவது. இருப்பினும் அவ்வூரில் தங்கியோர், மறுநாள் தம் ஊரினை மறக்கச் செய்யும் தன்மையினைப் பெற்றது என்று குறிப்பிட்டுள்ளது.

பரதவர்களுடைய வீடுகள்தோறும் மாலை நேரங்களில் விளக்குகள் ஏற்றப்பட்டுள்ளன. அவர்கள் பிறமக்களைப் போல விலையுயர்ந்த விளக்குகளைப்

பயன்படுத்தாமல், கடலில் கிடைக்கும் கிளிஞ்சல்களில் விளக்கேற்றியுள்ளனர். அவ்விளக்கில் ஊற்ற மீனிலிருந்து எடுக்கப்பட்ட எண்ணெய்யினையே பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**மீன் நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய**
**சிறு தீ விளக்கில் துஞ்சும், நறு மலர் (நற். 175:3-4)**

என்றும்,

**புலம்பு வந்து இறுத்த புன்கண் மாலை,**
**இலங்கு வளை மகளிர் வியல் நகர் அயர,**
**மீன் நிணம் தொகுத்த ஊன் நெய் ஒண் சுடர்**
**(நற். 215:3-5)**

என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

### பரதவப் பெண்கள்

நெய்தல் திணையில் பெண்கள் குறித்தப் பதிவுகள், கடற்கரைச் சோலைகளில் விளையாடுவதாகவும், அத்திணைக்குரிய உரிப்பொருளை எடுத்துரைப்பதாகவும் உள்ளன. அத்திணையில், ஆண்களுடைய உழைப்பினைப் போன்று பெண்களுடைய உழைப்பையும் காணமுடிகிறது. ஆண்கள் கொண்டுவந்து சேர்த்த மீன்களை விற்றல், மீன் உணங்கச் செய்தல், உப்புவிற்றல் ஆகிய பணிகளைப் பரதவப் பெண்கள் செய்துள்ளனர்.

### மீன் விற்றல்

கடலில் மீன்பிடிக்கும் படகினைக் கொண்டு தமையன்மார்கள் வலை விரித்துப் பிடித்துவந்த மீன்களைத் தழையாடை உடுத்திய தங்கைமார், திருவிழா நடைபெறும் தெருக்களில் விற்று வருவர்.

**ஓங்குதிரைப் பரப்பின் வாங்குவிசைக் கொளீஇ,**
**திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்,**
**தழைஅணி அல்குல் செல்வத் தங்கையர்,**
**விழவுஅயர் மறுகின் விலைஎனப் பகரும்,**
**கானல்அம் சிறுகுடி (அகம். 320:1-5)**

இப்பாடல், மீன் விற்கும்போதும், திருவிழா நடைபெறும்போதும் தழையாடை உடுத்திய மரபை எடுத்துரைக்கின்றது. மீனுக்கு நெல்லைப் பண்டமாற்றாகப் பெறுவது நெய்தல் நில மக்களின் விற்பனை முறையாக இருந்துள்ளது. இதனை,

**பசுமீன் நொடுத்த வெண்நெல் மாஅத்**

**தயிர்மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே (அகம். 340:14-15)**

என்னும் பாடல் விளக்குகிறது.

நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பிற்கு விலையாக நெல் பெறப்பட்டுள்ளது. இதனை குறுந்தொகைப் பாடல்,

**வயச்சுறா எறிந்த புண்தணிந்து, எந்தையும்**

**நீல்நிறப் பெருங்கடல் புக்கனன்; யாயும்**

**உப்பை மாறி வெண்ணெல் தரீஇய**

**உப்புவிளை கழனிச் சென்றனள் (குறுந். 269:3-6)**

என்று தலைவியின் தாய் உப்பு விற்கச் சென்றதாகக் குறிப்பிடுகிறது. அவ்வாறே, உப்பு விற்கும் பணியை உமணர்களின் மகளிர் செய்துள்ளனர்.

**மீன் உணங்க வைத்தல்**

மீன் வேட்டையில் கிடைத்த உபரியை, பரதவர்கள் பதப்படுத்தி சேமித்து வைத்துள்ளனர். மீன்களைப் பதப்படுத்துகையில் அவற்றைப் பாதுகாப்பது பெண்களின் வேலையாக இருந்துள்ளது. இத்தகையச் சூழல்களில் பெண்கள் மேற்கொண்ட பல்வேறு விளையாட்டுகள் பற்றியும் பாடப்பட்டுள்ளது.

மீன் வேட்டையில்வல்ல பரதவர்கள் விடியற்காலையில் கடலிற்சென்று வலைகொண்டு மீன்களைப் பிடித்துள்ளனர். பிடித்துவந்த மீன்களைப் பறிகொண்டு வாரி எடுத்து, நுண்ணிய மணற் பரப்பில் காயவைத்துள்ளனர். அவற்றின்மீது பறவைகள் வந்து படியும் கடற்கரை சோலையைப் பற்றி,

**நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்**

**நுணங்குமணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்,**

**பறிகொள் கொள்ளையர், மறுக உக்க**

**மீன்ஆர் குருகின் கானல்அம் பெருந்துறை (அகம். 300:1-4)**

என்னும் பாடல், கடலில் இருந்து மீன் பிடித்துவந்த பரதவர்கள், மீன்களைக் காய வைக்கும் பணியைச் செய்திருப்பதை உணர்த்துகின்றது. அவற்றின்மீது வந்து படியும் பறவைகளை விரட்டும் பணியைப் பெண்கள் செய்துள்ளனர் என்பதையும் இதன்மூலம் அறியமுடிகிறது.

எம் தந்தை, கடற்பரப்பில் துழாவிப் பிடித்துக்கொண்டு வந்த பல்வகை மீன்களின் வற்றலில் வந்து படியும் பறவைகளை, யாம் ஓட்டிக் கொண்டிருப்போம் என்கிறாள் தலைவி.

-------------------------- எந்தை

**புணர் திரைப் பரப்பகம் துழைஇத் தந்த**

**பல் மீன் உணங்கற் படுபுள் ஓப்புதும் (அகம். 80:4-6)**

இப்பாடலுக்கு அரண்செய்வதாக அகநானூற்று 20-ஆம் பாடல் அமைந்துள்ளது. தந்தை பிடித்துவந்த மீனை உணங்கச் செய்யும்போது விழுகின்ற பறவைகளைக் கடற்பரப்பில் புன்னைமர நிழலில்தங்கி விரட்டி ஓட்டினோம்; சிவந்த நண்டின் ஆழமான வளைகளை அகழ்ந்து எடுத்தோம்; உப்பங்கழியிலுள்ள விழுதுகளாலான கயிற்றால் ஞாழல் மரத்தினது உயர்ந்த கிளையிற் கட்டிய ஊசலில் ஆடினோம்; மணலில் குரவைக் கூத்தாடினோம்; இவையெல்லாம் வெறுத்தால் கடலில் தோழியருடன் நீராடினோம்; தழையாடை உடுத்திக் கொண்டோம்; கடற்கரைச் சோலையில் தங்கினோம் என்று தலைவி, மீன் உணங்கச் சென்ற இடத்தில் நிகழ்த்திய விளையாட்டுகளை இப்பாடல் பதிவு செய்துள்ளது.

## நெய்தல் மக்கள் வழிபாடு

நீர்த் துறையில் வழிபாடு செய்வது தொன்மை மரபாகும். நீர்நிலைகளில் தெய்வம் உறைவதாக மக்கள் நம்பியுள்ளனர். குறிஞ்சி நில மக்கள் மலைகளில் தெய்வம் இருப்பதாக நம்பியுள்ளனர். அதற்காக வழிபாடுசெய்து பலி கொடுத்துள்ளனர். அவ்வாறே தங்களுடைய நிலப்பரப்பின் மூலாதாரமாக விளங்கும் நீர் நிலைகளில் தெய்வ வழிபாடு செய்வது நெய்தல் நில மக்களின் நம்பிக்கையாக இருந்துள்ளது.

-------------------------- அந்தில்

**அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி,**

யாயும் ஆயமோடு அயரும் (அகம். 240:7-9)

இப்பாடல், நீருண்ணும் குளிர்ச்சி பொருந்திய துறையில் உள்ள தெய்வத்தைத் தன் தோழியருடன் தனது தாய் தொழுது வழிபட்டதைத் தலைவி குறிப்பிட்டுள்ளாள் என்பதைக் கூறுவதாக உள்ளது. சங்க இலக்கியத்தில் புகழப்பட்டுள்ள தொண்டி, தெய்வங்கள் தங்கும் தொண்டி[176] என்று கூறப்பட்டுள்ளது.

நீர் உண்ணும் துறையிலுள்ள தெய்வம் பெண்களைத் தீண்டி வருத்தியுள்ளது. இதனை,

**உண்துறை அணங்கு இவள் உறை நோய் ஆயின்**

**(ஐங். 28:1)**

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

## பத்துப்பாட்டும் பரதவர்களும்

பத்துப்பாட்டில் சிறுபாணாற்றுப்படை, பட்டினப்பாலை, மதுரைக்காஞ்சி ஆகிய இலக்கியங்கள் நெய்தல் நில மக்களின் வாழ்வியல் பற்றிப் பாடியுள்ளன. பெரும்பாணாற்றுப்படை ஐந்திணைகளின் வழி அமைப்பு, அங்கு வாழும் மக்களின் விருந்து ஆகியவற்றை எடுத்துரைத்துள்ளது.

### சிறுபாணாற்றுப்படை

எயிற்பட்டினம், மலர்கள் நிறைந்த கடற்கரையையும் மணற்பரப்பையும் உடையது. உப்பங்கழிகள் சூழ்ந்த ஊர்களையும், குளிர்ந்த பொய்கைகளையும் கொண்டது. அப்பட்டினத்தில் கடல் அலைகள் கரை ஒதுக்கிய அகில்மர விறகினால் தீயினை மூட்டி, நுளைமகள் காய்ச்சி அரித்த தேறலைப் பரதவர் உண்ணக் கொடுப்பர். நீங்கள் கிடங்கிற் கோமானைப்பாடி, குழலோசையின் தாளத்திற்கு ஏற்ப ஆடிய நும் விறலியரோடு உலர்ந்த குழல்மீன் சூட்டையும் பெற்று உண்டு மகிழுங்கள் எனப் பாணர்கள் ஆற்றுப்படுத்தப்பட்டுள்ளனர்[177]. இந்த அமைப்பில் பரதவர்களுடைய பதிவை இந்நூல் எடுத்தியம்பியுள்ளது.

**பட்டினப்பாலை**

பரதவர்களின் குடில்கள், நீண்ட தூண்டிலின் காம்புகளைக் குறுகிய கூரைகளின் நடுவே கொண்டு விளங்கும். அவர்களுடைய இல்லங்களின் முன்னர் உள்ள மணற்பரப்பில், வலைகள் உலர்த்தப்பட்டிருந்ததை,

**நெடுந்தூண்டிலில் காழ் சேர்த்திய**
**குறுங் கூரைக் குடிநாப்பண்;**
**நிலவு அடைந்த இருள் போல**
**வலை உணங்கும் மணல் முன்றில் (பட்டினப். 80-83)**

என்ற பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

பட்டினப்பாலை, பரதவர், பட்டினத்துமக்கள் ஆகியோரிடையே இருந்த பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை எடுத்துக்காட்டியுள்ளது. நீண்ட தூண்டில்களையுடைய மாடங்களில் உறைபவர், இரவில் பாடல்களைக் கேட்பதோடு, நாடகங்களை நோக்கினர். நிலவொளியில் மகிழ்ந்தனர். தாம் உடுத்திய பட்டாடைகளை நீக்கிப் புணர்ச்சிக் காலத்திற்கு என மெல்லிய வெண்ணிற துகிலை உடுத்தியிருந்தனர். கள் அருந்துவதை விட்டு, காமபானத்தை உண்டனர். மதுவின் மயக்கத்தில் சூடிய கண்ணியை, மகளிர் கோதை தன் கூந்தலில் சூடினர். மகளிர் கோதையை ஆடவர் கண்ணி என நினைத்துத் தலையில் சூடினர். இத்தகைய மக்கள் கடையாமப் பொழுதில் உறங்கினர்.

அவர்களின் உயர்ந்த மாடங்களில் ஏற்றப்பட்ட விளக்குகள் விடியற்காலத்திலும் அவியாமல் எரிந்தன.

இரவில் விளக்குகளோடு மீன்பிடிக்கச் சென்ற பரதவர்கள் விளக்குகளைத் தூண்ட ஆளில்லாமல் அவிந்துவிட்ட விளக்குகளோடு திரும்பினர். அவர்கள் உயர்ந்த மாடங்களில் எரியும் விளக்குகளை எண்ணிப்பார்த்தவராய், பூ மணமுடைய மணல் மேடுகளில் படுத்து உறங்கினர்[178].

இவ்வாறு ஒரே நிலத்திற்குள்ளே நிலவுகின்ற ஏற்றத்தாழ்வுகள், பிறதிணை மக்களுடைய வாழ்க்கையிலும் காணக்கிடக்கின்றன. கலித்தொகை ஆநிரைகளை மையப்படுத்திய மக்கட்பிரிவை சுட்டிக்காட்டியுள்ளது. இங்குப் பொருளாதாரம் முக்கியப்படுத்தப்படவில்லை. குறிஞ்சித் திணை, வேட்டுவர், குறவர் ஆகியோரிடையே

தொழில் பிரிவை முன்னிலைப் படுத்தியுள்ளது. ஆனால், நெய்தல் திணை மட்டும் பொருளாதாரத்தைச் சுட்டிக்காட்டுவதாக அமைந்துள்ளது. இதற்கு மற்றொரு சான்றாக அமைவது நற்றிணை 45-ஆம் பாடல். இது, தலைவன் தலைவி இருவருக்குமிடையே நிலவும் பொருளாதார முரண்பாடுகளைக் குறிப்பிட்டுள்ளது.

**மதுரைக்காஞ்சி**

மதுரைக்காஞ்சி கொற்கைப்பட்டினத்துச் சிற்றூர்களைப் பற்றிக் கூறுமிடத்து, நெய்தல் மக்கள் தங்கிய பகுதியும் அவர்களுடைய கள்ளுணவும் இழிவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்**
**இலங்கு வளை, இருஞ்சேரி,**
**கட் கொண்டிக் குடிப்பாக்கத்து**
**நற் கொற்கையோர் (மதுரைக்காஞ்சி. 135-138)**

என்ற பாடல்வரிகள், முதிர்ந்த முத்துக்களையும், விளங்கும் சங்கினையும், மூழ்கி எடுப்பவர் உறையும் சேரிகளையும், கள்ளாகிய உணவை உண்ணும் இழிந்த குடிகள் தங்கியுள்ள சிற்றூர்கள் கொற்கை என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தகைய பதிவை அரசுருவாக்கத்தின் விளைவால் நிகழ்ந்தச் சமூக மாற்றமாகக் கருத வேண்டியிருக்கின்றது.

மதுரைக்காஞ்சி கூறிச்செல்லும் நெய்தல், கடல் வணிகத்தால் முன்னேறிய ஒரு வணிக மையமாகக் காட்டப்பட்டுள்ளது. முத்து, வளை ஆகியவற்றை விற்கும் வணிகர்களின் பல்வேறு பண்டங்களும், உப்பங்கழிகளில் விளைந்த உப்பு, கரும்புக் கட்டுகளோடு சேர்த்துப் பொரித்த புளி, திமிலர் அறுத்த மீன் துண்டுகள் ஆகியவற்றை மரக்கலங்களில் ஏற்றிக் கடலில் செலுத்தினர் மீகாமர். அவ்விடத்தில் யவனம் முதலிய நாடுகளிலிருந்து இந்நாட்டு பேரணிகலன்களைத் தங்கள் நாடுகளுக்குச் செலுத்துவதற்காகப் பலரும் கூடியிருந்தனர். அவர்கள் தங்களுடன் குதிரைகளோடு இத்தகைய பொருட்களும் நிறைந்து, செல்வம் கொழுக்கும் இடமாக நெய்தல் நிலப் பகுதி விளங்கியுள்ளது[179].

சங்க இலக்கியத்துள், பிற இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள பரதவர்களில் இருந்து இவ்விலக்கியம் அவர்களுடைய மரபான வாழ்க்கையைத் தொடரவில்லை. மாறாக, அங்கு நடைபெற்ற பல்வேறு வணிகங்களை மட்டுமே அத்திணைக்குரிய

வாழ்வியலாகப் பதிவு செய்துள்ளார் மாங்குடி மருதனார். பரதர், திமிலர் என வெவ்வேறு சொற்களால் குறிப்பிடப்பட்டவர்கள் வேறானவர்களைப் போலத் தெரிகிறது. பரதர் என்றால் செட்டி, வணிகர் என்று பொருள் கொள்ளபட்டது[180] என்றும் பரதவர்களிலிருந்து பரதர் உருவாகியிருக்கலாமோ என்றும் ஐயுறும் ராஜ் கௌதமன், சங்க காலத்தின் இறுதிக் காலகட்டத்தில் பரதர் என்ற வணிகர் உருவாகியிருப்பதை உறுதிப்படுத்தியுள்ளார்.

**பரதவர் வழிபாடும் சடங்கும்**

சிவந்த தலைமயிரினையுடைய பரதவர்கள், பௌர்ணமி நாளன்று கடலில் மீன் பிடிக்கச் செல்வதில்லை. அந்நாளில் தொழிலில் தோன்றும் ஊக்கம் தவிர்த்துக் காணப்படுவர். அவர்கள், பசுமையானத் தழையாடை உடுத்திய, கரிய தம் மனைவியருடன் கூடியிருந்தனர்[181]. பௌர்ணமிநாளன்று கடற்கரையில் பரதவர்கள் குழுவாக இணைந்து வழிபாடுசெய்தனர். பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளில் ஈடுபட்டனர். இதனை,

**வீழ்த் தாழை தாள் தாழ்ந்த**
**வெண் கூதாளத்துத் தண்பூங் கோதையர்,**
**சினைச் சுறவின் கோடு நட்டு,**
**மனைச் சேர்த்திய வல் அணங்கினான்,**
**மடல் தாழை மலர் மலைந்தும்;**
**புன்தலை இரும் பரதவர் (பட்டினப். 84-90)**

என்னும் பாடல்வரிகளால் அறியமுடிகிறது. இப்பாடல்வரிகள், பரதவர் சினைகளையுடைய சுறாவின் கொம்பை நட்டு, அதில் வலிய தெய்வத்தை நிறுத்தி வழிபடுவர். அவ்வழிபாட்டிற்காக விழுதுகளையுடைய தாழையின் அடிப்பகுதியில் வளர்ந்துள்ள, வெண் கூதாளியின் மலர்களாலான மாலையை அணிந்தனர். மடலையுடைய தாழையின் மலரைச் சூடினர். பனைமரத்தினின்றும் எடுக்கப்பட்ட கள்ளினை உண்டனர். நெல்லால் ஆக்கப்பட்டக் கள்ளினையும் உண்டு விளையாடினர் என்று குறிப்பிடுகிறது.

மீன்வளம் வேண்டி பரதவர்கள் செய்த இச்சடங்கில் சினை செழிப்பின் சின்னமாகும். மீன் வளத்தை நாடியவர், கடல் செழிப்பின் சின்னமாக, சினைச் சுறாமீனின் கொம்பை வழிப்பட்டனர்[182]. பரதவர்களின் இச்சடங்கை மந்திரச் சடங்கு

என்கிறார் கா. சுப்பிரமணியன். மேலும், இத்தகைய குழு செயல்பாட்டில் கள்ளுண்டு ஆரவாரித்து ஆடுவது இனக்குழுக்களின் பண்பாடாகவும் விளங்குகின்றது.

பௌர்ணமியன்று கடற்கரையில் மகிழ்ந்திருந்த பரதவர்கள் அவர்களுடைய தீவினை நீங்கும் பொருட்டுக் காவிரி, கடலொடு கலக்கும் இடத்தில் நீராடினர்[183]. கடல்நீர் தீமையை அகற்றி நன்மையை ஏற்படுத்தும் என்ற நம்பிக்கை அம்மக்களிடையே நிலவியிருந்ததை பட்டினப்பாலை எடுத்துரைத்துள்ளது.

## பரதவர் பொழுதுபோக்கு

பரதவர்கள் கரையில் நண்டுகளைப் பிடித்தும், அலைகளில் துளைத்தும் விளையாடினர். மணலில் வண்டல் பாவை செய்தும், பல பொருட்களை நுகர்ந்தும் பகற்பொழுதைக் கழித்தனர். இதனை,

**அலவன் ஆட்டியும், உரவுத்திரை உழக்கியும்,**
**பாவை சூழ்ந்தும்; பல்பொறி மருண்டும்,**
**அகலாக் காதலொடு பகல் விளையாடி (பட்டினப். 101-103)**

என்னும் பாடல் மூலம் அறியமுடிகிறது.

## வலைஞர் குடியிருப்பு

பெரும்பாணாற்றுப்படை ஐந்திணைகளின் வழி அமைப்பு, அங்கு வாழும் மக்களின் விருந்து ஆகியவற்றை எடுத்துரைத்துள்ளது. மீன்பிடித்தொழில் செய்யும் வலைஞர் என்ற மக்களின் வாழ்வியல் பற்றியும் குறிப்பிட்டுள்ளது.

வேழக்கோலை நிரல்பட வைத்து, இடையிடையே வெள்ளிய மரக் கொம்புகளைக் கலந்து, தாழை நாரினால் கட்டித் தருப்பைப் புல்லாலே வேயப்பட்ட குறிய இறப்பையுடைய குடில், மீனை வாரி எடுக்கும் பறிகள் வைக்கப்பட்டுள்ள அக்குடிலின் முற்றத்தில், வளைந்த காலையுடைய புன்னையின் கொம்பை வெட்டிச் செய்த பசுங்காய்கள் தொங்குகின்ற பந்தர் அமைக்கப்பட்டுள்ளது. அப்பந்தரின் கண் இளைஞரும் முதியவரும் சுற்றத்துடன் கூடிமகிழ்ந்திருந்த அவர்களுடைய குளக்கரைக்குக் காவல் காக்கப்பட்டுள்ளது[184].

வலைஞர்கள் கயலும், இறால் மீனும் பிறழுகின்ற கரிய பெரிய குளத்திலே தம் மக்களுடன் உலாவி மீன்களைப் பிடிப்பர். அவர்கள், கோடைக்காலம் நீண்டதாயினும்

வற்றாத நீர்நிலையையுடைய, குளக்கரையைக் காவல்காக்கும் பணியையும் செய்திருக்கின்றனர். இதனை,

> **செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழும்**
> **மையிருங் குட்டத்து மகவொடு வழங்கி,**
> **கோடை நீடினும் குறைபடல் அறியாத்**
> **தோள்தாழ் குளத்த கோடு காத்திருக்கும்**
>
> **(பெரும்பாண். 270-273)**

என்னும் பாடல்வரிகள் தெரிவிக்கின்றன.

## வலைஞர் உணவு

குற்றாத கொழியல் அரிசியைக் கொண்டு, நல்ல களியாகத் துழாவி சமைத்த கூழை, மலர்ந்த வாயையுடைய தட்டுப்பிழாவில் இட்டு உலரும்படி ஆற்றி, நெல்முளையை இடித்து அதனை அதில் கலந்தனர். அவற்றை இனிமைபெற இரண்டு நாட்கள் கழித்து வலிய வாயினையுடைய சாடியில் ஊற்றி, வெந்நீரில் வேகவைத்து நெய்யரியாலே வடிகட்டி, விரலாலே அலைத்துப் பிழியப்பட்ட நறிய கள்ளைப் பச்சை மீன் சூட்டோடு தருவர்[185] என்று குறிப்பிடப்படுவதிலிருந்து வலைஞர்களுடைய உணவுமுறை குறித்தறியமுடிகிறது.

## உமணர்

சங்க இலக்கியத்தில் உப்பு வணிகத்தை முழுநேர தொழிலாகக்கொண்ட குழுக்களாக உமணர்கள் காணப்படுகின்றனர். நெய்தல் நிலத்தில் உற்பத்தி செய்யப்பட்ட உப்பு, வண்டிகளில் ஏற்றப்பட்டு ஊர் ஊராகக் கொண்டு செல்லப்பட்டு விற்கப்பட்டுள்ளது. உப்பு வணிகர்கள் குறித்த பதிவுகள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய இரண்டிலும் இடம்பெற்றுள்ளன.

அகப்பாடல்களைப் பொருத்தவரை பாலை, நெய்தல் ஆகிய திணைகள் உப்பு வணிகர் வாழ்வியல்பற்றிப் பிற திணைகளைக்காட்டிலும் விரிவாகப் பதிவுசெய்துள்ளன. பாலைத்திணையில், உப்பு வணிகர் எருதுகள் பூட்டிய வண்டிகளில் பயணிக்கும்முறை, எருதுகளின் நிலை, வழிகளில் ஏற்றபட்ட இடையூறுகள், உணவு சமைக்கும்முறை, உப்பு விற்கும்முறை போன்ற பொருண்மைகள் பற்றிப் பாடப்பட்டுள்ளது. நெய்தல்

திணையில் உப்பு உற்பத்தி முறை, உப்பு கொள்முதல், அவர்களுடைய வாழ்வியல் முதலான கூறுகள் இடம்பெற்றுள்ளன.

## உப்பு உற்பத்தி

உப்பு உற்பத்தி செய்யப்பட்டமுறை குறித்துப் பல இடங்களில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அக்குறிப்புக்கள், உவர்நிலத்தில் கடல்நீரினைப் பாத்திகளில் பாய்ச்சி உப்பு விளைவிக்கப்பட்டதாகக் குறிப்பிடுகின்றன. உப்பு உற்பத்திக்கு மழைநீர் இடையூறு செய்வன என்பதை,

**நேர் கண் சிறு தடி நீரின் மாற்றி,**
**வானம் வேண்டா உழவின் என்**
**கானல்அம் சிறு குடி (நற். 254:10-12)**

என்ற பாடல் வழி அறியலாம்.

## உப்பு கொள்முதல்

உப்பு விளைவிக்கும் தொழில் செய்தவர்கள் பரதவர்கள். அவர்கள் விளைவித்த உப்பு, உமணர்கள் வரும்வரை கடற்கரைச் சோலைகளில் குவித்து வைக்கப்பட்டுக் காவல் காக்கப்பட்டுள்ளது. இதனை,

**உவர் விளை உப்பின் உழாஅ உழவர்**
**ஒழுகை உமணர் வரு பதம் நோக்கி,**
**கானல் இட்ட காவற் குப்பை (நற். 331:1-3)**

என்ற பாடலால் அறியமுடிகிறது. பெரிய கடலிடத்து மீன்பிடிக்கும் தொழிலையுடைய சிறிய குடிசையில்வாழும் பரதவ மக்கள், பெரிய உப்பங்கழியாகிய வயலிலே வெண்ணிறக் கல் உப்பினை உழாமலேயே விளைவித்துள்ளனர். தாற்றுக் கோலையுடைய உப்பு வணிகர்கள் அவ்வுப்பினைப் பெற்று, அதன் விலையைக் கூறிக்கொண்டு வெம்மையானக் குன்றங்களைக் கடந்துச் சென்றுள்ளதை,

**பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்**
**இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த**
**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி,**
**என்றூழ் விடர குன்றம் போகும்**

**கதழ்கோல் உமணர்** **(அகம். 140:1-5)**

என்ற பாடல் தெரிவிக்கின்றது. இப்பாடல், மீன்பிடித் தொழில் செய்யும் பரதவர்கள் விளைவித்த உப்பு வேளாண்மை பற்றிக் குறிப்பிட்டுள்ளது. மேலும், பரதவர்களிடம் உமணர்கள் உப்பினைப்பெற்று விற்பனை செய்தததற்கானச் சான்றும் இடம்பெற்றுள்ளது. உமணர்கள் குன்றங்களைக்கடந்து உப்பு விற்கச் சென்றிருப்பதிலிருந்து அவர்களுடைய பயணங்கள் குறித்தும் அறிந்துகொள்ள முடிகின்றது.

நெய்தல் நில பரதவர்களுக்கு உமணர்கள் நெல்லை பண்டமாற்றாகக் கொடுத்து உப்பினைப் பெற்றுச் சென்றனர் என்பதை,

**தம் நாட்டு விளைந்த வெண்நெல் தந்து,**

**பிற நாட்டு உப்பின் கொள்ளை சாற்றி** **(நற். 183:1-2)**

இப்பாடல் குறிப்பிடுகிறது. தன்னுடைய நாட்டில் விளைந்த நெல்லினைப் பரதவர்கள் உப்புக்கு நேராகக் கொடுத்துள்ளனர். இதிலிருந்து உமணர்கள் மருத நிலத்திற்கும் உரியவர்களாக இருந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**நிலையா வாழ்க்கை**

உமணர்கள் ஊர் ஊராகச் சென்று உப்பு விற்றதினால் அவர்களுடைய வாழ்க்கை நிலையா வாழ்க்கையாகவும், தம்முடைய சுற்றத்தோடு சேர்ந்து புலம்பெயர்ந்துச் செல்லும் வாழ்க்கை முறையாகவும் சுட்டப்பட்டுள்ளது.

உவர்நிலத்தில் விளைந்த குன்றுபோன்ற உப்பின் குவியலை மலைநாடுகளுக்குக் கொண்டு சென்று விற்ற உமணர்கள், உப்பிற்கு மாற்றாக என்ன பொருளைப் பெற்றனர் என்ற குறிப்பு இடம்பெறவில்லை. ஆனால்,

**உவர் விளை உப்பின் குன்று போல் குப்பை**

**மலை உய்த்துப் பகரும், நிலையா வாழ்க்கை,**

**கணம் கொள் உமணர்** **(நற். 138:1-3)**

என்று அவர்களுடைய வாழ்க்கை மட்டும் நிலையில்லாத வாழ்க்கையாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

உமணர்கள் இடம்பெயர்ந்துச் செல்வதை வெறுத்த அவர்களுடைய சுற்றத்தாரும் உடன் பெயர்ந்துச் சென்றுள்ளதை,

**அவண் உறை முனிந்த ஒக்கலொடு புலம் பெயர்ந்து**

**(நற். 183:4)**

என்ற வரி உறுதி செய்கின்றது.

**உமணர் காட்டுவழிப் பயணம்**

உமணர்கள் உப்பு விற்கச்சென்ற காட்சி ஓர் ஊரே பயணித்த ஆரவாரத்தினை அளித்தது. மேலும், அவர்கள் சென்ற காட்டுவழி நீர் இல்லாதது.

**---------------------- - கல்லென**

**ஊர் எழுந்தன்ன உரு கெழு செலவின்,**

**நீர் இல் அத்தத்து ஆர் இடை, மடுத்த,**

**கொடுங் கோல் உமணர், பகடு தெழி தெள் விளி,**

**(அகம். 17:10-13)**

எனும் பாடல், காட்டு வழியில் தளர்ந்த எருதுகளை விரட்டும் ஓசை பெரிய ஆரவாரத்தினைச் செய்திருப்பதைக் குறிப்பிடுகிறது. உமணர்கள் தங்கிச்சென்ற இடம் ஊரினர் இல்லாது பாழ்பட்ட இடம் போல காட்சியளித்ததை,

**உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின், அகன்தலை,**

**ஊர்பாழ்த்தன்ன ஓமைஅம் பெருங்காடு (குறுந். 124:1-2)**

என்ற பாடல் வரிகளும் வீட்டை விட்டுப் பிரிந்துச் செல்லும் உமணர்களோடே பிறரும் வீட்டை வெறுத்துச் சென்றனர் என்பதைக் குறிப்பிடுகின்றன. அவ்வாறு சென்றது அவ்வூருக்குத் துன்பத்தை அளித்துள்ளது என்பதை,

**நெடு நெறி ஒழுகை நிலவு மணல் நீந்தி,**

**அவண் உறை முனிந்த ஒக்கலொடு புலம் பெயர்ந்து,**

**உமணர் போகலும் இன்னாதாகும்- (நற். 183:3-5)**

என்ற பாடல் வரிகளும் புலப்படுத்துகின்றன.

உமணர்களுடைய இத்தகைய வாழ்க்கைப் பலராலும் விரும்பப்பட்டுள்ளது. உமணர் சென்ற நெடுவழி பயணமுடைய வாழ்க்கைதான் சிறந்தது என்ற கருத்துடைய தலைவன்,

**உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி,**

**அதர்படு பூழிய சேண்புலம் படரும்**

**ததர்கோல் உமணர் பதிபோகு நெடுநெறிக்**

**கணநிரை வாழ்க்கைதான் நன்று கொல்லோ? (அகம். 390:1-4)**

என்று மொழிகின்றான்.

உமணர்கள் உப்பு விற்பனைக்காகப் பயன்படுத்திய வண்டி, வண்டிகளை இழுத்துச்சென்ற எருதுகள், அவற்றை விரட்டும் கோல், இவைகள் வழிகளில் ஏற்படுத்திய ஆரவாரம், இவையாவும் வழிகளில் சந்தித்த இடர்பாடுகள் ஆகியன பற்றிப் பல பாடல்கள் பதிவு செய்துள்ளன.

**வண்டி**

சகடத்தின் ஆரக்கால், அச்சாணி முதலான உதிரி பாகங்கள் வண்டியின் சுமை குறித்துப் பாடப்படும் இடங்களில் சுட்டப்பட்டுள்ளன.

உமணர்கள் வண்டியில் உப்பினை ஏற்றிக்கொண்டு மணற்பரப்பில் செல்வதினால் சகடம் ஒலியெழுப்பிக் கொண்டு சென்றது என்பதை,

**------------------ - உமணர்**

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி**

**கண நிரை கிளர்க்கும் நெடு நெறிச் சகடம்**

**மணல் மடுத்து உரறும் ஓசை (நற். 4:7-10)**

என்னும்வரிகள் தெரிவிக்கின்றன. குறிஞ்சி நிலத்தில், காட்டெரிப்பு வேளாண்மைக்காக எரிக்கப்பட்ட புகை, உப்பு வண்டியில் பூட்டப்பட்ட எருதுகளுக்குத் துன்பம் அளிக்கும் வகையில்[186] மலை நாடுகளுக்குச் சென்று உப்பு விற்ற உமணர்களின், ஆரக்கால்கள் அமைந்த வண்டி, பள்ளத்தில் தங்கவிடாதபடிக் காளைகள் இழுத்துச் சென்றதை,

**கழி உப்பு முகந்து கல் நாடு மடுக்கும்**

**ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்**

**உரனுடை நோன் பகட்டு (புறம். 60:7-9)**

என்ற பாடல்மூலம் அறியலாம். உமணர்கள் வழியின் அருமை கருதி அச்சமுடையவர்களாக இருந்துள்ளனர்[187]. எனவே தங்களுக்கும் தம்முடைய வண்டிக்கும் தேவையான பொருட்களை உடன் எடுத்துச் சென்றுள்ளனர்.

உமணர்கள், சகடத்திற்குத் தேவையான அச்சிகளைத் தயாராக வைத்திருந்தனர். பயன்படுத்தியது பாழ்பட்டால் அவற்றை நீக்கிவிட்டு புதிய அச்சினைப் போட்டுத் தம்முடைய பயணத்தைத் தொடர்ந்ததை,

**கணம் கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த**

**பண் அழி பழம் பார் (நற். 138:3-4)**

என்ற வரிகள் தெரிவிக்கின்றன. மேடு பள்ளத்தினால் முறிந்துவிடும் அச்சினை மாற்றுவதற்கு உமணர்கள் எடுத்துச்சென்ற மாற்று அச்சு, சேம அச்சு எனப்பட்டதை,

**'எருதே இளைய; நுகம் உணராவே;**

**சகடம் பண்டம் பெரிது பெய்தன்றே;**

**அவல் இழியினும், மிசை ஏறினும்,**

**அவணது அறியுநர் யார்?' என உமணர்**

**கீழ்மரத்து யாத்த சேம அச்சு அன்ன, (புறம். 102:1-5)**

என்ற பாடல்வழி அறியலாம்.

வண்டிகளின் சக்கரத்தில் உள்ள பூணினை சிதையச் செய்யும் நடுகற்கள் அவர்கள் சென்ற வழிகளில் இருந்ததை,

**மரம்கோள் உமண்மகன் பேரும் பருதிப்**

**புன்தலை சிதைத்த வன்தலை நடுகல் (அகம். 343:4-5)**

என்ற பாடல்வரிகள் தெரிவிக்கின்றன.

### எருதுகள்

எருதுகள் பாலை வழிகளிலும் மலை நாடுகளிலும் மணற்பரப்பிலும் பயணித்து அடைந்த இன்னல்கள், அவை ஏற்படுத்திய ஆரவாரங்கள் சங்க இலக்கியத்தில் பல இடங்களில் காணப்படுகின்றன.

உமணர் உப்பு மூட்டைகளை வண்டியில் ஏற்றி எருதுகளைப் பூட்டியுள்ளனர். அவை ஒருங்கு கூடிச் சென்றதை,

**உப்பு ஒய் உமணர் அருந் துறை போக்கும்**
**ஒழுகை நோன் பகடு ஒப்பக் குழீஇ (அகம். 30:5-6)**

என்னும் பாடல் வரிகளால் அறியலாம். எருதுகளைப் பூட்ட பயன்படுத்தப்பட்ட கயிறு பற்றி,

**------------------ - பலபுரி**
**வார்கயிற்று ஒழுகை நோன்சுவற் கொளீஇ,**
**பகடுதுறை ஏற்றத்து உமண்விளி வெரீஇ (அகம். 173:8-10)**

என்ற பாடல், பல புரிகளைக் கொண்ட கயிற்றால் பூட்டிய எருதுகளை, ஏற்ற இறக்கம் மிகுந்த வழிகளில் உமணர்கள் விரட்டிச் சென்றதாகக் குறிப்பிடுகிறது. எருதுகளின் கழுத்தில் வளைந்த நுகத்தடி இருந்தது. இதனை,

**கொடுநுகம் பிணித்த செங்கயிற்று ஒழுகை (அகம். 329:6)**

என்ற வரியால் அறியலாம். எருதுகளின் கழுத்தில் மணிகள் கட்டப்பட்டிருந்தன. இதனை,

**கணநிரை மணியின், ஆர்க்கும் சுரன்இறந் (அகம். 303:18)**
**படுமணி இயம்பப் பகல்இயைந்து, உமணர் (மேலது. 329:5)**

என்ற வரிகளால் எருதுகளின் மணிகள் எழுப்பிய ஆரவாரத்தினை அறிந்துகொள்ளலாம்.

உமணர்கள் வண்டியில் சில பிராணிகளை வளர்த்துள்ளனர். அவற்றுள் கோழி, மந்தி போன்றன அடங்கும். இவ்வாறே பெட்டைக் கோழியைக் கொண்டு சென்ற உமணர் வண்டி பற்றி,

**உப்புஒய் உமணர் ஒழுகையொடு வந்த**
**இளைப்படு பேடை இரிய (அகம். 310:14-15)**

என்னும் வரிகள் குறிப்பிடுகின்றன.

தொடர்ந்து பயணம்செய்த எருதுகளின் களைப்புதீர உமணர்கள் பாலைவழிகளில் தங்கியுள்ளனர். அச்சமயங்களில் அவர்களுடைய தேவைக்காகவும், எருதுகளுக்காகவும் கிணறு தோண்டியதை,

**கடல்நீர் உப்பின் கணம்சால் உமணர்**

**உயங்குபகடு உயிர்ப்ப அசைஇ, முரம்பு இடித்து**

**அகல்இடம் குழித்த அகல்வாய்க் கூவல்**

**ஆறுசெல் வம்பலர் அசைவிட ஊறும் (அகம். 295:9-12)**

என்ற பாடல்மூலம் அறியலாம். உமணர்கள் தோண்டிய கிணறு பாலை வழிச் செல்லும் மக்களுக்கும் நீரை அளித்தது என்ற குறிப்பையும் காணமுடிகிறது.

உப்பை ஏற்றிக்கொண்டு காட்டுவழிகளில் சென்ற உமணர்களின்[188] காளைகளுக்கு வழியில் ஏற்பட்ட தளர்ச்சி முதலானவைப் பல இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. தொடர்ந்து உமணர்களுடனே பயணம் செய்த காளையின் இறப்பு குறித்தும் பதிவு செய்துள்ளது.

பருக நீரும், உண்ண புல்லும் தராமல், மக்கள் நடமாட்டமில்லாத ஒரு புறத்தே முடம்பட்டமை காரணமாக விட்டு நீங்கிய உயிர் வாழாத வலிய காளை, காட்டில் கிடந்ததாகப் பின்வரும் பாடல் குறிப்பிட்டுள்ளது.

**நீரும் புல்லும் ஈயாது, உமணர்**

**யாரும்இல் ஒருசிறை முடத்தொடு துறந்த**

**வாழா வான்பகடு (புறம். 307:7-9)**

இறைச்சியை உண்ணும் உமணர்கள் தங்களுடைய காளை இறந்த பின்னர் அவற்றை உணவிற்காகப் பயன்படுத்தாது காட்டில் விடுத்துச்செல்வது அவர்களுடைய வாழ்வியல் நடைமுறையாக இருந்துள்ளது.

**நிமித்தம் பார்த்தல்**

தெய்வம் உறையும் கடல் நீர் பரவிய உப்பளத்தில் விளைந்து, நன்கு காய்ந்த அமிழ்தமாகிய வெண்ணிற உப்பினை, படைக்கலன்களைக் கொண்டுள்ள உமணர்கள் மூட்டைகளாக அடுக்கி, வெண்ணிறக் கழுத்தினைக் கொண்ட கழுதைகளின் மீது ஏற்றி, நிமித்தம் பார்த்தவராய் மேற்குத் திசைகளிலுள்ள இடங்களுக்குக் கொண்டு சென்றுள்ளனர். கழுதைகளின் தேய்ந்த குளம்புகள் படுதலால் பிறழ்ந்து கிடக்கும்

பரற்கற்கள் பொருந்திய பாலைநில வழிகளில் பயணித்துள்ளனர்[189]. உமணர்கள் பொதிசுமக்க கழுதைகளையும் பயன்படுத்தியுள்ளனர். மேலும், அவர்களிடம் நிமித்தம் பார்த்துச்செல்லும் வழக்கமும் இருந்துள்ளது என்பதும் புலப்படுகின்றது.

**உமணர் சமைத்த உணவு**

இடம்விட்டு இடம் பெயர்ந்துச்சென்ற உமணர்கள் தங்களுக்குத் தேவையான உணவினை, தங்கியிருக்கும் சூழலில் என்ன கிடைத்ததோ அவற்றைப் பயன்படுத்திச் சமைத்து உண்டுள்ளனர். உமணர்கள் தற்காலிகமாக அடுப்பினை மூட்டிச் சமைத்துவிட்டு அந்த அடுப்புகளைச் சமைத்த இடத்திலேயே கைவிட்டுவிட்டுச் சென்றுள்ளதை,

**உமண்சாத்து இறந்த ஒழிகல் அடுப்பில் (அகம். 119:8)**

**உமண்உயிர்த்து இறந்த ஒழிகல் அடுப்பின் (மேலது, 159:4)**

என்ற வரிகள் தெரிவிக்கின்றன. உமணர்கள் கற்களைப் பயன்படுத்தி அடுப்பு உருவாக்கினர் என்பதும் தெரிகிறது. மேலும், உமணர்கள் விடுத்துச்சென்ற அடுப்பில் பாலைநில மக்களாகிய மழவர் ஊன்புழுக்கு சமைத்து உண்ட செய்தியும் இடம்பெற்றுள்ளது. இத்தகைய காட்சிகள் பாலைநில அமைப்பை எடுத்தியம்புவதற்காகப் பாடப்பட்டிருக்கிறது.

உமணர்கள் இறைச்சி, நெல் அரிசி ஆகியவற்றைச் சமைத்து உண்டதற்கான சான்றுகள் காணப்படுகின்றன. அவர்கள் இறைச்சியைச் சமைத்த முறைபற்றி,

**புலிதொலைத்து உண்ட பெருங்களிற்று ஒழிஊன்**
**கலிகெழு மறவர் காழ்க்கோத்து ஒழிந்ததை;**
**ஞெலிகோற் சிறுதீ மாட்டி, ஒலிதிரைக்**
**கடவிளை அமிழ்தின் கணம்சால் உமணர்**
**சுனைகாள் தீம்நீர்ச் சோற்றுஉலைக் கூட்டும்**

**(அகம். 169:3-7)**

என்ற பாடல்வரிகள் குறிப்பிடுவதோடு, வெப்பமிகுந்த பாலை நிலத்தில் மரங்கள் கரிந்துபோயின; நிலவளம் குன்றியது; அக்காட்டில் புலி கொன்று உண்டுவிட்டுப் போன யானையின் இறைச்சியை ஆறளைக் கள்வர்கள் கோலில் கோர்த்துக் கொண்டு சென்றனர்; எஞ்சிய இறைச்சியை, உப்பு வணிகர் கூட்டத்தினர் தீக்கடைக் கோலால்

உண்டாக்கிய சிறுதீயில் வாட்டினர்; சுனையிலிருந்து கொண்டுவந்த நீரில் உலை ஏற்றி அதில் போட்டு, ஒன்றாக ஊன் சோற்றினை ஆக்கினர் என்கிறது. இதன்மூலம் உமணர்கள் வழியிடையே இறைச்சி உணவை எவ்வாறு பெற்றனர் என்பதை அறியமுடிகிறது.

உமணர்கள் உப்பு விற்று விலையாக நெல்லைப் பெற்றனர். ஆதலால் தங்கள் உணவில் நெல்லரிசியை அதிகமாகச் சேர்த்துக்கொண்டிருப்பது தெரிகிறது.

**உமணர் தந்த உப்பு நொடை நெல்லின்**
**அயினி மா இன்று அருந்த (நற். 254:6-7)**

இப்பாடலில், தலைவி தலைவனிடம் உப்பு வணிகர்கள் உப்பிற்கு விலையாகப் பெற்ற நெல்லரிசியால் செய்த உணவினை, உன் குதிரைக்கு உண்ணக் கொடுப்பர் என்று குறிப்பிடுகின்றாள்.

**உமணர் குடியிருப்பு**

உமணர் குடியிருப்புகள் அமைந்தபகுதி களர்நிலமாகக் காணப்படுகின்றது. நிலையான வாழ்க்கை மேற்கொள்ளாத உமணர்களுடைய குடியிருப்புப் பற்றிய குறிப்புகள் அருகியே உள்ளன.

**முரம்பு தலை மணந்த நிரம்பா இயவின்**
**ஓங்கித் தோன்றும் உமண் பொலி சிறுகுடிக்**
**களரிப் புளியின் காய் பசி பெயர்ப்ப,**
**உச்சிக் கொண்ட ஓங்கு குடை வம்பலிர்! (நற். 374:1-4)**

என்ற பாடல், பரற்கற்கள் நிறைந்து நடப்பதற்கு இயலாத வழியில், உப்பு வணிகர்கள் நிறைந்திருக்கும் சிறிய குடியிருப்புகள் ஓங்கித் தோன்றும் களர்நிலம் பற்றியும் அக்களர் நிலத்தில் விளைந்த புளியினை உண்டு பசிநீங்கிச் செல்லும் புதிய வழிப்போக்கர்களின் நிலை பற்றியும் எடுத்துரைத்துள்ளது.

உமணர்களுடைய குடிசையின் அமைப்பு பற்றிப் பின்வரும் பாடல் குறிப்பிடுகிறது. அவற்றில்

**குவிந்த குரம்பை அம்குடிச் சீறூர்,**
**படுமணி இயம்பப் பகல் இயைந்து, உமணர்**

**தொடுநுகம் பிணித்த செங்கயிற்று ஒழுகைப்**

**பகடுஅயாக் கொள்ளும் வெம்முனைத் துகள்தொகுத்து,**

**எறிவளி சுழற்றும் அத்தம் (அகம். 329:4-8)**

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. குனிந்து செல்லும்படியான குடிசைகளைக் கொண்ட குடியிருப்புகளையுடைய சிற்றூரின்கண், உமணர்கள் எருதுகளைப் பூட்டினர். அவை சுழன்றடிக்கும் காற்றினால் சுமையை இழுக்கமுடியாமல் துன்புற்றன. இத்தகைய குறிப்புகளால் உமணர்கள் வாழ்ந்த நிலம், குடியிருப்பு ஆகியவற்றை அறிந்துகொள்ளமுடிகிறது.

## உமணர் ஒப்பனை

கையில் கோல் வைத்திருக்கும் உமணர்கள் காலில் செருப்பு அணிந்திருந்தனர். பாலை நிலத்தின் பாதிரிப்பூவினை, அலரிப்பூவுடன் இடையிடையே கலந்து, தாழம்பூவின் மடலொடு வைத்துக்கட்டிய மாலையைச் சூடியிருந்ததை,

**அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ**

**எரிஇதழ் அலரியொடு இடைபட விரைஇ,**

**வண்தோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணி,**

**தோல்புதை சிரற்றுஅடி, கோலுடை உமணர் (அகம். 191:1-4)**

என்ற பாடல்வரிகள் தெரிவிக்கின்றன. இதை தவிர்த்துப் பெரிதாக உமணர்களுடைய ஆடை அணிகலன் மரபு எதுவும் சங்க இலக்கியங்களில் இடம்பெறவில்லை எனலாம்.

## உமணப் பெண்கள்

பரதவர்கள் விளைவித்த உப்பை உமணர்கள் வண்டிகளில் ஏற்றிச்சென்று பல இடங்களில் விற்றனர். அவர்களுடைய பெண்கள் என்ன தொழில் செய்தனர் என்பது பற்றிய செய்திகளையும் சிற்சில இடங்களில் பார்க்க முடிகின்றது. உமணர்கள் தங்களுக்குத் தேவையான பொருட்களோடு உப்பு விற்கப் பயணப்பட்டுள்ளனர். அப்பயணத்தில் பெண்களுக்கான பங்கு என்ன என்பதுபற்றி எட்டுத்தொகை இலக்கியங்களில் காண முடியவில்லை. ஆனால் உமணர் இளைய மகள், ஊர்களில் உள்ள மனைகளில் உப்பு விற்றச் சான்று இடம்பெற்றுள்ளது. கீழ்க்காணும் பாடல், தந்தை குன்றங்களைக் கடந்து உப்பு விற்கச் சென்றதையும், மகள் ஊர்களில் உள்ள தெருக்களில் உப்பு விற்றதையும் குறிப்பிட்டுள்ளது.

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி,**

**என்றூழ் விடர குன்றம் போகும்**

**கதழ்கோல் உமணர் காதல் மடமகள்**

**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி,**

**நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்**

**சேரி விலைமாறு கூறலின் (அகம். 140:3-8)**

இப்பாடலில், பரதவர்கள் விளைவித்த உப்பினை வண்டிகளில் ஏற்றிய உமணர்கள் குன்றங்களைக் கடந்துச் சென்றுள்ளனர். அவர்களுடைய இளையமகள் சில்வளைகளுடன் கைகளை வீசிக்கொண்டு, வெண்ணிறக் கல் உப்பு, நெல்லினுக்கு ஒத்த அளவினதே எனச் சேரியின்கண் பண்டமாற்றாகக் கூறிக்கொண்டுச் சென்றாள். அச்சமயம் மனையில் உள்ள நாய் வேற்றுக்குரலைக் கண்டு குரைத்து வந்தது. அதனைக் கண்டு அவள் அஞ்சினாள் என்பது எடுத்துரைக் கப்பட்டுள்ளது.

உப்பு விற்க தழையாடையினை உடுத்திச் சென்றாள் உமணப்பெண். சுருண்ட கூந்தல் அலைபாய தழையாடை அசைய நடந்துவந்து நெல்லும் உப்பும் நேரே விலையென்று சேரிதோறும் விற்றாள். இதனை,

**வணர்சுரி முச்சி முழுதும் மன்புரள,**

**ஐதுஅகல் அல்குல் கவின்பெறப் புனைந்த**

**பல்குழைத் தொடலை ஒல்குவயின் ஒல்கி,**

**'நெல்லும் உப்பும் நேரே: ஊரீர்!**

**கொள்ளீரோ' எனச் சேரிதொறும் நுவலும் (அகம். 390:5-9)**

என்ற பாடல்வரிகளால் அறியலாம். உமணர்களைப் போன்றே உமணப் பெண்களும் உப்பினை விற்று நெல்லைப் பெற்று வந்திருக்கின்றனர்.

## பத்துப்பாட்டும் உமணரும்

பத்துப்பாட்டில் பட்டினப்பாலை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை ஆகிய இலக்கியங்கள் உப்பு வணிகர்கள் குறித்த வாழ்வியலைப் பதிவு செய்துள்ளன. எட்டுத்தொகை இலக்கியங்களோடு இணைத்து நோக்கப்படாமைக்கு இவ்விரு இலக்கியங்களிலும் இடம்பெற்றுள்ள புனைந்துரைகளே காரணம் எனலாம்.

எட்டுத்தொகையைவிட பத்துப்பாட்டு, உமணர்களுடைய வாழ்வியலை சற்று விரிவாக எடுத்துரைக்கிறது.

பட்டினப்பாலை, உமணர் குறித்த பதிவுகளைச் சிறிய அளவில் குறிப்பிட்டுள்ளது. பல்வேறு வணிகர்களும், வணிகமும் நடைபெற்ற புகார் நகரத்தில் உமணர்கள் பற்றிய செய்திகளும் இடம்பெற்றுள்ளன.

உமணர்கள், வெண்ணிறமுடைய உப்பினை விற்றுத் தாங்கள் பெற்ற நெல்லை ஏற்றிக் கொண்டுவந்த வலிமை வாய்ந்த படகுகளைக் கட்டுத்தறியில் குதிரைகளைப் பிணிப்பது போல, உப்பங்கழியைச் சார்ந்த தறிகளில் கட்டியிருந்தனர். இதனை,

**வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி**
**பணைநிலைப் புரவியின் அணைமுதல் பிணிக்கும்**
**கழி சூழ் படப்பை (பட்டினப். 29-32)**

என்ற வரிகளால் அறியலாம். வணிக விரிவாக்கத்தினைப் பதிவுசெய்துள்ள பட்டினப்பாலையில் கூட உமணர்கள் உப்பிற்கு விலையாக நெல்லைப் பெற்றனர் என்பதிலிருந்து நெல்லும் உப்பும் ஒரே மதிப்புடைய பொருட்களாக விளங்கியிருப்பதை உணர்ந்து கொள்ளமுடிகிறது.

## ஆற்றுப்படை இலக்கியங்கள்

கலைஞர்களுடைய நீண்ட பயணங்களைப் பாடுபொருளாகக் கொண்டு பாடப்பட்ட ஆற்றுப்படை இலக்கியங்களில் உமணர் குறித்த பதிவுகள் இடம்பெற்றுள்ளன. கலைஞர்களைப் போன்று பல இடங்களுக்கு உமணர்களும் பயணம் செய்துள்ளனர்.

### சிறுபாணாற்றுப்படை

நுணா மரத்தால் செய்த குறுந்துணி மணி மாலையை உடைய மார்பையும், செய்பூங்கண்ணி சுற்றிய நெற்றியையும் உடைய உமணர்களின் வண்டியோடு வந்த அவர்களுடைய பிள்ளையை ஒத்த மந்தி, வாள்போலும் வாயை உடைய கிளிஞ்சலின் வயிற்றில், முத்துக்களைப் பெய்து மூடிக் கிலுகிலுப்பையாகக் கொண்டு, நுசுப்பையும்,

தோள்புறம், மறைக்கும் ஐம்பாற் கூந்தலையும் உடைய உப்பு வாணிச்சியர் ஈன்ற பிள்ளைகளோடு கூடி விளையாடுகின்ற கடற்கரைப் பட்டினமாகிய கொற்கையைப் பற்றி,

**நறவுவாய் உறைக்கும் நாகுமுதிர் நுணவத்து**
**அறைவாய்க் குறுந்துணி அயில்உளி பொருத**
**கைபுனை செப்பம் கடைந்த மார்பின்,**
**செய்பூங் கண்ணி செவிமுதல் திருத்தி,**
**நோன்பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த**
**மகாஅர் அன்ன மந்தி, மடவோர்**
**நகாஅர் அன்ன, நளிநீர் முத்தம்**
**வாள்வாய் எருந்தின் வயிற்றகத்து அடக்கி,**
**தோள்புறம் மறைக்கும், நல்கூர் நுசுப்பின்,**
**உளர்இயல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற**
**கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்**
**தத்துநீர் வரைப்பின் கொற்கை (சிறுபாண். 51-62)**

என்று குறிப்பிட்டுள்ளது சிறுபாணாற்றுப்படை. உமணர்கள் தங்களுடன் பெண்களையும், குழந்தைகளையும், குரங்கையும் அழைத்துச் சென்றிருந்ததை இப்பாடல் தெரிவித்துள்ளது. இந்த இலக்கியத்தில்மட்டும் உமணர் பெண்கள் உமட்டியர் என்ற பெயரால் அழைக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

## பெரும்பாணாற்றுப்படை

பெரும்பாணாற்றுப்படை, உமணர்கள் உப்பு விற்கச்சென்ற வழி மற்றும் அவர்கள் எடுத்துச்சென்ற புழங்கு பொருட்கள் பற்றி விரிவாக எடுத்துரைத்துள்ளது. உமணர் வாழ்வியல் பற்றி 46 முதல் 65 வரிகள் வரை பாடப்பட்டுள்ளன.

கொழுவிய வட்டையிலே செருகப்பட்டுத் திருந்திய ஆரம், மத்தளம் போன்று முழுமரத்தில் கடையப் பெற்ற உருளி: கணைய மரங்களை இணைத்தாற் போன்ற வலிய பார்: முகிலைச் சுமந்தாள் போன்ற கரிய தேர்த்தாளிப் பாயால் வேயப்பட்ட கூரை இத்தகைய உறுப்புக்களைக் கொண்ட வண்டி வழியை அறுத்துச் செல்லும் இயல்புடையது[190] என்ற வண்டி குறித்த அறிமுகத்தை அடுத்து, அவற்றில் ஏற்றப்பட்டு இருந்த உமணர்களுடைய புழங்குபொருட்கள் பற்றிய தகவல்கள் இடம்பெற்றுள்ளன.

உமணர்களிடம் கோழி வளர்க்கும் பழக்கம் இருந்ததை எட்டுத்தொகைப் பாடல் ஒன்று குறிப்பிட்டுள்ளது. அக்கோழிகளை அடைத்து வைக்க பயன்படுத்தப்பட்ட கூடு பற்றி இவ்விலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. தினைப்புனத்தில் யானைகள் தினையைக் கவராமல் இருக்கக் காவல் காப்பவர்கள், பரண்மேல் கட்டியிருந்த குடிலைப்போன்ற சிறியதாகக் கட்டப்பட்ட கோழிக்கூடு வண்டியில் கிடந்தது. அக்குடிலின் வாயிலில் பெண்யானையின் முழந்தாளை ஒத்த துளையிடப்பட்ட சிறிய உரல் வைக்கப்பட்டிருந்தது. கூத்தர் மகளிர் ஆடுவதற்காகக் கொண்டுவரப்பட்ட வாரால் இழுத்துக்கட்டிய மத்தளத்தைப் போன்ற காடிவைத்த மிடா, வண்டியின் பாரில் கயிற்றால் வரிந்து கட்டப்பட்டிருந்ததை,

**வேழம் காவலர் குரம்பை ஏய்ப்பக்**
**கோழி சேக்கும் கூடுடைப் புதவின்**
**முளைஎயிற்று இரும்பிடி முழந்தாள் ஏய்க்கும்,**
**துளைஅரைச் சீருரல் தூங்கத் தூக்கி,**
**நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த**
**விசிவீங்கு இன்இயம் கடுப்பக் கயிறுபிணித்து,**
**காடி வைத்த கலனுடை மூக்கின் (பெரும்பாண். 51-57)**

என்ற வரிகளும் குறிப்பிட்டுள்ளன. உமணர்கள் உப்பு விற்றுப்பெற்ற நெல்லை குற்றிச் சோறு சமைப்பதற்கு உரல் கொண்டுச் சென்றதையும், புளியங்காய், நெல்லிக்காய்[191] போன்றவற்றை மிடாவில் ஊறவைக்க காடிமிடாவினையும் எடுத்துச் சென்றதைக் குறிப்பிட்டிருப்பதிலிருந்து உமணர்கள் நெல்லரிசிச் சோற்றையும், காடியினையும் உண்ணும் பழக்கம் உடையவர்கள் என்பது புலப்படுகின்றது.

உமணர்களுடைய மகளிர், வண்டியின் பாரின்மீது குழந்தையுடன் அமர்ந்துக்கொண்டு வண்டியில் பூட்டப்பட்ட எருதின் முதுகிலேயே அடித்து ஓட்டிக்கொண்டுச் சென்றனர்[192] என்பதிலிருந்து வண்டி ஓட்டும் பணி பெண்களால் செய்யப்பட்டிருப்பதை அறியமுடிகிறது. உமணப்பெண்களின் பணிப் பங்களிப்பினையும், அவர்கள் ஆண்களுடன் உப்பு விற்கச்சென்ற பயணத்தையும் எடுத்துரைப்பதோடு உழைப்பிற்குரியவர்களாகப் பெண்கள் இருந்ததையும் இவ்விலக்கியம் பதிவுசெய்துள்ளது.

உமணர்கள், பூக்களுடன் கூடிய வேம்பின் தழையுடன் பிற தழைகளையும் இடையிடையே கட்டப்பட்ட படலை மாலையை அணிந்திருந்தனர். அழகிய, பருத்த, வலிமை நிறைந்த திண்மையான தோளையும், வலிமை நிறைந்த உடம்பையும் கொண்ட உமணர்கள் எருதுகள் பூட்டப்பட்ட வண்டியின் பக்கத்தில் பாதுகாப்புக்காக வந்தனர். அவர்கள் ஊர்கள்தோறும் உப்பின் விலையைக்கூறி விற்றுப் பயணப்பட்ட நெடியவழி பற்றிப் பாடப்பட்டுள்ளது.

**கோட்டுஇணர் வேம்பின் ஏட்டுஇலை மிடைந்த**
**படலைக் கண்ணிப் பருஏர்எறுழ்த் திணிதோள்,**
**முடலை யாக்கை, முழுவலி மாக்கள்**
**சிறுதுளைக் கொடுநுகம் நெறிபட நிரைத்த**
**பெருங்கயிற்று ஒழுகை மருங்கில் காப்ப,**
**சில்பத உணவின் கொள்ளை சாற்றி,**
**பல்எருத்து உமணர் பதிபோகு நெடுநெறி**

**(பெரும்பாண். 59-65)**

இப்பாடல், உமணர் அணிந்த வேம்பு, தழை முதலியவற்றால் கட்டப்பட்ட மாலையை பற்றிக் குறிப்பிட்டுள்ளது. எட்டுத்தொகை தொகுப்புகளில் ஒன்றாகிய அகநானூற்றில், உமணர்கள் பாதிரி, அலரி, தாழம்பூ ஆகியவற்றாலான மாலையை அணிந்ததற்கானச் சான்றுகளுள்ளது. இந்த இலக்கியத்தில் வேம்பு முக்கிய இடம்பெற்றிருப்பது, உமணர்கள் காலமாற்றத்திற்கு ஏற்பத் தங்களை மாற்றிக்கொண்டனரா, அல்லது வேந்தர்களுடைய அரசாட்சியின் கீழ் நாடு சென்ற காலகட்டமாகலின், அரசுக்கு ஏற்ற அடையாளங்களைப் பாதுகாப்பு கருதி தாங்களும் ஏற்றுக்கொண்டனரா என்பது தெரியவில்லை. மேலும், இவ்வணிகர்களுடைய ஆரவாரங்களால் வழிகளில் உள்ள ஆறலைக் கள்வர்களுடைய பயம் இல்லாமல் இருந்தது என்பதிலிருந்தும் ஆறலைக்கள்வர்களைப் போரிட்டு வெல்லும் வலிமையுடைய பிற வணிகர்கள் அவர்களுடன் பயணித்தனர் என்பதிலிருந்தும், வணிகத்தின் பெருக்கம், அவர்களுடைய வலிமை ஆகியவற்றை அறிந்துகொள்வதோடு இக்காலகட்டத்தில் ஆறலைக் கள்வர்கள் அடைந்த பின்னடைவு குறித்தும் அறியமுடிகிறது.

எட்டுத்தொகை இலக்கியங்களின் வழி, தங்களுடைய உப்பு விற்பனைக்காக மட்டும் சுற்றங்களோடு பயணப்பட்ட உமணர் என்னும் குழு, பாலை வழிகளில்

வழிச்செல்வோருக்குத் தைரியத்தையும் பாதுகாப்பையும் கொடுத்தது எனலாம். பத்துப்பாட்டு இலக்கியங்களின் கால மாற்றமும், வணிகமயமான பொருளாதாரம் நிறைந்த சூழலும், வேந்தர்களின்கீழ் நாடுகள் வந்ததும் உமணர் என்ற இனக்குழு, வணிகம் சார்ந்த வளர்ச்சியை அடைய வழி செய்திருக்கின்றன என்று கூறலாம். இக்காலகட்டங்களில் உமணர்களோடு பல பொருட்களையுடைய வணிகர்களும் பயணித்ததாகக் கூறப்பட்டுள்ளது. இவ்வணிகக் கூட்டங்கள் தங்கள் உடலை ஆறலைக் கள்வர்களைப் போரிட்டு வெல்லும் அளவிற்குத் தயார்படுத்தியிருக்கின்றன. இம்மாற்றங்களைக் காலத்தின் வளர்ச்சியால் நிகழ்ந்த செயல்பாடுகளாகக் காணமுடிகிறது.

**பாலை**

சங்க இலக்கியத்தில் பாலை நிலச் சூழலில் மக்கள் செய்த தொழில், பயன்படுத்திய புழங்கு பொருட்கள் ஆகியவைகளை முன்னிலைப்படுத்திப் பாலைத் திணைக்குரிய மக்கள் அடையாளப் படுத்தப்பட்டுள்ளனர். வேட்டை, வழிப்பறி, ஆநிரை கவர்தல் ஆகிய தொழிலைத் தம்முடைய வாழ்வாதாரமாகக் கொண்ட இம்மக்கள் வாழ்ந்த நிலப்பகுதி, அவர்களுடைய ஒட்டுமொத்த வாழ்வியலைத் தீர்மானிப்பதாக இருந்துள்ளது என்றே கூறலாம்.

**கல்லா இளையர் கலித்த கவலை (அகம். 375:5)**

என்ற வரி அவர்களை வேட்டையன்றி வேறு தொழில் தெரியாதவர்கள் என்றும், அவர்களுடைய ஊர்,

**வில் ஏர் உழவர் வெம் முனைச் சீறூர்ச் (நற். 3:5)**

என்றும், அவர்கள் வாழ்ந்த நிலம், இருப்பிடம், பிளவுபட்ட நீண்ட மலைச் சாரலில் வன்னிலத்தில் அமைந்த சிறுகுடி,

**படு சுடர் அடைந்த பகு வாய் நெடு வரை,**
**முரம்பு சேர் சிறுகுடி (நற். 33:1-2)**

என்றும் அழைக்கப்பட்டுள்ளன.

இனக்குழு வாழ்க்கை முறையிலிருந்து மாறாத இத்தகைய மக்கள் வாழ்ந்த நில அமைப்பு, இவர்களை இத்தொழில்களைச் செய்ய வைத்திருக்கின்றது.

இவர்களுடைய தொழில் குறித்து ராஜ் கௌதமன், வேடர் இனக்குழுக்களில் சில, இவ்வாறு உணவு கிடைக்காததால் வழிப்பறி, ஊரை சூறையாடுதல், வணிகக்கூட்டங்களைக் கொள்ளையடித்தல் முதலிய குற்றச் செயல்களில் இறங்கியதாகத் தெரிகிறது. குற்றச் செயல்புரியும் இனக்குழுக்கள் (criminal tribes) என இவற்றைக் கருதலாம். உணவு இல்லாமை இவ்வாறு இனக்குழு வேடரை இச்செயல்களுக்கு உந்தியிருக்கலாமேயன்றிக் குற்றச்செயல் புரியும் இனக்குழு என்று தனிக் குழு இருந்திருக்க இயலாது[193] என்று குறிப்பிட்டுள்ளார்.

சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ள பாலை நில மக்களின் வாழ்வியற் கூறுகளை ஒட்டுமொத்தமாகத் தொகுத்துரைப்பதைக்காட்டிலும் அவ்விலக்கியம் சுட்டியுள்ள பாலை நில மக்களின் பெயர்களை அடிப்படையாகவைத்து அத்திணையை அணுகுவது ஆய்விற்குப் பயனுள்ள வகையில் அமையும். எனவே பாலை திணை குறித்தப் பதிவுகளை மக்களை முதன்மைப்படுத்தி,

மறவர்

மழவர்

வேடர்

எயினர்

என்று பகுத்து இக்குழுக்களுடைய தொழில், உணவு, இருப்பிடம் உள்ளிட்ட வாழ்வியல் கூறுகள் பற்றிய செய்திகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

### மறவர்

ஏவினத் தொழிலைச் செய்யும் மறவர்கள், தாம் குறித்த இலக்குத் தவறுமானால் அம்பினைத் தொடுத்தத் தம் கைவிரலைக் கடித்துக்கொள்ளும் அறியாமை மிக்கவர்கள். இதனை,

**கடுத்தது பிழைக்குவது ஆயின், தொடுத்த**
**கைவிரல் கவ்வும் கல்லாக் காட்சி (அகம். 215:7-8)**

என்னும் பாடல்வரிகளால் அறியமுடிகிறது. மறவர்கள் வழிப்பறிக் கொள்ளை, ஆநிரைக் கவர்தல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டுள்ளனர்.

கொடுஞ்சிலை மறவர்[194], கடுங்கண் மறவர்[195], கடுவினை மறவர்[196] முதலான பெயர்களால் அழைக்கப்பட்ட மறவர்கள் வரிச்சுற்று அமைந்த வில்லினை உடையராய், கடைகுழன்ற வளர்ந்த மயிரினை உடையராய், பிறர்க்குத் துன்பம் செய்தலை எதிர்பார்த்திருக்கும் உடல்வலிமை உடைத்தாகிய வலிமையினையும், வற்கென்ற உடம்பினையும், புலிபோலும் பார்வையினையும் உடையவர்களாகப் பாடப்பட்டுள்ளனர். அவர்கள் புதியதாக வரும் வழிப்போக்கரிடம் பொருள் ஏதும் இல்லையாயினும் அவர்கள் அம்புபட்டு பதைப்பதைக் கண்டு மனமகிழ்ச்சி அடைவதற்காகப் பலரைக் கொல்லுவர்[197] என்ற தகவல் மறவர்களின் பண்பை எடுத்துக்காட்டுவதாக உள்ளது.

**வழிப்பறிக் கொள்ளை**

மறவர்களின் வழிப்பறிக்கொள்ளை பற்றி அகப்பாடல்கள் குறிப்பிட்டுள்ளன. அவர்கள் கல் பரந்த காட்டுவழியில் 'கிடின்' என்னும் ஓசை உண்டாகுமாறு மோதும் மறகுணமிக்க வீரவளை அணிந்து, கூர்மையான அம்பினையுடைய கொடுந்தொழிலராகப்[198] பாலை வழிகளில் காணப்பட்ட நடுகல்லில் அம்பினைத் தீட்டினர்[199] என்பது மறவர்கள் தொழிலுக்குச் சென்ற தோற்றத்தை விளக்குவதாக அமைந்துள்ளது. அவர்கள் வில்லுடன் சிவந்த அடியினை உடைய மராமரத்தின் பக்கங்களிலும்[200] நெல்லிக்காய்கள் உதிர்ந்துக் கிடக்கும் வழிகளிலும் கொலையை விரும்பும் கொள்ளையர்களாக, கொள்ளையிடுவதற்காக வழி செல்லும் மக்களை நோக்கிக் காத்திருந்தனர்[201] என்பதிலிருந்து மறவர்கள் பாலைவழிகளில் வழிப்பறிக்காகக் காத்திருந்த செய்தி புலப்படுகின்றது. இத்தகைய வழியில் செல்லும் மக்கள் மறவர்கள் இசைத்தத் தண்ணுமையின் ஓசைக்கு அஞ்சியதை,

**கடுங்கண் மறவர் கல் கெழு குறும்பின்**
**எழுந்த தண்ணுமை இடங் கட் பாணி,**
**அருஞ் சுரம் செல்வோர் நெஞ்சம் துண்ணென,**
**குன்று சேர் கவலை, இசைக்கும் அத்தம் (அகம். 87:7-10)**

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகிறது.

மறவர்களை மதியாது காட்டு வழியில்வரும் புதிய வழிப்போக்கர்களைக் கொன்று, சருகைப் போட்டு மூடிய கற்குவியல்கள் ஊரைப் போலத் தோன்றியதாகப் பாடப்பட்டுள்ளது[202]. நீரில்லாத அவ்வழியில் கொன்ற உடல்களைத் தின்னப் பருந்துகள் வந்து படிந்ததை,

**கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்**

**ஆற்றுஇருந்து அல்கி வழங்குநர்ச் செகுத்த**

**படுமுடைப் பருந்து பார்த்திருக்கும்**

**நெடுமூதிடைய நீர்இல் ஆறே (குறுந். 283:5-8)**

என்ற குறுந்தொகைப் பாடல் குறிப்பிட்டுள்ளது. மேற்காணும் தகவல்கள் பாலை நில வழிகள் வழிச்செல்வோருக்கு உயிர் உடைமைகளை இழக்கச்செய்யும் அச்சத்தை ஏற்படுத்துவதோடு அல்லாமல், அவ்வழிகள் மறவர்கள் கட்டுப்பாட்டிற்குள் இருந்துள்ளதை வெளிப்படுத்துவதிலிருந்து, மறவர்கள் வழிப்பறிக்கொள்ளையில் கொண்டிருந்த ஈடுபாடுபாட்டைக் காணமுடிகிறது.

மறவர்கள் பிற பாலை நில மக்களைப் போன்று ஆநிரை கவரும் செயலைச் செய்திருந்தாலும் வணிகக் கூட்டங்களைத் தாக்கி வழிப்பறி செய்வதை முக்கிய தொழிலாகக் கொண்டிருந்ததைச் சங்க இலக்கியங்கள்வழி அறியமுடிகிறது. அவ்வாறு பெற்ற பொருட்களைக் குழுக்களிடையே பகிர்ந்து உண்ணும் வாழ்க்கைமுறை உடையவர்களாக மறவர்கள் விளங்குகின்றனர். வில்லையுடைய ஆறலைக் கள்வர்களாக அழைக்கப்பட்ட மறவர்கள், வழிச்செல்லும் வணிகர் கூட்டத்தை வருத்தியதால்,

**செல்சாத்து எறியும் பண்புஇல் வாழ்க்கை**

**வல்வில் இளையர் (அகம். 245:6-7)**

என்றே அடையாளப் படுத்தப்பட்டுள்ளனர். வணிக சாத்துக்களுடன் போரிட்டுப் பெற்ற பொருட்களைப் பங்கிட்டுக் கொண்டதை அகநானூறு பின்வருமாறு குறிப்பிடுகிறது.

வில் கொண்ட மறவர்கள் கொழுப்புடைய ஊனைத் தின்று, கருமை பொருந்திய தம் வலியதோள்கள் பூரிக்க, பண்டச்சுமை மிகுந்த கழுதைகளின் நீண்ட வரிசையைப் பின்தொடர்ந்து வருகின்ற திருந்திய வாளினையுடைய வீரர்களான வாணிகச் சாத்தரை வாட்டி, அவர்களின் தலைகளைத் துணித்து, புலால் நாறும் அத்தகைய போர்க்களத்தில் துடியினை முழக்கியவாறே வணிகர்களுடைய ஆபரணங்களைத் திறையாகப்பெற்று, அதை விற்கள் பொருந்திய அரணிடத்தே அவரவர்க்குரிய பங்குகளாக முறையே தமக்குள்ளே பகுத்துக்கொண்டதை,

**விளர் ஊன் தின்ற வீங்குசிலை மறவர்**
**மை படு திண் தோள் மலிர வாட்டி,**
**பொறை மலி கழுதை நெடு நிரை தழீஇய**
**திருந்து வாள் வயவர் அருந் தலை துமித்த**
**படு புலாக் கமழும் ஞாட்பில், துடி இகுத்து,**
**அருங் கலம் தெறுத்த பெரும் புகல் வலத்தர்,**
**வில் கெழு குறும்பில் கோள் முறை பகுக்கும்**
**கொல்லை இரும் புனம் (அகம். 89:10-17)**

என்னும் பாடல்வரிகள் எடுத்துக்கூறுகின்றன.

துணைப்படைகளுடன் வரும் அரசர்களையும் சிலை மர நாணின் ஒலியால் புறமுதுகிடச் செய்யும் மறவர்கள், வில் ஏற்றுவதை நாணும் செயல் என்று கருதினர். துடி ஒலியையும், வலிய பார்வையினையும், முறுக்குண்டு தாழ்ந்த தாடியினையும் உடைய மறவர்கள், சினமுடையவர்கள், வழிச் செல்வோரிடத்து பொருளைப் பெற்றுக் கொண்டு அதற்கு ஈடாகப் புண்ணைக் கொடுக்கக்கூடிய அன்பு இல்லாதவர்[203] என்று கலித்தொகை குறிப்பிடுவதிலிருந்து, மறவர்கள் அரசர்களை எதிர்க்கக்கூடிய ஆற்றல் பெற்றிருந்ததையும் வழிப்போக்கரைக் கொல்லுவதை வழக்கமாகக் கொண்டிருந்ததையும் அறியமுடிகிறது. அவ்வாறு கொலைசெய்யும் காட்சிகளில் மறவர்களைப் பிற இலக்கியங்களைக் காட்டிலும் கலித்தொகை மிகைப்படுத்திக் காட்டியிருப்பதும் புலப்படுகிறது.

வேட்டைச் சமூகத்தில் எவ்வாறு வேட்டைத் தலைமையின்கீழ் வேடர்கள் வேட்டையாடச் சென்றனரோ அவ்வாரே வழிப்பறிக் கொள்ளையினைக் கண்காணிக்கும் பொறுப்பு இக்குழுவின் தலைவர்க்கு இருந்துள்ளது. அத்தலைவர் வழிப்பறிக்கென்று சில விதிமுறைகளோடு குழுவை வழிநடத்திச் சென்றுள்ளார். அத்தலைவனின் வாழ்க்கைமுறை பற்றியும் அளித்த தண்டனைமுறை குறித்தும் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

வில்லையுடைய மறவர்களின் தலைவன், கள் விற்கும் வீட்டின்கண் தன்னுடைய மனையில் உள்ள காட்டு யானையின் கொம்பினைச் சுட்டிக்காட்டி, அவற்றை எடுத்து வரும்படித் தம்முடைய புதல்வரின் புல்லிய தலையினைத் தடவி ஏவியதை,

செல்சாத்து எறியும் பண்புஇல் வாழ்க்கை
வல்வில் இளையர் தலைவர், எல்உற,
வரிகிளர் பணைத்தோள், வயிறுஅணி திதலை,
அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பில்,
மகிழ்நொடை பெறஅ ராகி, நனைகவுள்

கான யானை வெண்கோடு சுட்டி,
மன்றுஓடு புதல்வன் புன்தலை நீவும்
அருமுனைப் பாக்கத்து (அகம். 245:6-13)

என்னும் அகநானூற்றுப் பாடல் குறிப்பிட்டுள்ளது. இப்பாடல், மறவர் குழுத் தலைவனின் வாழ்க்கையில் நிலவிய பொருளாதார நிலையை எடுத்துரைக்கின்றது. அக்குழுத் தலைமையின் கீழ் வழிப்பறிக்கொள்ளை நடந்துள்ளதை,

கைப்பொருள் இல்லை ஆயினும், மெய்க் கொண்டு
இன் உயிர் செகாஅர் விட்டு அகல் தப்பற்குப்
பெருங்களிற்று மருப்பொடு வரி அதள் இறுக்கும்
அறன் இல் வேந்தன் ஆளும்
வறன்உறு குன்றம் பல விலங்கினவே! (அகம். 109:11-15)

என்ற பாடல்வரிகள் தெரிவிக்கின்றன. ஆறலைக் கள்வர் வழியிடையே வந்தவர்களிடம் பொருள் இல்லை எனின் அவர்களைக் கொல்லாது விடுவதுமுண்டு. அவ்வாறு கொல்லாதுவிட்ட தவறுக்காக இளையோர், தலைவனுக்குத் தண்டமாக யானையின் தந்தம், புலியின்தோல் ஆகியவற்றைக் கொடுத்துள்ளனர். இது குழு மரபாகக் காணப்படுகின்றது. மேலும், வழிப்பறிக் கொள்ளையை எவ்வித தளர்வும் இன்றி மிகச்சரியாகச் செய்யத்தூண்டும் வகையில் குழுவை நடத்திச்சென்ற குழுத்தலைவன், தண்டம் என்ற செயல் மூலமாக மறவர்களை முழுமையாக வழிப்பறிக்கொள்ளைக்கு மாற்றியிருப்பதையும் அறியமுடிகின்றது.

### ஆநிரை கவர்தல்

மறவர்கள் செய்த ஆநிரைகவரும் போர், பாலை நிலத்திலும் ஊரின் அருகாமையிலும் நடைபெற்றதாகச் சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.

ஆநிரையைக் கவர்ந்துவந்த வீரர்கள், காட்டில் கரந்தையரின் வரவிற்காகத் தலை மறைத்திருந்தனர்[204] என்றும் ஊர் அருகாமையில் நடந்த போரில் ஆநிரையைக் கவர்ந்த மறவர்கள் கரந்தை வீரர்களின்மீது அம்பினை வெள்ளமென எய்தினர்[205] என்றும் குறிப்பிடப் பட்டிருப்பதிலிருந்து ஆநிரை கவரும் போர் நடைபெற்ற இடத்தை அறியமுடிகிறது. அத்தகைய போரில் ஆநிரைகளைக் கவர்ந்த வெட்சி வீரர்களின் அம்பு எய்தினமையால் கரந்தை வீரர்கள் இறந்துபட்டனர்[206]. அவர்களுக்கு நடுகல் எடுக்கப்பட்டு வழிபாடு செய்யப்பட்டிருப்பதைப் பல பாடல்களில் காணலாம். வெட்சியார் பசுக்கூட்டங்களை ஒருங்கே கவர்ந்து வந்துள்ளனர். அவற்றால் அவர்களுடைய சிற்றூர்களில் ஆரவாரம் மிகுந்திருந்தன. அவற்றை அகநானூறு பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது.

கரந்தையரின் கன்றுகளைக் காணாது துன்பப்பட்ட பசுக்களை ஒருங்கே கொண்டுவந்து அடைத்த கடிது செல்லும் கால்களையுடைய வெட்சி வீரர்களின் கல்லென்னும் ஆரவாரத்தையுடைய சிற்றூர்[207]என்பதிலிருந்து மறவர்கள் கூட்டமாக ஆநிரைக் கவர்ந்து வந்த போர் குறித்தறியமுடிகிறது. மேலும், மறவர்கள் பல முறை ஆநிரை கவர்ந்தமையால் அங்கு வாழ்ந்த மக்கள் இடம்பெயர்ந்து ஊரை விட்டுச் சென்றிருக்கின்றனர். இதனை,

**--------------------- வீங்குசிலை, மறவர்**
**பல்ஊழ் புக்குப் பயன்நிரை கவர,**
**கொழுங்குடி போகிய பெரும்பாழ் மன்றத்து,**
**நரைமூ தாளர் அதிர்தலை இறக்கி,**
**கவைமனத்து இருந்தும் வல்லுவனப்பு அழிய,**
**வரிநிறச் சிதலை அரித்தலின், புல்லென்று,**
**பெருநலம் சிதைந்த பேஎம்முதிர் பொதியில்**

**(அகம். 377:4-10)**

என்ற பாடலால் அறியமுடிகிறது. மறவர்கள் ஆநிரை கவரும் போரினை வழிப்பறிக் கொள்ளைபோன்று தொடர்ச்சியாகச் செய்துவந்திருப்பது மேற்காணும் செய்திகளிலிருந்து தெற்றனத் தெரிகின்றது. மேலும், தங்களுக்காக ஆநிரை கவர்ந்த மறவர்கள் பிறருக்காகவும் ஆநிரை கவரும் போரினைச் செய்திருப்பது மேற்கூறிய கருத்திற்கு வலுசேர்க்கும் விதமாக அமைந்துள்ளது. இத்தகைய போரில்

மறவர்கள் படை வீரர்களாகச் சுட்டப்பட்டிருப்பது சங்க இலக்கியத்தின் வழி புலப்படுகின்றது. மறவர்கள் எழினியின் கீழ்ப் படைவீரர்களாக இருந்து பகைவர்களுடைய ஆநிரைகளைக் கவர்ந்து வந்து அவனிடம் கொடுத்தனர்[208] என்றும், மறவர் படையுடைய பாணன் என்பான் போரில் புறமுதுகிடாதவன். இறைச்சி உணவை மிகுதியாக உடையவன். அவன் மூங்கில் குழாயில் உணவினை உடைய மறவர் பலரைத் தன் படையொடு சென்று ஆக்களைப் பாதுகாத்து வாழும் மிக்க உணவினைக் கொண்ட அரண்களில் உள்ள ஆக்களைக் கவர்ந்து வருவான்[209] என்றும் குறிப்பிடப்பட்டிருப்பதிலிருந்து எழினி, பாணன் ஆகியவர்களுக்கு மறவர்கள் படையினராகச் சென்று ஆநிரை கவர்ந்து வந்திருப்பது புலப்படுகின்றது. மறவர்கள் வழிப்பறியில் பெற்ற பொருள்களைப் பலருக்குப் பகிர்ந்து கொடுத்துள்ளனர். ஆனால் பிற இடங்களிலிருந்து கவர்ந்துவரப்பட்ட ஆநிரைகளை இவர்கள் பகிர்ந்து கொண்டதற்கானச் சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. அவ்வாநிரைகளை என்ன செய்தனர் என்பதையும் தெரிந்துகொள்ள இயலவில்லை.

மேலும், சங்கப் பாடல்கள் மறவர்களைப் படைவீரர்களாகவும் குறிப்பிட்டுள்ளது. புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய இலக்கியங்கள் மறவர்களை வாள், வில், வேல் முதலிய கருவிகளை வைத்திருக்கும் படை வீரர்களாகவும், சினமுடையவர்களாகவும், போரில் புறமுதுகிடாதவர்களாகவும், வெற்றிபெறும் படையினராகவும் அடையாளப்படுத்தியுள்ளன.

### உணவு

மறவர்கள் நிறைந்த உணவு பெற்றவர்கள் இல்லை. வழிப்பறி செய்தாலும், ஆநிரைகளைக் கவர்ந்தாலும் உணவு நிறைவு இம்மக்களிடம் காணப்படவில்லை என்றே கூறலாம். பாலைத்திணை மக்கள் இத்தகைய தொழில்களில் ஈடுபடுவதற்கு உணவு பற்றாக்குறையின் காரணமே என்பது பலரின் கருத்தாகும். அவர்களுடைய உணவு முறையை நற்றிணை 33-ஆம் பாடல் குறிப்பிட்டுள்ளது. அவற்றில், பிளவுபட்ட நீண்ட மலைச் சாரலில் வன்னிலத்தில் அமைந்த சிறுகுடியில் அச்சம் மிக்கு இருக்கும். அங்குப் பொலிவழிந்த பொதியில் கல்லையுடைய குழிகளில் கலங்கல் நீர் இருக்கும். அக்கலங்கல் நீரைக் கொண்டு வந்து, நிறைந்த மழைநீரைக் கண்டறியாதவரும், குறைந்த உணவையுடையவரும், இரவில் துவர்நிற ஆடையை அணிந்தவரும், செவ்விய அம்புடையவருமான ஆறலைக் கள்வர் உண்டுள்ளனர். மேலும், வழிப்பறிக்காகக்

காத்திருந்த மறவர்கள் இளைப்புதீர காட்டு வழிப்போக்கரை மறித்துப் பொருளைப் பறித்து கூட்டாக உண்டதைக் குறுந்தொகை[210] தெரிவிக்கின்றது.

பாலை நிலத்தில், புலி கொன்று தின்றுவிட்டு எஞ்சிய யானையின் ஊனை ஆரவாரம்மிக்க ஆறலைக்கும் வீரர்கள் தம் கோலில் கோர்த்துக் கொண்டுச் சென்றுள்ளதை,

**புலிதொலைத்து உண்ட பெருங்களிற்று ஒழிஊன்**

**கலிகெழு மறவர் காழ்க்கோத்து ஒழிந்ததை (அகம். 169:3-4)**

என்ற வரிகளால் அறியமுடிகிறது. இவ்வாறு பெற்ற இறைச்சியும் மறவர்களுடைய உணவாக இருந்துள்ளது.

முல்லை நிலம் சூழ்ந்த குன்றின் அடிவாரத்தில் உள்ள சிற்றூரில், தெறித்து எய்யும் அம்பினையும், இழுத்துக்கட்டிய நாணில் வில்லினையுடைய மறவர்கள், தினை கொண்டு சமைத்த கள்ளினை உண்டு, வேட்டை மேற்சென்று உண்டுள்ளதை,

**புன்புலம் தழீஇய பொறைமுதல் சிறுகுடி,**

**தினைக்கள் உண்ட தெறிகோல் மறவர்,**

**விசைத்த வில்லர், வேட்டம் போகி,**

**முல்லைப் படப்பைப் புல்வாய் (அகம். 284:7-10)**

என்ற பாடல்வரிகளால் அறியலாம்.

பாலை நில மக்கள் பிறமக்களைப் போன்று உழுது உண்போர் அல்லர். இருப்பினும் அவர்களுடைய வில்லை ஏராகக் கொண்டு வாழ்க்கை நடத்துவதால் வில்லேர் உழவர் எனப்பட்டனர். வில்லேர் உழவர்கள் உழாமல் வில்லைக்கொண்டு வாழ்க்கை நடத்தியிருப்பினும் உணவு சேகரிப்பு வாழ்க்கையையும் கொண்ட இம்மக்கள் எயினர்கள் புல்லரிசியை சேகரிப்பதுபோன்று எறும்பு சேகரித்த அரிசியை உணவாகக் கொள்ளும் தன்மையுடையவர்களாக இருந்துள்ளனர். ஆதலால் இம்மக்கள் உணவு ‘வித்தா வல்சி’ என்று அழைக்கப்பட்டிருப்பதை,

**கோடை நீடலின், வாடுபுலத்து உக்க**

**சிறுபுல் உணவு, நெறிபட மறுகி,**

**நுண்பல் எறும்பி கொண்டுஅளைச் செறித்த**

**வித்தா வல்சி, வீங்குசிலை மறவர் (அகம். 377:1-4)**

என்ற அகநானூற்றுப் பாடல்வரிகளால் அறியலாம். எறும்பு சேகரித்து வைத்த புல்லரிசியை உணவாகக் கொள்ளக்கூடியவர் இம்மக்கள் என்பதிலிருந்து, இவர்களின் உணவில் இருந்த பற்றாக்குறை குறித்து அறிந்துகொள்ள முடிகிறது.

**இருப்பிடம்**

மறவர்கள் வாழ்ந்த ஊர் மிகவும் வறண்டு காணப்பட்டது. அத்தகைய சூழல் விளக்கங்களைப் பல பாடல்களில் காணமுடிகிறது.

**'அருள் அன்று ஆக, ஆள்வினை, ஆடவர்**
**பொருள்' என வலித்த பொருள் அல் காட்சியின்**
**மைந்து மலி உள்ளமொடு துஞ்சல் செல்லாது,**
**எரி சினம் தவழ்ந்த இருங் கடற்று அடைமுதல்**
**கரி குதிர் மரத்த கான வாழ்க்கை,**
**அடு புலி முன்பின், தொடு கழல் மறவர்**
**தொன்று இயல் சிறுகுடி மன்று நிழற் படுக்கும்**
**அண்ணல் நெடு வரை (அகம். 75:1-8)**

எனும் பாடல், மறவர்களின் வாழ்க்கையைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றது. அறிவிலா ஆடவர், உண்மைப் பொருள் அருள் அன்று, ஆள் வினை என்று ஊக்கம் கொண்ட உள்ளத்தொடு, கானகத்தில் புலிபோலும் வலிமையும், கழலுமுடையவர்கள். அத்தகைய வீரர்கள் பழைமை வாய்ந்த தமது சிற்றூரில் மன்றத்து நிழலிலே படுத்து உறங்குவர். அத்தகைய ஊர் உள்ள வழி மலையுடையது, நீரில்லாது காய்ந்த கல்நிறைந்த வழிகளையுடையதாய் இருந்தது. இத்தகைய விளக்கங்கள் மறவர்கள் வாழ்ந்த பகுதியினையும் அவர்களுடைய வாழ்வியற் சூழல்களையும் எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

**மழவர்**

சங்க இலக்கியத்தில் பாலை என வருணிக்கப்பட்ட நிலங்களில் வாழ்ந்தவர்களுள் மழவரும் அடங்குவர். மழவர் என்ற இனம் குறித்த பதிவை ஆநிரைகளைக் கவர்ந்திருப்பதிலிருந்து திரட்ட வேண்டியுள்ளது.

## மழவர் தோற்றம்

வேட்டைச் சமூகங்களுக்கே உரிய வருணனைகளே மழவர்களுடைய தோற்றம் பற்றிய விளக்கங்களிலும் இடம்பெற்றுள்ளது. மழவர்கள், ஆட்டுக்கிடாயின் கொம்பினைப் போன்று சுற்றிச் சுருண்ட பிடரியையும் மறைக்கும் தலைமயிரினையும், சிவந்த கண்களையும் கொண்டிருந்ததை,

> **தகர் மருப்பு ஏய்ப்பச் சுற்றுபு, சுரிந்த**
> **சுவல் மாய் பித்தை, செங்கண், மழவர்**
> **.....**
> **அடி புதை தொடுதோல் பறைய ஏகி (அகம். 101:4-9)**

எனும் பாடல் குறிப்பிட்டுள்ளது. மேலும், மழவர்கள் தோலால் ஆகிய செருப்பினை அணிந்திருந்ததையும் சுட்டியுள்ளது. காடுகளில் சுற்றித் திரிந்த மழவர்கள் பாதுகாப்பிற்காகச் செருப்பு அணிந்திருந்ததால் செருப்புடை அடியர்[211] என்றே குறிப்பிடப்பட்டுள்ளனர்.

மழவர்கள் மாலைகள் அணியும் மரபுடையவர்கள். மலர், மயில் தோகை ஆகியவற்றினாலான மாலையை அணிந்திருக்கின்றனர். மழவர் குறித்து ஒரு பாடல்,

> **ஒல்லாச் செந் தொடை ஒரீஇய கண்ணிக்**
> **கல்லா மழவர் வில்லிடை விலங்கிய**
> **துன் அருங் கவலை அருஞ் சுரம் (நற். 387:3-5)**

என்பதாகக் குறிப்பிட்டுள்ளது. தம்முடைய தொழிலன்றிப் பிறதொழில் தெரியாதவருமாகிய மழவர்கள் மாலை சூடியவராய் நாணில் பொருந்தாத அம்புகளை காட்டில் விடுத்தனர் என்பதில், மழவர்கள் மாலையில் இடம்பெற்ற பூ பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. அவர்கள் வெண்கடம்பப் பூவால் ஆகிய மாலையை அணிந்ததாக அகநானூற்றுப்பாடல்[112] தெரிவிக்கின்றது. சங்க இலக்கியத்தில் நடுகல் வழிபாடு பற்றிய குறிப்புகளைப் பல பாடல்களில் காணலாம். அவ்வழிபாட்டில் மயிற்தோகையினாலான மாலையை நடுகல்லுக்குச் சூட்டுவது வழக்கமாகப் பின்பற்றப்பட்டுள்ளது. அத்தகைய மயிற்தோகையினால் ஆன மாலையை மழவர்களும் அணிந்துள்ளனர். இதனை,

> **தோகைத் தூவித் தொடைத்தார் மழவர் (அகம். 249:12)**

என்ற பாடல்வரி மூலம் அறியமுடிகிறது.

மழவர்கள் இருமலைப்போக்க, வாயில் புற்று மண்ணை அடக்கிக்கொள்ளும் பழக்கம் உடையவர்களாக இருப்பதை,

**வாய்ப் பகை கடியும் மண்ணொடு கடுந் திறல் (அகம். 101:6)**

என்னும் வரியால் அறியமுடிகிறது. இத்தகைய செயல், மழவர் மருத்துவமாகவும் அல்லது எதிரிகளிடம் தங்களைக் காட்டிக்கொடுக்கக்கூடிய இருமலை தவிர்க்கும் உத்தியாகவும் இருந்திருக்கலாம்.

## ஆநிரை கவர்தல்

மழவர்கள் உழவுத் தொழிலைப்போன்று களவுத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இதற்காகக் கலைமான்கள் தங்கும் கறிய கற்குவியல்களைப் பயன்படுத்திக் கொண்டுள்ளனர்[213]. மழவர்கள் ஆநிரை கவரும் தொழிலை வாழ்வாதாரமாகக் கொண்டிருந்தனர். அதற்காக வில், அம்பு ஆகிய கருவிகளை உடன் வைத்திருந்தனர். காடுகளிலும், சிற்றூர்களிலும் நிரைகவரும் தொழிலைச் செய்துள்ளனர். இதனை, பின்வரும் குறிப்புகளால் அறியலாம்.

மழவர்கள் காடுகளில் சிறிய நிழலில் தங்கிப் பசுவினைக் கொன்றதோடல்லாமல் அவ்விடத்திலேயே அப்பசுவின் இறைச்சியைத் தின்றதை,

**பல்பூங் கானத்து அல்குநிழல் அசைஇ,**
**தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்**
**நாகுஆ வீழ்த்து, திற்றி தின்ற**
**புலவுக்களம் துழைஇய துகள்வாய்க் கோடை**

**(அகம். 249:11-14)**

என்ற பாடல்வரிகள் மூலம் அறியமுடிகிறது. மழவர்கள் காடுகளில் மட்டுமல்லாது சிற்றூர்களுக்கும் சென்று ஆநிரைகளைக் கவர்ந்து வந்து உண்டுள்ளனர். இதனை,

**கலங்குமுனைச் சீறூர் கைதலை வைப்ப,**
**கொழுப்புஆ தின்ற கூர்ம்படை மழவர்,**
**செருப்புடை அடியர், தெண்சுனை மண்டும்**
**அருஞ்சுரம் (அகம். 129:11-14)**

என்ற பாடல் தெரிவிக்கின்றது. மேலும், கூர்மையானப் படைக்கலன்களையுடையவரும் செருப்பினை அணிந்தவருமான மழவர்கள், பருத்திக்கொட்டைகளை உணவாக உண்ணும் வறுமையுடைய பெண்களுள்ள சிற்றூர் கலங்கும்படி அவர்களுடைய ஆநிரைகளைக் கவர்ந்து வந்ததைக் குறிப்பிடுகின்றது. கவர்ந்து வந்த ஆநிரைகளில் கொழுவிய பசுவினை அறுத்துத் தின்றனர். அதனால் ஏற்பட்ட தாகத்திற்குச் சுனை நீரினை அருந்தியதை,

**வயவாள் எறிந்து, வில்லின் நீக்கி**
**பயநிரை தழீஇய கடுங்கண் மழவர்,**
**அம்புசேண் படுத்து வன்புலத்து உய்த்தென,**
**தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்**
**கொழுப்புஆ எறிந்து, குருதி தூஉய்,**
**புலவுப்புழுங்கு உண்ட வான்கண் அகல்அறை (அகம். 309:1-6)**

என்னும் பாடல் மூலம் அறியமுடிகின்றது. மழவர்கள் பால்தரும் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துச் சென்றபோது எதிர் நின்ற கரந்தை வீரர்களை வாள்போரினாலும், அம்புகளை எய்தும் காட்டில் நெடுந்தொலைவு விரட்டியடித்துள்ளனர். பின்னர், தெய்வம் தங்கிவாழும் பருத்த அடிமரத்தையுடைய வேப்பமரத்தடியில், கவர்ந்து வந்த ஆநிரைகளில் கொழுவிய ஒன்றைக் கொன்று, அதன் குருதியை மரத்தின் மீது தெளித்துள்ளனர். அத்துடன் இறைச்சியைச் சமைத்து உண்டதாக மேற்காணும் பாடல் குறிப்பிட்டுள்ளது.

மழவர்கள் இரவு நேரங்களில் சென்று ஆநிரை கவருவர். காடுகளில் உள்ள அரண்களில் தங்கவைக்கப்பட்டுள்ள ஆநிரைகளைப் பாதுகாப்பவர்கள் அலறுமாறு, அவர்களைக் கொன்று அவர்களுடைய ஆநிரைகளைக் கைப்பற்றிக் கொண்டு வந்துள்ளனர்.

**இரவுக் குறும்பு அலற நூறி, நிரை பகுத்து,**
**இருங் கல் முடுக்கர்த் திற்றி கெண்டும்**
**கொலை வில் ஆடவர் (அகம். 97:4-6)**

எனும் பாடல், மழவர்கள் கவர்ந்து கொண்டுவந்த ஆநிரைகளை தமக்குள் பகுத்துக்கொண்டு, பெரிய கற்பாறையின் முடுக்கரிலே அவற்றின் தசைகளைத்

தின்னுவதற்குக் கூடியிருக்கும் கொலைத்தொழில் வல்ல ஆடவர்களாகக் குறிப்பிட்டுள்ளது.

இதுவரை பார்த்த பாடல்கள் அனைத்திலும், ஆநிரைகளைக் கவர்ந்த மழவர்கள் அந்த சமயமே அவற்றைக் கொன்று உண்டுள்ளனர். அடுத்ததாக ஒரு பாடலில், அதன் குருதியை வேப்பமரத்திற்கு தெளித்துவிட்டு, இறைச்சியை சமைத்து உண்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு இரத்தத்தை வேப்ப மரத்திற்குத் தெளித்த செயல் வேட்டையில் வளம்வேண்டி செய்யப்பட்ட வளமைச்சடங்காக விளங்குகிறது என்பர் மானிடவியல் அறிஞர்கள். மேலும், மழவர்கள் கைப்பற்றிய ஆநிரைகளைத் தங்களுக்குள் பகுத்துக்கொண்டு அங்கேயே உண்டுள்ளனர். அவ்வாறெனில் மழவர்கள் தங்களுடைய உணவுத்தேவையை நிறைவேற்றும் பொருட்டாக மட்டுமே ஆநிரைகளைக் கவர்ந்திருப்பது புலப்படுகின்றது. ராஜ் கௌதமன் அவர்கள், மழவர்கள் இறைச்சிக்காக ஆநிரைக்கவர்ந்து செல்லும் தன்மையுடையவர்கள் என்றும் சங்க காலத்தில் ஆநிரை கவர்ந்து அந்தந்த இடங்களில் அறுத்துச் சுட்டுத் தின்று பசியாற்றிய வேடர்களின் செயல்பாட்டை நோக்கினால், இவர்கள் வேட்டையாடி அலைந்து திரியும் (nomadic) வாழ்க்கை முறையில் வாழ்ந்தவர்கள் என்பதை அறியலாம். வேட்டையோடு கொன்று தின்னும் (predation) பழைய நடவடிக்கையிலிருந்து இவர்கள் முற்றிலும் மாறாத நிலையிலிருந்தார்கள்[214] என்றும் குறிப்பிட்டிருப்பது மேற்சொன்ன கருத்திற்கு வலுசேர்க்கும் விதமாக அமைந்துள்ளது. மேலும், வேட்டையில் கிடைத்ததை உடன் கொன்று உண்பவர்களாகவும், தம்முடைய குழுவிற்குப் பங்கிட்டுக் கொடுக்கும் பழைய வேட்டை முறையையும் மழவர்கள் கொண்டிருந்ததாகவும் கூறுகின்றார். மேற்கூறிய கருத்திற்கு அரண்செய்யும் வகையில், மழவர்கள் காடுகளில் சமைத்து உண்ட செயல் அமைந்துள்ளது.

உமண் சாத்துக்கள் சமைத்து கைவிட்டுச்சென்ற அடுப்பினைப் பயன்படுத்தி மழவர்கள் ஊன் சமைத்துண்டுள்ளதை,

**உமண்சாத்து இறந்த ஒழிகல் அடுப்பில்,**

**நோன்சிலை மழவர் ஊன்புழுக்கு அயரும் (அகம். 119:8-9)**

என்ற பாடல்மூலம் அறியமுடிகிறது.

மழவர்கள், ஆநிரைகளை மேய்க்கும் இனக்குழுக்களிடமிருந்து ஆநிரைகளை மட்டும் கவரவில்லை. அவர்களுடைய பாற்படு தொழிலுக்குப் பயன்படக்கூடிய புழங்கு பொருட்களையும் கவர்ந்துச் சென்றுள்ளதை,

---------------- மழவர்

**தீப் படு சிறு கோல் வில்லொடு பற்றி,**

**நுரை தெரி மத்தம் கொளீஇ, நிரைப் புறத்து**

**அடி புதை தொடுதோல் பறைய ஏகி,**

**கடி புலம் கவர்ந்த கன்றுடைக் கொள்ளையர்**

**(அகம். 101:5-10)**

என்னும் வரிகளால் அறியமுடிகிறது. இரவுநேரத்தில் நெருப்பு உமிழும் சிறிய அம்பினை உடைய மழவர்கள் தயிரைக் கடையும் மத்தினைக் கவர்ந்துகொண்டு, செருப்புக்காலடி மறைய நடந்துச்சென்று, காவல்மிகுந்த இடங்களிலுள்ள கன்றுடைய ஆநிரைகளைக் கொள்ளையடித்து, பெருங்காட்டிற்குக் கொண்டுச் சென்றுள்ளனர். இப்பாடலில், மழவர்கள் ஆநிரைகளைக் கொன்று தின்றதற்கான தகவல்கள் இல்லை. மாறாக, தயிர்கடையும் மத்தினையும் கவர்ந்துச் சென்றிருப்பது ஆய்வுக்குறியது. இறைச்சியை மையமாகக் கொண்டு ஆநிரைகளைக் கவர்ந்த மழவர், அவற்றைப் பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டு, அதிலிருந்து பெறப்படும் பாற்படு பொருளைத் துய்க்கும் பயனாளிகளாக அல்லது உடைமையாளர்களாக மாற எண்ணியிருக்கலாமோ என்ற ஐயம் ஏற்படுகின்றது.

மழவர்கள் ஆநிரைகளைக் கவர்ந்துச் செல்லும்போது ஆநிரைகளுக்குரிய குழுக்கள் போரிட்டு, மீண்டும் தங்களுடைய நிரைகளைத் திருப்பி அழைத்துக்கொண்டுச் சென்ற நிகழ்வுகளும் நடைபெற்றுள்ளன. இதனை,

**தனி மணி இரட்டும் தாளுடைக் கடிகை,**

**நுழை நுதி நெடு வேல், குறும் படை, மழவர்**

**முனை ஆத் தந்து, முரம்பின் வீழ்த்த**

**வில் ஏர் வாழ்க்கை விழுத் தொடை மறவர்**

**வல் ஆண் பதுக்கைக் கடவுட் பேண்மார் (அகம். 35:2-7)**

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகிறது. ஆநிரைகளைக் கவர்ந்துவந்த மழவர்களிடமிருந்து மீட்ட செய்தியை அகநானூறு 131,269-ஆகிய பாடல்கள் தெரிவிக்கின்றன.

சங்க இலக்கியத்தில் மழவர் என்ற சொல் பல்வேறு கருவிகளையுடைய படையினரைக் குறிக்கவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. வெம்போர் மழவர்[215], வெள்வேல் மழவர்[216], நெடு வேல் மழவர்[217], நோன்சிலை மழவர்[218], கூர்ம்படை மழவர்[219], பெருந்தோள் மழவர்[220], என்று கருவிகளோடு அடையாளப்படுத்தப்பட்டுள்ள மழவர், ஏன் தங்களுடைய வீரத்தையும் வலிமையையும் பயன்படுத்தி படை வீரர்களாகவும் இருந்திருக்கக்கூடாது என்பது ஆய்வுக்குரியது.

நற்றிணை 52-ஆம் பாடல், மழவர்களுடைய தலைவன் ஓரி என்று குறிப்பிட்டுள்ளது. அவ்வாறே அதியமானும் மழவர் படையைப் பெற்றிருந்ததாகப் பாடப்பட்டுள்ளது[221]. மதுரைக்காஞ்சி மழவர்களை ஒருவகைப் படைவீரர்களாக அறிமுகம் செய்துள்ளது. இக்கருத்திற்கு அரண் செய்வதாக பதிற்றுப்பத்து அமைந்துள்ளது.

**குவியல் கண்ணி மழவர் மெய்ம்மறை! (பதிற். 21:24)**

என்னும் வரி, பல போர்க்கண்ணியெல்லாம் தம் தோளின் மேலே கவிந்திருக்கக்கூடிய மழவர் என்னும் வீரர்களுக்கு கவசம் போன்றவன் சேரன் என்ற பொருண்மையில் மழவர்களை வீரர்களாகக் காட்டுகின்றது.

பதிற்றுப்பத்து 55-ஆம் பாடல், மழவர் உணவு பற்றிய செய்தியைத் தெரிவிக்கின்றது. அச்செய்தி இறைச்சியைக் குறிக்கோளாகக் கொண்டு ஆநிரைகளைக் கவர்ந்த மழவர்களை நினைவூட்டுவதாக அமைந்திருப்பதோடல்லாமல் அவர்களை வீரர்களாகவும் அடையாளப்படுத்தியுள்ளது.

**செவ் ஊன் தோன்றா, வெண் துவை முதிரை,**
**வால் ஊன் வல்சி மழவர் மெய்ம்மறை! (பதிற். 55:7-8)**

எனும் பாடலில், சிவந்த இறைச்சி தனியே தெரியாத அளவிற்கு வெள்ளிய துவையலையும் அவரை, துவரை முதலியவற்றைக் கலந்த வெள்ளிய நிணத்தையுடைய இறைச்சியாகிய உணவையுமுடைய மழவர்களுக்குக் கவசம் போன்றவனே என்று சேரன் அழைக்கப்பட்டுள்ளான். இப்பாடல் வரிகளின்மூலம் மழவர்கள் உணவு

பழக்கத்தில் இறைச்சி பெற்றிருந்த முக்கியத்துவத்தை அறியமுடிகிறது. மேலும், மழவர்கள் வீரர்களாகவும் இருக்கின்றனர்.

பாலை நிலங்களில் உணவிற்காக போரிட்ட மழவர்கள் ஏன் தம்முடைய வீரத்தை மூலாதாரமாகக் கொண்டுப் படை வீரர்களாக இருந்திருக்கக் கூடாது. இனக்குழு வாழ்க்கையை மேற்கொண்டிருந்த மழவர்கள் அரசுடைமையாக்கத்தின் எதிரொலியாக, வாழ்வாதாரத்திற்காகப் படைவீரர்களாக மாறியிருப்பதற்கு அதிக வாய்ப்புகள் இருப்பதைப் புறப்பாடல்களில், சீறூர் மன்னர்களின் வேந்துவிடு தொழில்கள் எடுத்துக்காட்டுகின்றன.

## வடுக வேடர்

திருவேங்கடமலையின் வடதிசையில் வடுக வேடர்கள் வாழ்ந்துள்ளனர். இப்பகுதி சங்க இலக்கியத்தில் மொழிபெயர்த் தேயம் என்று அழைக்கப்பட்டுள்ளது. பாலை நிலத்தில் வேட்டையை வாழ்வாதாரமாகக் கொண்டு வாழ்பவர்களில் வடுக வேடர்களும் குறிப்பிடத்தக்கவர்கள்.

## வடுகர் நாடு

வடுகர் வாழ்ந்தபகுதி பாலை நிலச் சூழலை விளக்குவதாக அமைந்திருக்கின்றது. வடுகர் நாடு நீரில்லாது, நிழல் இல்லாது வெப்பமானதாக இருந்துள்ளதை,

> **---------------- வடுகர் தேஎத்து,**
> **நிழற்கவின் இழந்த நீர்இல் நீள்இடை**
> **அழல்அவிர் அருஞ்சுரம் (அகம். 213:8-10)**

என்ற பாடல் விளக்குகின்றது.

வடுகர் வாழ்ந்த நிலம்பற்றி நற்றிணை, கணத்துள் பறவை ஒலியெழுப்பி புதியவரை காட்டிக்கொடுக்கும் காட்டு வழியில், வடுகர்கள் தங்குகின்ற நெடிய பெரிய குன்றம் உள்ளது[222] என்று குறிப்பிடுவதிலிருந்து வடுகர்கள் வாழ்ந்த நிலப்பகுதியின் தன்மை விளங்குகின்றது.

வடுகர்கள் தமிழக வேடர்களிலிருந்து மொழியால் வேறுபட்டவர்களாக அடையாளப் படுத்தப்பட்டுள்ளனர். இவர்கள் வாழ்ந்த பகுதி, தமிழக மக்களுடைய

பார்வையில் வேற்றுமொழி நாடு என்று பல சூழல்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. இந்நாடு, மொழி பெயர்தே எம்[223] என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

வடுகர்கள் வாழ்ந்த நாடு, அதன் தலைவன்பற்றிய குறிப்பு அகநானூற்றில் இடம்பெற்றுள்ளது. அவற்றில் எருமை என்பவன் புகழ்வாய்ந்தவன்; வலிமையுடையவன்; வடுகர் பெருமகன்; வடதிசையிலுள்ள பசுக்கூட்டங்களைக் கவர்ந்து, பகைவரை அழித்தவன்; அவனுடைய நாட்டில் அயிரி என்னும் ஆறு உள்ளது என்று பாடப்பட்டுள்ளது.

**நேரா வன்தோள் வடுகர் பெருமகன்,**
**பேர்இசை எருமை நல்நாட்டு உள்ளதை, அயிரியாறு**
**(அகம். 253:18-20)**

எனும் பாடல், வடுகர் தலைவன் எருமை என்பதும், அவர்கள் வாழ்ந்த நாடு எருமை நல் நாடு என்பதும், அவர்களுக்கு ஆநிரை கவர்தல் முக்கியத் தொழிலாக இருந்ததையும் தெரிவிக்கின்றது.

**வடுகர் தோற்றம்**

வடுகர் பற்றிய தோற்றம் வேட்டையைச் சார்ந்தே எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அவர்களுடைய சுருண்ட மயிரில் காட்டு மல்லிகையினைச் சூடிக்கொண்டு ஆநிரைகளைக் கவரச்சென்றுள்ளனர். கஞ்சங்குல்லையைத் தலைமாலையாக அணிந்துள்ளனர்.

**கொய்குழை அதிரல் வைகுபுலர் அலரி**
**சுரிஇரும் பித்தை சுரும்புபடச் சூடி (அகம். 213:4-5)**

என்றும்,

**குல்லைக் கண்ணி வடுகர் (குறுந். 11:5)**

எனவும் வடுகர் அணிந்த மாலை குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், வடுகர்கள் வேட்டைக்குரிய நாய்களை உடன் வைத்திருந்தனர். எனவே இவர்கள் கதநாய் வடுகர்[224] என்று அழைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் கடுங்குரல் பம்பை[225], கன்றுஉரிக் குடம்பை[226] (தோல்பை) போன்றவற்றையும் வைத்திருந்தனர்.

**வடுகர் தொழில்**

வடுகர்கள் ஆநிரை கவர்தலை முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்ததையும் அப்போருக்காக காட்டு மல்லிகையினைச் சூடும் வழக்கம் அவர்களிடம் இருந்ததையும்,

> **கொய்குழை அதிரல் வைகுபுலர் அலரி**
> **சுரிஇரும் பித்தை சுரும்புபடச் சூடி,**
> **இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை**
> **நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்**
> **வால்நிணப் புகவின் வடுகர் தேஎத்து,**
> **நிழற்கவின் இழந்த நீர்இல் நீள்இடை**
> **அழல் அவிர் அருஞ்சுரம் (அகம். 213:4-10)**

என்னும் பாடல் விளக்குகிறது. மேலும், இப்பாடல் வடுகர் தொழில், நாடு முதலிய செய்திகளைக் கூறுகின்றது. வடுகர்களுடைய தலைவனாகிய எருமை என்பவன், கோவலர்களுடைய தொழுவங்களிலுள்ள ஆநிரைகளைக் கவர்ந்துவந்து தன்னுடைய மன்றத்தை நிரப்பியதை,

> **ஆர்இருள் நடுநாள் ஏர்ஆ உய்ய,**
> **பகைமுனை அறுத்துப் பல்இனம் சாஅய்,**
> **கணம்சால் கோவலர் நெடுவிளிப் பயிர்அறிந்து,**
> **இனம்தலைத் தரூஉம் துளங்குஇமில் நல்ஏற்றுத்**
> **தழூஉப்பிணர் எருத்தம் தாழப் பூட்டிய**
> **அம்தூம்பு அகல்அமைக் கமஞ்செலப் பெய்த**
> **துறுகாழ் வல்சியர் தொழுஅறை வெளவி,**
> **கன்றுடைப் பெருநிரை மன்றுநிரை தரூஉம்,**
> **(அகம். 253:10-17)**

எனும் அகநானூற்றுப்பாடல் குறிப்பிடுகிறது. மேற்காணும் சான்றுகளின்படி வடுகர்களுக்கும் வடுகநாட்டுத் தலைவனுக்கும் ஆநிரைகவர்தல் முக்கியத் தொழிலாக இருந்துள்ளது.

### வடுகர் சோழர் போர்

வடுகர்களுடைய ஆநிரை கவருதல், சோழ ஆட்சியில் ஒடுக்குமுறைக் குள்ளாக்கப்பட்டுள்ளது. அதற்காக வடுகர்கள் சோழர்களுடன் பாழி என்னும் இடத்தில் போர்புரிந்துள்ளனர். அதில், சோழர்கள் வடுகர்களுடைய தலையை அறுத்துக் கொன்றதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

**---------------- சோழர் பெருமகன்**
**விளங்குபுகழ் நிறுத்த இளம்பெருஞ் சென்னி**
**குடிக்கடன் ஆகலின், குறைவினை முடிமார்,**
**செம்புஉறழ் புரிசைப் பாழி நூறி,**
**வம்ப வடுகர் பைந்தலை சவட்டி,**
**கொன்ற யானைக் கோட்டின் (அகம். 375:10-15)**

என்ற பாடலால் அறியமுடிகிறது. இப்பாடல், சோழர்கள் குடிமக்களுடைய நன்மைக்காக வடுகர்களுடன் போரிட்டு அவர்களைக் கொன்றதாகக் குறிப்பிட்டுள்ளது. வடுகர்கள் வடதிசையிலிருந்து எல்லாம் ஆநிரைகளைக் கவர்ந்து வந்துள்ளனர். இவர்களுடைய ஆநிரைகவரும் செயல் சோழ ஆட்சியில் கண்டிக்கப்பட்டதோடு இக்குழுவும் அழிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. மரபாக ஆநிரைக் கவர்ந்து வாழ்ந்துவந்த இனமாகிய வடுக வேடர்குழு வேந்தர்களுடைய ஆட்சியின்போது அடக்குமுறைக்கு ஆளாகியிருப்பதை அறியமுடிகிறது.

### வடுகர் பலி கொடுத்தல்

கள்ளுண்டு ஆரவாரிக்கும் வடுகர்கள்[227], ஆநிரைகளைக் கவர்ந்துவந்த பின்னர் விடியற் காலையில் கள்ளாகிய நறவினைப் பலியாகக் கொடுத்துள்ளனர்.

**நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும் (அகம். 213:7)**

என்பதிலிருந்து, வடுகர்களின் கள் குடிக்கும் பண்பாடும் சடங்கும் புலப்படுகின்றது.

### திருவேங்கட வேடர்

வேடர் இனத்துள் திருவேங்கட வேடரும் குறிப்பிடத்தக்கவர்களாவர். இவ்வேடர் இனம் தாங்கள் வாழ்ந்த பகுதியைக்கொண்டு திருவேங்கட வேடர் என்று அழைக்கப்பட்டுள்ளது. இவர்கள் எருதினைக் கொன்று, அதன் தசையை

நெருப்பிலிட்டு சுட்டுக் கண்டாரை வருத்தும் பேய்களைப்போல அதன் நிணத்தைத் தின்றுள்ளனர். அதனால் உண்டான நீர்வேட்கையைப் போக்க தோப்பி கள்ளினைக் குடித்துள்ளனர். புலால்நாறும் கையினராய், கழுவாத வாயினராய் கோட்டானின் குரலுடன் கூடி வெண்கடப்ப மரங்களுடைய சிற்றூரின்கண் கூத்தாடியுள்ளனர். திருவேங்கட மலையில் உள்ள ஊர், திருவேங்கட வேடர்பற்றிக் கீழ்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

**இன்சிலை எழில்ஏறு கெண்டி, புரைய**
**நிணம்பொதி விழுத்தடி நெருப்பின் வைத்துஎடுத்து,**
**அணங்குஅரு மரபின் பேஎய் போல**
**விளர்ஊன் தின்ற வேட்கை நீங்க,**
**துகள்அற விளைந்த தோப்பி பருகி,**
**குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்**
**புலாஅல் கையர், பூசா வாயர்,**
**ஒராஅ உருள்துடி குடுமிக் குரலொடு**
**மராஅஞ் சீறூர் (அகம். 265:12-20)**

இப்பாடல், திருவேங்கட வேடர் ஆநிரைகளைக் கொன்று தின்றனர் என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து, இவர்கள் ஆநிரை கவர்தல், வேட்டை ஆகிய தொழில்களை வாழ்வாதாரமாகக் கொண்டிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

### எயினர்

வேட்டைத் தொழில் எயினர்களின் வாழ்வாதாரமாக இருந்துள்ளது. எயினர், எயிற்றியர் ஆகிய இருவரின் வாழ்வியலும் சங்கப்பாடல்களில் காணப்படுகின்றன. பாலை நில மக்களுள் இந்த வேட்டைஇனம் மட்டுமே குடும்பமாகக் காட்டப்பட்டுள்ளது. எயினர், வேட்டையாடி வேண்டிய உணவை சேகரிப்பது போன்று எயிற்றியர்களும் உணவு சேகரிக்கும் பணி செய்துள்ளனர். உலகம் தழுவிய நிலையில் வேட்டையாடி உணவு சேகரிக்கும் பொருளாதாரத்தில் வேட்டையாடுதல் ஆண்களுக்கான வேலைப் பகிர்வாகவும், காடுபடு பொருட்களைச் சேகரித்தல் (உணவு சேகரித்தல்) பெண்களுக்கான வேலைப்பகிர்வாகவும் இருந்துள்ளது. செலவழிக்கும் நேரத்தையும், ஈட்டும் பொருட்களால் கிடைக்கும் ஆற்றலையும் பார்க்கும்போது வேட்டுவச் சமூகத்தில் பெண்களின் பங்கே முதன்மையானதாக இருக்கிறது[228] என்னும் பக்தவத்சல பாரதியின்

கருத்து, வேட்டைச் சமூகம் ஆண், பெண் பணிப்பாகுபாட்டில் பெண்களுக்கான இடத்தையும் முக்கியத்துவத்தையும் எப்போதும் நிராகரித்ததில்லை என்பதை எடுத்துக்காட்டுகிறது.

**வேட்டைத் தொழில்**

பாலை நில காடுகளில் உணவிற்காக வேட்டையாடக்கூடிய எயினர்கள் கொடிய வில்லை எப்போதும் வைத்திருந்துள்ளனர். அதனால் இவர்கள் கொடுவில் எயினர் என்று அழைக்கப்பட்டுள்ளனர்.

**கொடு வில் எயினர் கோட் சுரம் படர (அகம்.79:14)**

**கொடுவில் எயினர் குறும்பிற்கு ஊக்கும் (மேலது319:3)**

என்ற வரிகளும் இதனை உறுதி செய்கின்றன. அவர்கள் அணிந்த ஆடை, செந்துவர் நிறமுடையதாக இருந்திருக்கின்றது. இதனை,

**சிலை விற் பகழிச் செந் துவர் ஆடைக்**

**கொலைவில் எயினர் (ஐங்.363:1-2)**

என்னும் வரிகள் குறிப்பிடுகின்றன.

எயினர்கள் முள்ளம்பன்றி முதலிவற்றை வேட்டையாடி உண்டுள்ளனர்[229]. இவர்களுடைய வேட்டையின் திறத்தால் கிடைத்த உணவுகளை, தம்முடைய நிலப்பகுதியை ஆட்சிசெய்த மன்னருக்குக் கொண்டு சென்று கொடுத்துள்ளனர். குடநாட்டு எயினர்கள் காரியாதியின் பொருட்டு வேட்டையாடச் சென்றிருப்பதை,

**---------------- பிணங்கு அரில் குட நாட்டு,**

**எயினர் தந்த எய்ம் மான் எறி தசைப்**

**பைஞ் ஞிணம் பெருத்த பசு வெள் அமலை,**

**வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய (புறம்.177:12-15)**

என்ற பாடலால் அறியமுடிகிறது. செடிகொடிகள் பின்னிய காட்டையுடைய குடநாட்டு எயினர்கள் வேட்டையாடிக் கொண்டுவந்த எய் பன்றித் தசையுடன், செவ்விய நிணமிக்க வெண்சோற்றுக் கட்டியை, வருவோர்க்கெல்லாம் குறைபடாது கொடுத்தான் காரியாதி என்று பாடப்பட்டிருப்பதிலிருந்து, காரியாதிக்காக எயினர்கள் ஆடிய வேட்டைபற்றி அறிந்துகொள்ளமுடிகிறது.

## பத்துப்பாட்டும் எயினர் வாழ்வியலும்

பத்துப்பாட்டில், பட்டினப்பாலை எயினர்கள் மருத ஊர்களுக்குள் சென்று நெற்கூடுகளைக் கொள்ளையடிப்பவர்களாக உள்ளனர். திருமாவளவன் போரிட்ட பின்னர் கொடிய வில்லையுடைய எயினர் பலர், செருப்பு அணிந்த கால்களையுடையவர்களாய்த் துடியைமுழக்கிச் சென்று, நெற்கூடுகளைக் கொள்ளையிட்டுச் சென்றுள்ளனர். அதனால் அந்நெற்கூடுகளில் பகற்பொழுதில் கூகைகள் தங்கியுள்ளன[230]. இத்தகைய கொள்ளை, இந்நூலில் புதிய தொழில் மரபாகக் காணப்படுகிறது.

மதுரைக்காஞ்சி பாலைநிலச் சூழலைப் பாடியிருக்கின்றது. அதில், மூங்கில் காடு அழிந்த நிலையிலும், மலைகளில் அருவி இன்றி வறண்டும், ஊகம்புல் நிறைந்து காணப்படும் காட்டு வழிகள் விளங்கும். குழையால் வேயப்பட்ட குடில்களில், மான் தோல் படுக்கையில் தழை விரவித் தொடுத்தக் கண்ணியையும், கடிய சொல்லுடனும் இளையர், வில்லேந்தி, பல வழிகளில் நின்று ஆறலைக் கள்வர் வராமல் காவல் புரிந்துள்ளனர்[231] என்று பாலை வழியின் இயல்பு குறித்து குறிப்பிடப்பட்டுள்ளது. இங்குப் பாலை நில இயல்புமட்டும் சுட்டப்பட்டுள்ளது. அங்கு வாழ்ந்த மக்கள் பற்றிய பதிவுகள் கூறப்படவில்லை. மேலும், அங்கு காவல்புரியும் இளையோர் மூலமாக ஆறலைகள்வர் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது. ஆறலைக் கள்வர் என்ற குழு அங்கு வாழ்ந்திருப்பதை அறிந்துகொள்ளமுடிகிறது. ஆனால் வேந்தர்களின் இளையோர் என்னும் படையின்மூலம் அம்மக்களின் கொள்ளையடிக்கும் செயல் தடைசெய்யப்பட்டதோடு, அவர்கள் அடக்குமுறைக்கும் ஆட்பட்டிருக்கின்றனர். இத்தகைய சூழலைப் பத்துப்பாட்டு இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன.

பத்துப்பாட்டு, பெரும்பாணாறுப்படை எயினர்களுடைய வாழ்க்கை குறித்த விரிவான பதிவை நல்கியுள்ளது. பாணர்களுக்கு எப்பகுதியில் எத்தகைய உணவு கிடைக்கும் என்று கூறும் பகுதியில் எயினர்களுடைய குடில், வீடுகள், அரண்கள், எயினர்தரும் உணவு, அவர்களுடைய உணவு சேகரிப்புமுறை போன்ற குறிப்புகள் காணப்படுகின்றன.

## எயிற்றியர்

வேட்டை இனங்களுள் எயிற்றியர் ஆண்களுக்கு நிகரான தொழிலைச் செய்துள்ளனர். இவர்கள், குழு வேலைப்பிரிவில் உணவு சேகரிக்கும் தொன்மையான

தொழிலை விட்டுக்கொடுக் காதவர்களாக இருந்துள்ளனர். இத்தகைய போக்கு இவர்களுக்கு இருந்த சமூக முக்கியத்துவத்தை வெளிப்படுத்துவதாக உள்ளது. அவற்றை எட்டுத்தொகை பத்துப்பாட்டு ஆகிய இலக்கியங்களின்வழி அறியமுடிகிறது.

**எயிற்றியர் இருப்பிடம்**

எயிற்றியர்கள் பற்றிக் கூறும் இடத்திலும் எயினர்கள் பற்றி விவரிக்கும் இடத்திலும் அவர்களுடைய இருப்பிடம் பற்றிய வருணனை இடம்பெற்றுள்ளது. குரம்பை என்ற சொல்லால் அழைக்கப்பட்டுள்ள எயிற்றியின் இருப்பிடம், ஆற்று மணலையொத்த முதுகையும், கொழுவிய மடலையும், வேல் நுனியையும் ஒத்த ஈந்தின் இலையால் வேயப்பட்ட நெடிய மேட்டினையும், எய்பன்றியின் முதுகுபோன்ற புறத்தினையும் உடைய குடிலாகும். இதனை,

**யாற்றுஅறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்,**
**வேற்றலை அன்ன வைந்நுதி, நெடுந்தகர்,**
**ஈத்துஇலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை**

**(பெரும்பாண். 86-88)**

என்ற பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன. இக்குடிசையில் மான்தோல் படுக்கையில் ஈன்ற குழந்தையுடன் முடங்கிக்கிடந்தாள் எயிற்றி.

**எயிற்றியர் தொழில்**

எயிற்றியர் உணவு சேகரித்தல், உணவினை சமைத்தல், உணவு பதப்படுத்துதல், விருந்து பேணுதல் போன்ற வேலைகளைச் செய்துள்ளனர்.

**உணவு சேகரிப்பு**

எயிற்றியர் இயற்கை உணவு சேகரித்தல், வேட்டையின் மூலமாக உணவு சேகரித்தல் ஆகிய முறையைப் பெற்றிருப்பது சங்க இலக்கியங்கள்வழி அறியமுடிகிறது.

**இயற்கை உணவு சேகரிப்பு**

எயினப் பெண்கள் கரம்பைக் காட்டில் எறும்புகள் சேகரித்து வைத்திருந்த புல்லரிசியை சேகரித்துள்ளனர். அவற்றை சேகரிக்க கையில் வயிரம் பாய்ந்த கோலை வைத்திருந்தனர். அக்கோலின் ஒரு முனையில் உளிபோன்ற பாறையும், மறுமுனையில்

பூணும் கட்டப்பட்டிருந்தது. அது கடப்பாரைப் போன்று காட்சி அளித்தது. அக்கொம்பினால் காட்டைக் கிளறி எறும்பு சேகரித்த புல்லரிசியை குடிசைக்கு எடுத்து வந்தனர் என்பதை,

**இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்**

**உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி,**

**இருநிலக் கரம்பைப் படுநீறு ஆடி (பெரும்பாண். 91-93)**

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகிறது. மற்றொரு பாடல், சிற்றூரில் வாழும் பெண்கள் மான்களை விரட்டிவிட்டு அவை உண்டு எஞ்சிய தினை முதலிய சிறிய உணவுப் பொருள்களைக் கொண்டு வந்ததை,

**பல்கவர் மருப்பின் முதுமான் போக்கி,**

**சில்உணாத் தந்த சீறூர்ப் பெண்டிர் (அகம். 283:4-5)**

என்று குறிப்பிட்டுள்ளது.

## வேட்டை உணவு சேகரிப்பு

எயிற்றியர், வேட்டைக்கு வெளியே செல்லாமல் தம்முடைய குடிசையில் உணவு தேடிவந்த பறவைகளை வேட்டையாடியுள்ளனர். முற்றத்தில் உலர வைத்த தினையைத் தின்னவரும் கானக்கோழி, புறா, இதற்பறவை, முயல் போன்றவற்றைப் பிடித்து அறுத்து சமைத்து உண்டுள்ளனர்[232]. ---

**புறம். 319**

## உணவு சமைத்தல்

எயினப் பெண்கள் வேட்டையில் கிடைத்த பொருள்கள், சேகரித்த தானியங்கள் போன்றவற்றை சமைத்துள்ளனர்.

**எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு,**

**தேமா மேனிச் சில்வளை ஆயமொடு**

**ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவீர் (சிறுபாண். 175-177)**

எனும் பாடல், வெப்பமிக்கக் குடிலில் வாழும் எயினர் குலப்பெண் சமைத்த இனிய புளிங்கறி இட்ட சோற்றினை, ஆமானினது சூட்டிறைச்சியுடன் நும்பசி தீர உண்ணுங்கள் என்று கலைஞர்கள் வழிநடத்தப்பட்டிருப்பதைத் தெரிவிக்கின்றது.

எட்டுத்தொகையில் குறிப்பிடப்பட்டுள்ள எயிற்றியர்களுடைய வாழ்க்கை முறையிலிருந்து பத்துப்பாட்டு எயினர்களுடைய வாழ்க்கைமுறை மாற்றமுடனும் விரிவாகவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளதை மேற்காணும் பகுதியிலிருந்து உணரமுடிகிறது. 'சிறுபாணாற்றுப்படை'யில் வேலூர் எயினப்பெண் புளிச்சோறு சமைத்து, ஆமான் இறைச்சியைச் சுட்டு விருந்தோம்பியதாக புலவர் கூறுவதிலிருந்து, எட்டுத்தொகையின் அகப்பாடல் வேடர்களிலிருந்து வேலூர் எயினர்கள் சற்று முன்னேறியவர்களைப் போலத் தெரிகிறது[233] என்ற ராஜ் கௌதமன் அவர்களுடைய கருத்தும் மேற்கூறியவற்றை உறுதி செய்வதாக உள்ளது.

## உணவு பதப்படுத்துதல்

வேடர்கள், வேட்டையில் கிடைத்த உணவை குழுவில் உள்ள அனைவருக்கும் பங்கிட்டுக்கொடுக்கும் மரபுடையவர்களாக இருந்துள்ளனர். சில நேரங்களில் பெரிய விலங்குகள் வேட்டையில் கிடைத்ததை, கூட்டத்தார் அனைவருடனும் உண்டதுபோக எஞ்சியதை வெயிலில் உலர்த்தி சேகரிக்கப் பழகியிருந்தான். இலக்கியங்கள் இதனை 'வாடூன்' என்று குறித்தன. அவ்வப்போது ஏற்பட்ட உணவுப் பற்றாக் குறையும் பசியும் பட்டினியும் அவனை அவ்வாறு சேமிக்கத் தூண்டின[234] என்கிறார் பெருமாள்சாமி. இத்தகைய எதிர்கால சேமிப்புக்குரிய உணவை பதப்படுத்தும் பணியினை எயிற்றியர் செய்துள்ளனர்.

எயிற்றியின் குடும்பத்தார் வேட்டையில் திறமைவாய்ந்தவர்கள் என்பதை சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. வேட்டையில் கிடைத்த ஊன் உணவு உண்டதுபோக எஞ்சியதை பக்குவப்படுத்தி சேகரிக்கும் பணி எயினர் பெண்களுக்கு உரியதாக இருந்துள்ளது. எயிற்றியின் அண்ணன்மார்கள் வேட்டையில் கொண்டுவந்து கொடுத்த இறைச்சியை உலர்த்தியதை,

**கண மா தொலைச்சித் தன்னையர் தந்த**
**நிண ஊன் வல்சிப் படுபுள் ஓப்பும்**
**நலம் மாண் எயிற்றி (ஐங். 365:1-3)**

எனும் ஐங்குறுநூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது. எயிற்றி, எயினர்கள் வேட்டையில் கொண்டுவந்த இறைச்சியைப் பாறையில் பரப்பிக் காயவைத்து, பறவைகளை விரட்டினாள்[235] என்பதிலிருந்து எயிற்றியின் ஒருவகை சேமிப்பு பழக்கத்தையும் உணவு பதப்படுத்தும் முறையையும் காணமுடிகிறது.

## எயிற்றியர் விருந்தோம்பல்

எயிற்றியரின் விருந்தோம்பல் பண்பு ஆற்றுப்படைக் கலைஞர்களை முன்னிலைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. தழையால் வேயப்பட்ட குடிசையை நாடிவரும் பாணர்களுக்கு உண்ணுவதற்காக வைத்திருந்த உணவினை விருந்தளித்தனர் என்று கூறப்பட்டிருப்பதிலிருந்து அவர்களுடைய உயரிய விருந்தோம்பல் பண்பு பற்றி அறிந்துகொள்ளமுடிகிறது.

பார்வை மான்கள் கட்டப்பட்டிருக்கும் முற்றத்தில், நிலத்தில் புதைக்கப்பட்ட குழிந்த உரலில் புல்லரிசியை இட்டு உலக்கையால் குற்றிய எயிற்றியர், ஆழ்ந்த கிணற்றில் அமைந்த சில்லூற்றைத் தோண்டி உவரிநீரை எடுத்து விளிம்பு உடைந்துபோன பழைய பானையில் வார்த்து சோறு சமைத்துள்ளனர். புல்லரிசிச் சோற்றை கருவாட்டோடு சேர்த்து, தெய்வத்திற்குப் பலியிடுமாறு போலத் தேக்கிலையில் குவித்துத் தந்தனர் என்று பெரும்பாணாற்றுப்படை (95-105) குறிப்பிடுவதிலிருந்து எயிற்றியரின் உணவு சமைக்கும் முறை, விருந்தோம்பும் பண்பாடு ஆகியவற்றை அறியமுடிகிறது.

## பாலை மக்களின் உணவும் வேட்டையும்

யாமப்பொழுதும் பகலும் உறங்காது விலங்குகளை வேட்டையாடித் திரியும் கல்விபில்லாத வேடனுக்குரிய உணவு, நாழித் தானியமாகக்[236] குறிப்பிட்டுள்ளது புறநானூறு. ஆனால் வேடர்கள் எவ்வகையான உணவுகளை உண்டனர் என்பதை சங்க இலக்கியச் சான்றுகளின் வழி ஆராய்வது மக்களின் உண்மை வாழ்க்கையை எடுத்துரைப்பதாக அமையும். இவர்களுடைய உணவு பற்றிய குறிப்புகளின் மூலமாக வேடர்கள் உணவைப் பெறுகின்ற வாழ்தாரமாக எவை இருக்கின்றன என்பதை அறிந்துகொள்ளும் நோக்கில், அவர்களுடை உணவு பற்றிய குறிப்புகள் கீழ்வருமாறு தொகுத்துரைக்கப்படுகின்றது.

- வடுக வேடர்கள் புலி உண்டு எஞ்சிய மானின் காய்ந்த கறியை மூங்கில் அரிசியோடு கலந்து சமைத்துத் தேக்கிலையில் வைத்து வழிப்போவோருக்கு அளித்துள்ளனர். (அகம். 107)

- உடும்பு, நுணல், புறத்து ஈயல், முயல் ஆகியவற்றை வேட்டையாடிய வேடன், பையில் கோர்த்துக் கொண்டுவந்து குடிசையில் போட்டுவிட்டு, கள்ளைக் குடித்து மகிழ்ந்துள்ளான். (நற். 59)

- ஆநிரையைக் கவர்ந்து, கொழுத்த ஆவை அறுத்து நெருப்பில் சுட்டெடுத்து உண்டு, நீர் வேட்கைக்கு தோப்பி கள்ளைப் பருகியுள்ளனர் (அகம். 265).

- ஆநிரை கவர்ந்து வந்து ஊன் புழுக்கு உண்டுள்ளனர் (அகம். 159).

- கள்ளுண்டுள்ளனர் (அகம். 156).

- முள்ளம்பன்றியைக் கொன்ற வேடர்கள், அதனோடு உடும்பைக் கொன்று அறுத்து, தங்களது குடிசை முற்றத்தில் கூறுகட்டி, வேட்டைக் குடும்பங்களுக்குப் பாதீடு செய்துள்ளனர். அக்கறியைக் கொள்ளி வைத்து சுட்டதால் எழுந்த நிண நாற்றம், அவ்வூர்த் தெருவில் கமழ்ந்துள்ளது (புறம். 325).

- எயின சிறார்கள் யானைக் கன்றுகளுடன் மன்றத்திலிருந்த விளாமரத்தின் பழங்களைப் பொறுக்கியுள்ளனர் (புறம். 181).

- கொழுத்த பசுக்கறியைத் தின்ற வேடர்கள் சுனை நீரைக் குடித்துள்ளனர். (அகம். 129)

- காட்டில், இரவில் பன்றி வேட்டைக்காக நாய்களுடன் வலையைக் கட்டிய வேடர்கள், பன்றி கிடைக்காத நிலையில் வலையில் மாட்டிய முயலைப் பிடித்து அதனை கூடித்தின்றுள்ளனர். (பெரும்பாண். 106-117)

- எயினர்கள், அரண்களில் ஈந்தின் விதைபோன்ற சிவந்த சோற்றை, நாய்கள் கடித்துக் கொண்டுவந்து கொடுத்த அக்குமணி போன்ற முட்டையினையுடைய உடும்பின் பொரியல் மறையுமாறு கலைஞர்களுக்குக் கொடுத்துள்ளனர் (பெரும்பாண். 117-133).

- சுட்ட முயல் கறியை கலைஞர்களுக்குத் தந்துள்ளனர் (புறம். 319).

- ஒருபக்கம் வாய்போன பானையில் புல்லரிசி, கூவல்நீரை இட்டு சமைத்து, தேக்கிலையில் சோறு கொடுத்துள்ளனர். (பெரும். 94.100)

மேற்காணும் தொகுப்புகள் பாலை நில மக்கள், வேட்டை, இயற்கை உணவு சேகரிப்பு, ஆநிரை கவரும் போர் ஆகியவற்றால் பெற்ற உணவு பொருட்களை சுட்டும், நீரில் வேகவைத்தும் உண்டிருப்பதை தெரிவிக்கின்றன.

## தொகுப்புரை

குறிஞ்சிநில மக்கள் கானவன், குறவன், குறமகள், கொடிச்சி போன்ற பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளனர். மலையும் மலை சார்ந்த பகுதிகளிலும் வாழ்ந்துள்ள இவர்கள், உணவு சேகரித்தல், உணவு உற்பத்தி செய்தல் ஆகிய தொழில்களை செய்துள்ளனர்.

உணவு சேகரித்தல் இரண்டு வகையில் அமைந்துள்ளது. இயற்கை உணவு சேகரிப்பு, வேட்டையாடி உணவு சேகரிப்பு. இவ்விருவகை வேட்டையின் மூலம் தேன், கிழங்கு, மா, பலா, மூங்கில் அரிசி, பன்றி, முள்ளம்பன்றி முதலான உணவுகளைப் பெற்றுள்ளனர்.

தேனெடுத்தல் ஆண்களின் வேலையாக இருந்துள்ளது. கிழங்கு அகழும் குழி, கிழங்கு விளையும் காடு ஆகியன தனி ஒருவருக்கு உரிமையுடையதாக இருப்பது குறிப்பிடத்தக்கது. அதில் விளையும் கிழங்கு அனைவருக்கும் பகிர்ந்து அளிக்கப்பட்டுள்ளது. பலா கள்ளிற்காகவும், அதன் கொட்டை மாவிற்காகவும் சேகரிக்கப்பட்டுள்ளது.

பன்றி, முள்ளம்பன்றி வேட்டை குழுவாகவும், தனிப்பட்டவர்களாலும் நடந்துள்ளது. வேட்டையில் கிடைத்த இறைச்சி அனைவருக்கும் பொதுவாகப் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது.

உணவு உற்பத்தியில் தினை, ஐவனநெல் ஆகியன பயிரிடப்பட்டன. தினை மலைச்சாரலிலும், அதுசார்ந்த காட்டுப்பகுதிகளிலும் பயிரிடப்பட்டது. விதைப்புக்குரிய நிலம் காட்டை எரித்தும், வெட்டிஎறிந்தும் உழுது பதப்படுத்தப்பட்டுள்ளது. பன்றி உழுத நிலத்திலும் தினை விதைக்கப்பட்டுள்ளது. தினைப்பயிரிட மழைநீரும் அருவிநீரும் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆண், பெண் இருவரும் தினைக்காவல் புரிந்தனர். அறுவடை, இரவில் பறை கொட்டி ஆரவாரமுடன் நடைபெற்றுள்ளது.

குறிஞ்சி நில மக்கள் கல், பாறை, காடு சார்ந்த பகுதிகளில் இருப்பிடம் அமைத்துக்கொண்டுள்ளனர். அவர்களுடைய இருப்பிடம் குரம்பை என்று அழைக்கப்பட்டுள்ளது. குரம்பையின் முற்றம் பாறைகளால் ஆனது. அப்பாறையின் மீது வேங்கை மலர்கள் உதிர்ந்துக் கிடந்தது. இவர்கள் தங்கியிருந்த பகுதி சிறுகுடி என்றும், பாக்கம் என்றும் அழைக்கப்பட்டுள்ளது. எட்டுத்தொகையில் இடம்பெற்றுள்ள குறிஞ்சிநில எடுத்துரைப்புகள்போல பத்துப்பாட்டில் இடம்பெறவில்லை என்றாலும் மலைபடுகடாம், குறிஞ்சிப்பாட்டு, மதுரைக்காஞ்சி ஆகிய இலக்கியங்கள் குறிஞ்சித் திணைமரபு சிலவற்றை எடுத்துரைத்துள்ளன. பெரும்பாணாற்றுப்படை, பாலை நில மக்களாக குறிஞ்சிநிலக் கானவர் வாழ்க்கையைப் பதிவு செய்திருக்கின்றது.

முல்லைநில மக்களாகிய இடையர், கோவலர், ஆயர், கொல்லை உழவர் ஆகியோர் காடுசார்ந்த பகுதிகளில் வாழ்ந்துள்ளனர். இடையர், கோவலர், ஆயர் போன்றோர் கால்நடை வளர்ப்பையும், கொல்லை உழவர் புன்செய் வேளாண்மையையும் தொழிலாகக் கொண்டுள்ளனர்.

இடையர் ஆடு மேய்ப்பவராகவும், அதற்காகக் கோல், தீக்கடைக்கோல், உறி, படுக்கை ஆகியவற்றை உடன் எடுத்துச் சென்றுமுள்ளனர். காடுகளில் ஆடுகளைக் கிடையமர்த்திய இடையர்கள், நெருப்புமூட்டிக் காவல் காத்தனர். ஊர்ப்பகுதிகளுக்குச் சென்று பாலைக் கொடுத்து உணவு பெற்று வாழ்ந்தனர். கோவலர் பசு முதலியவற்றை மேய்த்தனர். கையில் கோல் வைத்திருந்தனர். குழல் இசைக்கும் பழக்கமுடைய இவர்கள், தங்களுடைய ஆநிரைகளை அழைப்பதற்கு குழலைப் பயன்படுத்தியுள்ளனர். ஆநிரைகள் நீருண்ண வேண்டிக் காடுகளில் கிணறு தோண்டினர். ஆயமகள் என்று சுட்டப்பட்ட முல்லை நிலப்பெண்கள் பால், தயிர், மோர், நெய் ஆகியவற்றைப் பிற பகுதிகளுக்குச் சென்று கொடுத்து பண்டமாற்று முறையில் பிற பொருட்களை வாங்கிக் கொண்டு வந்தனர். இவள், வீட்டில் தந்தை, தமையன் ஆகியோர்க்கு உதவியாக இருந்துள்ளாள். கலித்தொகை, ஏறுதழுவுதல் என்னும் புதியமரபைப் பாடியுள்ளது. இவர்கள் ஏறுதழுவி வென்று மணம் புரிந்துள்ளனர். ஏறு தழுவுவதற்காக வழிபாடுசெய்துள்ளனர். கலித்தொகை, முல்லை நில மக்களை ஆநிரைகளை அடிப்படையாகக் கொண்டு புல்லினத்தாயர், கோவினத்தாயர், கோட்டினத்தாயர் என்று பிரித்துள்ளது. மேலும், பொதுவன் என்ற பொதுப் பெயராலும் அவர்கள் அழைக்கப்பட்டுள்ளனர்.

பத்துப்பாட்டில், பெரும்பாணாற்றுப்படை கோவலர், இடையவர் இருவரையும் சில வேறுபாட்டுடன் பாடியுள்ளது. இடையர் ஆநிரை மேய்ப்பவராகவும், கன்றினை விரும்புபவர்களாகவும் பாடியிருப்பது எட்டுத்தொகை பாடல்மரபில் இருந்து மாறுபடுமிடமாக அமைந்துள்ளது. புன்செய் வேளாண்மையில் வரகு, அவரை பயிரிடப்பட்டன. வரகு, மழையை எதிர்பார்த்து விதைக்கப்பட்டது. இத்தகைய வேளான்மை செய்யும் மக்கள் கொல்லை உழவர்கள் என்று அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளனர். இவர்கள், பெரும்பாணாற்றுப்படையில் சற்று முன்னேறிய வகையில் உழவிற்குரிய கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

மருதநிலத்தில் வயல்சார்ந்து நெல், கரும்பு பயிரிடப்பட்டுள்ளது. உழவர், உழத்தியர் மருதநில வேளாண்மையைச் செய்தனர். இம்மக்கள் நெல்சோறும், வேலை நேரத்தின்போது பிடித்த மீனையும் உணவாகக் கொண்டுள்ளனர். உழவிற்குப் பயன்படக்கூடிய கால்நடைகளை வளர்த்தனர். மருத நிலத்தில் மீன் பிடித்து அவற்றை விற்று அதன்மூலம் நெல்பெற்று, பாணர்குழு வாழ்க்கை நடத்தியது. ஆண்களும், பெண்களும் இத்தகைய பணிகளைச் செய்தனர்.

நெய்தல் நிலத்தில் பரதவர்கள் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல் ஆகிய பணிகளைச் செய்துள்ளனர். மீன் பிடிக்கப் படகு, மீன்பிடி கருவிகள், வலை, விளக்கு ஆகிய பொருட்களைப் பயன்படுத்தியுள்ளனர். பரதவர்கள் விளைவித்த உப்பை, உமணர்கள் வாங்கிப் பிற ஊர்களுக்கு வண்டிகளில் ஏற்றிச்சென்று விற்றனர். நெய்தல் நில பெண்கள் மீன்விற்றல், உப்புவிற்றல் ஆகிய தொழில்களை பண்டமாற்று முறையில் செய்தனர். பரதவர்கள் பிடித்துக் கொண்டுவந்த மீன்களை உணங்கவைக்கும் பணியும் இவர்களுடையதாக இருந்துள்ளது. தழையாடை உடுத்தி பிற ஊர்களுக்கு மீன் விற்கச் சென்றுள்ளனர். இம்மக்களின் முக்கிய உணவு மீன், நெல் சோறு, கள் ஆகியன. பத்துப்பாட்டில், பட்டினப்பாலை மீன் பிடிப்பவர்கள் கடற்கரையில் படுத்து உறங்குபவர்களாகவும், செல்வந்தர்கள் மாடங்களில் படுத்து உறங்குவதையும் வேறுபடுத்திக்காட்டியுள்ளது. பெரும்பாணாற்றுப்படை, வலைஞர் என்ற பெயரில் பரதவர்களைக் குறிப்பிட்டுள்ளது. மதுரைக்காஞ்சியில் பரதர் என்று நெய்தல் நில மக்கள் அழைக்கப்பட்டுள்ளனர். இவ்விலக்கியம் கடற்பரப்பு, வணிகம் நடைபெறுமிடமாக மாறியிருப்பதை எடுத்துரைத்துள்ளது.

பாலை நிலத்தில் எயினர், எயிற்றியர், மறவர், மழவர், வடுக வேடர், வேடர் ஆகிய மக்கள் வாழ்ந்துள்ளனர். நீர் இல்லாது வறண்ட பாலை நிலத்தில் மக்கள்

வேட்டை, வழிப்பறி செய்தல், ஆநிரை கவர்தல் ஆகிய தொழில்களைச் செய்தனர். பாலை நில மக்கள் தொழில்கள் உணவு தேவைக்காக செய்யப்பட்டுள்ளன. இவர்கள் வில், அம்பு ஆகிய கருவிகளை வைத்திருந்தனர். இவர்கள், வழிப்போக்கரைக்கொன்ற உடல்கள் பாலை நிலத்தில் கற்குவியல்களுக்கு இடையில் பதுக்கைகளாகக் காணப்பட்டன. அங்குப் புலால் நாற்றம் வீசியது. யானை, பன்றி, முள்ளம்பன்றி முதலான விலங்குகள் வேட்டையாடப்பட்டுள்ளன. காட்டில் புலி உண்டு, விட்டுச் சென்ற இறைச்சியை உண்டனர். ஆநிரைகளை இறைச்சிக்காக கொள்ளையடித்துள்ளனர். காடுகளிலும், கற்கள் கிடக்கும் வழிகளிலும் நீர் இல்லாது வறண்ட பகுதிகளிலும் அவர்களுடைய இருப்பிடம் அமைந்திருந்தன. அவ்விருப்பிடம் குறும்பு என்று அழைக்கப்பட்டது.

## குறிப்புகள்

1. குருநாதன், இராம., குறிஞ்சி வளம், ப.133
2. நற். 65:6, அகம்.21:24
3. குறுந். 333:1
4. மேலது. 335:6, அகம், 282:2
5. மேலது. 385:2
6. ஐங். 283:1
7. அகம். 292:10
8. மேலது. 88:5
9. மேலது. 172:6
10. மேலது. 34:3
11. குருநாதன், இராம., குறிஞ்சி வளம், ப.127
12. புறம். 114
13. மேலது. 115
14. நற். 292
15. புறம். 109
16. அகம். 182
17. குறுந். 342
18. அகம். 12
19. மேலது. 7
20. மலைபடு. 178
21. ஐங். 22
22. அகம். 158
23. மேலது. 282
24. மேலது. 282
25. மேலது. 21:24
26. நற். 228:5-7
27. அகம். 292

28. மேலது. 248

29. நற். 82

30. மேலது. 386:1-3

31. மேலது. 336

32. மேலது. 85:8

33. அகம். 182

34. மலைபடு. 176

35. அகம். 172

36. நற். 85, 336

37. பக்தவத்சலபாரதி, தமிழகப் பழங்குடிகள், ப. 126

38. ஐங். 295

39. அகம். 140

40. குறுந். 339

41. மேலது. 198:1

42. குருநாதன், இராம., மேற்கோள், குறிஞ்சி வளம், ப. 159

43. பட்டினப். 284-286

44. சுப்பிரமணியன். கா, சங்ககால சமுதாயம், ப. 12

45. அகம். 388

46. நற். 5:3

47. மேலது. 209

48. அகம். 302

49. மதுரைக். 286-290

50. மேலது. 291-298

51. ஐங். 270

52. நற். 122

53. மேலது. 306

54. மேலது. 93

55. குறுந். 392

56. மேலது. 371

57. மாதையன். பெ, தமிழ்ச் செவ்வியல் படைப்புகள்-கவிதையியல் சமுதாயவியல் நோக்கு, ப. 192

58. நற். 134

59. மலை. 328-329

60. பத்துப்பாட்டு உரை, என். சி. பி. எச், ப. 253

61. குறுந். 54, அக. 292, 309, கலி. 41

62. நற். 393

63. அகம். 73

64. குறுந். 357

65. நற். 108

66. மேலது. 119

67. புறம். 120

68. மலைபடு. 145-157

69. புறம். 236

70. ஐங். 29

71. அகம். 168

72. ஐங். 22

73. புறம். 129:1-3

74. நற். 276:8-10

75. மேலது. 253

76. மேலது. 341

77. அகம், 132

78. புறம். 247

79. உ. மேற்கோள், ப. 37

80. புறம். 168

81. அகம். 172

82. நற். 83

83. அகம். 12

84. நற். 285:7

85. குறுந். 333:1

86. அகம். 232:9

87. மேலது. 78:7-8

88. நற். 276:10

89. மேலது. 44:8

90. மேலது. 276:10, புறம். 129:1-3

91. குறுந். 322:3

92. அகம். 232:6

93. நற். 232:4

94. குறுந். 339:3

95. நற். 114

96. மேலது. 77

97. மேலது. 268

98. குருநாதன், இராம., குறிஞ்சி வளம், ப. 139

99. பெருமாள்சாமி. வெ, சங்க காலத் தமிழகத்தின் சமூக நிலை ப. 39

100. நற். 142:2

101. அகம். 274:6

102. மேலது. 274:6

103. மேலது. 94:4

104. நற். 142:4

105. அகம். 274:6

106. குறுந். 221

107. புறம். 54

108. நற். 142

109. அகம். 94,274

110. மேலது. பாலை. 155

111. மேலது. 54

112. முத்துசாமி. அ, சங்க இலக்கியத்தில் ஆயர், ப.14.

113. நற். 371, அக. 305

114. அகம். 54

115. மேலது. 64:15

116. மேலது. 79:6

117. குறுந். 86:6

118. மலை. 573

119. நற். 321:1-2

120. கலி. 106

121. அகம். 293

122. கலி. 107

123. கலி. 102

124. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.149.

125. நெடுநல். 8

126. மோகன். இரா, பத்துப்பாட்டு முதற்தொகுதி, ப.323

127. குறிஞ். 221

128. பக்தவத்சல பாரதி, தமிழகப் பழங்குடிகள், ப.134

129. அகம். 184:13-14, 194

130. பெரும். 184-196

131. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.149

132. பெரும். 184-196

133. பாலுச்சாமி. எ, மருதத்தில் மக்கள் வாழ்வியல், ப.13-14

134. மேலது. ப.16

135. புறம். 289

136. குறுந். 155

137. அகம். 236

138. புறம். 13

139. மேலது. 24

140. குறுந். 384:1

141. நற். 60

142. புறம். 52

143. மேலது. 227

144. மேலது. 230

145. மேலது. 29

146. மேலது. 209

147. மேலது. 212

148. மேலது. 61

149. அகம். 366

150. புறம். 18

151. பெரும். 196-206

152. மேலது. 206-212

153. மேலது. 229-242

154. மலைபடு. 460-464

155. மதுரைக். 259-270

156. பட்டினப். 13-19

157. மேலது. 20-28

158. மேலது. 248-260

159. மேலது. 261-265

160. மலைபடு. 465-470

161. மேலது. 462-464

162. அகம். 126

163. மேலது. 196

164. மேலது. 126:12

165. குறுந். 169, புறம். 384

166. ஐங். 47,48

167. அகம். 216:1-4

168. நற். 127

169. குறுந். 304:4, நற். 199:6

170. நற். 331:8, 372:12, 388:4, அகம். 240:5,340:18

171. குறுந். 184:6

172. நற். 199:8-9

173. மேலது. 49:5

174. மேலது. 38

175. மேலது. 207:2, அகம்.210

176. ஐங். 174

177. சிறுபாண். 143-163

178. பட்டினப். 104-117

179. மதுரைக். 315-325

180. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.153

181. பட்டினப். 84-90

182. சுப்பிரமணியன்.கா,சங்க கால சமுதாயம், ப.22

183. பட்டினப். 98-99

184. பெரும். 263-247

185. பெரும்பாண். 275-282.

186. அகம். 140

187. புறம். 84

188. புறம். 313

189. அகம். 207

190. பெரும்பாண். 46-50

191. பெரும்பாணாற்றுப்படை, என்.சி.பி.எச் உரை, ப.237

192. பெரும்பாண். 68

193. ராஜ் கௌதமன், ஆகோள் பூசல், ப. 32

194. குறுந். 331:3

195. ஆகம். 331

196. மேலது. 319

197. கலி. 4

198. நற். 48

199. அகம். 297

200. நற். 148

201. அகம். 363

202. குறுந். 297

203. கலி. 15

204. புறம். 259:3

205. மேலது. 260

206. ஐங். 352:1-2

207. அகம். 63

208. மேலது. 105

209. மேலது. 113:9-17

210. குறுந். 331:1-3

211. அகம். 129

212. மேலது. 127.

213. மேலது. 91:10-12

214. ராஜ் கௌதமன், ஆகோள் பூசல்,ப. 37

215. நற். 52

216. அகம். 269

217. புறம். 88

218. அகம். 119

219. மேலது. 129

220. மதுரைக். 687

221. புறம். 88

222. நற். 212

223. அகம். 295:16, குறுந். 11:7

224. மேலது. 107:11, 381:7, நற். 212

225. நற். 212

226. அகம். 381:7

227. மேலது. 295

228. பக்த்வத்சல பாரதி, தமிழகப் பழங்குடிகள், பக். 109-110

229. ஐங். 364:1

230. பட்டினப். 266-269

231. மதுரைக். 301-314

232. புறம். 319, 320

233. ராஜ் கொதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப. 129

234. பெருமாள்சாமி. வெ, கானவர் தினைவிதைத்தல், கீற்று இணைய இதழ், ப. 2

235. ஐங். 37:5

236. புறம். 189

ஐந்திணை மக்களின் நம்பிக்கையாகச் சடங்கு விளங்குவதைச் சங்க இலக்கியவழி அறியமுடிகிறது. இச்சடங்கு ஒவ்வொரு திணை சார்ந்தும் வேறுபட்டுக் காணப்படுவதோடு திணை மக்கள் வாழ்வில் நீங்கா இடத்தைப் பிடித்திருக்கிறது. திணைமக்கள் செய்த சடங்குகள் இயற்கைச் சடங்குகள், வாழ்க்கை வட்டச் சடங்குகள் என இரண்டு வகைகளில் அமைந்துள்ளன.

சடங்கு குறித்தும் சடங்கு செய்வதின் நோக்கம் குறித்தும் பக்தவத்சல பாரதி, சடங்கு செயல் சார்ந்தது; நிகழ்த்தப்படுவது; சடங்கு என்பது ஒன்றைச் செய்து இன்னொன்றைப் பெறுவது; நனவு சார்ந்ததாக இருக்கிறது என்றும் பெரும்பாலான சடங்குகள் சமூகம், குழு சார்ந்து; மக்கள் கூட்டாகச் சேர்ந்து நிகழ்த்தப்படுவதாக உள்ளது. சடங்கு நிகழ்வில் பங்கேற்போர் தனிமனிதராக இல்லாமல் கூட்டமாகச் சேருவது என்பதும், அது மரபாக காலங்காலமாக, ஒரு விதிமுறையாகப் பின்பற்றப்படுவது என்பதும் ஒரு விபத்து போல ஏற்பட்டதல்ல; நனவு நிலையில் பேணப்படுவதாகும்[1] என்று குறிப்பிடுகிறார்.

சங்ககாலச் சடங்குமுறைகள் பல அறிஞர்களால் ஆராயப்பட்டுள்ளன. இனக்குழுச் சடங்குகள் குறித்து கா. சுப்பிரமணியன், பெ. மாதையன், சிலம்பு நா. செல்வராசு போன்றோர் ஆராய்ந்துள்ளனர். இவ்வாறு செய்யப்பட்ட ஆய்வுகளின் தொடர்ச்சியாக சடங்குகளைத் திணைநிலையில் ஆராய்வதோடு, அவை காலந்தோறும் அடைந்த மாற்றங்களையும் இவ்வாய்வு முன்வைக்கிறது. இம்மாற்றங்கள் இலக்கியத்தின் காலகட்டத்தை நிர்ணயிக்கக் கூடியதாக இருப்பதோடு இனக்குழுச்சமூக மரபு எவ்வாறு தொடர்ந்துள்ளது என்பதையும் எடுத்துரைக்கிறது.

## இனக் குழுவும் சடங்கும்

இனக்குழு வாழ்க்கையில் சடங்கு முக்கியஇடத்தை வகித்திருந்தது. அவர்களுக்கு இயற்கையிடமிருந்துத் தங்களுடைய இருப்பை நிலைநிறுத்திக் கொள்ளவும், தமக்கு வேண்டியவற்றைப் பெற்றுக்கொள்ளவும் சடங்கு முக்கிய வழியாக இருந்தது. குறிப்பாக இனக்குழு வாழ்க்கையில் பொருளாதார வளத்தை மேம்படுத்திக்கொள்ளவே மந்திரம் பயன்படுத்தப்பட்டது என்பர். ஒன்றை போலச் செய்வதின் மூலமாக இயற்கையைக் கட்டுப்படுத்த முடியும் என்று தொடக்க காலத்தில் இருந்த மந்திரம், பொருளாதார நடவடிக்கைகளில் இனக்குழுக்களை நம்பிக்கையுடன் செயல்படவும், கூட்டுத்தன்மையாக இருக்கவும் செய்த மந்திரமே ஒரு சடங்காக மாறியதென மானிடவியலாளர்கள் குறிப்பிடுகின்றனர். இத்தகைய மந்திரத்தைக் காலப் போக்கில் நிகழ்ந்த தொழில்நுட்ப மாற்றங்களே மறையச்

செய்தன என்கிறார் கா. சுப்பிரமணியன். மந்திரம் மறைந்து சடங்குமட்டும் நிலைபெற்ற சூழலில் வாழ்ந்த இனக்குழுவில் சடங்குப் பெற்ற முக்கியத்துவத்தை இனக்குழுச் சமுதாயத்தில் சடங்கே வாழ்க்கையாகவும் வாழ்க்கையே சடங்காகவும் அமைந்தன. அச்சடங்குகள் (Rituals) இனக்குழுச் சமுதாயத்தை இயக்கின; இணைத்தன; அச்சமுதாய மதிப்புகளை உறுதி செய்தன; மூலவளங்களைப் பங்கீடு செய்தன; சமுதாயக் கருவியை நல்ல வகையில் தனிமனிதன் பயன்படுத்திக் கொள்ள வசதியளித்தன[2] என்று கா. சுப்பிரமணியன் கூறுவதின்மூலம் சடங்கு பெற்ற மதிப்பீட்டைப் புரிந்துகொள்ளமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் இனக்குழு மந்திரச் சடங்குகளாக அறியப்பட்டுள்ள மழைச்சடங்கு, வாழ்க்கையில் வளம்வேண்டிச் செய்யப்பட்ட வெறியாட்டு, மணச்சடங்கு ஆகியவற்றோடு நடுகல் வழிபாட்டுச்சடங்கு போன்றவை ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது.

## மழைவேண்டல் சடங்கு

மனிதனை அச்சுறுத்திய இயற்கை நிகழ்வுகளில் மழையும் ஒன்று. அம்மழையாகிய இயற்கையைத் தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர மனிதன் எண்ணினான். அதற்காகப் பல செய்கைகளை செய்தான். இதோடு தங்களுடைய தேவையை நிறைவேற்றும் பொருட்டு இயற்கையை வழிபட்டுச் சடங்குகள் செய்திருப்பதை, நீர், தீ, கால், விண், மண் ஆகிய ஐந்துமே புராதனக் குழுக்களை வியக்க வைத்து அச்சுறுத்தியவை. அல்லது மகிழ வைத்து வளர்ந்தவை. இவ்வைந்தின் ஆக்கங்களும் அழிவுகளும் பல்வேறு இனங்களில் புராதனத் தொன்மங்களாகவும் வழிபாட்டுச் சடங்குகளாகவும் பரிணமித்தன. தமிழகத்தும் இத்தகு தொன்மங்களும் சடங்குகளும் தொல் காலத்து இருந்திருக்க வேண்டும்[3] என்னும் செல்வராசு அவர்களின் ஆய்வுக் குறிப்போடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இயற்கையின் இயக்கமே சடங்கு செய்வதற்கானக் காரணமாக அமைந்ததை அறியமுடிகிறது.

தொன்மைச்சடங்குகள் குறித்த முழுவிளக்கத்தையும் சங்க இலக்கியங்களில் காணமுடியவில்லையெனினும் சில எச்சங்களை இலக்கியவடிவில் உணரமுடிகின்ற தென்பார் கா. சுப்பிரமணியன். மழை, வளம் ஆகியவற்றை வேண்டிச் சடங்குகள் செய்யப்பட்டன. வேட்டை, விவசாயம் ஆகிய இரண்டிற்கும் மழை மிகவும் அவசியமாகும். மழை வேண்டிச் செய்யப்பட்ட சடங்கு, மந்திரச் சடங்காகவும், மந்திரமும் சமயமும் கலந்த சடங்காகவும் வழங்கிய குறிப்புக்களைச் சங்க இலக்கியங்களில் காணலாம்[4] என்னும் கருத்து சங்க

இலக்கியத்தில் மழைச் சடங்கு மந்திரச் சடங்காகவும், மந்திரமும் சமயமும் கலந்த சடங்காகவும் விளங்குவதைத் தெளிவுபடுத்துகிறது.

சங்க இலக்கியத்தில் செய்யப்பட்டுள்ள சடங்குகள் ஒவ்வொரு திணை சார்ந்தும் வேறுபட்டுள்ளன. சங்ககால மக்கள் செய்த சடங்குகளில் இடம்பெற்ற பொருட்கள் மற்றும் சடங்குமுறை, சடங்கு நிகழ்த்துவோர் என்ற நிலையில் அவ்வேற்றுமையை உறுதிசெய்யமுடிகிறது. இவற்றிற்கு எல்லாம் அடிப்படையாக அமைவது ஐந்திணை நில அமைப்பு. இந்த நில அமைப்பே ஒவ்வொரு திணை சார்ந்த மக்களுடைய நீர்த் தேவையை வரையறுக்கின்றது.

**குறிஞ்சித் திணை**

சங்க இலக்கியத்தில் குறவர்கள் செய்த மழைச்சடங்கு மூன்று இடங்களில் சற்று விரிவான தகவல்களோடு பதிவு செய்யப்பட்டுள்ளன. குன்றத்தில் வாழும் குறவன் மலைமீது நின்று மழை வேண்டி ஆரவாரம் செய்ததினால் மழை பெய்தது என்னும் பொருளில்

**குன்றக் குறவ னார்ப்பி னெழிலி**
**நுண்ப லழிதுளி பொழியும் நாட** (ஐங்-251:1-2)

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் அமைந்துள்ளது. இப்பாடலில் இயற்கையைத் தூண்டித் தனக்கு வேண்டியவற்றைப் பெற்றுக்கொள்ள நினைக்கும் குறவன் செய்த சடங்கு மழைக்காகச் செய்யப்பட்ட ஒரு மந்திரச் சடங்காகவே அது விளங்குகிறது. அக்குறவன் மந்திரவாதியாகவும் குழுத்தலைவனாகவும் இருந்திருக்கலாம்[5] என்ற கா. சுப்பிரமணியனின் கூற்று குறவன்செய்த சடங்கைத் தெளிவுபடுத்துகிறது. இடிமுழக்கத்தைப் போலச் செய்த ஆரவாரம் மழைப்பெய்யும் செயலைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளது. குறவனின் இவ்வாரவாரம் இடியோசையைப் பாவனையாகச் செய்து மழை பெய்விக்க முயன்ற பாவனைச் சடங்கின் ஒரு கூறு[6] என்பதை ஆய்வறிஞர்கள் பலரும் ஏற்றுக்கொண்டுள்ளனர்.

இனக்குழுமக்கள் குழுமனப்பான்மையை மரபாகக்கொண்டுச் செயல்படுபவர்கள். உணவுப் பகிர்வு, கூட்டுண்ணும்முறை, வேட்டை, சடங்கு போன்ற அனைத்துச் செயல்களிலும் குழுப்பண்பும் பங்களிப்பும் நிறைந்திருக்கும். இத்தகையக் குழுப் பங்களிப்போடுக் குறவர்கள் செய்த மழைச்சடங்கு பற்றி,

**'மலை வான் கொள்க! என, உயர் பலி தூஉய்,**
**மாரி ஆன்று, மழை மேக்கு உயர்க எனக்**
**கடவுட் பேணிய குறவர் மாக்கள்,**
**பெயல் கண் மாறிய உவகையர், சாரற்** (புறம்-143:1-4)

என்னும் புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது. குறவர் மக்கள் மழையற்றக் காலத்தில், மலையில் சடங்கு செய்தனர். மலைக்குச் சென்ற மக்கள் மலையை

மழை வந்துச் சூழ்க என்று, பலியைத் தூவினர். வேண்டுதலின் பயனாக மழை மிகுதியாகப் பெய்தது. மிகுதியாகப் பெய்ததால் அதனை நிறுத்த வேண்டினர். மேகத்தை மேலே போவதாக என்று அனைவரும் கடவுளை பேணினர். அவ்வாறே மழை இடம்மாறிப் பெய்தது. அதைக் கண்ட குறமக்கள் மகிழ்ச்சி அடைந்தனர்.

இப்பொருண்மையில், மலையில் மழை பெய்க! என்றும் அதனை நிறுத்த மேகம் மேலேச் செல்க என்றும் கட்டளையிடும் சடங்குத் தன்மையை உணரமுடிகிறது. மேலும், ஒன்றைச் செய்விக்கவும், நிறுத்தி வைக்கவும் கட்டளையிடல் (command) மந்திரச் சடங்கின் சிறப்புத் தன்மையாகக் கருதுகிறார்[7] கா. சுப்பிரமணியன்.

குறிஞ்சி நில மக்கள் வேட்டைத்தொழிலை முதன்மையான ஆதாரமாகக் கொண்டவர்கள். வேட்டையில் வளம் வேண்டிச் சடங்கு நிகழ்த்துவது இம்மக்களின் தொன்மையான மரபுகளுள் ஒன்று. அத்தகைய வேட்டைச்சடங்கு நற்றிணையில் இடம்பெற்றுள்ளது. அவற்றுள் கானவன் ஆமானின் மீது அம்பு எய்தான்; குறி தவறியது; தமக்கு உணவாக வேண்டிய விலங்கு தப்பியது; அதற்குக் காரணம் இம்மலையில் தோன்றிய தெய்வத்தின் கோபமே என்று நினைத்தான். தம்முடைய சுற்றத்தோடு மலைமேலுள்ள கடவுளை வழிபடும் பொருட்டுச் சென்றான். மலைக்குப் பலியை இட்டு நீர்வளாவினான். மலை அப்பலியை உண்ணுமாறு நின்றது. இதனை,

**பணைத்த பகழிப் போக்கு நினைந்து, கானவன்,**
**'அணங்கொடு நின்றது மலை, வான் கொள்க' எனக்**
**கடவுள் ஓங்கு வரை பேண்மார், வேட்டு எழுந்து,**
**கிளையொடு மகிழும் குன்ற நாடன் (நற். 165-2-5)**

என்ற பாடலால் அறியமுடிகிறது. இனக்குழு மக்கள், தாம் மேற்கொண்ட முயற்சியில் வெற்றி கிடைத்தப் பின்னர், அத்தெய்வத்திற்கு நன்றிக் கடனாகப் பலியிட்டு, பகுத்துண்டு, மகிழ்ச்சியில் கொண்டாடினர்[8], மேலும், வேட்டைக் குறி தவறியதற்கு மலையாகிய தெய்வம் காரணம் என்ற நம்பிக்கை மலை என்னும் இயற்கையோடுக் குறிஞ்சி நில மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையை வெளிப்படுத்துகிறது. மேலும், வேட்டை வளம்வேண்டி செய்யப்பட்ட சடங்கில் மலையைக் குளிர்விக்க நீர் வளாவுதல் என்னும் சடங்கு செய்யப்பட்டுள்ளது. அங்கு தெளிக்கப்பட்ட நீர் மலையைக் குளிர்விக்கக்கூடிய அளவில் இல்லை என்றாலும் மலை குளிர்ந்ததாக நம்பப்பட்டுள்ளது. அச்சடங்கில் பயன்படுத்தப்பட்ட நீர் மழையின் பாவனையாகக் காணப்படுகிறது. எனவே இச்சடங்கில்

நீர்த்தெளித்தல் என்பது பாவனையின் மூலம் மழையை கொண்டுவரும் செயலாக அமைந்திருப்பதினால் இவற்றை பாவனைச்சடங்காகவும் பார்க்கலாம்.

குறிஞ்சித்திணை மலை சார்ந்த பகுதி. மலைப்பகுதியில் பிற திணைகளைப் போன்று நீரினைத் தேக்கி வைக்கும் பழக்கம் பெரிதாகக் காணப்படவில்லை. மழையைக் கொண்டுவர அதனோடு தொடர்புடைய நீர்சார்ந்த பொருட்கள் குறிஞ்சி நிலத்தில் இல்லாத நிலையில் குறவன்செய்த இடிமுழக்கத்தினைப் போன்ற ஆரவாரம் மழையைக் கொண்டுவரும் அறிகுறியாக உள்ளது. மேலும், மலையின்மீது நீரினை வளாவியசெயல் மழைவந்து மலையைக் குளிர்வித்ததாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. இத்தகையச் சடங்கு நிகழ்த்துமுறைகளிலும், சடங்கு பொருட்களிலும்தான் குறிஞ்சி நில மக்களின் மழைச்சடங்கு பிற திணைசார்ந்த மக்கள் செய்த சடங்குகளிலிருந்து வேறுபடுகின்றது. இதன்மூலம் ஒரு குறிப்பிட்ட மக்களின் தேவையை, அத்திணை சார்ந்த பொருட்களின் மூலமாகச் சடங்குகள் செய்யப்பட்டு நிறைவேற்றிக்கொள்வதைக் காணமுடிகிறது.

**நெய்தல் திணை**

கொற்கைப் பட்டினத்தில் பழையர் மகளிர், பௌர்ணமி அன்று தழையாடை உடுத்தி குளிர்ந்த நீர்த்துறையில் வழிபாடுசெய்தனர். அத்துறைமுகத்தில் விளங்குகின்ற முத்துக்களோடு வலம்புரிச்சங்கினைச் சொரிந்து வாழ்த்தி வணங்கினர் என்பதை,

**புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்துறை,**
**அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து,**
**தழைஅணிப் பொலிந்த கோடுஏந்து அல்குல்**
**பழையர் மகளிர் பனித்துறைப் பரவ (அகம். 201:4-7)**

என்ற பாடல்வழி அறிந்துகொள்ள முடிகிறது. துறைப்பரவும் பாடலாகிய இவற்றில் நீரோடு தொடர்புடைய பொருள்கள், மழையைக் கொண்டு வரப் பயன்படும் என்னும் நம்பிக்கையில் இச்செயல் அமைந்தது[9] என்பர். இங்கு வெளிப்படையான கட்டளைகளோ பலியோ கொடுக்கப்படாமல் திணைக்குரிய கருப்பொருட்கள் மட்டும் இடம்பெற்றிருப்பது நெய்தல் திணைக்குரிய தனித்தன்மையாகவும் சடங்கு நிகழ்த்துமுறையை காட்டுவதாகவும் உள்ளது. வழிபாடு செய்யுமிடமாகத் துறை இருப்பது நீர்வளத்தோடு பிறவளங்களையும் எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

**உமணர்**

மழையை எதிர்ப்பாராதவர்கள் உமணர்க் கூட்டம்; உப்பு விளைச்சலுக்குக் கடல் நீர் போதுமானது; மழைநீர் உப்பு விளைச்சலுக்கு உதவாது; இடையூறாகவும் இருக்கிறது; என்பதை,

**நேர் கண் சிறு தடி நீரின் மாற்றி,**

**வானம் வேண்டா உழவின் எம் (நற். 254:10-11)**

என்னும் பாடல்வரிகள் உணர்த்துகின்றன. இதன்மூலம் திணைசார்ந்த மக்கள் செய்யும் தொழில்களுக்கு ஏற்ப அவர்களின் தேவையும் தேவையின்மையும் உருவாவதை அறியமுடிகிறது.

**மருதத் திணை**

மருதநில மக்கள் மழைவேண்டிச் செய்த சடங்கு பரிபாடலில் இடம்பெற்றுள்ளது. மருத நிலத்தின் நீர்த்தேவையைப் பூர்த்தி செய்ய ஆறுகள் பயன்பட்டன. எனவே ஆற்றையும், ஆற்றில் கிடைக்கக்கூடியப் பொருட்களையும் முன்னிலைப்படுத்தியே இவர்களுடைய மழைச்சடங்கு நிகழ்த்தப் பட்டிருக்கின்றது.

நீர்விளையாட்டில் ஈடுபட்ட மகளிர், புது வெள்ளத்தில் தாம் கொண்டுவந்த பொன்னால் செய்த நத்தை, நண்டு, காலினையுடைய இறால்மீன், வலிமைமிக்க வாளைமீன் ஆகியவற்றை விட்டு நாட்டில் விளைச்சல் பெருகவேண்டும், அதனால் உலகம் வளமுடன் பொலிய வேண்டும் என்று கூறினர். இதனை,

**நத்தொடு,நள்ளி,நடை இறவு,வய வாளை,**

**வித்தி அலையில்,'விளைக!பொலிக!'என்பார் (பரி. 10:85-86)**

என்ற பாடல்வரிகளால் அறியலாம். மேற்கூறிய நீர் வாழ் உயிரினங்களை வையையில் விட்டு விளைக! பொலிக! எனக் கட்டளையிட்டனர். இச்செயலைத் தொத்து மந்திரமாகக் கூறும் கா. சுப்பிரமணியன் **நீரோடு நெடுநாள் தொடர்பு கொண்டிருந்த சங்கு, சிப்பி போன்ற பொருள்களுக்கு நீரை வரவழைக்கும் இயல்பு உண்டு என்ற நம்பிக்கையை இங்கு காணலாம். இவற்றை ஆற்றில் இட்டால் ஆற்றில் நீர் பெருகும், ஆற்றில் நீரைப் பெருக்க மழை பெய்யும் என நம்பினர்**[10] என்கிறார். இச்சடங்கில் இடம்பெற்றுள்ள பொன்னாலாகிய மீன்கள் ஒத்தது ஒத்ததைக் கொண்டுவரும் என்ற நம்பிக்கையை வெளிப்படுத்துவதாக உள்ளது. மேலும், மருதநில மக்களின் செல்வநிலையை உணர்த்துவதாகவும் இச்சடங்கு அமைந்துள்ளது.

**பாலைத்திணை வேட்டுவர்**

வில்லை ஏராகவுடைய உழவர்களான ஆறலைக்கள்வர்கள், காட்டுவழிகளை மட்டும் விரும்புபவர்களாகப் பதிவு செய்யப்பட்டுள்ளனர்.

**கான்உயர் மருங்கில் கவலை அல்லது,**

**வானம் வேண்டா வில்ஏர் உழவர்**

**பெருநாள் வேட்டம் கிளைஎழ வாழ்த்த (அகம். 193:1-3)**

எனும் பாடலில் வேட்டுவர்கள் வழிப்பறிக் கொள்ளையை நம்பி இருப்பதினால் மழையை விரும்பாதவர்களாகக் காணப்படுகின்றனர்.

குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்னும் திணைகளில் மழைவேண்டல் சடங்குகுறித்து ஆராய்ந்ததன் மூலம், செய்யும் சடங்குமுறையும், பயன்படுத்தப்படும் பொருட்களும், அம்மக்கள் வாழும் நிலம், செய்யும் தொழில் முதலானவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைவதைக் காணமுடிகிறது. இதோடு உமணர், ஆறலைக்கள்வர் முதலானோர் தாங்கள் செய்யும் தொழில் சார்ந்து மழையை விரும்பாதவர்களாகவும் உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

**மழைக்குரிய நிமித்தங்கள்**

இயற்கையில் நிகழும் மாற்றங்களை நுட்பமாகக் கவனித்த சங்ககால மக்கள், வானத்தில் நிகழ்ந்த மாற்றங்கள் குறித்தும் நன்கு அறிந்திருந்தனர். வானத்தில் உள்ள கோல்கள், அவை நிற்கவேண்டிய இடங்கள், அவற்றின் செயல்பாடுகள் முதலானவை குறித்து அவர்கள் பெற்றிருந்த அறிவை சங்க இலக்கியம் பதிவுசெய்துள்ளது. அத்தகைய பதிவில் மழைகுறித்த பல தகவல்களைக காணமுடிகிறது. இதோடு, மழையைப் பெய்யச்செய்யும் கோள், மழைக்கோள் நிற்கவேண்டிய திசை போன்றவற்றோடு மழைக்கோள் நிற்க வேண்டிய திசை தவிர்த்து வேறு திசையில் நின்றால் மழை பொய்க்கும் போன்ற செய்திகளும் இடம்பெற்றுள்ளன.

வேள்பாரியின் நாட்டில் அவன் உயிருடன் இருந்த காலத்தில் சனி ஆகிய விண்மீன் புகைகளோடு கூடிப்புகையினும், எல்லாத்திசையினும் புகைத் தோன்றினும், தென்சிசைக் கண்ணே வெள்ளிமீன் செல்லினும் மழை பிழைப்பறியாது என்பதை,

**மைம்மீன் புகையினும், தூமம் தோன்றினும்,**

**தென் திசை மருங்கின் வெள்ளி ஓடினும், ...**

**பெயல் பிழைப்பு அறியாப் புன்புலத்ததுவே –**

**(புறம். 117:1-7)**

எனும் புறநானூற்றுப் பாடல் புலப்படுத்துகிறது. இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ள குறிகள் மழையைப் பொய்த்துவிடும் தன்மையுடையவை என்றும் மன்னரின் செங்கோலாட்சி மழையைப் பெய்விக்கும் ஆற்றல் பெற்றதாகவும் கட்டமைக்கப்பட்டுள்ளது. இயற்கையில் நிகழும் மழை பெய்யும் நிகழ்வு நாட்டை ஆளும் அரசாட்சிக்கு ஏற்ப மாறுபடக்கூடும் என்னும் நிலை இக்காலத்தில் உருவாகியிருப்பதையும் உணரமுடிகிறது.

சோழ நாட்டின் வளம்பற்றிக் கூறவந்த கோவூர்கிழார், அங்கு வெள்ளியாகிய விண்மீன் எத்திசைக்கண் நின்றாலும் நாட்டில் செழிப்பிற்குக் குறையில்லை என்கிறார். இதனை, யாண்டும் நிற்க வெள்ளி[12] என்ற வரியால் அறியமுடிகிறது.

வெள்ளி தான் தோன்றுவதற்குரிய நாளில் மழையைப் பெய்விக்கக்கூடிய திசையில் தோன்றாமல் திசைமாறித் தோன்றினாலும் ஆறுகளில் வெள்ளம் பெருகி வரும் என்கிறது மதுரைக்காஞ்சி. இதனை,

**கல் காயும் கடு வேனிலொடு**
**இரு வானம் பெயல் ஒளிப்பினும்,**
**வரும் வைகல் மீன் பிறழினும்,**
**வெள்ளம் மாறாது விளையுள் பெருக (மதுரைக். 106-109)**

என்னும் பாடல்வரிகளால் அறியலாம். மேற்காணும் சான்றுகள் மழையை உண்டாக்குவது வெள்ளி என்னும் கோள் என்பதை உறுதிப்படுத்துகின்றன. அவ்வெள்ளி நிற்கவேண்டிய திசைகுறித்து பதிற்றுப்பத்து குறிப்பிட்டுள்ளது. அவற்றுள் சேரனுடைய ஆட்சிநடைபெறும் நாட்டில் மழைக்கோலாகிய வெள்ளி சிறிது வடக்கே காணப்படுகிறது. அவை நல்லமழையைப் பெய்வித்தற்குரிய அறிகுறியாகும். அம்மழை பெய்யாமல் போனாலும் உணவு சமைக்கும் இடங்களில் பூண் மழுங்கிய உலக்கைகளும், சேம்பினைச் சமைக்கும் புகையும், சோறு சமைக்கும் பெரிய மடாவினையும் இறைச்சியையும் பலரும் கண்டு வியக்கும் அளவிற்குக் குறையாத உணவினை உடையது என்னும் பொருளில் அமைந்துள்ளது. அத்தகைய கோள்,

**வறிது வடக்கு இறைஞ்சிய சீர் சால் வெள்ளி**
**(பதிற். 24:24)**

என்று அழைக்கப்பட்டுள்ளது. வெள்ளி மழையைப் பெய்விக்கும்கோல் என்பதும் அது வடக்கு நின்றால் மழை பொழியும் என்பதும் பதிற்றுப்பத்து வழி அறியமுடிகிறது. பதிற்றுப்பத்து 69-ஆம் பாடலில் சேர மன்னனின் முன்னோர்களின் ஆட்சிச் சிறப்பைச் சுட்டும் பகுதி இடம்பெற்றுள்ளது. அதில் வெள்ளி என்னும் கோல் நிற்க வேண்டிய இடத்தில் நின்றதாகவும், மழையைப் பொய்யாக்கும் பிற கோல்கள் ஏதும் ஆகாயத்தில் காணமுடியவில்லை என்றும் கூறப்பட்டுள்ளது.

பதிற்றுப்பத்து 34-ஆம் பாடல், மன்னனுடைய ஆட்சியில் செவ்வாய்க் கோள் சென்ற வழியில் சுக்கிரன் கோள் செல்லாமல், மழை தேவையான இடங்களில் நின் நாட்டில் பெய்தது என்று குறிப்பிட்டிருப்பது கோள்களின் நற்குறிகளைக் காட்டுவதாக அமைகின்றன.

வெள்ளி என்னும் கோள்மீன், தான் நிற்க வேண்டிய வடதிசையில் நில்லாமல், தெற்குத்திசை நோக்கிச்செல்லும் நிலை ஏற்பட்டால், நாட்டில் மழை பெய்யாது என்பதை,

**வசையில் புகழ் வயங்கு வெண்மீன்**

**திசை திரிந்து தெற்கு ஏகினும் (பட்டின. 1-2)**

என்னும் பாடல் வரி பதிவு செய்துள்ளது. இப்பாடலில், வெள்ளி என்னும் கோள் மழையைப் பொய்த்துப் போகச் செய்யும் திசை தெற்கு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கூற்றை உறுதி செய்வதாகப் புறநானூற்று 35-ஆம் பாடல் அமைந்துள்ளது. பரிபாடலில் கோள்களை விளக்க வரும் பாடலில் மழைக்கோலாகிய வெள்ளியைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது[13].

மேகம் தெற்குச் சென்றால் மழை குறையும் என்பது சங்க கால மக்களின் நம்பிக்கையாக இருந்துள்ளது. இதனை,

**பெரும் பெயல் பொழிந்த தொழில எழிலி**

**தெற்கு ஏர்பு இரங்கும் அற்சிரக் காலையும்,**

**அரிதே, காதலர்ப் பிரிதல் - (நற். 5:5-7)**

என்னும் நற்றிணைப்பாடல் வெளிப்படுத்தியுள்ளது.

**மழை பொய்த்தல்**

பெய்ய வேண்டிய மழை பொய்த்துப் போனால் நிலத்தில் நிகழும் அன்றாட செயல்பாடுகள் எவ்வாறு பாதிப்படையும் என்பதை,

**----------------------- மாத்தாட் சந்தின்**

**சுரைஇவர் பொதியில் அம்குடிச் சீறூர்**

**நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகை (அகம். 287:4-6)**

என்னும் பாடல்வரிகளால் அறியலாம். இப்பாடலில் சீறூரில் மழை பொய்த்தமையால் கடவுளுக்குப் பலி கொடுக்கக் கூடிய கந்திற்கு (மரம்) பலிகொடுக்க மறந்தனர். அதனால் பலிபீடம் பொலிவின்றிக் கிடந்ததாகப் பாடப்பட்டுள்ளது.

மேற்கண்ட ஆய்வின்மூலம் சங்ககால மக்கள் மழைக்கோளாக வெள்ளியையும், அவை வடக்கு நின்றால் மழைபெய்யும், தெற்கு சென்றால் மழைக் குறையும் என்ற நம்பிக்கைக் கொண்டிருந்தது புலப்படுகின்றது. மேலும், மன்னர்களின் செங்கோலாட்சியில் கோள்கள் எத்திசைக்கண் நின்றாலும் மழை பெய்யும் என்றும், மழை பெய்யாவிடினும் நாட்டில் வளம் செழிக்கும் என்ற நிலை இருந்ததையும் எடுத்துரைக்கின்றது.

மழையைத் தலைவியின் கற்புநெறி கொண்டுவரும் என்ற சமூகக் கட்டமைப்பு உருவாகியிருப்பதைக் கலித்தொகையில் காணமுடிகிறது. அவற்றுள் தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடச் சென்றுள்ளான். அவன் சென்ற வழி வெப்பம் காரணமாக வெம்மையாக உள்ளது. அவற்றை நினைத்துத் தலைவி மழைபெய்ய மேகத்தையும்; வெப்பம் குறைய ஞாயிற்றையும்; காற்று வீச காற்றுக் கடவுளையும் வேண்டி வழிபட்டால் அது கற்பிற்கு இழுக்காகும், மழையைப்

பெய்விக்கும் கற்பினை உடையவளாகிய தலைவியின் பசலையைப் போக்க அறக்கடவுளே மேற்சொன்ன துன்பங்களைக் களைந்துவிடுவார்[14] என்பதாக கலித்தொகைப் பாடல் உள்ளது. இத்தகைய மாற்றங்களை காலத்தின் தேவையாகவும் சமூக வளர்ச்சியாகவும் காணமுடிகிறது.

**தைந்நீராடல்**

நிலம் வளம்பெற செய்யப்பட்ட மழைச்சடங்கிற்கும் வாழ்க்கையில் வளம் வேண்டிச் செய்யப்பட்ட தைந்நீராடல் நோன்பிற்கும் இடையே தொடர்பை ஏற்படுத்திப் பார்ப்பது சங்ககாலத்தில் ஏற்பட்ட சமூக மாற்றத்தை அறிந்துகொள்ளப் பயனுள்ளதாக அமையும். எனவே தைந்நீராடல் பற்றிய சங்க இலக்கியப் பதிவுகளைத் தொகுத்து அவற்றின் நிரலான மரபுகளைச் சுட்டிக்காட்டுவதாக இப்பகுதி அமைகிறது.

தமிழரின் தொன்மையான மரபுகளுள் நீராடலும் ஒன்று. நீராடுதல் ஒவ்வொரு சூழலுக்கு ஏற்ப காலத்திற்கு ஏற்ப மக்களின் வாழ்கையோடு பயணித்துச் சில பண்பாட்டுக் கூறுகளை உருவாக்கியுள்ளது. அவ்வகையில் தைந்நீராடல் கன்னிப் பெண்களால் மேற்கொள்ளப்பட்டது. தைந்நீராடும் சடங்கு, இளம் பெண்கள் தமக்கு நல்ல கணவர் வாய்க்க வேண்டும் என்பதற்காக மேற்கொண்ட சடங்கு என்பது பலரின் கருத்து. இந்நோன்பு பலநாட்கள் கடைப்பிடிக்கப்பட்டு அதற்காகச் சில சடங்குமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளதைச் சங்கப் பாடல்களில் இருந்து அறிந்துகொள்ளமுடிகிறது.

**தைந்நீராடல் சடங்கு மேற்கொண்ட முறை**

தை மாதத்தில் இச்சடங்கு மேற்கொள்ளப்பட்டது. இச்சடங்கின் முக்கியச் செயல்பாடு நீராடுவது. இவற்றை,

**நறு வீ ஐம்பால் மகளிர் ஆடும்**
**தைஇத் தண் கயம் போல (ஐங். 84:3-4)**

என்னும் பாடல் குறிப்பிடுகிறது. மேலும், இச்சடங்கு மேற்கொண்ட பெண்கள் குளத்தில் நீராடுவதைப் பழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை இப்பாடல் எடுத்தியம்புகின்றது.

நீராடச் சென்ற தலைவி, தலைவன் கொடுத்த தழையாடையையும் மாலையையும் தோழியர் காணுமாறு, நாணம் நிரம்ப அணிந்திருந்ததையும் இத்தலைவி நீராடி நோன்பு மேற்கொண்டு அதன் பயனாகத் தலைவனைப் பெற வேண்டும் என்று எண்ணியதை,

**தழையும் தாரும் தந்தனன், இவன் என,**
**இழை அணி ஆயமொடு தகு நாண் தடைஇ,**
**தைஇத் திங்கள் தண் கயம் படியும் (நற்-80-5-7)**

என்னும் இப்பாடல் விளக்குகிறது. இதன் மூலம் தலைவி, தலைவன் கொடுத்த தழையாடையை உடுத்திக்கொண்டு நோன்பு மேற்கொள்ளும் மரபும் வெளிப்படுகிறது.

தைந்நீராடும் பெண்களின் அலங்காரம், சடங்குமுறை, சடங்குகளில் பயன்படுத்திய பொருட்கள், குரவையாடியது பற்றியும்,

**தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்,**
**பொலங்காசு நிரைத்த கோடுஏந்து அல்குல்**
**நலம்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வர,**
**பாடுஊர்பு எழுதரும் பகுவாய் மண்டிலத்து**
**வயிர்இடைப் பட்ட தெள்விளி இயம்ப,**
**வண்டற் பாவை உண்துறைத் தரீஇ,**
**திருநுதல் மகளிர் குரவை அயரும்**
**பெருநீர்க் கானல் தழீஇய இருக்கை,**
**வாணன் சிறுகுடி, (அகம்-269-14-22)**

என்னும் அகநானூற்றுப்பாடல் குறிப்பிடுகிறது. இப்பாடலில், மழைபெய்து ஓய்ந்து போன தைத்திங்களின் இறுதிநாட்களில், பெண்கள், பொன்னால் செய்யப்பட்டக் காசுகளைத் தொடுத்து அணிந்தப் பக்கம் உயர்ந்த அல்குலிடத்தே, நல்ல நிறங்கொண்ட பூங்கொத்துக்கள் தழையுடன் அசைந்தாட, ஓசை பரந்து எழும் பெரிய வாயாகிய வட்டத்தையுடைய ஊதுகொம்பினிடத்துப் பிறந்த தெளிந்த இசை முழுங்க, வண்டல் விளையாட்டுக்குரிய பாவையை நீர் உண்ணும் துறையில் கொண்டு வந்து வைத்துக் குரவைக் கூத்தாடுவதாக பதிவுசெய்துள்ளது. மேலும், நோன்பு நோற்கும் பெண்கள் தழையாடை உடுத்தியிருப்பதும் இசை முழுங்கப் பாவை நீர்த்துறையில் கொண்டு வந்து வைத்துக் குரவையாடுவது போன்றவை நோன்பின் செயல்பாடுகளாகும்.

மகளிர் எவ்வாறு தழையாடைகளால் தங்களை அலங்கரித்துக் கொண்டனரோ அவ்வாறே தங்களுடைய நோன்புப் பாவைக்கு அரும்பு முதலிய பூக்களைக்கொண்டு அழகு செய்ததை,

**படிவ மகளிர் கொடி கொய்து அழித்த**
**பொம்மல் அடும்பின் வெண் மணல் ஒரு சிறை (நற்-272)**

என்ற பாடல் விளக்குகிறது. நோன்பின்போது பெண்கள் உணவு உண்ணும் முறை பற்றி,

**வான் பெயல் நனைந்த புறத்த, நோன்பியர்**

**கை ஊண் இருக்கையின் தோன்றும் நாடன் (நற்-22:6-7)**

என்ற பாடல், நோன்பு மேற்கொள்ளும் பெண்கள் தைத் திங்களின்போது நீராடி நோன்பு முந்தியிருந்துப் பின்பு உண்பர் என்று கூறுகிறது. ஈரமேனியராய் உணவு உண்டக் காட்சி இப்பாடலில் உவமையாகப் பயன்படுத்தப்பட்டது.

## கலித்தொகையும் தைந்நீராடலும்

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுனூறு, அகநானூறு ஆகிய இலக்கியங்களில் இடம்பெற்றத் தைந்நீராடும் நோன்பு கலித்தொகை, பரிபாடல் இலக்கியங்களிலும் இடம்பெற்றுள்ளது.

தைந்நீராடும் நோன்பு மேற்கொண்ட மகளிர் செய்யும் செயல்கள் கலித்தொகை 59-ஆம் பாடலில் தாழிசையில் அமைந்துள்ளது. அவை,

1. விளையாட்டு ஆயமொடு வகைவகையாய் அணிபுனைந்து, நீ தைத்திங்களில் நீராடிய தவத்தின் பயன் பெறுவையோ?
2. நோன்பின்போது பிறர்மனைக் கண்ணேச் சென்றுப்பாடி ஐயம்பெற்று, கிடைத்ததைப் பலருக்கும் கொடுக்கிறாள் தலைவி.
3. தைந்நீராடலில் பாவை விளையாட்டு ஆடுவர். மரத்தால் பாவை செய்து விளையாடும் மகளிர் ஆண்பாவை, பெண்பாவை இரண்டிற்கும் திருமணம் செய்து வைக்கின்றனர். ஆண் பாவையைச் சிறுமுத்தன் என்று அழைத்தனர். இந்நிகழ்சிக்குச் சிறு சோறு சமைத்து ஆயத்திற்கு இட்டு மகிழ்ச்சியடைந்தனர் இளம் பெண்கள் என்பது தாழிசையில் கூறப்பட்டுள்ள பொருள். இதனை,

**வை எயிற்றவர் நாப்பண், வகை அணிப்பொலிந்து, நீ**

**தையில் நீர் ஆடிய தவம் தலைப்படுவாயோ?**

......

**பொய்தல மகளையாய், பிறர்மனைப் பாடி, நீ**

......

**சிறு முத்தனைப் பேணி, சிறுசோறு மடுத்து, நீ**

**(கலி-59:13-20)**

என்ற பாடல் உணர்த்துகின்றது.

கோலம்செய்த மகளிர்தம் தோழியருடன், வையை ஆற்றின் உயர்ந்த இழுமணலிடத்தே அமர்ந்து ஆடுகின்ற நுகர்ச்சியைத் தலைவி தோழியுடன் நினைவு கூறுகின்றாள்.

**தைஇய மகளிர் தம்ஆயமோடு அமர்ந்து ஆடும்**

**வையை வார் உயர் எக்கர் நுகர்ச்சியும் உள்ளர் கொல்**

**(கலி-27:19-20)**

எனும் பாடல் வரிகள், ஆற்றில் பெண்கள் நீராடிய செய்தியைத் தெரிவிக்கின்றன.

**பரிபாடலும் தைந்நீராடலும்**

மார்கழித்திங்கள் முழுமதி திருவாதிரை நாளில், திருவாதிரைக் கடவுளும் ஆதிரையான் என்று அழைக்கப் படுபவனுமாகிய சிவபெருமானுக்குத் திருவிழாவைத் தொடங்கினர். முப்புரிநூலை அணிந்த அந்தணர்கள் அவ்விழாவில் இறைவனுக்குப் பலிப்பொருளுடைய பொற்கலங்களைக் கையில் ஏந்தி நின்றனர். மண்ணுலகம் கதிரவனால் வெப்பமடையாமல் மழையினால் குளிர்ச்சிப் பெறுவதாக என்று வாழ்த்தி, அம்பா ஆடும் கன்னிப் பெண்களை சடங்கு அறிந்த முதுபார்ப்பனிமார் நோன்பு செய்யும்முறையை அறிவிக்க, தாயின் துணையோடு பனிமிக்க வைகறைப் பொழுதிலே நீராடினர். ஈர ஆடையை அங்கு அந்தணரால் வளர்க்கப்பட்டத் தீயின் வெம்மையினாள் உலர்த்தினர். இதனை

**மாஇருந் திங்கள் மறுநிறை ஆதிரை**
**விரிநூல் அந்தணர் விழவு தொடங்க,**
**புரிநூல் அந்தணர் பொலம் கலம் ஏற்ப,**
**'வெம்பாதாக, வியல்நில வரைப்பு! என**
**அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்,**
**முனித் துறை முதல்வியர் முறைமை காட்ட,**
**பனிப் புலர்பு ஆடி, பருமணல் அருவியின்** (பரி. 11:77-83)

எனும் பாடல் விளக்குகிறது. இப்பாடலில் தைந்நீராடும் சடங்கு அம்பா ஆடல் என்ற பெயரால் அழைக்கப்பட்டுள்ளது. அவற்றைக் கால மாற்றத்தால் புதிதாக கிடைத்த வடிவமாக நோக்கவேண்டியுள்ளது. மேலும், அந்தணர்கள் எரியோம்ப கன்னிப் பெண்கள் ஈரமேனியராய் முதுபார்ப்பனிமார் வழிகாட்ட சடங்கு செய்திருப்பதும் புதிய மரபாகக் காணப்படுகின்றது. இத்தகையச் சூழலில் மழை வேண்டியிருப்பது முக்கியமானதொன்றாகக் கருதவேண்டியுள்ளது. இப்பாடல்குறித்து சிலம்பு. நா. செல்வராசு அவர்களின் பின்வரும்கருத்து இன்றியமையாததாக உள்ளது. நீராடலில் 'அம்பாவாடல்' எனும் வடிவம் கிடைத்துள்ளது. (பரி. 11. 80-83) இது கன்னிப் பெண்கள் தம் தாயரொடு சேர்ந்து நீராடியமையை விளக்கும். 'பெரிய நிலமானது வெம்மை நீங்கிக் குளிர்வதாக' என்ற வேண்டுகோளோடு இந்நீராட்டம் நடைபெற்றுள்ளது. இது சில சடங்குகளோடு நிகழ்ந்துள்ளது என்பதை, 'முனித்துறை முதல்வியர் முறைமை காட்ட' எனும் தொடர் (11:82) விளக்குகின்றது. ஆயின் இச்சடங்குமுறை குறித்த முழுமைகள் கிடைத்தில[15] என்ற கருத்து பரிபாடல் காலத்தில் தைந்நீராடும் சடங்கில் நிகழ்ந்த மாற்றங்களை

உறுதி செய்கின்றது. மேற்கண்ட தைந்நீராடும் சடங்கு குறித்தப் பதிவுகளைத் தொகுத்து அவற்றில் ஏற்பட்ட மாற்றங்களைப் பின்வருமாறு கண்டறியலாம்.

கன்னிப்பெண்கள் தைமாதத்தில் அதிகாலை நேரத்தில் தம்முடைய ஆயத்தாருடன் நீராடச்சென்றனர் என்பது சங்க இலக்கியம் முழுவதிலும் எவ்வித மாற்றமும் இன்றிப் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

கலித்தொகையில் நோன்பின்போது தலைவி வீடுவீடாகச்சென்றுப் பாடல் பாடி ஐயம்பெற்று அவற்றைப் பலருக்கும் பகிர்ந்துக் கொடுத்ததாகப் பாடப்பட்டுள்ளது. இம்மரபு சங்க இலக்கியத்தில் புதிதாக இடம்பெற்றுள்ளது.

பாவைக்குத் திருமணம் செய்து விளையாடும் பெண்கள் ஆண் பாவைக்குச் சிறுமுத்தன் என்று பெயரிட்டுள்ளனர். திருமணத்தின்போது மணப்பெண் சார்பாகச் சோறு சமைத்து ஆயத்தாருடன் உண்டதாகக் கலித்தொகைக் கூறியிருப்பது போன்று பிற இலக்கியங்களில் காணமுடியவில்லை.

பரிபாடல் கூறும் சடங்கு ஒரு புதியமரபைப் பின்பற்றிச் செய்யப்பட்டுள்ளது. வையையின் புதிய நீர் பெருக்கத்தில் நீராட அனைத்துத் தரப்பு மக்களும் அதற்குரிய ஆயத்தங்களைச் செய்கின்றனர். கன்னிப்பெண்களும் தாங்கள் நீராடப் பல ஏற்பாடுகளைச் செய்கின்றனர். நீராடுவதற்கென்று ஆடை, அணிகலன், சடங்குப் பொருட்கள் முதலியவற்றை நீராடும் இடத்திற்கு எடுத்துச் சென்றுள்ளனர்.

முழுமதிநாளில் சிவனுக்குத் திருவாதிரை விழா எடுக்கும் சடங்கு முப்புரி நூல் அணிந்த அந்தணர்களால் நிகழ்த்தப்பட்டுள்ளது. ஆதிரை விழாவின்போது கன்னிப் பெண்களுக்குரிய நோன்பு எனப்படும் தைந்நீராடல் சடங்கும் தொடங்கப்பட்டது. அந்தணர்கள் சில வேள்விகளைச் செய்து நீராடச் செய்யுமாறு கூறுகின்றனர்.

முதுபார்ப்பனியப் பெண்கள் சடங்கு முறைகளைக் காட்டக் கன்னிப்பெண்கள் சடங்கு மேற்கொள்கின்றனர். நோன்பின் பயனாக உலகம் வெப்பமாகாமல் நல்ல மழைபெய்து குளிரவேண்டும் என வேண்டிக்கொள்கின்றனர். நல்ல கணவர் வாய்க்க வேண்டும் என்று வேண்டி நீராடி, வேள்வித்தீயினை வலமாகவந்து தம்முடைய ஈர ஆடைகளை உலர்த்திக்கொண்டனர். இத்தகைய சடங்குமுறை பரிபாடல் காலத்தில் பின்பற்றப்பட்டவையாகும். பிற இலக்கியங்களில் நீராடத் தழையாடை உடுத்துதல் மரபாக உள்ளது. பரிபாடலில் நீராடப் பல ஆடைகள், ஆபரணங்கள் வாங்கப்பட்டுள்ளன. இங்குத் தழையாடை என்ற பழைய இனக்குழு மரபுடன் புதிய ஆடை மரபும் நுழைந்திருப்பது கவனிக்கத்தக்கது.

தைந்நீராடும் சடங்கில் ஏற்பட்ட மாற்றகளைக் கூறும் அதேநேரத்தில் முன்னர் கூறப்பட்டதைப் போன்று மழைவேண்டல் சடங்கிற்கும் தைந்நீராடல் சடங்கிற்கும் முக்கியத்தொடர்பு இருக்கின்றது.

இனக்குழு வாழ்வு நெறியைப் பின்பற்றி வாழ்ந்தக் குறிஞ்சி நில மக்கள் மழை வேண்டிச்சில செய்கைகளையும் சடங்குகளையும் நிகழ்த்தினர். மருதம் மற்றும் நெய்தல் நிலமக்கள் தங்களின் நிலப்பகுதிகளில் கிடைக்கக்கூடிய பொருட்களைக்கொண்டு நீர் இருக்கும் இடத்தில் மழைவேண்டிச் சடங்குகளைச் செய்தனர் என்பது மழைவேண்டல் சடங்கில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இச்சடங்குகளால் மழையை வருவிக்கவும், நிறுத்தவும் முடியும் என்றநிலை திணை மக்கள் வாழ்க்கையிலிருந்து பெறமுடிகிறது.

அரசுருவான காலகட்டத்தில் மழை பெய்யும் இயற்கை நிகழ்வு மன்னரின் செங்கோலாட்சி சார்ந்த அறநெறியாகப் பார்க்கப்பட்டதோடு நல்லாட்சியில் மழைக்குரிய கோள்கள் பொய்ப்பினும் மழை தானாக பெய்யும் என்றும் கட்டமைக்கப்பட்டுள்ளது.

கலித்தொகையில் பெண்ணின் கற்பு மழையை வருவிக்கமுடியும் என்ற நிலை உருவாகியுள்ளது. அதனைத் தொடர்ந்து வைதிக நெறி உருவாகி வளர்ந்த காலத்தில் வேத நெறியாளும், வேள்விகளாளும் மழையை வருவிக்கமுடியும் என்று அதற்காகச் சடங்குகள் செய்யப்பட்டுள்ளன. குறிப்பாகக் கன்னிப்பெண்கள் தமக்கு நல்ல கணவன் வாய்க்கவேண்டும் என்று நோன்பு நோற்றனர். அவர்களும் உலகம் குளிர நல்லமழை பெய்யவேண்டும் என்று நோன்பு நோற்று முதுபார்ப்பனியப் பெண்ணின் உதவியால் சில சடங்குகளைச் செய்திருக்கின்றனர். இம்மாற்றம் பரிபாடலில் நிகழ்ந்துள்ளது. இவ்வாறு மேற்கண்ட குறிப்புகளில் காணப்படும் சடங்கு முறைகளையும் சடங்குகளின் நோக்கங்களையும் சடங்குகள் குறித்த மதிப்பீடுகளையும் சங்க இலக்கியங்கள் உருவான கால இடைவெளிகளைக் கணக்கில் கொண்டு புரிந்துகொள்வது இன்றியமையாதது. அவ்வகையில் சங்க இலக்கியங்களில் கலித்தொகையும் பரிபாடலும் காலத்தால் பிற்பட்ட இலக்கியங்களாக தமிழ் அறிஞர்களால் கொள்ளப்படும் கருத்தோடு ஒப்பிட்டு ஆராயும் போது நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு முதலான இலக்கியங்களிலும் கலித்தொகை, பரிபாடல் ஆகிய இலக்கியங்களிலும் கூறப்படும் தைந்நீராடல், மழைச்சடங்கு ஆகியவற்றின் மீதான மதிப்பீடுகள் வேறுபடுவதை தெளிவாக முன்வைக்கமுடியும்.

இப்பதிவுகளை ஆய்வுக்குட்படுத்தும்போது நற்றிணை முதலான நூல்களில் குறிப்பிடப்பட்ட திணை சார்ந்த பொருட்களின்மூலம் செய்யும் சடங்குகளால் மழை பெறுதல், மன்னனின் செங்கோல் மழை பெறுதலுக்குக் காரணமாக அமையும்

என்பதும், தைந்நீராடல் சடங்கின் மூலம் நல்ல கணவனைப் பெறுதல் என்ற கருத்து மாறுபட்டுள்ளதையும் காணமுடிகிறது. இவ்வேறுபாட்டை கலித்தொகை, பரிபாடல் தோன்றிய காலத்தின் அடிப்படையிலும் சங்க இலக்கியங்களில் கலித்தொகையும், பரிபாடலும் பிற்காலத்தில் தோன்றிய நூல் என்ற அறிஞர்களின் கருத்தோடும் வைத்துப் புரிந்துகொள்ள வேண்டியுள்ளது.

மலைமேல் இருந்துக் குன்றக் குறவன் நிகழ்த்திய மழைவேண்டல் சடங்கு, அரசர்களின் செங்கோலாட்சியும், பெண்ணின் கற்பும் மழையைக் கொண்டு வரும் என்ற நிலைக்கு வந்து, பரிபாடல் காலத்தில் கன்னிப்பெண்களும் அந்தணர்களும் வேள்விசெய்து மழையை வேண்டினர் என்ற நிலைக்கு மாறிய நிலை சமூகமாற்றம் அல்லது வளர்ச்சியைத் தெரிவிப்பனவாக உள்ளது.

இனக்குழுச் செய்கை முறையாக இருந்த ஒன்று கால மாற்றத்தால் அரசுருவாக்கத்தைக் கடந்து வைதீக நெறியில் பெறக்கூடிய ஒன்றாக மாறியுள்ளது குறிப்பிடத்தக்கது. மேலும், முன் சங்க இலக்கியங்களில் கன்னிப் பெண்கள் மட்டும் பங்கேற்றதாகக் கூறப்பெறுகின்றது. ஆனால் பிற்சங்க நூல்களில் அந்தணர் எரியோம்ப கன்னியரின் தாய்மார் அருகே நிற்க தைந்நீராடல் நிகழ்ந்தது. இதனை அம்பா ஆடல் என்று பரிபாடல் குறிப்பிடுகின்றது. இவ்வழிபாடும் வளம் நோக்கிச் செய்யப்பெற்றது. மழை வேண்டிச் செய்யப் பெற்றது. மழையினைப் பெண்தான் தருவாள் என்ற நம்பிக்கை உலகம் முழுவதும் இருந்ததைப் போலவே தமிழ்நாட்டிலுமிருந்தது. அதிலும் கன்னிப் பெண்கள் இவ்வழிபாட்டில் மையமாக நிற்பதைப் பார்க்கும்போது அது கன்னியின் சக்தி (ஆற்றல்) பற்றிய நம்பிக்கையைக் குறித்து நிற்கின்றது[16] என்று குறிப்பிடுவது மற்றொருபரிணாமத்தை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

## வெறியாட்டு

வெறியாட்டுச் சடங்கு குறிஞ்சித்திணையில் நிகழ்த்தபட்டுள்ளது. குறிஞ்சி நில தெய்வமான முருகனால் அணங்கப்பெற்ற பெண்ணின் நோய் நீங்க வெறியாடல் நடத்தப்பட்டுள்ளது. பெண்ணின் மேனியில் ஏற்பட்ட மாற்றத்தைக் கண்ட தாய், கட்டுவிச்சி, வேலன் முதலானோரை அழைத்துக் குறி கேட்க, அவர்கள் நோய்க்குக் காரணம் கூறி இச்சடங்கைச் செய்துள்ளனர். குறிஞ்சி நில மக்களின் நம்பிக்கையாக விளங்கும் வெறியாட்டுச் சடங்கு மருந்தாலும் பிறவற்றானும் நீங்காத நோய் வெறியாட்டால் நீங்குமென்று நம்பிக்கைக்கொண்டு வெறியயர்தலே வெறியாட்டு எனப்படும்[17] என்பது வெறியாட்டு எதற்காக எடுக்கப்பட்டது என்ற காரணத்தை விளக்குகின்றது. காதல் நோயால் மெலிந்த பெண்ணிடம் ஏற்பட்ட மாற்றங்கள் காரணமாக ஏற்பாடுசெய்யப்பட்ட வெறியாட்டு என்னும் சடங்கு குறித்தச் சான்றுகள் சங்க இலக்கியங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**வெறியாட்டுச் சடங்கு குறித்தப் பதிவுகள்**

சங்க இலக்கியம், வெறியாட்டு நேரடியாக நிகழ்த்தப்பட்ட சூழல்களையும், சமூகத்தின் நடைமுறையை நினைவுகூறும் நிகழ்ச்சிகளையும் எடுத்துரைக்கின்றது. வெறியாட்டு நிகழ்த்திய களம், வெறியாடுதல், வெறியாட்டு நிகழ்த்துநன் போன்ற நினைவுகூறும் பதிவுகள் பின்வருமாறு,

- வெள்ளிய மணற்பரப்பு, வேலனால் அழகுபெற அமைக்கப்பட்ட வெறியாட்டு நிகழ்த்தப்பெறும் இடங்கள்தோறும், செந்நெல்லின் பொரியைச் சிதறினாற் போன்ற தோற்றத்தைத் தரும் (குறுந்-53:3-4).
- ஞாழலின் மலர்கள் தினை அரிசிபோலும், மலர்களைத்தூவினாற் போலவும் காணப்படும் காட்சி வெறியாட்டுக் களம்போல இருக்கின்றது (குறுந். 318:3).
- மலர்கள் பரவிக் கிடத்தல், வேலன் வெறியாடும் பெரிய களத்தினைப் போன்று காட்சிதரும் சாரல் (அகம்-182:13-14).
- வேலன் வெறியாடும் களத்தில் பரவி கலந்துக் கிடக்கும் பூக்கள்போல காட்சி அளித்தது (அகம்-114:1-3).
- நெருப்பினை ஒத்த காந்தளின் பல இதழ்கள் வெறியாடும் களத்தைப் போன்ற அகன்ற பாறைகள்தோறும் வீழ்ந்துப் பரவிக்கிடந்தன (மலைபடு. 149-150).
- கடவுளுக்கு இட்ட தினைக்கதிரை அறியாது உண்ட மயில், தெய்வம் ஏறி ஆடுகின்றவள் வெறியாடுகின்ற அழகினைப்போல, உள்ளம் வெந்து, உடல் நடுங்கும் (குறுந். 105:3-4).

மேற்கண்ட பதிவுகள் வெறியாடும் களத்தில் பயன்படுத்தப்பட்டிருந்த பொரி, தினை அரிசி, மலர்கள் போன்ற பொருட்களை நினைவு கூறுவதாகவும், வெறியாட்டு நிகழ்த்துநர்களின் ஆவேசத்தைப் புலப்படுத்துவதாகவும் அமைந்துள்ளன.

**வெறியாட்டுச் சடங்கு நிகழ்த்துநர்**

தலைவியின் நோய்க்குரிய காரணத்தைக் கட்டுவிச்சி, வேலன் ஆகியோர் அறிந்துக் கூறிய, பின்னர் வெறியாட்டுச் சடங்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. சில பாடல்களில் கட்டுவிச்சி நோய் அறிந்துக் கூறியபின்னர் வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்தப்பட்டுள்ளது. இவ்வாறு தெய்வமுறுதலையும், வாக்குரைத்தலையும் (முன்னறிவித்தல்) ஷாமானித்தின் வடிவங்களாகக் கூறும் பக்தவத்சல பாரதி வெறியாட்டை பரவச நிலையடையும் (trans state) புராதனக் கூறாகக் குறிப்பிட்டுள்ளார்[18]. இத்தகைய பரவச நிலையை வெறியாட்டு நிகழ்த்துநர் அடைந்து தெய்வமேறி ஆடி வாக்குரைத்திருப்பதைச் சங்க

இலக்கியங்களில் காணமுடிகிறது. வேலன், கட்டுவிச்சியைப் போன்று புலைத்தியின்மீதும் முருகன் ஏறியதைக் காணமுடிகிறது.

**முருகு மெய்ப்பட்ட புலைத்தி போலத்**

**தாவுபு தெறிக்கும் ஆன்மேல் -**

**புடை இலங்கு ஒள் வாள் புனை கழலோயே! (புறம். 259:5-7)**

என்ற பாடல்வரிகள் புலைமகள் ஆநிரைகளைப்போன்று துள்ளித் துள்ளி ஆடியதாகக் குறிப்பிடுகிறது. ஆனால் புலைத்தி வாக்குரைப்பவளாகக் கூறப்படவில்லை.

**கட்டுவிச்சி**

கட்டுப்பார்க்கும் பெண்கள் கட்டுவிச்சி என்றழைக்கப்பட்டுள்ளனர். கட்டுப்பார்த்தல் பெண்களுக்குரிய குறிமுறையாகக் காணப்படுகிறது. தாய் கட்டுவிச்சியை அழைத்துத் தம்முடைய பெண்ணிற்கு ஏற்பட்ட நோயிக்கான காரணத்தைக் குறி கேட்க, கட்டுவிச்சி நோய்க்கானக் காரணத்தைக் கட்டுபார்த்து உரைத்துள்ளாள். கட்டுப்பார்த்தல் என்பது முற்றத்தில் நெல்லை வட்டமாக பரப்பி வைத்துத் தெய்வங்களைப் பாடி எண்ணிப் பார்த்துக் கட்டுவிச்சி காணும் குறி என்பர்[19].

தெய்வங்களையும், குலத்தோரையும் அழைத்துப் பாடுகின்ற கட்டுவிச்சி[20], கையில் வெள்ளிய பூணினை நுனியில் உடைய, தம் இனத்துக்கு அடையாளமாகிய சிறிய தலைக்கோலையுடைய பாடல் மகளிர் என்றும் அழைக்கப்பட்டுள்ளனர்.

**வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர் (குறுந். 298:6)**

என்ற வரி அவற்றைத் தெரிவிக்கின்றன. இத்தகையத் தோற்றமுடைய கட்டுவிச்சி குறிஞ்சிநிலத் தலைவன் இத்தலைவிக்குத் தகுதியில்லாதவன் என்பது போல தலைவியின் நோய் தெய்வத்தான் வந்தது என்ற தீமைபயக்கும் மொழிகளை உரைத்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளாள்[21]. கட்டுவிச்சி, குறுந்தொகை, அகநானூறு ஆகியவற்றில் அகவன் மகளிர் என்றும் முதுவாய்ப்பெண்டிர் எனவும், நற்றிணையில் செம்முதுபெண்டிர் எனவும் குறிஞ்சிப்பாட்டில் அறியுநர் எனவும் குறிப்பிடப்படுகின்றாள்.

**வேலன்**

கழங்கு குறி பார்த்து வெறியாட்டு நிகழ்த்துபவன் வேலன். தலைவியின் உடல் வேறுபாட்டைக் கண்ட அன்னை, வேலனை அழைத்துக் காரணம் கேட்க, வேலன் கழங்கு குறிபார்த்துக் காரணம் உரைப்பான். வேலனுடைய கழங்கு குறி, வீட்டின் முற்றத்தில் புதுமணல் பரப்பி பார்க்கப்பட்டுள்ளது[22]. பயன்படுத்திய கழங்கு நெல்லிக்காய்க்கும்[23], புலியின் கண்ணிற்கும்[24] ஒப்புமைப் படுத்தப்பட்டிருப்பதிலிருந்து

அவற்றின் வடிவம் புலப்படுகிறது. (வேலன் கழங்கு குறிபார்த்து வெறியாட்டு எடுத்தல். ஐங். 245,248,249,250,அகம். -195). வேலன் வெறியாட்டுச் சடங்கு நிகழ்த்திய பதிவுகளைக் கீழ்வரும் பகுதி எடுத்துரைக்கின்றது.

- வேலன்மேல் முருகன் வந்து, தலைவியின் மெலிவு வெற்றியுடைய நெடிய முருகவேளால் வந்தது என்று கூறுவான் (குறுந். 111).
- நம் நோயைத் தீர்ப்பதற்கு உரிய மருந்து வெறியாடல் என அறிந்த வேலன் நம்முடைய நோயை அறியான். ஆதலின் மருந்தும் அறியான் (குறுந். 360:1-2).
- அன்னை வேலனை நம் இல்லத்திற்கு அழைப்பாளாயின், அவ்வேலன் தலைவனுடன் கொண்டுள்ள காதற் கேண்மையை அறிந்து கூறுவானோ (ஐங். 241).
- அறியாமையின் பொருட்டு வெறி என மயங்கினர் (ஐங். 242).
- மலையில் குடிகொண்டுள்ள முருகக்கடவுளை வேண்டி வெறியாட்டு நிகழ்த்தி நோய்க்கு முருகணங்கு காரணம் என அறியா வேலன் கூறுவான் (ஐங். 243).
- வேலனின் வெறியாட்டு என்ன பயன் செய்யும் (ஐங். 244).
- வேலன் வெறியாட்டு செய்தனனே (ஐங். 246).
- வெறியெடுத்தால் வேலன் முருகணங்கியது என்று கூறுவான், அன்னையும் இற்செறிப்பு நடத்துவாள் (நற்-273).
- அச்சத்தைச் செய்யும் வேலன், இத்துன்பம் முருகனால் வந்தது என்று தான் கூறிய சொற்களால் அனைவரையும் வசப்படுத்துபவன் (மதுரைக். 611-615).

மேற்கண்ட பதிவுகள் வேலன் வெறியாட்டு நிகழ்த்துபவனாகக் காட்டுகிறது. மேலும், தலைவியின் நோய் முருகனால் வந்தது என்று கூறி அவற்றைச் சரிசெய்ய வெறியாட்டு எடுக்குமாறு வேலன் கூறுபவனாக உள்ளான். இவ்வாறு நோய்க்குக் காரணம் முருகன் என்றுரைக்கும் இவன் தலைவி, தோழி ஆகியோரால் அறியாமை உடையவனாகக் கூறப்பட்டிருக்கின்றன்.

**வெறியாட்டுக் களங்கள்**

வெறியாட்டு நிகழ்த்தப்படும் இடம் வெறியாட்டுக்களம் என்று அழைக்கப்பட்டுள்ளது. ஆறு, மனை, பந்தல் ஆகிய இடங்களில் வெறியாட்டு நிகழ்த்தப்பட்டுள்ளது. மனையாக இருப்பின் புதிய மணல் கொண்டுவரப்பட்டு பரப்பப்பட்டுள்ளது. நன்மையினை எதிர்நோக்கும் மகிழ்ச்சியினை அடிப்படையாகக்

கொண்ட விழாக்களிலும் சடங்குகளிலும் புதுமணல் பரப்பல் பழக்கமாகப் பின்பற்றப்பட்டு வந்துள்ளது[25].

- செல்லுகின்ற ஆற்றின் நடுவில் அமைந்த மணல்திட்டில் களம் அமைந்தது (குறுந். 263).
- மணலாலும் மலர் மாலைகளாலும் பிறவற்றாலும் அழகுறுத்தினர் (ஐங்-248,249).
- பெரிய பந்தலிலே களம் அமைக்கப்பட்டது (அகம்-98).
- மனையிடத்தே களம் அமைத்தனர் (ஐங்-247,குறுந்-53,நற்-34).
- மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும் வேலன் வெறியாடினான். (மது. 615)

மேற்கண்ட பதிவுகள் வெறியாட்டு நிகழ்த்திய களங்குறித்தச் சான்றுகளைத் தருகின்றன.

**வெறியாட்டு ஒப்பனைகள்**

வேலன் வெறியாட்டின்போது அதற்காகசில ஒப்பனைகளைச் செய்துள்ளான். அத்தகைய ஒப்பனை மற்றவர்களில் இருந்து வேலனை தனித்துவப்படுத்திக்காட்டும் வகையில் அமைந்துள்ளது. தலையில் உயரமான தலையணி அணிந்த வேலனின் முதுகில் நீண்டப் பாகை தொங்கியதை,

**அறுவை தோயும் ஒருபெருங் குடுமி,**
**சிறுபை நாற்றிய பல்தலைக் கொடுங்கோல்,**
**ஆகுவது அறியும் முதுவாய் வேல (அகம். 195:12-14)**

என்கிறது அகநானூறு. வேலன் பலவகை மாலைகளை அணிந்திருந்ததைப் பின்பரும் பதிவுகள் மூலம் அறியலாம்.

- விதைகளால் ஆகிய மாலையை, வேலனுக்குச் சூட்டினர் (குறுந். 214).
- வேலன், வெண்மையான பனந்தோட்டினைக் கடப்ப மலரோடு சூடினான் (அகம். 98).
- வேம்பு, பாசிலை, நீலம் முதலிய மலர் மாலைகளைச் சூடினர். பனந்தோட்டினையும், கடப்ப மாலையினையும் கையிற் கொண்டு வெறியாட்டு எடுத்தனர் (அகம். 138).
- தலையிற் கண்ணி சூடிக் கையில் வேலேந்தி நின்றான் (அகம். 272).
- வேலன் மாலை அசைய வெறியாட்டு செய்வான் (அகம். 292).
- கடம்பின் கண்ணியைச் சூடியிருந்தான் (நற். 34)

- வேலன், குறிஞ்சி, கடப்பு ஆகியவற்றாலான பூச்சூடியிருந்தான் (மதுரைக். 613).

இதுவரை கூறப்பட்டுள்ள ஒப்பனை முறையிலிருந்து திருமுருகாற்றுப்படை கூறும் வேலனின் ஒப்பனைமுறை சில மாற்றங்களுடன் காணப்படுகின்றது. முருகனுக்குப் பூசை செய்யும் வேலன், பச்சிலைக்கொடியால் நல்லமணமுடைய சாதிக்காயை இடையிடையே சேர்த்து, அதனோடு புட்டிலைப்போன்ற வடிவுடைய தக்கோலக்காயையும் கலந்து, காட்டு மல்லிகையுடன் வெண்டாளிப் பூவையும் சேர்த்துக்கட்டிய தலைமாலையை உடையவனாய் நின்றான்[26] என்றும் கையில் சிவப்பு நூலைக் காப்பாக அணிந்திருந்தான் என்றும் கூறியுள்ளது. இங்கு வேலன், கையில் சிவப்பு நூல் கட்டுவது சாதிக்காய் உள்ளிட்டவற்றை மாலையாகத் தொடுத்து அணிவது போன்ற ஒப்பனைகள் புதிய மரபாகக் காணப்படுகின்றது.

### வெறியாட்டு நிகழ்த்தப் பயன்படுத்தப்பட்ட பொருட்கள்

குறிஞ்சி நிலத்தில் நடத்தப்பட்ட வெறியாட்டில் அந்நிலத்திற்குரிய பொருட்களை அடிப்படையாகக் கொண்டு சடங்கு நிகழ்த்தப்பட்டுள்ளது. அவற்றுள் தினை முதன்மையான இடம்வகித்திருப்பது அத்திணைக்குரிய பொருளாதாரத்தையும் உணவுமுறையையும் உணர்த்துவதாக உள்ளது.

### தினை

குறிஞ்சித் திணையின் அடையாளமாக விளங்கும் தினை, குறிஞ்சி நில மக்களின் உணவாக மட்டும் அல்லாது அவர்கள் நன்மையைப் பெற விரும்பிச் செய்யும் வழிபாட்டுச் சடங்கிலும், தீமையைப் போக்க நிகழ்த்தும் வெறியாட்டுச் சடங்கிலும் இடம்பெற்றிருக்கின்றது. தம்முடைய உணவாகிய தினையைத் தாம் வழிபடும் வேலனுக்குப் படையலாக இடுவதுபோன்று தமக்கு அச்சத்தை விளைவிக்கும் பிறவற்றிற்கும் பலியாகக் கொடுத்துள்ளனர். வெறியாட்டில் தினை பலியாகக் கொடுக்கப்பட்டதைப் பின்வரும் பதிவுகளால் அறியமுடிகிறது.

- தினை அரிசி நிரம்பிய பிரம்பின் கூடையை வெறியாட்டுக் களத்தில் வைத்தனர் (குறுந். 263).
- சிலவாகிய தினை அரிசிச் சோற்றுப் பலியுடன் களம் காணப்பட்டது (குறுந். 362).
- சிவந்த தினையினைக் குருதியுடன் கலந்துத் தூவினர் (அகம். 22).
- நிறமிக்கச் செந்தினையை நீரோடு கலந்துத் தூவி துதித்தனர் (அகம். 272).

- 'பிரப்பு'-தானியங்களைப் பலியாக வைத்தல்: அஃதாவது, குறுணி வீதம் கொள்கலன்களிற் பரப்பி வைக்கும் அரிசி, தினை முதலிய நிவேதனப் பொருள்கள் (அகம். 98).

அத்தகைய தினையை எவ்வித மாற்றமும் செய்யாமல் பலிப் பொருளாகக் கொடுத்தல், அவற்றைச் சமைத்துக் கொடுத்தல், அதனுடன் குருதி கலந்துக் கொடுத்தல், நீர் கலந்து கொடுத்தல் ஆகிய நிலைகளில் தினையின் பயன்பாடு காணப்படுகின்றது.

**வெள்ளாட்டுக் குட்டி**

வெறியாட்டுநிகழ்த்தப் பல சடங்குப்பொருட்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றுள் முக்கியமானதாக வெள்ளாட்டின் குட்டி உள்ளது. வெள்ளாட்டின் குட்டியை அறுத்து அதன் இரத்தம் பயன்படுத்தப்பட்டுள்ளது (குறுந்-263-1, 362:அகம்-242-8-12, 292-4-6, குறிஞ்-174-175). பலி கொடுக்கப்பட்டதாக அகநானூற்று 22-ஆம் பாடல் குறிப்பிடுகிறது. ஆட்டின் கழுத்தை அறுத்து அதன் குருதியை சிவந்த தினையுடன் கலந்துத் தூவினர்[27]. இரத்தம் தலைவியின் நெற்றியில் பூசபட்டிருக்கிறது[28].

**வெறியாட்டும் இசையும்**

வெறியாட்டின்போது பல இசைக்கருவிகள் இசைக்கப்பட்டதுடன் இனிய பாடல்கள் பாடப்பட்டன. அவை முருகனைப் புகழ்ந்தும் அவனுடைய கடப்பமரம், களிறு போன்றவற்றை பாடுவதாகவும் இருந்ததை பின்வரும் குறிப்புகள் வழி அறியமுடிகிறது.

- பல இசைக் கருவிகள் ஒலிக்க வேலன் ஆவேசித்து ஆடினான் (குறுந். 263).
- வீட்டில் ஒலியுண்டாக, முருகனைப் பாடிப் பரவினர் (அகம். 22).
- கூட்டமாக இனிய வாச்சியங்கள் ஒலித்தது, இனிய பாடலினைத் தாளத்தோடு பொருந்தி முருகனின் புகழினைத் துதித்துப் பாடினர் (அகம். 98).
- இசை வாத்தியம் முழங்க, முருகனின் கடப்பமரத்தையும் களிற்றினையும் புகழ்ந்துப் பாடினர் (அகம். 138).
- அரித்தெழக்கூடிய பல இன்னிசைக் கருவிகள் ஒலித்தது (மதுரைக். 612).

**கன்னம்**

கன்னம் என்பது பாவை என்று கூறப்பட்டுள்ளது. வேலன் வெறியாட்டு நிகழ்த்துகையில் ஆவேசித்துப் பாவையைக் கையில் தூக்கி ஆடுவது மரபாகக் காணப்படுகிறது. இதனை,

பொன் நகர் வரைப்பில் கன்னம் தூக்கி (ஐங். 247:2)

பொறி அமை பாவையின் தூங்கல் வேண்டின் (அகம். 98:20)

என்ற வரிகளால் அறியமுடிகிறது.

## வெறியாட்டில் தெய்வவழிபாடு

வெறியாட்டு நிகழ்த்தும் முன்னர் வேலன் முருகனை வழிபட்டுச் சடங்கைத் தொடங்கியுள்ளான். நோய்க்குக்காரணமான முருகனே நோயைக் குணப்படுத்துவான் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் முருகவழிபாடு கூறப்பட்டுள்ளது. வெறியாட்டுச் சடங்கு வழிபாட்டில் பிற தெய்வவழிபாடும் காணப்படுகிறது. அவ்வாறு வேலன் வேறு தெய்வங்களை அழைத்து வழிபடப்பட்டபாடல் தோற்றம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

தோற்றம் அல்லது நோய்க்கு மருந்து ஆகா

வேற்றுப் பெருந்தெய்வம் பலஉடன் வாழ்த்தி

(குறுந். 263:3-4)

வேலன், தலைவியின் நோய் தெய்வத்தான் வந்தது என்று கூறக் கேட்ட தாய் வேறுபட்ட வடிவங்களுடைய பல தெய்வங்களுக்குத் தூபம், சந்தனம் முதலியன கொடுத்துப் பரவியும், வணங்கியும், கலந்த பூக்களைச் சிதறியும் வழிபாடு நடத்தினாள் என்கிறது குறிஞ்சிப்பாட்டு.

முருக வழிபாட்டிற்கு முன்னர் பிறதெய்வங்களை வணங்கும் வழிபாட்டுமரபை மேற்கண்ட இரு இலக்கியங்களும் எடுத்தியம்புகின்றன. எட்டுத்தொகை இலக்கியங்களில் இத்தகைய மரபு காணப்படவில்லை.

## திருமுருகாற்றுப்படையும் வெறியாட்டும்

கன்னிப்பெண்களின் நோய் நீங்கக் கட்டுவிச்சி, வேலன் ஆகியோர்களால் வெறியாட்டுச் சடங்கு நிகழ்த்தப்பட்டதைப் பிற இலக்கியங்களின் வழி அறிந்துகொள்ளமுடிகிறது. வெறியாடடு எடுக்கக் காரணமாகச் சுட்டப்பட்ட முருகன் பெயரில் எழுந்த திருமுருகாற்றுப்படையிலும் இத்தகையச் சடங்கு முறை விவரிக்கப்பட்டுள்ளது. ஆனால், பிற இலக்கியத்திற்கும் திருமுருகாற்றுப்படைக்கும் இடையே உள்ள மிகப்பெரியமாற்றம் என்னவெனில் வெறியாட்டு எதற்காக எடுக்கப்பட்டதோ அந்தக்காரணம் மட்டும் திருமுருகாற்றுப்படையில் இடம்பெறவில்லை. மாறாக வெறியாட்டு என்னும் சடங்கு முறைக்குரிய முழு அமைப்பினையும் பயன்படுத்தி முருகவழிபாடு செய்யப்பட்டிருப்பதை அறியமுடிகிறது.

சந்தனத்தைப் பூசிய நிறமுடைய மார்பினை உடைய, கொடிய தொழிலைச் செய்யும் குறவர்கள், நீண்ட மூங்கில் குழாய்களில் ஊற்றி, நெடுநாள் வைத்து முற்றி விளைந்த தேனால் ஆன கள்ளின் தெளிவை, மலையிடத்துள்ள சிற்றூரில் வாழும் தம் சுற்றத்தாருடன் உண்டு மகிழ்ந்து, தங்கள் குறிஞ்சி நிலத்துக்கு

உரிய தொண்டகம் என்னும் பெயருடைய சிறிய வாத்தியத்தை அடித்து, அதனது தாளத்திற்கு ஏற்பக் குரவைக்கூத்து ஆட, முருகக் கடவுள் அதனைக் கண்டு களிக்க எழுந்தருளுவான்[29] என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து குறிஞ்சி நில மக்களாகிய குறவர்களிடையே கள் குடிக்கும் பழக்கமும், விழா எடுக்கும்போது குழு முறையைப் பின்பற்றும் பண்பும் இருந்துள்ளது. மேலும், இசையைக் கைவிடாத பண்பும், குரவையாடுதல்போன்ற செயல்பாடுகளும் பிறசங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ள முறைகளோடு ஒத்துக்காணப்படுகிறது.

**முருக விழா: பொதுமையாதல்**

முருகன் குன்றுதோறும் இருப்பதோடல்லாமல், சிறிய தினை அரிசியைப் பூக்களோடு கலந்து பிரப்பரிசியை வைத்து மறியறுத்துக் கோழிக்கொடி உயர்த்தி அந்த இடத்தில் இறைவன் இருப்பதாக நினைத்து ஊர்கள்தோறும் எடுக்கின்ற விழாவிடத்தும் முருகன் எழுந்தருள்வான்[30] என்பதிலிருந்து, மலை தெய்வமான முருகன் வழிபடும் பொருட்களை வைத்து நினைத்து விழா எடுக்கும் ஊர்களுக்கு எல்லாம் தெய்வமாக விளங்கிய மாற்றத்தினையும், முருகன் குறிஞ்சி மலையில் மட்டும் தெய்வமாக இல்லாது பிற பகுதிகளுக்கும் தெய்வமாக விளங்கிய கால மாற்றத்தையும் அறிந்துகொள்ளமுடிகிறது.

**வெறியாட்டு**

தெய்வமாடும் குறப்பெண், கோழிக்கொடியோடு அமைத்து, நெய்யையும், வெண்சிறு கடுகையும் அப்பி, தான் வழிபடுவதற்குரிய மூலமந்திரத்தை மறைவாக ஓதி வழிபட்டு மலர்களைத் தூவி, குனிந்துக் கைக்கூப்பி வணங்கி, வெவ்வேறு நிறத்தையுடைய இரண்டு ஆடைகளை உடுத்தி, சிவந்த நூலைக் கையில் காப்புக் கட்டி, வெண்பொரியைத்தூவி, வலி மிக்கதும், பெரிய தூய வெள்ளரிசியைச் சிறு பலியாக இட்டுப் பலியிடத்தில் வைத்து, சிறிய பசுமஞ்சளோடு நறிய சந்தனம் முதலியவற்றைத் தெளித்துப் பெரிய குளிர்ச்சி நிறைந்த செவ்வலரி மாலையையும் ஏனைய மாலைகளையும் அறுத்துப் பந்தலில் அசையும்படித் தொங்கவிட்டு மலைப் பக்கத்தே உள்ள ஊர்களை வாழ்த்தி, நறிய மணப்பொருளைப் புகைத்து, குறிஞ்சிப் பண்ணைப் பாடி, அருவி ஓசையோடு பல இசைக்கருவிகள் ஒலிக்க, சிவந்த நிறத்தினையுடைய பல பூக்களையும் தூவி, கண்டவர்க்கு அச்சம் தோன்றும்படி இரத்தத்தோடு கலந்த சிவந்த தினையரிசியைப் பரப்பி வைத்து, முருகப் பெருமானை வரும்படி வழிப்படுத்தின நகர்[31] என்று திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடப்பட்டுள்ள வெறியாட்டுக் களம், பொருட்கள் ஆகியன பிற இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ள சடங்கு முறையிலிருந்து சில புதிய மரபுகளை உள்வாங்கிக்

கொண்டுள்ளது. பெண்ணின் காதல் நோய்க்காக எடுக்கப்பட்ட வெறியாட்டு இங்கு முருகனை வழிபடும் பொருட்டு நிகழ்த்தப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

**முருகனை வழிபடுதல்**

மேற்சொன்னமுறையில் வெறியாட்டுக்களம் ஆரவாரிக்கும்படி, ஊதுகொம்புகள் பலவற்றையும் சேரஊதி, மணியை ஒலித்து, முருகப்பெருமானுடைய யானையை வாழ்த்தி, குறை வேண்டினார் தாம் வேண்டியவற்றைப் பெற்றாற்போல வழிபாடு செய்தனர்[32] என்று முருக வழிபாடு குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதுவரை செய்யப்பட்ட முருகவழிபாட்டில் குறிஞ்சித் திணை மக்கள் அறுவடையில் கதிரையும், கள்ளையும், மலர்களையும் முருகனுக்கு வைத்து வழிபாடு செய்துள்ளனர். பெண்களுக்காகவும் முருக வழிபாடு செய்யப்பட்டிருக்கிறது. அவ்வாறு செய்யப்பட்ட வழிபாடுகள் அனைத்தும் மலையைச் சார்ந்த மக்களுக்காகச் செய்யப்பட்டதாகும். ஆனால், திருமுருகாற்றுப்படையில் முருகவழிபாடு பிற திணைசார்ந்த அல்லது பொதுமக்கள் வழிபாடாக மாற்றம் அடைந்துள்ளது. அவ்வாறே முருகனுக்குரிய இருப்பிடங்களாகத் திருமுருகாற்றுப்படை கூறும் இடங்களும் புதிய மரபாகும்.

முருகன், வேலன் இழைத்த வெறியாட்டுக்களத்திலும் இருப்பான். காட்டிலும், சோலையிலும், அழகுபெற்ற ஆற்றிடைக்குறையிலும், ஆற்றிலும், குளத்திலும், முற்கூறப்பட்ட ஊர்களிளன்றி வேறுபல ஊர்களிலும், நாற்சந்தியிலும், முச்சந்தியிலும், ஐஞ்சந்தியிலும், புதிதாக மலர்ந்துள்ள கடப்ப மரத்திலும், ஊர்நடுவே மக்கள் குழுமியிருக்கும் மன்றத்து மரத்திலும், ஊரம்பலங்களிலும் அருட்குறியாக நடப்பட்ட தறிகளிலும் முருகன் எழுந்தருளியிருப்பான்[33] என்று பாடப்பட்டுள்ளது. இதுவரை மலையுறை தெய்வமாக இருந்த முருகனை திருமுருகாற்றுப்படை எங்கு எதைக்கண்டாலும் முருகன் உறையும் இடமாகப் பாடியுள்ளது.

**முருகன் தோற்றம்**

முருகன் சிவந்த திருமேனியன், சிவந்த ஆடையன், அசோகின் தளிர்களைப்போன்று அசைகின்ற காதுகளை உடையவன், அரைக் கச்சையை அணிந்தவன், வீரக்கழலைத் தரித்தவன், வெட்சி மாலையைச் சூடியவன், புல்லாங்குழலை வாசிப்பவன், பெரியகொம்பை ஊதுபவன், வேறுபல வாச்சியங்களை ஒலிப்பவன், ஆட்டுக்கிடாயை வாகனமாகக் கொண்டவன், மயிலை ஊர்தியாகக் கொண்டவன், கோழிக்கொடியுடையவன், நெடிய உருவம் படைத்தவன், தொடி என்னும் அணி அணிந்தவன், இடுப்பில் இறுகக்கட்டிய அரைக்கச்சின் மேல் உடுப்பதாகக் கொண்ட ஆடை நிலத்தளவும் தொங்கிப்புரளும்

வண்ணம் தரித்தவன், மகளிரொடு சென்று மலைகள்தோறும் விளையாடும் குணமுடையவன்.[34] முருகனின் தோற்றம் பற்றிய புனைவுகள் இதுவரைக் கூறப்படாததாக உள்ளது. இவை வைதீக மரபிற்குள் முருகனைக் கட்டமைத்தப் புனைவுகளாக உள்ளது. மேலும், பூணூலையும் புலராத ஆடையினையும் உடைய அந்தணர்கள் முக்காலமும் தலைமீது கைத்தூக்கி வழிபடும் தெய்வமாக முருகன் மாறியுள்ளதையும் காணமுடிகிறது[35].

குறிஞ்சி நில மக்கள் நடத்திய மழைவேண்டல் சடங்கு நடைபெற்ற இடமாகிய மலைக்குரிய தெய்வமாக முருகன் காணப்படுகிறான். அச்சடங்கில் மலைக்குப் பலிகொடுத்து நீர் தெளித்து வழிபாடுசெய்த மக்கள் முன்னிலைப்படுத்திய தெய்வமாகிய முருகன், வேலினைக் கையில் வைத்திருக்கும் வேலன் செவ்விய நிறமுடையவன், கடும்சினம் மிக்கவன் என்று பாடப்பட்டுள்ளான். ஆனால், பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகிய இலக்கியங்களில் இதுவரைக் கூறப்பட்டப் புனைந்துரைகளில் இருந்து மாற்றம்பெற்ற எடுத்துரைப்பைக் காணலாம்.

### மணச்சடங்கு

சங்க காலத்தில் களவு மணம் தொன்மைவாய்ந்த சமூக நடைமுறையாக இருந்துள்ளது. இம்மணமுறை கால மாற்றத்திற்கு ஏற்பசில வளர்ச்சியடைந்ததின் காரணமாக களவு மணமாக இருந்த வழக்கம் மாறி சடங்குகள் மூலமாக மணம் செய்யும் பழக்கம் ஏற்பட்டுள்ளது. வாழ்க்கையில் வளம் வேண்டிச் சடங்கு செய்வது மணச்சடங்கின் நோக்கமாக இருந்துள்ளது. ஐந்திணை மக்களுக்கும் பொதுவான மணமுறையை சங்க இலக்கியத்தில் காணமுடியவில்லை. திணை மக்களுடைய நிலச் சூழல், பொருளாதாரம், சமூக பழக்கவழக்கம் ஆகியவற்றிற்கு ஏற்ப மணமுறையும், சடங்கும் வேறுபட்டுக் காணப்படுகிறது. குறிஞ்சித் திணை களவு வாழ்க்கையைக் குறிப்பிடுவதால் அத்திணையில் மணச்சடங்குகள் பற்றிய குறிப்புகளை அறியமுடியவில்லை. நெய்தல் திணையிலும் மணச்சடங்கைக் காணமுடியவில்லை. முல்லைத்திணையில் கலித்தொகை மணச்சடங்கு குறித்துப் பாடியுள்ளது. மருதத்திணையில் மணச்சடங்கு பற்றிப்பாடும் பாடல்கள் இடம்பெற்றுள்ளது. பாலைத்திணையில் மணப்பெண் செய்ய வேண்டிய கடமைகள் குறித்துக் கூறப்பட்டுள்ளது. ஆனால், அத்திணையில் சுட்டப்பட்டுள்ள மணமுறைகள் பாலைத்திணைக்குரியதன்று. அவை பிறபகுதியில் நிகழ்ந்தவற்றை ஒப்பிடுவதாக மட்டுமே அமைந்துள்ளது.

### முல்லைத்திணையும் மணப்பதிவுகளும்

அகநானூறு, கலித்தொகை ஆகிய இலக்கியங்கள் உள்ள முல்லைத்திணைப் பாடல்களில் மணம் பற்றிய பதிவு இடம்பெற்றுள்ளது. அவற்றுள்

அகநானூறு மணம் நிகழ்த்தப்பட்ட முறைக்குறித்து எதுவும் குறிப்பிடவில்லை. மண வீட்டின் அமைப்பு, மண நாளின்போது அளிக்கப்பட்ட உணவு ஆகியவற்றைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. இதனை,

**சிறுதலைத் துருவின் பழுப்புஉறு விளைதயிர்,**
**இதைப்புன வரகின் அவைப்புமாண் அரிசியொடு,**
**கார்வாய்த்து ஒழிந்த ஈர்வாய்ப் புற்றத்து**
**ஈயல் பெய்துஅட்ட இன்புளி வெஞ்சோறு**
**சேதான் வெண்ணெய் வெம்புறத்து உருக,**
**இளையர் அருந்த, பின்றை, நீயும்-**
**இடுமுள் வேலி முடக்கால் பந்தர்,**
**புதுக்கலத்து அன்ன செவ்வாய்ச் சிற்றில்,**
**புனைஇருங் கதுப்பின்நின் மனையோள் அயர,**
**பாலுடை அடிசில் தொடீஇய, ஒருநாள் (அகம். 394:2-11)**

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகிறது. மேலும், இப்பாடலில் வளைந்த கால்களையுடைய பந்தலையுடையதும், செம்மண் பூசப்பட்டதுமாகிய சிற்றில், புதுக்கலத்திற்கு ஒப்புமையாகக் கூறப்பட்டிருக்கிறது. செம்மறியாட்டினது பழுப்பு நிறம் வாய்ந்த முற்றிய தயிரை உலை நீராக்கிப் புதுக் கொல்லையில் விளைந்த நன்கு குற்றிய வரகு அரிசியை அதிற்போட்டு, மழை மிகுதியாய்ப் பெய்தமையால் புற்றிலிருந்து வெளிவந்து அழிந்த ஈயலையும் அதில் போட்டு சமைத்த இனிய புளிப்புடைய சோற்றில் கிடந்து உருகுமாறு பசுவின் வெண்ணெய்யைப் பெய்து கொடுத்த உணவை ஏவலர் உண்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. மணநாளின் போது மணமகனுக்குப் பாலினால் சமைக்கப்பட்ட உணவைத் தலைவி கொடுத்தாள். இத்தகைய பதிவுகளைத் தவிர மணம் எவ்வாறு நடைபெற்றது என்னும் குறிப்புகளைக் காணமுடியவில்லை.

## கலித்தொகையும் ஆயர் மண முறையும்

ஏறுதழுவி அதன்மூலம் மணப்பெண்ணைப் பெற்று மணம்செய்வது கலித்தொகையில் மட்டும் காணப்படும் மணமுறையாகும். பிற முல்லை நில மக்கள் இத்தகைய மண முறையையும், ஏறுதழுவும் நிகழ்ச்சியையும் கொண்டிருக்கவில்லை. தலைவியின் வீட்டில் வளர்க்கப்பட்ட ஏற்றினைத் தழுவிய இளைஞனுக்குத் தலைவி மணம்முடித்து வைக்கப்பட்டுள்ளாள்[36]. ஏறுதழுவிய இளைஞனைத் திருமால் தம்முடைய பெண்ணுக்குக் கணவனாக அனுப்பியதாகத் தந்தை, தமையன் ஆகியோர் மகிழ்ச்சி அடைந்துள்ளனர். மேலும், கலித்தொகை கூறும் மூன்று ஆயர் பிரிவுகளும் ஏறுதழுவுதலில் கலந்து கொண்டுள்ளனர்[37].

**மணவீடு**

ஆயர்கள், வீட்டின் முற்றத்தில் புதுமணல் பரப்பி, இல்லத்தைச் செம்மண் பூசி, தாங்கள் தெய்வமாக வழிபடும்பெண் எருமையின் கொம்பினை வைத்து, மணம் செய்துள்ளதை,

**தருமணல் தாழப்பெய்து, இல் பூவல் ஊட்டி,**
**எருமைப் பெடையோடு, எமர் ஈங்கு அயரும்**
**பெரு மணம் எல்லாம் தனித்தே ஒழிய - (கலி. 114:12-14)**

என்ற வரிகளால் அறியமுகிறது. முல்லைத்திணை கால்நடை வளர்ப்புச் சமூகமாகும். அங்கு பெணப் எருமையின் கொம்பை மணநாளின்போது வழிபாடு செய்திருப்பது முல்லைத்திணை மக்களின் பண்பாடாக விளங்குகிறது. முல்லை நிலத்தில் மணச்சடங்கில், பெண் எருமையின் கொம்பை வழிபட்டுச் சடங்கு செய்துள்ளனர். குடும்ப விருத்திக்காக, இன வளத்தைப் பெருக்கும் சின்னமாக, பெண் எருமைக் கொம்பை வழிபடும் நம்பிக்கையை இதனால் அறியலாம் என்றும் இச்சடங்கை தொத்து மந்திரமாகப் புரிந்து கொள்ளலாம்[38] என்றும் கா. சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். வீட்டின் முன்னர் மணநாளின்போது புதுமணல் பரப்பப்படுவது[39] மரபாகும். கலித்தொகையில் குறிப்பிடப்பட்டுள்ள மண வீட்டின் முன்னர் புதுமணல் பரப்புவது பிற திணையிலும் கூறப்பட்டுள்ளது. இம்மரபு தொன்றுதொட்டு பின்பற்றி வரும் ஒன்றாக இருந்துள்ளது.

**பாலைத்திணையும் மணப் பதிவுகளும்**

நன்கு அலங்கரிக்கப்பட்ட வேலைப்பாடமைந்த வீட்டிலே, புதிதாக கொண்டுவரப்பட்ட மணலைக் குவித்து என் மகளுக்கு மணம் என்று தாய், தந்தை கூறியதை,

**நனைவிளை நறவின் தேறல் மாந்தி,**
**புனைவினை நல்இல் தருமணல் குவைஇ,**
**'பொம்மல் ஓதி எம்மகள் மணன்' என,**
**வதுவை அயர்ந்தனர் நமரே (அகம். 221:1-4)**

என்ற பாடல்வரிகள் தெரிவிக்கின்றன. மணவீட்டில் புதுமணல் பரப்புவது போன்று பூக்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது[40]. மணத்தின்போது முழவின் ஓசை இடைவிடாது ஒலிக்கப்பட்டுள்ளது[41]. தந்தையின் பெரிய இல்லத்தில் சான்றோர் மணம்செய்விக்க நிகழும் மணவிழாவில் மணமகளுக்கு மயிர்ச்சாந்து பூசி, மங்கல நீராட்டிப் பல சிறப்புகளைச் செய்த[42] மணவிழா சோழனின் உறையூரில் நடந்ததாகக் குறிப்பிட்டதிலிருந்து மணம், தந்தையின் வீட்டில் நடைபெற்றிருப்பதை அறியமுடிகிறது. மேலும், இம்மணமுறை பாலை

நிலத்திற்குரியதன்று, இது சோழனின் உறையூரில் நடந்த மண விழாவை நினைவு கூறுவதாக அமைந்திருக்கின்றது.

### புதுமணப் பெண் செய்யவேண்டிய செயல்கள்

மலர்ந்த மலர்களை அணிந்து, மயிர்ச்சாந்து மணக்கும் குளிர்ச்சி பொருந்திய நறுமணங்கமழும் கூந்தலையுடைய புதுமணப் பெண்ணானவள், உணவு மிகுந்தத் திருமணவீட்டில், பல கொண்டைகளையுடைய அடுப்பில் பாலை உலையாக வார்த்துள்ளாள்; இளம் பெண்களுடன் சென்று, பெரிய வயலிடத்து விளைந்த நெல்லின் வளைந்த கதிரை முறித்துக் கரிய நிறமுடைய வயிரம் பாய்ந்த உலக்கையால் பச்சை அவலை இடித்ததை,

**துவரப் புலர்ந்து தூமலர் கஞலி,**
**தகரம் நாறும் தண்நறுங் கதுப்பின்**
**புதுமண மகடூஉ அயினிய கடிநகர்ப்**
**பல்கோட்டு அடுப்பில் பால்உலை இரீஇ,**
**கூழைக் கூந்தற் குறுந்தொடி மகளிர்**
**பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்து,**
**பாசவல் இடிக்கும் இருங்காழ் உலக்கை (அகம். 141:12-18)**

என்ற பாடல்வரிகள் தெரிவிக்கின்றன. இப்பாடல் சுட்டும் மணமுறையும் பாலைத்திணைக் குரியதன்று. இம்மணம் வயல்வளம் நிறைந்த கரிகால் வளவனது இடையாறு என்னும் ஊரில் நடைபெற்றதாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

### மருதத் திணையும் மணமுறையும்

மருதத் திணையில் நடைபெற்ற மணமுறை குறித்து அகநானூற்றில் 86,136 ஆகிய பாடல்கள் வழி அறியமுடிகிறது. இவ்விரு பாடல்களும் சங்க இலக்கியத்தில் மணமுறை குறித்து சற்று விரிவான தகவல்களைத் தருகின்றன. இப்பாடல்களில் இடம்பெற்றுள்ள மணமுறை பின்வருமாறு எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**உணவு:** உழுத்தம் பருப்புடன் கூட்டிச் சமைத்த குழைவாக வெந்த பொங்கலொடு பெருஞ் சோற்றுத்திரளை உண்பது இடைவிடாது நிகழ்ந்துகொண்டே இருந்தது.

**பந்தல்:** வரிசையாகக் கால்களை நட்டுக் குளிர்ந்த பெரிய பந்தலினை அமைத்தனர்; அப்பந்தலில் கொண்டுவந்த மணலைப் பரப்பினர்; மனையில் விளக்கினை ஏற்றி மாலைகளைத் தொங்கவிட்டனர்.

**மணநாள்:** தீய கோள்கள் நீங்கப்பெற்ற, வளைந்த வெண்மையானத் திங்களைத் தீமையற்ற சிறந்த புகழையுடைய உரோகிணி வந்து கூடும் நன்னாள் மணநாளாகும்; அந்நாளிலே, பொழுது புலர்ந்தவுடன் மண ஏற்பாடு நடந்தது.

**முதிய மங்கல மகளிர்:** மணம் செய்துவைக்கும் முதிய மங்கலமகளிர், தலையில் நீர்க் குடத்தினைச் சுமந்தவராய் கைகளில் புதிய அகன்ற மண்டை என்னும் கலத்தினை ஏந்தியவராய் ஒன்று கூடினர். செய்ய வேண்டியவற்றை முறையாக வைத்தனர்.

**சடங்கு முறை:** தேமல் படர்ந்த வயிற்றினையுடைய தூய அணிகலன்களை அணிந்த மகனைப் பெற்றெடுத்த மகளிர் நால்வர் கூடிநின்று, கற்பினின்றும் வழுவாது நல்ல பலவற்றினும் உதவியாக இருந்து, நின்னை மனைவியாகப் பெற்ற நின் கணவனைப் பேணிக்காக்கும் பெருவிருப்பத்தை உடையனை ஆகுக எனக்கூறி வாழ்த்தினர்; வாழ்த்தியவராய், நீரொடு குளிர்ந்த இதழ்களையுடைய மலர்களை நெல்லுடன் கலந்து அவளது பலவாகிய கரிய கூந்தலையுடைய தலையிலே தூவினர்; இவ்வாறாக, வதுவை மணமும் நடந்து முடிந்தது[43].

**உணவு:** நெய்மிக்க வெண்மையான சோற்றினை இறைச்சியுடன் சேர்த்துக் குற்றமற ஆக்கினர்; அளவற்ற வள்ளன்மையுடன் உயர்ந்தோரை உண்பித்தனர்.

**மணநாள்:** புள் நமித்தம் பார்த்தனர்; தெளிந்த ஒளியுடைய இடமகன்ற அழகிய பெரிய வானம் விளக்கமுறத் திங்களை உரோகிணி கூடிய நன்னாள்.

**சடங்கு ஏற்பாடு:** மண மனையினை அழகுபடுத்தினர்; கடவுளை வழிபட்டனர்; மணத்தை அறிவிக்கும் மணமுழவுடன் பெரிய முரசத்தை முழங்கினர்.

**மங்கல மகளிர்:** மங்கல மகளிர் மணப்பெண்ணுக்கு மண நீராட்டினர்.

**சடங்கு முறை:** வாகை இலையை, அறுகினது கிழங்கிடத்து உள்ள மொட்டுடன் விரவிக்கட்டிய வெண்மையான காப்புநூலை மணமகளுக்கு அணிவித்தனர்; தூய ஆடையால் அவளைப் பொலிவுறச் செய்தனர்; சுற்றத்தார் பெரு விருப்புடன் ஒன்று கூடினர்; மேகம் ஒலித்தமை போன்று மணவொலி மிக்க பந்தரிலே அவளுக்குச் சிறப்பாக அணிகலன் அணிவித்தனர்[44].

இவ்விரு பாடல்களிலும் சுட்டப்பட்டுள்ள சடங்குமுறைகளில் மணப் பெண்ணைக் குளிப்பாட்டுதலுக்குக் காரணம் நீர் செழிப்பினை அளிக்கக்கூடியது, எனவே இனவிருத்திக்கு அவ்வாறு செய்யப்பட்டிருக்கலாம். நீருடன் நெல்லும் சேர்ந்து முளைவிடுதல்போல, மணமகளும் பிள்ளைப் பேறு அடைவாள் என, ஒத்த மந்திரமாக நெல்லும் பூவும் தூவப்பட்டன. இது மனித இன விருத்தியும் பயிர்ச்செழிப்பும் அக்காலத்தில் தொடர்புபடுத்தப்பட்டிருந்ததற்கு மற்றொரு சான்றாகும். பிள்ளைப்பேறுடையவர்கள் வாழ்த்தினால் பிள்ளைப்பேறு உண்டாகும் என்பதனைத் தொத்து மந்திரமாகவும் கொள்ளலாம்[45] என்று கூறும் கா. சுப்பிரமணியன் இச்சடங்கை மந்திரச் சடங்காகவும் குறிப்பிடுட்டுள்ளார். மேற்கண்ட

இரண்டு பாடல்களும் மருதத்திணை சார்ந்தது என்றாலும் அவை குறிப்பிட்டுள்ள மணமுறை வேறுபட்டுக் காணப்படுகின்றது.

இரு பாடல்களில் மணநாள் அன்று அளிக்கப்பட்ட உணவு குறித்துக் கூறப்பட்டுள்ளது. அவற்றில், ஒன்று இறைச்சி கலக்காதது. மற்றொன்று இறைச்சி கலக்கப்பட்டது.

முதல் பாடலில், மணம் செய்து வைத்தவர்களாக முதிய மங்கலமகளிர் இருந்துள்ளனர். இரண்டாவது பாடலில், மணமகளை நீராட்டிவிட்டு மங்கலமகளிர் அவ்விடத்தை விட்டு விலகிவிட்டனர்.

சடங்கு முறையில் இரண்டாவது பாடல் காப்பு அணிவித்துள்ளதையும் மணஒலி முழங்க அணிகலன் அணிவிக்கப்பட்டதையும் குறிப்பிட்டுள்ளது. இத்தகைய சடங்கினை நிகழ்த்தியவர் யார் என்பது தெரியவில்லை. இம்முறை முதலில் கூறிய பாடலில் காணப்படவில்லை.

இவ்விரு பாடல்கள் சுட்டும் மணநாள் மட்டும் ஒன்றாக இருந்துள்ளது. அந்நாளினை அக்காலத்தில் மணநாளாகக் கொண்டிருந்த வழக்கம் இதன் மூலம் அறியமுடிகிறது.

இத்தகைய மாற்றங்களுக்கானக் காரணத்தை அறிந்துகொள்ளும் வகையில் பல பாடல்கள் கிடைக்காத நிலையில் கிடைக்கும் தரவுகளை வைத்து சங்க காலத்தினுடைய மணமுறையினை முடிவுசெய்வது குழப்பமான நிலையையே காட்டுகிறது. இருப்பினும் சங்ககால இலக்கியங்கள் குறிப்பாக, எட்டுத்தொகையில் தொகுக்கப்பட்டுள்ள பாடல்கள் ஒரே காலத்தன அன்று. அவ்வாறு இருக்கும்போது இங்குக் கூறப்பட்டுள்ள இருபாடல்களும் ஒரே இலக்கியத்தில் இருந்து எடுக்கப்பட்டதாக இருந்தாலும் அவைகளுக்குள்ளே காலவேறுபாடு இருப்பதற்கு அதிக வாய்ப்பு இருக்கின்றது. அதிலும் சங்க இலக்கியங்கள் பல இன மக்களுடைய வாழ்க்கையைப் பாடியிருப்பதினால் இந்த மணமுறைகள் இரு இன மக்களுடையதாக இருக்கலாம். எனவே இப்பாடல்கள் வெவ்வேறு காலத்தில் எழுந்தது என்றும் இரு இன மக்களுடைய மணமுறையைச் சுட்டுகிறது என்றும் கருத வாய்ப்பிருக்கின்றது.

காலத்தால் பிந்தையதாக அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கலித்தொகை மருதக்கலியில், திருமணத்தின்போது எரிவலம் செய்ததுபற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது. அவற்றுள் திருமண நாளிலே, மேலாடைக்குள் நாளும் ஒடுங்கி நோக்குகின்ற காதல்கொண்ட, மடந்தை, தனக்கு இம்மைக்கும் மறுமைக்கும் துணையாக உடன் வாரா நிற்க; வேதம் ஓதுதலை உடைய அந்தணன், எரிவலம் வருவான்[46] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. தீயினை வலம்வரும் செய்தி கலித்தொகையில் இந்த ஒரு இடத்தில் மட்டும் சுட்டப்

பெற்றிருப்பதிலிருந்து சங்க காலத்தில் மணச்சடங்கில் ஏற்பட்ட மாற்றத்தினையும், அந்தணர்கள் மணம் செய்விப்பவர்களாக இருந்திருப்பதையும், தீவலம் வருவது தமிழருடைய மணச்சடங்காக உருவாகியிருப்பதையும் அறிந்துகொள்ளமுடிகிறது. மேலும், மேற்கண்ட சான்றுகள் முதிய மங்கலமகளிர் மணச்சடங்கை நிகழ்த்தியதாகக் குறிப்பிடுகின்றன. ஆனால், கலித்தொகையில் வேதம் ஓதும் அந்தணன் சடங்கு நிகழ்த்துபவனாக இருப்பது குறிப்பிடத்தக்கது.

**நடுகல்**

வீரச்செயல் புரிந்து இறந்தவர்களுக்கு நடுகல் எடுப்பது வழக்கம். சங்க இலக்கியத்தில் ஆநிரைகவரும் போரில் இறந்துபட்ட வீரர்களுக்கு எடுக்கப்பட்ட நடுகற்கலே மிகுதியாகக் காணப்படுகின்றன. கால்நடை வளர்ப்பு இனத்தின் செல்வ வளமாகப் பார்க்கப்பட்டச் சூழலில், கால்நடைகளுக்காக நடந்த போரில் இறந்தவர்களின் நினைவாக நடுகல் எடுக்கப்பட்டுள்ளது. கால்நடைவளர்ப்புச் சமூகம் சார்ந்து நடுகல்வழிபாடு அடையாளப்படுத்தப் பட்டிருப்பதிலிருந்து அவர்கள் நடுகல் மீது கொண்டிருந்த நம்பிக்கையைப் புரிந்துகொள்ளமுடிகிறது. நடுகல் எடுத்தமுறை, அவற்றின் அமைப்பு, அவற்றை வழிபட்ட மக்கள், கல் அமைந்த இடம் போன்ற குறிப்புகளைச் சங்கப் பாடல்கள்வழி அறியமுடிகிறது.

**நடுகல் எடுத்தல்**

சங்க காலத்தில் பிறபகுதியில் உள்ள ஆநிரைகளைக் கவர்ந்து கொண்டுச் செல்கையில் அவற்றைக் கால்நடைகளின் உரிமையாளர்கள் சென்று மீட்கப் போர்கள் நடைபெற்றுள்ளன. இப்போர் இலக்கண மரபில் வெட்சி, காரந்தை என்று சுட்டப்பட்டுள்ளது. ஆநிரையை மீட்கும் போருக்குச்சென்ற வீரன் கரந்தைப் பூவினைச் சூடிச்செல்வது வழக்கமாக இருந்துள்ளது[47]. வெட்சி என்று இலக்கணவியலார் கூறக்கூடிய ஒரு குழு ஆநிரைகளைக் கவர்ந்துச் செல்ல அவ்வெட்சியாருடன், போரிட்டுத் தம்முடைய ஆநிரைகளைக் கவர்ந்து வரும் கரந்தைக் குழுவைச்சேர்ந்த வீரன், நடந்த போரில் இறந்துபட அவனுக்கு நடுகல் எடுத்துள்ளதை,

**பல் ஆ தழீஇய கல்லா வல் வில்**
**உழைக் குரற் கூகை அழைப்ப ஆட்டி,**
**நாகு முலை அன்ன நறும் பூங் கரந்தை**
**விரகறியாளர் மரபின் சூட்ட,**
**நிரை இவண் தந்து, நடுகல் ஆகிய**
**வென் வேல் விடலை (புறம். 261:11-16)**

என்ற பாடல்வரிகள் தெரிவிக்கின்றன. ஆநிரை மீட்கும் போரில் இறந்த வீரனின் உடலில் அம்புபட்டு இருப்பது, அம்பு தைத்த இலக்குமரம் போல காட்சி அளித்துள்ளது.[48] நிரை மீட்கச்சென்ற பலரும் திரும்பிய பின்னரும் தனி ஒருவனாக நின்று மாண்ட வீரனுக்காக நடுகல் எடுக்கப்பட்டுள்ளது[49]; நிரைமீட்ட வீரர்களுக்கே அன்றி யானையைக்கொன்று இறந்துபட்டவனுக்கும் நடுகல் எடுக்கப்பட்டுள்ளது[50]; விற்போர் வீரர்களுக்கும்[51], பகைவர்க்கு அஞ்சிஓடாத மறவர்களுக்கும் நடுகல் எடுக்கப்பட்டுள்ளது[52]; நாட்டை ஆண்ட ஆட்சியாளர்களுக்கும் நடுகல் எடுக்கப்பட்டுள்ளது. புறநானூற்றில் அதியனுக்கும்[53], கோப்பெருஞ்சோழனுக்கும்[54], மல்லிநாட்டு காரியரிக்கும்[55] நடுகல் எடுக்கப்பட்டதற்கானச் சான்றுகள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன. மன்னர்களுக்கும் நடுகல் எடுக்கும் பழக்கம் இருந்ததைப் புறநானூற்று வழி அறியமுடிகிறது.

## நடுகல் தேர்வு செய்யப்பட்ட முறை

போர் நடைபெற்ற இடங்களிலேயே நடுகல் எடுக்கப்பட்டுள்ளன. அதற்காக புதிய கல்லும், இயற்கையாக நிலத்தில் இருந்த கல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளது. சங்க இலக்கியம் சுட்டும் நடுகற்கள் வேறு இடத்திலிருந்து எடுத்து நடப்பட்டதாக இருந்துள்ளன. அவற்றை இனி நட்டனரே கல்லும்[56] என்பதிலிருந்து அறிந்துகொள்ளமுடிகிறது. அகநானூற்றில் 269-ஆம் பாடல் மட்டும் நட்டுவைத்தது போன்று இருந்த இயற்கையானக் கல்லை பயன்படுத்தியதாகக் குறிப்பிட்டுள்ளது. இவ்வகைக்கல் குத்துக்கல் என்று அறிஞர்களால் அழைக்கப்படுகின்றது. மேலும், நடுகல் உருவம் யானையின் தும்பிக்கைக்கு ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளது[57].

## நடுகல்; பெயர் பீடு

கல்லை தேர்வு செய்த பின்னர் அக்கல்லை செதுக்கிப் பல வடிவங்கள் செய்யப்பட்டுள்ளன[58]. நடுகல் யாருக்காக எடுக்கப்பட்டது, அவ்வீரனின் வீரச்செயல் போன்ற செய்திகள், கல்லில் பொறிக்கப்பட்ட முறையைப் பெயரும் பீடும் எழுதி என்று இலக்கியங்களில் பாடப்பட்டுள்ளன. இதனை, எழுத்துடை நடுகல்[59], பெயர் பொறித்து[60], பெயரும் பீடும் எழுதி[61], பெயரொடு நட்ட[62], என்னும் சான்றுகளால் அறியமுடிகிறது.

## நடுகல்; அலங்காரம்

சங்ககால மக்கள் தழை, மலர், இலைகளால் ஆன கண்ணி, மாலை போன்றவற்றை அணியும் பழக்கமுடையவர்களாக இருந்துள்ளனர். அவர்கள் அணிந்திருந்த பூ, மக்களுக்குரிய நிலம், போர், செய்யக்கூடிய செயல் போன்றவற்றை வேறுபடுத்திக்காட்டக் கூடியதாக இருக்கின்றன. மக்களின்

வாழ்க்கையில் நீங்கா இடம் பிடித்திருக்கக்கூடிய மாலைகளைத் தங்களோடு வாழ்ந்து மாண்ட வீரனுக்கு அவனுக்காக எடுக்கப்பட்ட நடுகல்லுக்கு அணிந்துள்ளனர். குறிப்பாக, நடுகல்லிற்குச் சூட்டக்கூடிய மாலைகள் என்று சிலவற்றை அடையாளப்படுத்தக் கூடிய வகையில் அவை அமைந்துள்ளன.

நிரை மீட்ட வீரர்களின் நடுகல்லிற்கு மயிற் தோகையினால் ஆன மாலையைச் சூட்டுவது மரபாகக் காணப்படுகிறது. இதனை,

**மடம்சால் மஞ்ஞைஅணி மயிர் சூட்டி (புறம். 260:26)**

**அணி மயிற் பீலி சூட்டி (புறம். 264:3)**

**பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல் (அகம். 67,131:11)**

**நடுகல் பீலி சூட்டி (புறம். 232:3, அகம். 35:8)**

என்ற வரிகளால் அறியமுடிகிறது. மரலைக் கீறி எடுத்த நாரினால் சிவந்த பூக்களைக் கொண்ட கண்ணியினைத் தொடுத்தனர்[63]. அந்நடுகல்லிற்குப் பந்தல் போடப்பட்டதைப் புறநானூறு 260-ஆம் பாடல் குறிப்பிடுகிறது. அதியனுக்கு மயிற் பீலியால் மாலை சூட்டப்பட்டதாக ஔவையார் பின்வருமாறு பாடியுள்ளார்.

**நடுகல் பீலி சூட்டி, நார் அரி**

**சிறு கலத்து உகுப்பவும் கொள்வன் கொல்லோ**

**(புறம். 232:3-4)**

மேற்கண்ட பாடல் சுட்டும் பீலி சூட்டுவதும், சிறுகலத்துக் கள் வார்ப்பதும் சடங்குகளாகும்[64]. அகப்பாடல்களில் பாலைத்திணையில் வாழ்ந்த மக்களாக மழவர் என்ற இனம் இருந்துள்ளது. அவர்கள் ஆநிரைகளைக் கவரும் தொழிலுடையவர்களாகக் காட்டப்பட்டுள்ளனர் (காண்க. மழவர்-இயல்-1). இம்மழவர்கள் மயிற்பீலியால் ஆகிய மாலையை அணியும் மரபுடையவர்களாகப் பாடப்பட்டுள்ளனர். இம்மழவர்கள் மட்டுமே இம்மாலையை அணிந்தவர்களாகக் காணப்படுகின்றனர். மழவர்களுடைய பெரு மகனே[65] என்று ஔவையார் அதியமானை அழைத்துள்ளார். எனவே மயிற் பீலியால் மாலை அணியும் மரபுடைய மழவர் இன பெருமானாகிய அதியமானுடைய நடுகல்லிற்கு இம்மாலையை அணிவித்திருப்பது அவர்களுடைய இனமரபை அடையாளப்படுத்தும் நோக்கில் அமைந்துள்ளதா என்பது ஆய்வுக்குரியது.

**நடுகல்லிற்கு வைக்கப்பட்ட கருவிகள்**

நடுகல்லின் முன்பகுதியில் வேல், கேடயம் போன்ற கருவிகள் ஊன்றியும் சார்த்தியும் வைக்கப்பட்டுள்ளன. இவற்றை,

**வேல்ஊன்று பலகை வேற்றுமுனை கடுக்கும் (அகம். 131:13)**

என்று அகநானூறும், தெய்வமாக வழிபடப்பெறும் நடுகல்லின் அருகே கேடயங்களைச் சார்த்தி, அதனைச்சுற்றி வேல்கள் நடப்பட்டிருந்த காட்சி அரண்போல அமைந்திருந்ததை,

**கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி,**
**நடு கல்லின் அரண் போல (பட்டினப். 78-79)**

என்று பட்டினப்பாலையும் குறிப்பிட்டுள்ளது.

**நடுகல் அமைந்த இடம்**

வெட்சி, கரந்தைப் போர்கள் பாலைவழிகளில் இரவில் நடைபெற்றிருப்பதற்கானச் சான்றுகள் இலக்கியங்களில் காணப்படுகின்றன. அருஞ்சுரம் என்று கூறப்பட்டுள்ள பாலை வழிகளைக் கடந்தவர்களின் அனுபவங்களிலிருந்தும் அந்நிலத்திற்குரிய மக்களின் வாழ்வியல் கூறுகளிலிருந்தும் நடுகற்கள் பாலை வழிகளில் இருந்ததற்கான குறிப்புகளைப் பெறமுடிகிறது. மேலும், நடுகற்கள் ஊரின் பக்கங்களிலும் வைக்கப்பட்டிருந்தன[66]. நடுகல் பிறங்கிய உவல் இடு பறந்தலையிலும்[67], இவ்விடங்கள் சருகுகள் மிகுந்து பாழ்பட்டும் காணப்பட்டதை,

**விழுத் தொடை மறவர் வில் இட வீழ்ந்தோர்**
**எழுத்துடை நடுகல் இன் நிழல் வதியும்**
**அருஞ் சுரக் கவலை நீந்தி (அகம். 53:10-12)**
**வெருவரு தகுந கானம் (அகம். 131:13)**

என்ற வரிகள் தெரிவிக்கின்றன. மறவர்கள் தனிமையான அந்தவழியில் அமைந்துள்ள நடுகல்லின் நிழலில் சென்றுத் தங்கியிருந்துள்ளனர்.

சங்ககாலத்தில் பாண்சுற்றம், உமணர் போன்ற குழுக்கள் நிலையான வாழ்க்கை இன்றி இடம்விட்டு இடம்பெயர்ந்துப் பல ஊர்களுக்குப் பயணம் செய்துள்ளனர். இவர்கள் கடந்துவந்த வழியனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளக்கூடிய பயணக் குறிப்புகளாகச் சங்க இலக்கியங்கள் உள்ளன. காட்டு வழிகளில் நடப்பட்டிருந்த நடுகற்களைப் பாண் சுற்றங்களுடைய குறிப்புகளிலிருந்தும், பாலைவழிகளில் நடப்பட்டிருந்த நடுகல் குறிப்பை உமணர்களுடைய வாழ்க்கையிலிருந்தும் பெறமுடிகிறது. அவ்வகையில் கூத்தராற்றுப்படை என்று அழைக்கப்படும் மலைபடுகடாம் கூத்தர்களை ஆற்றுப்படுத்தும் விதமாக வழிகளின் தன்மை, எவ்வாறு செல்லவேண்டும் என்பது போன்ற விவரங்களை நல்கும் பகுதியில் நிரைமீட்டு இறந்த வீரனுக்கு எடுக்கப்பட்ட கல்லை வழிபட்டுவிட்டுச் செல்லுமாறு பெரியபறையை உடைய பாணன் வழிநடத்தப்படுகின்றான். வழியில் நடுகல்லில் தெய்வமாய் நின்றவனுக்கு விருப்பமாகும் வண்ணம், யாழை இசைத்துவிட்டு விரைந்துச் செல்லுங்கள் என்று

கூத்தர்களுக்கு வழிகாட்டப்பட்டுள்ளது[68]. நீங்கள் போகும் தேசத்தில், கல்லைப் பெயர்த்துக் கொண்டு, அதில், இவ்வாறு பொருதுபட்ட இன்னான் என்று உலகம் அறிவதற்கு எழுதிய கடவுள், நல்ல அடிமரத்தையுடைய மராமரத்தின் நிழலில் நடப்பட்டிருக்கும். அக்கடவுளின் தெய்வத் தன்மை மிகுதியால், பிற காடுகளைத் தன் கொடுமையால் இகழும் பல வழிகள் உள்ளன என்பதை,

**கல் எறிந்து, எழுதிய நல் அரை மராஅத்த**

**கடவுள் ஓங்கிய காடு ஏசு கவலை, (மலைபடு. 395-396)**

என்ற வரிகளால் அறியமுடிகிறது. இப்பாடல், தெய்வத்தன்மை நிறைந்த நடுகல், கூத்தர் சுற்றம் சென்றவழியில் அமைந்திருப்பதைப் புலப்படுத்துகிறது. உமணர்களுடைய வண்டிகள் நடுகல்லைச் சிதைத்துவிட்டுச் சென்றமையால் நடுகல் தவறான வழியைக் காட்டியது[69] என்பதிலிருந்து நடுகல் எடுக்கப்பட்ட இடங்கள் பற்றி அறிந்துகொள்ளமுடிகின்றது.

**நடுகல் வழிபாடும் சடங்கும்**

தம்முடைய இனத்தை/செல்வத்தைக் காத்த வீரனுக்காக எடுக்கப்பட்ட நடுகல் வழிபாட்டிற்குரிய ஒன்றாக மக்களால் வழிபடப்பட்டிருக்கிறது. நடுகல்வழிபாடு தோன்றியதற்கானக் காரணம் பின்வருமாறு குறிப்பிடப்படுகிறது. உயிருள்ள பொருள்களிலும் சடப்பொருள்களிலும் ஆவி அல்லது ஆன்மா உறையும் என்ற இந்நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றியதே ஆவியுலகக் கோட்பாடாகும்[70]. இக்கோட்பாட்டின்படி ஒவ்வொரு மனிதனின் உடலிலும் ஆன்மா அல்லது ஆவி உறைகிறது[71] என்று நம்பி, இறந்தவரது ஆன்மாவை சில சடங்குகள் மூலம் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வரவழைக்கலாம். அங்குள்ள பொருளில் (நடுகல் முதலானவற்றில்) நுழைத்துக் கொள்ளச் செய்யலாம் என்ற நம்பிக்கை உலகம் எங்கும் பண்டைய மக்களின் பண்பாட்டில் காணப்படுகிறது[72]. அவ்வாறே கால்நடைச் சமூகத்தைச் சார்ந்த மக்கள், இறந்த வீரனின் ஆவி நடுகல்லில் உறைவதாக மக்கள் நம்பியுள்ளனர். இவ்வாறே இறந்தவரது ஆன்மாவாகிய ஆவி வழிபாடாக (animism) ‘நடுகல்’ வணக்கம் அமைந்தது என்கிறார் கா. சுப்பிரமணியன்.

சங்க இலக்கியத்தில் நடுகல்வழிபாடு குறிப்பிட்ட மக்களால் செய்யப்பட்டிருக்கிறது. இவ்வழிபாடு அல்லாது பிறவழிபாடு அவர்களுக்கு இல்லை என்று கூறப்பட்டிருப்பது அவற்றை உறுதிசெய்கின்றன.

**ஒன்னாத் தெவ்வர் முன்நின்று விலங்கி,**

**ஒளிறுஏந்து மருப்பின் களிறுஎறிந்து வீழ்ந்ததென,**

**கல்லே பரவின் அல்லது**

**நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே (புறம். 335:9-12)**

கல்லைப் பரவும் மரபுடைய இம்மக்களிடம், நெல்லைத்தூவி வழிபடும் கடவுளர் இந்நிலத்தில் இல்லை என்னும் வழிபாட்டுமுறை காணப்படுகிறது. கால்நடைவளர்ப்புச் சமூகத்தில் எடுக்கப்பட்ட நடுகல், அச்சமூகத்தவரால் வழிபடப்பட்டுள்ளது. கால்நடை மேய்ச்சல் தொழிலுடைய கோவலர் நடுகல்வழிபாடு செய்திருப்பதை,

**ஊர் நனி இறந்த பார் முதிர் பறந்தலை,**
**ஓங்கு நிலை வேங்கை ஒள் இணர் நறு வீப்**
**போந்தை அம் தோட்டின் புனைந்தனர் தொடுத்து,**
**பல் ஆன் கோவலர் படலை சூட்ட**
**கல் ஆயினையே - (புறம். 265:1-5)**

என்னும் பாடல் எடுத்துரைக்கின்றது. மேலும், வேங்கை மரத்தின் கொத்தாகிய பூவை பனையோலையால் அலங்கரித்துத் தொடுத்தும் தழை விரவித் தொடுத்த மாலைகளை கோவலர் நடுகல்லிற்குச் சூட்டியும் வழிபடும் வழிபாட்டு நெறி புலப்படுகிறது. பாணர்கள் நடுகல்லை வணங்கிச் சென்றுள்ளனர்[73]. பாணர்கள் செல்லும் வழியில் அமைந்த நடுகல்லில் உறைபவனுக்கு விருப்பமாகும் வண்ணம் யாழை இசைத்துச் சென்றனர்[74]. விற்படைப் போரில் தம்முடைய புகழை நாட்டி இறந்துபட்ட வீரர்களின் நினைவாக எடுக்கப்பட்ட நடுகல்லின் மீதிருந்து ஒலிக்கும் பல்லியின் ஒலிகேட்டு யானையின்மீது செல்லும் அரசியானாலும் அங்கிருந்துத் திரும்பி வந்துவிடுவர், திரும்பிச்செல்ல நினைக்கமாட்டார்கள்[75]. வழிகளில் நடுகற்கள் அமைந்திருப்பதும், தெய்வம் உறையும் அக்கல்லின்மீது இருக்கும் பல்லியின் ஒலி சரியானதை மட்டுமே சொல்லும் என்னும் நம்பிக்கை அரசிக்கும் இருந்திருப்பது தெரிகிறது.

**நடுகல்; நாட்பலி**

நடுகல்லிற்கு நாள்வழிபாடும், பலியும் கொடுக்கப்பட்டுள்ளது. நடுகல்லில் தெய்வமாக நின்றவனை நாள்தோறும் வணங்கி துதித்தாள் மறக்குடிப்பெண்[76]. வீடுகளில் சமைக்கப்படும் கள்ளினை உடைய சிறிய ஊரில், பக்கங்களில் வைக்கப்பட்ட நடுகல்லிற்கு விடியற்காலையில் பலியைத்தந்து, தூய நீரினால் நீராட்டி, நெய்த்தன்மை பொருந்திய மணப்பொருள்களைப் புகைத்ததனால் வீதிகளில் புகை சூழ்ந்தது.

**இல்அடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்**
**புடைநடு கல்லின் நாட்பலி ஊட்டி,**
**நல்நீராட்டி, நெய்ந்நறைக் கொளீஇய,**
**மங்குல் மாப்புகை மறுகுடன் கமழும் (புறம். 329:1-4)**

இப்பாடல், இனக்குழு வீரனின் நினைவாக எடுக்கப்பட்ட நடுகல், சமய நெறிக்குட்பட்ட வழிபாட்டு மரபுக்குச் சென்றிருப்பதைப் புலப்படுத்துகிறது. இங்குப் பலி கொடுத்து சடங்கு செய்யப்பட்டிருக்கிறது. இதன்மூலம் சடங்குப் பொருட்களின் பயன்பாடு தெரிகிறது.

நடுகல் வீரர்களின் ஆன்மாக்களுக்கு ஊரையும், மந்தையையும், ஊர் மக்களையும் பாதுகாக்கக்கூடிய ஆற்றல் உண்டென்ற நம்பிக்கையில் தான், அவர்களுடைய நடுகற்களுக்கு பெரும்படை செய்து, உணவும், கள்ளும் படைத்தும், ஆடிப்பாடி வாழ்த்தி மகிழ்விக்க முயன்றதும் ஆகிய செயல்களை ஊராரும், உறவினரும் செய்தார்கள். இறந்தவனது ஆன்மாவைக் கல்லில் நிலையாக இருக்கச் செய்வதற்காகத் தான், பொருத்தமான கல்லை வெட்டிக் கொண்டு வந்து நீராட்டி, ஸ்தாபித்து, உணவும், கள்ளும் கொடுத்துப் பாராட்டினார்கள். வீரன் ஆன்மாவை இல்கொண்டு சேர்த்தது, தங்களோடு இருந்து தங்களுக்கு பசு, எருமை, ஆட்டுமந்தைகளைப் பாதுகாக்க ஆற்றலளிக்க வேண்டுமென்பதற்காகத்தான் தங்கள் ஊரில் வாழ்ந்தவனை மட்டுமல்லாது, பகைவர் படை வீரர்களுக்குக் கூட நடுகல் நட்டிருப்பது, தங்களுக்கு உதவக் கூடிய ஆவிகளின் எண்ணிக்கையை அதிகரித்து, தமது ஆவிப்படைவலிமையை அதிகரித்துக் கொள்ளவே தான்[77] என்கிறார் வானமாமலை. அவ்வாறே பழைய போரில் மாண்ட வீரனுக்கு எடுக்கப்பட்ட நடுகல்லிற்குக் கள்ளோடு ஆட்டுக்குட்டி பலி கொடுக்கப்பட்டுள்ளதை அகநானூறு குறிப்பிடுகிறது.

வெற்றியின்போது நடுகல்லிற்குப் பலி கொடுக்கப்பட்டுள்ளது. வெட்சியாரிடமிருந்து நிரைமீட்டுப் போரிட்டுமீண்ட கரந்தையார் மணற்குன்றின் மேலுள்ள நடுகல்லிற்கு மயிற்றோகையைச் சூட்டினர். துடியை முழக்கி நெல்லால் ஆக்கிய கள்ளொடு செம்மறிக் குட்டியைப் பலி கொடுத்தனர்.

**வில் ஏர் வாழ்க்கை விழுத் தொடை மறவர்**
**வல் ஆண் பதுக்கைக் கடவுட் பேண்மார்,**
**நடுகல் பீலி சூட்டி, துடிப்படுத்து,**
**தோப்பிக் கள்ளோடு துரூஉப் பலி கொடுக்கும்**

**(அகம். 35:6-9)**

இப்பாடல், வீரர்களின் வழிபாட்டுமுறையை எடுத்துக்காட்டுகிறது. இனத்தாரின் நன்றிக்கடனைச் செலுத்தும்வகையில் இவ்வழிபாடு அமைந்திருப்பதோடு ஆவி பலத்தை இணைத்துக் கொள்வதற்காகச் செய்யப்பட்டதாகவும் காணப்படுகிறது.

பாலை நில மக்களாகிய மறவர்கள், வழிப்போக்கரைக் கொன்று மூடிய கற்குவியல்மீது படர்ந்த மல்லிகையை, நெடிதுகாலம் நிலைத்துநிற்கும் நடுகல்லிற்கு நாட்பலியிட்டு வழிபட்டுச் சூட்டியுள்ளனர்.

**நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டும் (அகம். 289:3)**

என்ற பாடல் வரி நடுகல் மரபின் பழமையை எடுத்தியம்புகிறது.

இவ்வாறு வழிபடப்பட்ட நடுகற்கள் பிற்காலத்தில் தெய்வ வழிபாடாக மாறி இருக்கின்றன. மலைபடுகடாம் நடுகல் தெய்வம் உறைவதாகவும், அவற்றை மராமரத்தின் கீழ் நடப்பட்டிருப்பதையும் குறிப்பிட்டுள்ளது. வீரர்களுக்காக எடுக்கப்பட்ட நடுகற்கள் கோயில்களாக வளர்ச்சி பெற்றுள்ளன. இறந்தவரை நினைவு கூறவிரும்பிய மக்கள் முன்னவர் நினைவாகச் சில நாட்கள் விழா நடத்தினர். பின்பு நிலையானதாக நடுகல் தோன்றியதாகலாம். நடுகல்லின் மேல் பந்தரிட்டு வணங்கியோர் அதனையே கோவிலாக ஆக்கினராதல் வெள்ளிடை[79] என்கிறார் வே. மகாதேவன்.

**நடுகல் சிதைவு**

நடுகற்கள் பாலை வழிகளில் அமைந்திருந்தமையால் அவற்றில் எழுதப்பட்ட எழுத்துக்கள் சிதைவுக்குள்ளாகியுள்ளன. வில்லோர் உழவர்கள் என்று அழைக்கக்கூடிய பாலை நில மக்கள் அம்புகளைத்தீட்டி கூர்மைப்படுத்த நடுகற்களைப் பயன்படுத்தியுள்ளனர். அதனால் அந்நடுகல் எழுதப்பட்ட எழுத்து பொருள்படப் படிக்கமுடியாத நிலையில் இருந்துள்ளது. அவ்வழிச் செல்வோர் வழிநடை வருத்தமுடன் கல்லைப் படிக்காமல் விடுத்துச் சென்றனர். அந்நடுகல் குயில் எழுத்தால் எழுதப்பட்டிருந்தது[80].

பல ஊர்களுக்குப் பயணம்செய்த உமணர்கள் வண்டியின் உதவியுடன் உப்பை ஏற்றிச் செல்வர். அவர்கள் பாலை வழியில் செல்லும்போது வண்டியிலுள்ள சக்கரத்தின் பூண் நடுகல்லை சிதையச் செய்தமையால் அதன்மேல் இருந்த பூ வாடியது. கூரிய உளியால் செதுக்கப்பட்ட கோடுகள் தேய்ந்தொழிந்த எழுத்துக்கள், வழிச் செல்வோருக்குத் தவறான பொருளைத் தருவதாக இருந்தது.

**மரம்கோள் உமண்மகன் பேரும் பருதிப்**
**புன்தலை சிதைத்த வன்தலை நடுகல்**
**கண்ணி வாடிய மண்ணா மருங்குல்,**
**கூர்உளி குயின்ற கோடுமாய் எழுத்து, அவ்**
**ஆறுசெல் வம்பலர் வேறுபயம் படுக்கும் (அகம். 343:4-8)**

இப்பாடல் கூறும் நடுகல்லில் இருந்த கோட்டுருவங்களை விளங்கிக்கொள்ள முடியாமல் இருந்துள்ளது[81].

நடுகற்கள்பற்றிய குறிப்புகள் எட்டுத்தொகையில் அதிகமாக இடம்பெற்றுள்ளன. பத்துப்பாட்டில் மலைபடுகடாம், பட்டினப்பாலை ஆகிய இலக்கியங்கள்தவிர பிற இலக்கியங்களில் நடுகல்லைப் பற்றிய குறிப்புகள்

இடம்பெறவில்லை. பத்துப்பாட்டு அரசுருவாக்கம் நடைபெற்று வேந்தர்களுடைய ஆட்சியின் சிறப்பை எடுத்துக்கூறும் இலக்கியமாக உள்ளது. அவ்வாறிருக்க ஏன் இத்தொகுப்பில் நடுகல்பற்றிய பதிவுகள் அதிகம் இடம்பெறவில்லை என்பது ஆய்வுக்குரியது. வேந்தர்களின் வீரத்தையும், படை வலிமையையும் எடுத்துக்கூறும் பத்துப்பாட்டில் போரின் தொடக்கம் என்று கருதப்பட்ட வெட்சி, கரந்தைப் போர்கள் ஏன் காணப்படவில்லை. ஏனெனில் வேந்தர்கள் இப்போரில் ஈடுபடவில்லை. புறநானூற்றிலும் பதிற்றுப்பத்திலும் வேந்தர் சமுதாயம் வெட்சிப்போரில் ஈடுபட்டமைக்குச் சான்றேதும் இல்லை. வேந்தர்களின் போர்கள் முழுக்க முழுக்க நிலங்களைக் கவரும் போர் முறைகளாகவே உள்ளன. மதில் அழிப்பும், விளைவயல் அழிப்பும் இவர்களின் போர்ச்செயல்களாய் இருந்துள்ளன[82]. இந்நிலையே பத்துப்பாட்டிலும் நிலவுகின்றது. மேலும், வீரச்செயல் செய்தவர்களுக்குக்கூட நடுகல் எடுத்ததாகத் தெரியவில்லை.

## தொகுப்புரை

இனக்குழு வாழ்க்கையில் சடங்கு நீங்கா இடத்தைப் பிடித்திருந்தது. சடங்குகள், வாழ்க்கையில் வளம் வேண்டியும் இயற்கையிடம் தனக்கு வேண்டியதைப் பெறவும் நிகழ்த்தப்பட்டன. சடங்கு என்பது செய்யப்படுவது. ஒன்றைச் செய்து இன்னொன்றைப் பெறுவது. இனக்குழுச் சடங்குகள் குழுவாக நிகழ்த்தப்படும் தன்மை வாய்ந்ததாக உள்ளன. சங்க இலக்கியத்தில் உள்ள இனக்குழுச் சடங்குகள் மந்திரச்சடங்குகளாகவும், சமயம் சார்ந்த சடங்குகளாகவும் உள்ளன. ஆனால் தொன்மைச் சடங்குகள் குறித்த முழு விளக்கத்தையும் சங்க இலக்கியங்களில் காணமுடியவில்லை.

தொல்பழங்கால மக்களை இயற்கை அச்சுறுத்தியது. இயற்கையிடமிருந்து தம்மை பாதுகாத்துக்கொள்ளவும், தமக்கு வேண்டியனவற்றைப் பெறவும் சங்ககால மக்கள் சடங்குகள் செய்துள்ளனர். அவ்வகையில் தம்முடைய நீர்த்தேவையைப் பூர்த்திசெய்யும் பொருட்டுச் செய்யப்பட்ட மழைச்சடங்கு, மந்திரச்சடங்காகவும், மந்திரமும் சமயமும் கலந்த சடங்காகவும் காணப்படுகின்றது.

குறிஞ்சி நில மக்கள் குழுவாக இணைந்து மழைச்சடங்கு செய்தனர். மழை வேண்டி மலைமீது நின்று ஆரவாரம்செய்து இயற்கையைத் தூண்டும் குறவனின் இச்சடங்கு, பாவனைச் சடங்கின் ஒரு கூறாக விளங்குகிறது. குழுவாக இணைந்து மலைக்குச் சென்று மலையை மழைவந்து சூழ வேண்டுமென்று பலியைத் தூவினர். அவற்றின் பயனாக மழை மிகுதியாகப் பெய்தது. அவற்றை நிறுத்த மேகத்தை மேலே போவதாக என்று அனைவரும் கட்டளையிட்டனர். வேட்டையில் வளம் வேண்டி மலைக்கு பலியிட்டு நீர்வளாவினர்.

நெய்தல் திணையில் மகளிர் பௌர்ணமி அன்று தழையாடை உடுத்தி நீர்த்துறையில் வழிபாடு செய்து முத்து, வலம்புரிச்சங்கு ஆகியவற்றைச் சொரிந்து வழிபாடு செய்தனர். நீரோடு தொடர்புடைய பொருட்கள், மழையைக் கொண்டுவரும் என்று இச்சடங்கு செய்யப்பட்டுள்ளது. மருதத்திணையில் ஆற்றில் நத்தை, நண்டு, இறால், வாலை ஆகியவற்றை விட்டு விளைச்சல் பெருகவேண்டும் என்று கூறினர். இத்தகைய சடங்கு ஒத்தது ஒத்ததைக் கொண்டுவரும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் செய்யப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் மழை பெய்வதற்கும், பொய்த்துப் போவதற்குமுரிய நிமித்தங்கள் பல இடங்களில் காணப்படுகின்றன. மழைக்கோளாக வெள்ளி குறிப்பிடப்பட்டுள்ளது. அக்கோல் வடதிசையில் நின்றால் மழை பெய்யும் என்றும் தென்திசைச் சென்றால் மழை பெய்யாது என்றும் குறிப்பிட்டுள்ளனர். ஆனால், நாட்டில் நல்லாட்சி நடந்தால் நல்லமழை பெய்யும் என்றும், தீய நிமித்தங்கள் தோன்றினாலும் செங்கோல் காரணமாக மழைபெய்யும் என்றும் குறிப்பிடப்படுவதிலிருந்து மழை வருவதற்குக் காரணமானவர்களாக ஆட்சியாளர்கள் மாறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

பெண்கள் தைமாதத்தில் நோற்கும் நோன்பாக தைந்நீராடல் உள்ளது. தமக்கு நல்ல கணவர் வாய்க்கவேண்டும் என்பதே இந்நோன்பின் நோக்கம். அதற்காகப் பெண்கள் அதிகாலையில் நீராடி வேண்டினர். இச்சடங்கில் வீடுவீடாகச் சென்று பொருட்கள்பெற்று ஆயத்தாருடன் பெண்கள் உண்டதைக் கலித்தொகை குறிப்பிடுகிறது. மேலும், பாவைகளுக்கு மணம் முடித்துவைக்கும் செயலும் செய்யப்பட்டுள்ளது.

பரிபாடலில், தைந்நீராடும் நோன்பு அம்பாவாடல் என்று சுட்டப்பட்டுள்ளது. அம்பாவாடல் சடங்கு முதுபார்ப்பனியப் பெண்கள் வழிகாட்ட செய்யப்பட்டுள்ளது. கன்னிப்பெண்களுடன் தாயர் உடன் இருந்தனர். ஆதிரை விழாவின்போது இச்சடங்கு செய்யப்பட்டுள்ளது. ஆதிரை விழாவில் அந்தணர் சிவனுக்கு யாகம் வளர்த்தினர். அங்குவந்த பெண்களும் சேர்ந்து நாட்டில் வளம்பெருகவும் மழை பெய்து உலகம் குளிரவும் வேண்டி நீராடினர்.

திணை மரபில் செய்யப்பட்ட மழைச்சடங்கு அரசர்கள் காலத்தில் அவர்களுடைய செங்கோலாட்சி மழையைக் கொண்டுவரும் என்று நம்பப்பட்டுள்ளது. நல்ல கணவர் வேண்டி சடங்கு செய்த கன்னிப் பெண்கள், அந்தணர் செய்த யாகத்தில் கலந்து கொண்டு மழை பெய்ய வேண்டும் என்று வேண்டினர் என்பது தைந்நீராடும் சடங்கில் ஏற்பட்ட மாற்றமாகும்.

முருகனால் ஏற்பட்ட கன்னிப்பெண்களுடைய நோய் நீங்க வெறியாட்டு நிகழ்த்தப்பட்டது. வெறியாட்டு நிகழ்த்துநர்களாக கட்டுவிச்சி, வேலன் ஆகியோர்

காணப்படுகின்றனர். வெறியாட்டு ஆறு, மனை, பந்தல் ஆகிய இடங்களில் நிகழ்த்தப்பட்டுள்ளது. வெறியாட்டுக்களத்தில் புதுமணல் பரப்பி, மலர்களால் அலங்கரிக்கப்பட்டு பந்தல் அமைக்கப்பட்டது. வெறியாட்டு நடத்தும் வேலன் மாலை அணிந்திருந்தான். கையில் வேல், தலையில் தலையணி அணிந்திருந்த வேலன் கையில் சிவப்பு நூல்கட்டிய பழக்கத்தை திருமுருகாற்றுப்படை புதிய மரபாகச் சுட்டியுள்ளது.

வெறியாட்டில் தினை, வெள்ளாட்டுக் குட்டி ஆகியன பலியாகக் கொடுக்கப்பட்டன. கழங்கு பார்த்தும், கன்னம் தூக்கியும் நோய்க்குரிய காரணம் முருகன் என்று கூறப்பட்டது. எட்டுத்தொகை இலக்கியங்களில் வெறியாட்டு குறித்த பதிவுகளுக்கும் திருமுருகாற்றுப்படை குறிப்பிடும் வெறியாட்டிற்கும் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. சடங்கிற்குரிய பொருட்கள் ஒன்றாக இருப்பினும் வெறியாட்டு எடுப்பதற்குரிய காரணம் திருமுருகாற்றுப்படையில் மாறுபட்டிருக்கின்றது. இங்கு வெறியாட்டு வழிபாடாக செய்யப்பட்டுள்ளது. மேலும், முருகவழிபாடு அனைவருக்கும் பொதுவான வழிபாடாக மாற்றம் பெற்றிருப்பதோடு முருகன் சைவசமயத்தோடு இணைக்கப் பட்டிருக்கின்றான்.

சங்க இலக்கியத்தில் திருமணம் குறித்தப் பதிவுகள் அதிகம் இடம்பெறவில்லை. மருதத் திணையில் சிலபாடல்கள் உள்ளன. அப்பாடல்கள் குறிப்பிடும் திருமணம், முதிய மங்கலமகளிரால் செய்யப்பட்டுள்ளது. திருமணத்தின்போது நெல்லும் நீரும் கொண்டு மணமகள் வாழ்த்தப்பெற்றுள்ளாள். நெல்லும், நீரும் வளமையின் குறியீடாக விளங்குகின்றன. மங்கல மகளிர் சடங்கு நிகழ்த்துநராக இருப்பது பிள்ளைப்பேறு உண்டாக்கும் என்ற நம்பிக்கையில் செய்யும் தொத்து மந்திரமாக உள்ளது.

சங்ககாலத்தில் வீரச்செயல் புரிந்து இறந்தவர்களுக்காக நடுகல் எடுக்கும் மரபு கடைபிடிக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் ஆநிரைகவர்ந்த போரில் இறந்து பட்டவர்களுக்காக எடுக்கப்பட்ட நடுகற்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. ஆநிரை போர்கள் பாலைநிலத்தில் நடைபெற்றமையால் நடுகற்கள் பாலை நில வழிகளில் காணப்படுவதை இலக்கியங்களால் அறியலாம். நடுகற்களில் இறந்த வீரர்களுடைய பெயரும் பீடும் எழுதி வைக்கப்பட்டன. அக்கற்களுக்கு மாலை சூட்டி, வேல், கேடயம் முதலானவற்றைச் சார்த்தி வைத்து பந்தல் போட்டு வழிபாடு செய்தனர். நாட்பலி கொடுக்கப்பட்டது. கள், ஆடு முதலான பொருட்கள் பலியாகக் கொடுக்கப்பட்டன. முல்லை நில மக்களுக்குரிய வழிபாட்டு மரபாக நடுகல் வழிபாடு காணப்படுகின்றது.

அரசர்களுக்கும் நடுகல் எடுத்துள்ளதை புறப்பாடல்வழி அறியமுடிகிறது. வீரச்செயல் செய்தவர்களுக்காக எடுக்கப்பட்ட நடுகற்களை பத்துப்பாட்டு

இலக்கியங்கள் சுட்டுகின்றன. எட்டுத்தொகையில் நடுகற்கள்பற்றிய பதிவுகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. பத்துப்பாட்டில் மிகச்சில குறிப்புகளே காணப்படுகின்றன.

நடுகற்கள் பிற்காலத்தில் பள்ளிப்படைக் கோயில்களாக மாற்றம் அடைந்துள்ளன. வேந்தர்களின் சமாதிகள் பின்னாளில் இத்தகைய மாற்றத்திற்குக் காரணமாக அமைந்தன.

## குறிப்புகள்

1. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், ப. 189
2. சுப்பிரமணியன், கா., சங்க கால சமுதாயம், ப. 14
3. செல்வராசு, சிலம்பு. நா., சங்க இலக்கிய மறுவாசிப்பு, ப. 98
4. சுப்பிரமணியன், கா., சங்க காலச் சமுதாயம், ப. 16
5. மேலது. ப. 16
6. செல்வராசு, சிலம்பு. நா., சங்க இலக்கிய மறுவாசிப்பு, ப. 101
7. சுப்பிரமணியன், கா., சங்க கால சமுதாயம், ப. 17
8. மேலது. ப. 81
9. மேலது. ப. 17
10. மேலது. ப. 18
11. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம் ப. 94
12. புறம். 386:24
13. பரி. 11
14. கலித், 15
15. செல்வராசு, சிலம்பு. நா., சங்க இலக்கிய மறுவாசிப்பு, ப. 101
16. தமிழர் நாகரிகம், தொகுதி, 4, எண். 154 ப. 112
17. காந்தி, க., தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 217.
18. பக்தவத்சல பாரதி, சாலினி வாக்குரைத்தல்: இனவரைவயியல் நோக்கு, பனுவல் 8, அக்டோபர் 2010.
19. மேலது. ப. 212
20. குறுந். 26
21. மேலது. 26
22. ஐங். 249
23. அகம். 241
24. ஐங். 246
25. காந்தி, க., தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 59
26. திருமுரு. 190-197, 230-31
27. அகம். 22
28. குறுந். 362
29. திருமுரு. 190-197
30. மேலது. 218-226
31. மேலது. 227-244
32. மேலது. 245-249

33. மேலது. 218-226

34. மேலது. 198-217

35. மேலது. 177-189

36. கலித். 101,102

37. மேலது. 107

38. சுப்பிரமணியன்,க., சங்க கால சமுதாயம், ப. 35

39. கலித். 115:20

40. அகம். 107

41. மேலது. 387

42. மேலது. 385

43. மேலது. 86

44. மேலது. 136

45. சுப்பிரமணியன். கா, சங்க கால சமுதாயம், ப. 34

46. கலித். 69

47. புறம். 260

48. மேலது. 260

49. மேலது. 263

50. மேலது. 335

51. அகம். 387

52. மலைபடு. 386-389

53. புறம். 232

54. மேலது. 221,223

55. மேலது. 261

56. மேலது. 264:4

57. ஐங். 532:3

58. அகம். 269

59. ஐங். 352. அகம், 53

60. புறம். 264:3

61. அகம். 67:9

62. மலைபடு. 388

63. புறம். 264

64. வானமாலை, நடுகற்களும், நம்பிக்கைகளும், hero stons, ப. 45

65. புறம். 90:11

66. மேலது. 329

67. மேலது. 314:3

68. மலைபடு. 390-391

69. புறம். 343

70. சிவசுப்பிரமணியன். ஆ, மந்திரமும் சடங்குகளும், மேற்கோள், ப. 23

71. மேலது. ப. 25

72. அறவாணன். க. ப, அற்றை நாள் காதலும் வீரமும், மேற்கோள், ப. 240

73. புறம். 263

74. மலைபடு. 390-391

75. அகம். 387

76. புறம். 306:4-5

77. வானமாமலை, நடுகற்களும் நம்பிக்கைகளும், hero stons, ப. 52

78. புறம். 268

79. மகாதேவன். வே, hero – stones:seminar, ப. 11

80. அகம். 297

81. கிருட்டிணமூர்த்தி, நடுகற்கள், ப. 77

82. மாதையன். பெ, இனக்குழச் சமுதாயமும் அரசுருவாக்கமும், ப. 24

சங்ககாலச் சமூகம் நில அமைப்பு, பொருளாதாரம், மக்கள் வாழ்க்கைமுறை உள்ளிட்ட கூறுகளால் சமச்சீரற்ற சமூகமாக விளங்கியது. சங்க இலக்கியம், திணை மக்களுக்கும் நாட்டை ஆள்பவர்களுக்கும் உண்பது நாழி, உடுப்பவை இரண்டே[1] என்று பொதுவுடைமை பேசினாலும் அக்காலச் சமூகத்தில் மக்கள் ஒவ்வொரு வகையான வாழ்வாதாரங்களைக் கொண்டிருந்தது தெற்றனத் தெரிகிறது. திணைசார்ந்த மக்களுடைய தேவையானது, நாட்டை ஆண்டவர்களுடைய தேவைகளிலிருந்து மாறுபட்டிருந்துள்ளது. அவ்வாறே அவர்களுடைய வாழ்வாதராமும் வேறுபட்டுக் காணப்படுகிறது. திணை மக்களுடைய வாழ்வாதாரம் அடிப்படையில் உணவை நோக்கிச் செயல்படுகிறது. நாட்டை ஆண்ட ஆட்சியாளர்களின் தேவை நாட்டை விரிவாக்கம் செய்வதாக இருக்கிறது. உணவுக்காக வழிப்பறி செய்வது, கால்நடைகளைக் கவருவது, வேந்துவிடு தொழில்செய்வது ஆகியன இனக்குழு மக்களுடைய வாழ்க்கையாக இருந்துள்ளது. இத்தகைய மக்களின் வாழ்வாதாரம் பின்வருமாறு பகுத்து ஆராயப்பட்டுள்ளது. அவை,

1. இனக்குழு வாழ்வாதாரம் - உணவு
2. இனக்குழு வாழ்வாதாரம் - போர்நடவடிக்கைகள்

என்பன.

## இனக்குழு வாழ்வாதாரம் - உணவு

ஐந்திணைமக்கள் நில அமைப்பால் தனிப்பட்ட வாழ்வாதாரங்களைக் கொண்டுள்ளனர். அந்நில அமைப்பிற்கு ஏற்பவே அவர்களுடைய தொழில், வேலை நேரம், உணவு, உற்பத்திப் பொருட்கள், பண்டமாற்றுமுறைகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்கு, வழிபாடு முதலான அனைத்துக்கூறுகளும் மாறுபட்டு அமைந்துள்ளன. ஆண் பெண் இருவரும் சமூகத்தில் பெற்றிருந்த இடத்தை வரையறுக்கவும் நிலம் அடிப்படையாய் அமைந்துள்ளது. எனவே ஐந்திணைச் சார்ந்த மக்களுடைய வாழ்வாதாரங்கள் திணைவாரியாக எடுத்துரைக்கப்படுவதோடு அவற்றில் இடம்பெற்றுள்ள ஆண் பெண் பணிப்பாகுபாடு குறித்து விளக்குவதாகவும் இப்பகுதி அமைந்துள்ளது.

### குறிஞ்சி

குறிஞ்சித்திணை மலையும் மலை சார்ந்தப் பகுதியையும் கொண்டிருப்பதினால் அங்கு வாழ்ந்த மக்கள் வேட்டை, இயற்கை உணவு சேகரிப்பு, காட்டெரிப்பு வேளாண்மை, முதலானவற்றை வாழ்வாதாரமாகப் பெற்றிருந்தனர்.

**ஆண்கள்**

குறிஞ்சி நிலத்தில் வேட்டையாடுதல், காட்டெரிப்பு வேளாண்மை செய்தல் ஆகிய வேலைகளை ஆண்கள் செய்துள்ளனர். குழுவாகச்சென்று யானை, பன்றி, முள்ளம்பன்றி முதலான விலங்குகளை வேட்டையாடியிருப்பது ஆண்களுடைய வேட்டையாடும் பணிச்சூழலை எடுத்துக்காட்டுவதாக உள்ளது. காட்டெரிப்பு வேளாண்மைக்குரிய நிலத்தை சீரமைத்தல், விதைத்தல் ஆகிய பணிகளும் உணவு உற்பத்தியின்போது நடைபெற்றுள்ளது.

தினை மக்கள் வாழ்வாதாரம் உணவை நோக்கியிருந்தது என்பது குறிஞ்சித் திணைக்கு மிகப்பொருத்தமாக அமைந்துள்ளது. சங்ககாலமக்கள் பண்டமாற்று செய்து பிற பகுதிகளில் கிடைக்கக்கூடிய உணவுகளைப் பெறுவதும் ஒரு வகையான வாழ்வாதாரமாக விளங்குகின்றது. அவ்வகையில் குறிஞ்சி நில மக்கள் உணவு சேகரிப்பு மூலம் கிடைத்த இறைச்சி, தேன் முதலிய பொருட்களைப் பிற திணைசார்ந்த மக்களிடையே பண்டமாற்றாகக் கொடுத்து அவர்களுக்குத் தேவையான பொருட்களைப் பெற்றுக்கொண்டனர். குறிஞ்சி மக்கள் உணவு கிடைக்கப்பெறாத நிலையில் மக்கள் பசித்திருந்தால், வேட்டையில் பெற்ற யானையினுடைய கொம்பினை விற்று, அதன் விலையால் பெறப்பட்ட உணவை உண்டு வாழ்க்கையினை நடத்தியுள்ளனர்[2].

**பெண்கள்**

சங்க இலக்கியங்களில் குறிஞ்சித் திணைசார்ந்த பெண்கள் குறித்த பதிவுகள் காதல் இலக்கணத்திற்காக மட்டும் படைக்கப்பட்டதன்று. அப்பெண்களின் பதிவு சமுக வரலாற்றை அறிய பயன்படுவதோடு பெண்களின் ஆதி வரலாற்றை எழுதுவதற்கும் இன்றியமையாத சான்றாதாரமாக விளங்குகிறது. பொருளாதாரத்தில் பிற திணை பெண்களைவிட குறிஞ்சித் திணைப் பெண்களின் பங்கு அதிகமாக உள்ளது. குறிஞ்சித்திணைப் பெண்கள் ஆண்களைக் காட்டிலும் மிகுதியான பணிகளைச் செய்துள்ளனர். காட்டுவிலங்காண்டி போர்வீரனும் வேட்டைக்காரனும் வீட்டில் இரண்டாம் நிலையை வகித்துக் கொண்டு முதலிடத்தைப் பெண்ணுக்குத் தருவதில் திருப்தியடைந்தார்கள்[3] என்னும் எங்கல்ஸ் அவர்களின் கூற்று கால்நடை வளர்ப்புச் சமூகத்தில் பெண்கள் அடைந்த சமூகப் பின்னடைவையும் குறிஞ்சி மற்றும் பாலைத்திணையில் பெண்களுக்கு இருந்த முக்கியத்துவத்தையும் முன்னிருத்துவதாக அமைந்துள்ளது.

வேளாண்மையில் அல்லது உணவு உற்பத்தியில் பெண்களின் பங்கு ஆண்களுக்கு நிகராக இருப்பதைக் குறிஞ்சித் திணையில் பார்க்கமுடிகிறது. தினைவிளைவிக்கும் வேலையைப் பெண்களே செய்தனர். நிலத்தைக் கிளறி

விதைத்தல், களைபறித்தல், கிளி கடிதல், கதிர் அறுத்தல், தினை குற்றுதல் முதலிய வேலைகளைப் பெண்களே செய்தனர்[4]. குறிஞ்சி நிலப் பெண்கள் தினைப்புனம் காவல் காத்தமை பற்றி சங்க இலக்கியங்கள் மிகுதியாகப் பதிவு செய்துள்ளன (55 இடங்களில் பெண்கள் தினைப்புனம் காவல் காத்துள்ளனர் என்ற எண்ணிக்கையைக் கூறுகிறார் பெ. மாதையன்). பிற திணைகளில் பெண்கள், ஆண்களின் உற்பத்தியில் அல்லது ஈட்டிவைத்ததில் பண்டமாற்று விற்பனையை மேற்கொள்பவர்களாகக் காணப்படுகின்றனர். ஆனால், குறிஞ்சிநிலப் பெண்கள் உற்பத்தியில் நேரடியாகப் பங்குகொள்கின்றனர். ஆதிகாலவிவசாயம் பெண்கள் தலைமையின்கீழ் நடைபெற்றதன் தொடர்ச்சியாக இத்தகைய பங்களிப்பைப் பார்க்கவேண்டியுள்ளது.

## முல்லை

முல்லைத் திணையில் கால்நடை வளர்ப்பு மற்றும் புன்செய் வேளாண்மை ஆகிய இரண்டும் மக்களுடைய முதன்மையான வாழ்வாதாரமாக இருந்துள்ளன. கால்நடைகளிலிருந்து பெறப்பட்ட பால்படு பொருட்களைக் கொடுத்துப் பண்டமாற்றாகப் பிற திணை மக்களிடமிருந்து மற்றுமொரு வருமானத்தையும் மக்கள் ஈட்டியுள்ளனர். இம்மக்களுடைய வாழ்வாதாரம் குறிஞ்சி நில சமூகத்தைவிட முன்னேறிய வகையில் காணப்படுகின்றது. இத்தகைய முன்னேற்றம் இதுவரை காணப்படாத புதிய உடைமையாக்கத்திற்கு வித்திட்டது. வன்புலங்களில், வானை எதிர்பார்த்த பயிர் சாகுபடியையும், கால்நடை வளர்ப்பையும் வாழ்க்கையாகக் கொண்ட ஆயர்குடிகள் உணவு தானிய உற்பத்தியிலும், கால்நடைப் பெருக்கத்திலும் ஈடுபட்டார்கள். வரகு, அவரை, எள், தினை உற்பத்தி குறிப்பிடத்தக்கது. கால்நடைகளில் ஆநிரைகளின் பால், பாலிலிருந்து பெற்ற தயிர், மோர், வெண்ணெய், நெய் ஆகியவை பண்டமாற்றுப் பொருள்களாக இவர்களுக்கு நெல், கள், கால்நடை ஆகியவற்றைப் பெற்றுத் தந்தன. கால்நடை, நிலம், தானிய உற்பத்தி ஆகியவற்றால் ஆரம்ப கட்ட உடைமை, செல்வம் என்னும் புதிய நாகரிக அடிப்படை இவர்களிடம் உருவானதாகக் கருதும்[5] ராஜ் கௌதமன் அவர்களுடைய கருத்து முல்லைநிலத்தில் உருவான உடைமையாக்கத்தினை உறுதிசெய்வதோடு அம்மக்களிடையே நிலவிய பண்டமாற்று விற்பனைமுறையையும் எடுத்துரைக்கின்றது.

முல்லை நிலமக்களின் வேலைப் பாகுபாட்டைப் பொருத்தவரை கால்நடைகளை மேய்த்தல், பராமரித்தல் போன்ற வேலைகள் ஆண்களுக்குரியதாக உள்ளது. பால்படு பொருள்களைத் தயாரித்தல், விற்பனைசெய்தல் முதலானவை பெண்களின் பணியாகக் உள்ளது. புன்செய்

வேளாண்மையில் ஆண்களும் பெண்களுமாக இணைந்து பணி செய்யும் குழுச் செயல்பாடு காணப்படுகின்றது. மேலும், வரகு சோறு, பால், தயிர், மோர், நெய் ஆகியவை முல்லை நில மக்களின் உணவாக இருந்துள்ளது.

**முல்லை நிலப்பெண்களின் பணிப்பாகுபாடு**

குறிஞ்சி நிலப்பெண்கள் தங்களுடைய நிலச் சூழலில் கிடைக்கக்கூடிய உணவுப் பொருள்களை நேரடியாகச் சேகரிப்பவர்களாக உள்ளனர். வேட்டையானாலும் இயற்கையில் கிடைக்கக்கூடிய விளைபொருள்களாயினும் தாங்களாகவே சேகரித்துக்கொள்ளும் நிலவமைப்பைப் பெற்றுள்ளனர். ஆனால், முல்லைநிலப் பெண்களுக்கு இத்தகையச் சூழல் அமையவில்லை என்றே கூறவேண்டியுள்ளது. முல்லை நிலத்தில் கால்நடை பராமரிப்பிற்காக ஆண்கள் உடைமையாளர்களாக மாறி வீட்டிற்கு வெளியில் வேலை செய்பவர்களாகவும், பெண்கள் கால்நடையில் இருந்து கிடைக்கக்கூடிய பால்படு பொருள்களை வீட்டில் தயாரித்து விற்பனை செய்பவர்களாகவும் இருந்துள்ளனர். இத்தகைய பணிப்பாகுபாடு, வேட்டைச் சமூகமாக இருந்த மனித சமூகம் அடைந்த அடுத்தகட்ட வளர்ச்சியைத் தெரிவிப்பதோடு அச்சமூகத்தில் பெண்ணுக்கு இருந்த இடத்தையும் வெளிப்படுத்துகின்றது. மென்மையான ஆட்டிடையனோ, தனது செல்வத்தைக் காட்டி முண்டியடித்து முதலிடத்தைப் பிடித்துக் கொண்டு பெண்ணை இரண்டாம் நிலைக்குத் தள்ளி விட்டான்[6] என்னும் எங்கல்ஸ் அவர்களுடைய கூற்றும் முல்லை நிலச் சமூகத்தில் பெண் இரண்டாம் நிலைக்குச் சென்றதை புலப்படுத்துகின்றது.

**தயிர் கடைதல்**

தயிர்கடையும் தொழில் பெண்களால் செய்யப்பட்டதற்குச் சங்கப் பாடல்கள் சான்று தருகின்றன. தயிர் கடைய பெண்கள் அதிகாலையில் எழுந்துள்ளனர். பாலைத் தயிராக்கி வீட்டில் மத்துகளில் கயிறு மாட்டி தயிர் கடைந்து வெண்ணெய், நெய் எடுத்துள்ளனர். தயிர் பானையின் முடைநாற்றத்தை மாற்ற அதில் விளாம்பழத்தினை இட்டு வைத்துள்ளனர்[7]. பலமுறை தயிரைக் கடைகின்றபொழுது, என் தோள்மேலே பாய்ந்த புள்ளிகள்[8] இதுவென ஆயமகள் கூறுவதிலிருந்து பெண்களுடைய பணிப்பாகுபாடு குறித்து அறிந்துகொள்ளமுடிகிறது.

**பண்டமாற்று - மோர் விற்றல்**

ஆயர் பொருளாதாரத்திலும் பண்டமாற்றம் முக்கிய இடம் வகித்துள்ளது. ஆயர்கள் பிற குடிகளுடன் பண்டமாற்றம் செய்து பரஸ்பரம் கொண்டு கொடுத்து வாழும் கூட்டுவாழ்வையும் கொண்டிருந்தனர்[9]. தயிரைக் கடைந்து மோராக்கிக்கொண்டு அதிலிருந்து எடுக்கப்பட்ட நெய் போன்றவற்றை முல்லைநிலப்

பெண்கள் பிற திணைசார்ந்த நிலங்களுக்கு எடுத்துச்சென்று பண்டமாற்று முறையில் விற்பனை செய்துள்ளனர். இவர்களின் பண்டமாற்றுமுறை குறித்துப் பெரும்பாணாற்றுப்படை விரிவான தகவலைத் தருகின்றது.

அதிகாலையிலேயே மோர் விற்கச் செல்லும் ஆயமகள் மோர் விற்று, நெல் கொண்டுவந்து தம் சுற்றத்தாரை உண்ணச் செய்தாள். நெய் விற்றுக் கட்டிப் பொன்னினை விரும்பாது எருமையையும், நல்ல பசுக்களையும் அவற்றின் கன்றுகளோடு வாங்கிவந்தாள்[10] என்பதிலிருந்து பெண்களின் பண்டமாற்று அன்றாட உணவிற்குத் தேவையான நெல்லைப் பெறுவதோடு நிறுத்திக்கொள்ளாமல் கால்நடைகளைப் பெருகச் செய்திருப்பதையும் உணர்த்துகிறது. இதனை,

**------------------ ஆய்மகள்**

**அளைவிலை உணவின் கிளைஉடன் அருந்தி,**

**நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்,**

**எருமை, நல் ஆன், கருநாகு பெறூஉம் (பெரும்பாண். 162-165)**

என்ற பாடல்வரிகளால் அறியலாம். மோர் விற்று வருவதை ஆயர் பெண்கள் தமக்கு இன்பம்தரும் தொழிலாகக் கருதியுள்ளனர்[11]. இச்செய்தி கலித்தொகையில் பல இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

மேலும், வீட்டில் தங்கிய பெண்கள் ஆண்களுக்கு உதவியாகப் பல வேலைகளைச் செய்துள்ளனர். இவ்வேலைகள் குறித்த குறிப்புகள் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளன. புனத்தின்கண் இருக்கின்ற தமையனுக்கு உணவு கொண்டுச் செல்லுதல்[12], ஆவினத்துடன் இருக்கும் தந்தைக்குப் பால்கறக்கக் கலயம் கொண்டுத் தருதல், கன்றுகளைத் தாம்புக் கயிற்றால் கட்டுதல் போன்ற பணிகளைத் தலைவி செய்ததாகக் கூறியுள்ளாள்[13]. வீட்டிற்குப் பக்கத்தே, பயிர்செய்யும் தோட்டத்திற்குக் கன்றோடு செல்லுதல்[14], தினை அரிந்த வயலுள் தாய் கன்றுகளை மேய்த்தல்[15] போன்ற வேலைகள் சங்க இலக்கியங்களுள் கலித்தொகையில் மட்டும் காணப்படுகின்றன. பிற இலக்கியங்களில் இப்பணிகள் குறிப்பிடப்படவில்லை. கால்நடை வளர்ப்பில் பெண்ணின் பணி வீட்டோடு முடங்கிவிட்ட நிலையில், ஆண் வெட்சி சூடி நிரை கவர்தலும் கரந்தை சூடி நிரை மீட்டலும் ஆகிய போர்ச்செயல்களில் ஈடுபட்டுச் சமூகத்தின் கால்நடைச் செல்வத்தைப் பெருக்கிப் பாதுகாத்து வரலானான்[16] என்பதிலிருந்து ஆண்களின் பணிச்சூழல் வீட்டிற்கு வெளியிலும் அப்பணிகளுக்கு உதவியாக இருந்த பெண்களின் பணி வீட்டில் இருந்திருப்பதும் புலப்படுகிறது.

**முல்லைநில ஆண்களின் பண்டமாற்று**

முல்லை நிலத்தில் பால்படு பொருட்கள்மூலம் நடைபெற்ற பண்டமாற்று, பெண்கள் செய்ததுபோன்று ஆண்களும் செய்துள்ளனர். குறுந்தொகையில்

ஆட்டுக்கூட்டத்தை மேய்க்கும் தொழில் செய்யும் இடையன் ஆட்டின் பாலை ஊரில் உள்ள மனைகளுக்குக் கொண்டு கொடுத்து மாற்றாக உணவைப் பெற்று வந்ததை, ஊர்ப்பகுதியில் உள்ள மனைகளுக்குப் பாலைக்கொண்டுவந்து தந்து, உணவைப் பெற்றுச் செல்லுவான். அவன் தலையில் முல்லைப்பூவைச் சூடியிருப்பான்[17] என்று குறிப்பிட்டுள்ளது. நற்றிணையில் இடையன் பால் விலைக்கூறுபவனாகக் காட்டப்பட்டுள்ளான். இதனை,

**பறிப் புறத்து இட்ட பால் நொடை இடையன் (நற். 142-4)**

என்ற பாடல்வரியால் அறியமுடிகிறது. பெண்களைப்போன்று ஆண்களும் பண்டமாற்று முறையை மேற்கொண்டிருப்பது மேற்கண்டவற்றால் அறியமுடிகிறது.

**முல்லை நில ஆண்கள் மேய்ச்சல் தொழில்**

இடையன், பூழியர், கோவலர், கொங்கர், குடவர், அண்டர், ஆயர் முதலிய சொற்களால் மேய்ச்சல் தொழிலில் ஈடுபட்ட முல்லை நில மக்கள் அழைக்கப்பட்டுள்ளனர். இடையன், பூழியர், ஆடுகளை மேய்த்துப் பாதுகாப்பவர்களாக உள்ளனர். கோவலர், கொங்கர், குடவர், அண்டர் ஆகியோர் பசு, எருது ஆகியவற்றைப் பாதுகாத்தவர்களாகக் காணப்படுகின்றனர்.

கொங்கரின் சிவப்பு நிறப் பசுக்கள் தோளில் சோற்று மூட்டை தொங்க, வலிய ஆண்கள் வெட்டியக் கிணறுகளில் நீர் வேட்கையைத் தீர்த்துக்கொண்டதை,

**----------------- கொங்கர்**

**படு மணி ஆயம் நீர்க்கு நிமிர்ந்து செல்லும் (அகம். 79:5-6)**

என்ற வரிகளாலும், ஆகெழு கொங்கர்[18], கொங்கர், ஆபரந் தன்ன செலவின்[19] போன்ற சான்றுகளாலும் கொங்கர் பசுக்களை மேய்த்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

அண்டர்களின் கயிற்றினை அறுத்துச்செல்லும் எருது உவமைப்படுத்தப் பட்டுள்ளதிலிருந்து[20] அண்டர்கள் பசுவினை மேய்ப்பவர்கள் என்பது புலப்படுகிறது. நள்ளி என்பவனுடைய காட்டில் உள்ள அண்டர்கள் வளர்த்த, பல பசுக்கள் தந்த நெய் பற்றி,

**--------------------- அண்டர்**

**பல்ஆ பயந்த நெய்யின், தொண்டி (குறுந். 210:1-2)**

என்ற வரிகளால் அறியமுடிகிறது. மேலும், அவர்கள் பால்படு பொருளாகிய நெய்யை பெற்றது பற்றியும் அறிந்துகொள்ளமுடிகிறது.

இடையர், ஆடுகளை வாழ்க்கைக்குரிய ஆதாரமாகக் கொண்டிருந்தனர். எனவே, இவர்கள் ஆடுகளை முன்னிலைப்படுத்தி அடையாளப் படுத்தப்பட்டதோடு அவ்வாறே அழைக்கப்பட்டனர். இதனை, ஆடுடை இடைமகன்[21] என்ற பாடல்வரி

உறுதி படுத்துகிறது. ஆட்டு மந்தைகளை உடையவர்களைப் பூழியர் என்று நற்றிணை குறிப்பிட்டுள்ளது. நல்ல நிறத்தைக் கொண்ட யாட்டுமந்தைகளைப்[22] பூழியர் பெற்றிருந்தனர்.

மேய்ச்சல் தொழிலுடைய முல்லை நிலமக்கள் மேய்ச்சலுக்காகக் கால்நடைகளைத் தொலைவிடங்களுக்கு ஓட்டிச் சென்று மேய்ப்பது, இரவு நேரங்களில் அங்கேயே கிடையமர்த்திக் காவல் காப்பது முதலிய வேலைகளை ஆண்களே செய்தனர். கால்நடைகளைக் கொடிய காட்டு விலங்குகள் தூக்கிச் செல்லாதவாறு விழிப்புடன் பாதுகாக்கும் பணியும் ஆண்களே மேற்கொண்டனர்[23] என்பதிலிருந்து மேய்ச்சல்தொழில் ஆண்களைச் சார்ந்திருந்ததை அறியமுடிகிறது.

**மருதம்**

வயல்வளம், மருத நிலத்தின் வாழ்வாதாரமாக விளங்குகிறது. உணவு உற்பத்திக்கான நிலம், நீர் போன்ற அனைத்துத் தகுதிகளுடைய திணையாக மருதம் இருந்துள்ளது. நீர் வளம் நிறைந்திருப்பதால் நெல், கரும்பு முதலானவற்றைப் பயிரிடும் உழவுத் தொழில் முதன்மையானதாக இருந்துள்ளது. உழவுத் தொழில் உழவர்களால் செய்யப்பட்டுள்ளது. பிற திணைசார்ந்த மக்களுடைய வாழ்வாதாரம் அவர்கள் நேரடியாகத் தொழில் செய்யும் தன்மையில் அமைந்திருக்கின்றது. ஆனால், மருதத் திணையில் மட்டும் உழுவோர், உழுவித்துண்போர் என்ற இரண்டு வர்க்கங்கள் இருக்கின்றன. இருவருடைய வாழ்வாதாரமாக வயல்வளம் இருப்பினும் உணவிற்காகப் பணி செய்பவர்கள் ஒரு பிரிவினர். இத்தகைய போக்கு பிற திணையில் இல்லை. ஆண்களும் பெண்களும் தங்களுக்கான பணியைச் செய்து உணவு சேகரிப்பது, உற்பத்தி செய்வது, பண்டமாற்றம் செய்வது போன்ற வேலைப் பகிர்வினைப் பெற்றுள்ளனர்.

மருத நிலத்தில் உழவுத்தொழில் செய்த உழவர்கள் அரிநர், கடைசியர், களமர், உழவர், அரிவணர், வினைஞர் போன்ற பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளனர். இவர்கள் வயல்களில் நெல், கரும்பு ஆகிய பயிர்களை விளைவித்துள்ளனர். உழுவதற்கு எருதுகளை வளர்த்துள்ளனர். எருதுகளைக் கட்டி ஏரால் நிலத்தை உழுதுள்ளனர்.

உழவுத்தொழிலில் ஆண், பெண் இருபாலரும் ஈடுப்பட்டுள்ளனர். உழவு செய்த உழவர்கள் ஈரமான சேற்றில் விதை விதைத்து[24], கணவனும் மனைவியும் நாற்று நடுவதற்கான பணிகளைச் செய்துள்ளனர்[25]. களையாக இருந்த ஆம்பல் முதலானவை எடுக்கப்பட்டுள்ளது[26].

விளைந்த நெல்லை அரிந்து களத்திற்குக் கொண்டு சேர்த்துப் பின்னர்[27], நெல் அறுவடையின் இறுதி வேலையாக நெல்லை கடாவிட்டுத் தூற்றியுள்ளனர்[28].

பெரும்பாணாற்றுப்படை மருத நிலத்தில் நாற்றுநடுதல், நெல் விளைவித்தல், நெல் அறுவடை ஆகிய தொழில்களைக் குறிப்பிட்டிருப்பதோடு, வலைஞர், தோப்புக்குடி உழவர் ஆகியோரின் தொழில், இருப்பிடம் ஆகியவற்றையும் சுட்டியுள்ளது. தோப்புக் குடி உழவர்கள் தென்னை, வாழை, பனை முதலானவற்றைக் கொண்ட தோப்பின் மூலமாகக் கிடைக்கக்கூடிய உணவுப் பொருட்களை வாழ்வாதாரமாகக் கொண்டிருந்தனர்[29] என்பதை அறியமுடிகிறது.

மருத நிலத்தில் உணவிற்காகவும், விற்பனைக்காகவும் மீன் பிடிக்கப்பட்டுள்ளது. மருத நிலத்தில் வயல்களில் வேலை செய்த உழவர்கள் வேலை நேரத்தில் கிடைக்கக்கூடிய மீன்களை உணவிற்காகப் பயன்படுத்திக் கொண்டுள்ளனர். மீன்களை இரவு நேரங்களில் சென்று பிடித்துவருவது பிறதிணை மக்களுக்கும் பொதுவான நேரமாக இருந்துள்ளது.

**பெரு நெற் பல் கூட்டு எருமை உழவ!**
**கண்படை பெறாஅது, தண் புலர் விடியல்,**
**கருங் கண் வராஅல் பெருந் தடி மிளிர்வையொடு**
**புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ் சோறு**
**கவர் படு கையை கழும மாந்தி (நற். 60:2-6)**

மேற்கண்ட பாடல், உழவர்கள் இரவில் தூங்காமல் வரால்மீன் பிடித்து வந்ததையும், அவற்றை விடியற் காலையில் குழம்பிலே போட்டு, அரிசிச் சோற்றுத் திரளுடன் உண்டு, அவற்றால் ஏற்பட்ட மயக்கத்துடன் தம்முடைய மனைவியோடு நாற்றுநடச் சென்றிருப்பதையும் உணர்த்துகின்றது.

பாணர்கள் உணவிற்காகவும், விற்பனைக்காகவும் மீன் பிடித்துள்ளனர். ஆண் பெண் இருவரும் மீன் பிடித்துள்ளனர். மீன், நெல்லிற்காகப் பண்டமாற்றாகப் பாண்மகளால் விற்கப்பட்டுள்ளது. அவள் மீனுக்கு ஈடாக நெல்[30], அணிகலன்[31], பயறு[32] போன்றவற்றைப் பெற்றுள்ளாள்.

மருத நிலத்தவர்களுடைய தொழில்களுள் மீன் பிடித்து விற்பது முக்கிய இடம் பெற்றுள்ளதை,

**வள்ளை நீக்கி வயமீன் முகந்து,**
**கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்**
**வேழப் பழனத்து நூழிலாட்டு (மதுரைக். 255-257)**

என்னும் பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன.

உழவின்மூலம் கிடைத்த நெல் அவர்களுடைய உணவில் இடம்பெற்றிருக் கிறது. தாங்கள் உழைக்கும் வயல்களிலும் பிற இடங்களிலும் மீன் பிடித்துள்ளனர். மீன்பிடிப்பது ஆண்களுடைய மற்றொரு பணியாக இருந்துள்ளது.

மருத நிலத்தின் வாழ்வாதாரம் வயல் என்றாலும், உழைக்கும் உழவர்களுக்கும் பாணர்களுக்கும் மீன் பிடிப்பது மற்றொரு தொழிலாகவும் இருந்துள்ளது.

## நெய்தல்

நெய்தல் திணைக்குரிய வாழ்வாதாரம் மீன்பிடித்தொழில், உப்பு விளைவித்தல் ஆகியவை. இந்த இரண்டு தொழில்களையும் பரதவர்கள் செய்துள்ளனர். கடலில் சென்று மீன்களை வேட்டையாடி வந்த பரதவர்கள் அவற்றைப் பண்டமாற்றின் மூலம் பிற மக்களுக்கு விற்று நெல்முதலான பொருட்களைப் பெற்றுள்ளனர்.

### பரதவர்

மீன் பிடிப்பது ஆண்களுடைய பணியாகவும் இருந்துள்ளது. குடும்ப அமைப்பில் தந்தை, தமையன் ஆகியோர் மீன் வேட்டைக்குச் சென்றுள்ளனர். பரதவர்கள் உப்பு உற்பத்தி செய்வதும் முக்கியத்தொழிலாக இருந்துள்ளது. பரதவர்கள் விளைவித்த உப்பை வாங்கிப் பிற பகுதிகளுக்கு வண்டிகளில் ஏற்றிச்சென்று விற்பனை செய்யும் பணியை உமணர்கள் செய்துள்ளனர்.

### பரதவப் பெண்கள்

நெய்தல் திணைப் பெண்கள் குறித்தப் பதிவுகள், கடற்கரைச் சோலைகளில் விளையாடுவதாகவும், அத்திணைக்குரிய உரிப்பொருளை எடுத்துரைப்பதாகவும் உள்ளன. இத்திணையில், ஆண்களுடைய உழைப்பினைப் போன்று பெண்களுடைய உழைப்பும் காணப்படுகின்றது. பரதவப்பெண்கள், ஆண்கள் கொண்டுவந்து சேர்த்த மீன்களை விற்றல், மீன் உணங்கச் செய்தல், உப்பு விற்றல் ஆகிய பணிகளைச் செய்துள்ளனர். ஆண்கள் உற்பத்தியில் பெற்ற பொருட்களைப் பெண்கள் பண்டமாற்று முறையில் பங்கு கொண்டு வருமானத்தை ஈட்டி நெய்தல் நில மக்களின் வாழ்வாதாரத்தைப் பெருக்கியுள்ளனர்.

### பண்டமாற்று

சங்ககால இனக்குழுக்கள் தங்கள் நிலப்பகுதியில் கிடைத்த பொருட்களைப் பண்டமாற்று வழியாக மாற்றிக்கொண்டனர். உப்பு, மீன் போன்றவை நெய்தல் நிலத்தில் கிடைத்த உணவு பொருட்களாகும். அவை நெல், பால், தயிர், மோர், நெய், மலைபடு பொருட்கள் போன்றவற்றிற்குப் பண்டமாற்றாகக் கொடுக்கப்பட்டுள்ளன. நெய்தல் திணையில் மீன் விற்றல், பக்கத்து ஊர்களுக்குச் சென்று உப்பு விற்றல் ஆகியன பெண்களுடைய பணியாகவும், வண்டிகளில் பிற ஊர்களுக்குச் சென்று உப்பு விற்றல் ஆண்களுக்குரிய பணியாகவும் காணப்படுகின்றது. மீனை விற்றுப் பண்டமாற்றாகப் பெற்றதை,

**பசுமீன் நொடுத்த வெண்நெல் மாஅத்**

**தயிர்மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே (அகம். 340:14-15)**

என்னும் பாடல்வரிகள் விளக்குகின்றன. மீனுக்கு நெல்லைப் பண்டமாற்றாகப் பெறுவது நெய்தல் நில மக்களின் விற்பனைமுறையாக இருந்துள்ளது. நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பிற்கு விலையாக நெல் பெறப்பட்டுள்ளது. இதனை,

**வயச்சுறா எறிந்த புண்தணிந்து, எந்தையும்**

**நீல்நிறப் பெருங்கடல் புக்கனன்; யாயும்**

**உப்பை மாறி வெண்ணெல் தரீஇய**

**உப்புவிளை கழனிச் சென்றனள் (குறுந். 269:3-6)**

என்ற பாடலால் அறியமுடிகிறது. இப்பாடல், தலைவியின் தாய் உப்பு விற்கச் சென்றதாக குறிப்பிட்டுள்ளது. மேலும், உப்பு விற்கும் பணியை உமணர்களின் மகளிரும் செய்துள்ளனர்.

### மீன் உணங்க வைத்தல்

மீன் வேட்டையில் கிடைத்த உபரியைப் பரதவர்கள் பதப்படுத்தி சேமித்து வைத்துள்ளனர். மீன்களைப் பதப்படுத்துகையில் அவற்றை பாதுகாப்பது பெண்களின் வேலையாக இருந்துள்ளது.

மீன் வேட்டையில் வல்ல பரதவர்கள் விடியற்காலையில் கடலிற்சென்று வலைகொண்டு மீன்களைப் பிடித்தனர். பிடித்துவந்த மீன்களைப் பறிகொண்டு வாரி எடுத்து நுண்ணிய மணற்பரப்பில் காயவைத்தனர். அவற்றின்மீது பறவைகள் வந்து படியும் கடற்கரைச் சோலையைப் பற்றி,

**நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்**

**நுணங்குமணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்,**

**பறிகொள் கொள்ளையர், மறுக உக்க**

**மீன்ஆர் குருகின் கானல்அம் பெருந்துறை (அகம். 300:1-4)**

என்னும் பாடல், கடலில் இருந்து மீன்பிடித்து வந்த பரதவர்கள், மீன்களைக் காய வைக்கும் பணியைச் செய்திருப்பதை உணர்த்துகின்றது. அவற்றின்மீது வந்து படியும் பறவைகளை விரட்டும் பணியைப் பெண்கள் செய்துள்ளனர்.

### உமணப் பெண்கள்

பரதவர்கள் விளைவித்த உப்பை உமணர்கள் வண்டிகளில் ஏற்றிச் சென்று பல ஊர்களில் விற்றுள்ளனர். அவர்களுடைய பெண்கள் செய்த தொழில்பற்றியும் சிற்சில இடங்களில் காணமுடிகின்றது. உமணர்கள் தங்களுக்குத் தேவையான பொருட்களோடு உப்பு விற்கப் பயணப்பட்டுள்ளனர். அப்பயணத்தில் பெண்களுக்கானப் பங்கு என்ன என்பது பற்றி எட்டுத்தொகை இலக்கியங்களில் காணமுடியவில்லை. ஆனால், உமணர்களின் இளைய மகள் ஊர்களில் உள்ள

மனைகளில் உப்பு விற்றச் சான்று காணப்படுகின்றது. தந்தை குன்றங்களைக் கடந்து உப்பு விற்கச் சென்றதையும் மகள் ஊர்களில் உள்ள தெருக்களில் உப்பு விற்றதையும் அறியமுடிகிறது. இதனை,

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி,**
**என்றூழ் விடர குன்றம் போகும்**
**கதழ்கோல் உமணர் காதல் மடமகள்**
**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**
**நெல்லின் நேரே வெண்கல் உப்பு' எனச்**
**சேரி விலைமாறு கூறலின் (அகம். 140:3-8)**

என்ற பாடலால் அறியலாம். பரதவர்கள் விளைவித்த உப்பினை வண்டிகளில் ஏற்றிய உமணர்கள் குன்றங்களைக் கடந்துச் சென்றனர். அவர்களுடைய இளைய மகள் சில்வளைகளுடன் கைகளை வீசிக்கொண்டு, வெண்ணிறக் கல் உப்பு நெல்லினுக்கு ஒத்த அளவினதே எனச் சேரியின்கண் பண்டமாற்றாகக் கூறிக்கொண்டுச் சென்றாள். அச்சமயம் மனையில் உள்ள நாய் வேற்றுக்குரலைக் கண்டு குரைத்து வந்தது. அதனைக் கண்டு அவள் அஞ்சியதாக மேற்கண்ட பாடல் குறிப்பிட்டுள்ளது.

உப்பு விற்கத் தழையாடையினை உடுத்திச் சென்றுள்ளாள் உமணப்பெண். சுருண்ட கூந்தல் அலைபாய தழையாடை அசைய நடந்துவந்து நெல்லும் உப்பும் நேரே விலையென்று சேரிதோறும் விற்றதை,

**வணர்சுரி முச்சி முழுதும் மன்புரள,**
**ஐதுஅகல் அல்குல் கவின்பெறப் புனைந்த**
**பல்குழைத் தொடலை ஒல்குவயின் ஒல்கி,**
**"நெல்லும் உப்பும் நேரே; ஊரீர்!**
**கொள்ளீ ரோ" எனச் சேரிதொறும் நுவலும் (அகம். 390:5-9)**

என்ற பாடல் தெரிவிப்பதோடு உமணர்களைப் போன்றே உமணப் பெண்களும் உப்பினை விற்று நெல்லைப் பெற்றதையும் உணர்த்துகின்றது.

உமணர்களுடன் உமணப் பெண்களும் வண்டியில் சென்றதைப் பத்துப்பாட்டு எடுத்தியம்புகிறது. அவ்வாறு சென்றதைச் சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை ஆகிய இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன. உணமர்கள் குடும்பத்துடன் பயணம் செய்திருப்பதை இவ்விரு இலக்கியங்களும் உணர்த்துவதோடு வண்டியோட்டும் பணியைப் பெண்கள் செய்திருப்பதைப் புலப்படுத்துகிறது.

நெய்தல் திணையில் ஆண்கள் உற்பத்தி, வேட்டை ஆகிய தொழில் செய்து தங்களுடைய வாழ்வாதாரத்திற்கானப் பொருட்களைப் பெருக்கியுள்ளனர். பெண்கள் பண்டமாற்று விற்பனையை மேற்கொண்டு உணவிற்குத் தேவையான பிறபொருட்களை ஈட்டும் தொழில் செய்துள்ளனர். நெய்தல் திணையின் வாழ்வாதாரம் ஆண், பெண் இருவரையும் சார்ந்ததாகக் காணப்படுகின்றது.

**பாலை**

சங்க இலக்கியத்தில் பாலைத் திணைக்குரிய மக்கள் பற்றிய செய்திகள் பாலை நிலத்தை எடுத்துரைக்கும் போக்கிலேயே அமைந்துள்ளன. அவற்றிலிருந்து அவர்களுடைய வாழ்க்கையைத் திரட்ட வேண்டியுள்ளது. இத்தகைய பாலைப் பாடல்கள் பற்றியும், மக்கள் வாழ்க்கையைப் பற்றியும் ராஜ் கௌதமன் அவர்கள், ஏதோ ஒரு தொல்மரபுக்கு உட்பட்டுப் புலவர் மரபானது, பாலைப் பாடல்களில் பிரிவுத் துயரம், சுரம், கவலை, அத்தம், காடு, உச்சிவெய்யில், நீர் வறட்சி, ஆநிரை கவர்ந்த போர், பிணம், குருதி, பறந்தலை, பதுக்கை, நடுகல், பருந்து, கழுகு, செந்நாய், வேடர்கள், வழிப்பறி, கொலை, பசுமை தீர்ந்த பாழ் ஆகியவற்றைப் புனைந்துரைத்துள்ளது. எனவே வேடர், கள்வர், மறவர், மழவர், வில் ஏர் உழவர் பற்றிய எடுத்துரைப்புக்கள் எல்லாம் ஓர் இலக்கிய சம்பிரதாயத்தை முன்னிட்டே புனையப்பட்டன என்பதை நினைவிற் கொள்ளவேண்டும்[33] என்று குறிப்பிடுகிறார்.

பாலைத் திணைக்குரிய தொழிலாகக் கொள்ளையடிப்பது என்று இலக்கணமரபு கட்டமைத்துள்ளது. ஆனால், சங்க இலக்கியத்தின் வழியாக இந்நிலத்திற்குரிய மக்களாக அறியப்படுகின்ற வேடர், எயினர், மறவர், மழவர் போன்றோர்களுக்கு மேற்சொன்ன ஒரே தொழில் மட்டும் காணப்படவில்லை. அவர்கள் வேட்டை யாடியுள்ளனர், ஆநிரைகளைக் கவர்ந்துள்ளனர், வழிப்பறி என்னும் கொள்ளையில் ஈடுபட்டுள்ளனர். அத்தகைய தொழில்களே அம்மக்களுடைய வாழ்வாதாரமாக விளங்குகின்றன.

**ஆண்கள்**

பாலைத்திணையில் ஆண்கள் வேட்டை, ஆநிரை கவர்தல், வழிப்பறி கொள்ளை ஆகிய தொழில்களில் ஈடுபட்டுள்ளனர். இத்தொழில்கள் மூலமாக இறைச்சியையும், பல பொருட்களையும் பெற்றுள்ளனர். இவர்களுடைய தொழில் உணவு ஈட்டுவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்துள்ளது. இத்தகைய உணவு குழுக்களிடையே பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது.

**பெண்கள்**

பாலை நிலப் பெண்கள் உணவு சேகரித்தலில் சிறந்திருந்தனர். பெண்கள் உணவு சேகரிப்பது தொன்மையின் தொடர்ச்சி என்றாலும் குறிஞ்சி தவிர்த்துப் பிற

திணைகளில் அத்தொடர்ச்சியினைக் காணமுடியவில்லை. இப்பெண்களை அவர்கள் வாழ்ந்த நிலம், உணவு சேகரிப்பில் தொடர்ந்து ஈடுபடவைத்துள்ளது. வேட்டையில் உணவு சேகரித்தல், இயற்கை உணவு சேகரித்தல் எனும் இரு நிலைகளில் அவர்களுடைய சேமிப்பு அமைந்துள்ளது. வேட்டையில் கிடைத்த இறைச்சியைப் பதப்படுத்திக் காயவைத்தல் இப்பெண்களிடையே காணப்பட்ட மற்றொரு வகையான சேமிப்பு முறையாக இருந்துள்ளது. மேலும், உணவு உற்பத்தியில்லாத இம்மக்கள் தங்களுக்குக் கிடைத்த இறைச்சியைக் குழுவில் உள்ள பலருக்கும் பகிர்ந்து அளிக்கும் தன்மைக் கொண்டவர்களாக விளங்கியுள்ளனர். இத்தகைய பகிர்வைக் குழுவில் உள்ள அனைவரும் கடைப்பிடித்திருப்பதினால், குழு உறுப்பினர்களால் தொடர்ந்து உணவு கிடைக்கச் செய்யும் வாய்ப்பை ஏற்படுத்தியிருப்பது வெளிப்படுகிறது. இவை மறைமுகமான எதிர்காலச் சேமிப்புமுறையாகக் காணப்படுகிறது. இவ்வாறு எதிர்காலத்திற்குத் தேவையான உணவைச் சேமிப்பதால் இது ஒருவகையான உணவு சேமிப்பு முறையாகவும் இருந்துள்ளது.

மேற்கண்டவற்றிலிருந்து திணை மக்களுடைய வாழ்வாதாரமாக, குறிஞ்சியில் உணவு சேகரிப்பு, உணவு உற்பத்தியும், முல்லையில் கால்நடை வளர்ப்பு, புன்செய் வேளாண்மையும், மருதத்தில் உழவு, மீன்பிடித்தொழிலும், நெய்தலில் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், அவற்றை விற்பனை செய்வதிலும், பாலையில் வேட்டை, வழிப்பறிக் கொள்ளை, ஆநிரை கவர்தலும் இருந்திருக்கிறது. மக்களுடைய தேவை அடிப்படையில் உணவை நோக்கிச் செயல்படுவது என்பது ஐந்திணைக்கும் பொதுவாக இருப்பினும் ஒவ்வொரு திணை மக்களுடைய வாழ்க்கையும் மனித சமூகம் அடைந்த பரிணாம வளர்ச்சியை எடுத்தியம்புவதாக அமைந்திருக்கிறது. குறிஞ்சி, நெய்தல், பாலை ஆகிய திணைமக்களுடைய வாழ்வாதாரம் உணவை நோக்கிச் செயல்படுவதாகவும், முல்லை, மருதம் ஆகிய திணைமக்களுடைய வாழ்வாதாரம் உடைமையாக்கத்தினை அடிப்படையாகக் கொண்டிருப்பதையும் அறியமுடிகிறது.

### இனக்குழு வாழ்வாதாரம் - போர் நடவடிக்கைகள்

இனக்குழு வாழ்க்கையின் எச்சங்களோடு வாழ்ந்த சீறூர் மன்னர்கள், குறுநில மன்னர்களின் வாழ்வாதாரத்தில் உணவு உற்பத்தியோடு போர் நடவடிக்கைகளும் இணைந்திருந்தன. இச்சமூக அமைப்பில் வெவ்வேறு தொழில்களைச் செய்யும் குழுக்கள் காணப்பட்டனர். அவரவர்கள் வாழ்ந்த இயற்கைச் சூழல்களில் கிடைப்பனவற்றை உற்பத்தி செய்யும் போக்குக் காணப்பட்டது. இனக்குழுத் தலைவர்களும், குறுநில மன்னர்களும் தங்களது குழுக்கள் புழங்கும் வெளிகளை வரையறுத்துக் கொண்டனர். பெரும்பாலும் இந்த

வெளி என்பது உணவுப் பொருட்களின் உற்பத்தி சார்ந்த களங்களாகவே அமைந்தன எனலாம். இவ்வெளிகளைப் பிற குழுக்களின் ஆக்கிரமிப்புகளிலிருந்தும், உற்பத்திக்குப் பயன்படுத்துவதிலிருந்து பாதுகாப்பதும், தங்களது வெளிகளை விரித்துக்கொள்வதும் அவர்களது நோக்கங்களாக இருந்தன. எனவே இவை தொடர்பான மீறல்கள், சண்டைகளாகவும், போர்களாகவும் நீடித்தன[34]. என்னும் ஸ்டீபன் அவர்களுடைய கூற்று, இம்மன்னர்களுடைய போர்நடவடிக்கைகள் நில அமைப்பை விரிவாக்கம் செய்வதாகவும் அமைந்திருப்பதை எடுத்துரைக்கிறது. இத்தகைய இனக்குழுக்களுடைய போர் நடவடிக்கைகள் புறப்பாடல்களை அடிப்படையாகக் கொண்டு பின்வருமாறு பகுத்துக் கொள்ளப்படுகிறது.

1. சீறூர் மன்னர் - போர்கள்
2. குறுநில மன்னர்- போர்கள்

## சீறூர் மன்னர்கள்

சீறூர் மன்னர் வாழ்ந்த நிலம் புன்புலம் என்று அழைக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் புன்புலம் என்று சுட்டப்பட்டுள்ள பகுதி காடும் காடு சார்ந்த நிலப்பகுதியும் கொண்ட முல்லை நில அமைப்பாக உள்ளது. முல்லைத்திணையில் கால்நடைப் பராமரிப்பும், வரகு, தினை, கொள், அவரை போன்ற தானியங்களை விளைவிக்கும் புன்புல வேளாண்மையும் அடிப்படைத் தொழில்களாகக் கூறப்பட்டுள்ளன. புறத்திணையில் சீறூர் மக்களுடைய வாழ்க்கையை வல்லாண்முல்லை, மூதின்முல்லை ஆகிய துறைகளும் வெட்சி, கரந்தை ஆகிய திணைகளும் எடுத்துரைத்துள்ளன. இந்த அடிப்படையில் இச்சமுதாயத்தைக் கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாய்க் கொண்ட சமுதாயம் புன்செய்நில வேளாண்மையை அடிப்படையாய்க் கொண்ட சமுதாயம் என இரண்டாய்ப் பாகுபடுத்தலாம்[35] என்று குறிப்பிட்டுள்ளார் மாதையன். இவற்றோடு வேட்டையாடி உண்ணும் பழக்கமும் இம்மக்களிடம் இருந்துள்ளது.

## சீறூர் வாழ்வாதாரம்

சீறூர் நிலம் வன்புலம்[36], வன்புலச் சீறூர்[37], கரம்பைச் சீறூர்[38], என்று அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. அத்தகைய நிலப்பகுதியில் வாழ்ந்த குடிகளோடு கூடிய ஊர், புன்புலம் தழீஇய அம்குடிச் சீறூர்[39] என்று அழைக்கப்பட்டுள்ளது. மேலும், அப்பகுதியின் பொருளாதாரம் அல்லது வாழ்வாதாரம், புன்புலச் சீறூர் நெல் விளையாதே[40] என்றும், வரகும் தினையுமே அங்கு விளையும் என்றும் சீறூர் இயல்பு குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தகைய பகுதியில் வாழ்ந்த மக்கள் சமூகம் புன்செய் வேளாண்மையையும், ஆநிரை கவர்தலையும், அதன் தலைவன் வேந்துவிடு தொழிலையும் வாழ்வாதாரமாகக் கொண்டிருந்ததைப் புறப்பாடல்கள்

மூலம் அறிந்துகொள்ளமுடிகிறது. இவ்வழிகளில் பெற்ற பொருட்கள், அச்சமூகத்தின் பொது துய்ப்பிற்காகவும் அவர்களை நாடி வருவோருக்குமே பகிர்ந்து கொடுக்கப்பட்டுள்ளன.

**புன்செய் வேளாண்மை**

புன்புலத்தைக் கொண்ட இப்பகுதியில் வரகு, தினை, கொள், அவரை ஆகிய உணவு பொருட்கள் மட்டுமே விளைபொருட்களாக இருந்ததை,

**கருங்கால் வரகே, இருங்கதிர்த் தினையே,**
**சிறுகொடிக் கொள்ளே, பொறிகிளர் அவரையொடு,**
**இந்நான்கு அல்லது உணாவும் இல்லை (புறம். 335:4-6)**

என்ற பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன. அங்கு வரகும், தினையும் விளையும் நெல் விளையாது[41] என்பதால் அப்பகுதி வேந்தர்களால் விரும்பப்படாமல் இருந்துள்ளது. இத்தகைய நிலத்திற்குரிய வேளாண்மை இரண்டு நிலைகளில் காணப்படுகின்றது. ஒன்று அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ள கொல்லை உழவு (உழவர்), மற்றொன்று புறப்பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ள சீறூர் தலைவர்கள் வாழ்ந்த பகுதிகளில் செய்த வேளாண்மை. அகப்பாடல்களில் பாடப்பட்டுள்ள கொல்லை உழவில், உழவர், உழும் முறை, விதைப்பு, களையெடுத்தல் முதலான செய்திகளே இடம்பெற்றுள்ளன. புறப்பாடல்களில் காணப்படும் வேளாண்மை, மேற்கண்ட செய்திகளோடு இணைந்திருப்பதோடு அங்கு விளைந்த பண்டங்கள் பயன்படுத்தபட்ட முறைபற்றி எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. சீறூரில் கிடைத்த விளைபொருட்கள் அனைத்தும் ஊர்ப்பொதுவாக இருந்துள்ளது. உணவு உற்பத்தி குறைவாக இருந்த காரணத்தினால் தானியப் பற்றாக்குறை ஏற்பட்டுள்ளது. இதனால் கடன்வாங்குவது, விதைத் தினையை உண்பது போன்ற வறுமை நிலையில் அம்மக்கள் வாழ்ந்துள்ளனர்.

இளையோரால் அடித்துத் தூற்றப்பட்ட வரகினைக் கடன்காரர்களுக்குக் கொடுத்தப் பின்னர், எஞ்சிய வரகினைப் பசியால் வாடிய பாணர்கள் பெற்று உண்டு தம் வாயிலின் நீங்கிச் செல்லுவர். அதனால் தம் சுற்றத்தாருடைய வறுமையைப் போக்க புல்லியோர்முன் தான் முன்பு கடன் பெற்றுக் கொடுத்தமையைக் கூறி, வரகினைக் கடனாக இரந்து வேண்டுகின்ற வாழ்க்கையையுடையவன்[42] சீறூர் மன்னன் என்பதை,

**வரகும் தினையும் உள்ளவை எல்லாம்**
**இரவல் மாக்களுக்கு ஈயத் தொலைந்தன (புறம். 328:3-4)**
**வரகும் தினையும் உள்ளவை எல்லாம்**
**இரவல் மாக்கள் உணக்கொளத் தீர்ந்தென,**
**குறித்து மாறு எதிர்ப்பை பெறாஅமையின்,**

குரல்உணங்கு விதைத்தினை உரல்வாய்ப் பெய்து (புறம். 333:9-12)

என்ற பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

**கால்நடைச் சமூகம் - வெட்சி கரந்தைப் போர்கள்**

கால்நடைச் சமூகம்சார்ந்த வெட்சி கரந்தைப் போர்களை அகத்திணையில் பாலைத் திணைப்பாடல்களும் புறத்திணையில் புறநானூற்றுப் பாடல்களும் விவரித்துள்ளன. அகத்திணையில் மழவர், மறவர், வடுகர் போன்றோர் ஆநிரை கவர்பவர்களாகவும் கரந்தை வீரர்கள் அதனை மீட்பவர்களாகவும் காட்டப்பட்டுள்ளனர். ஆநிரை கவர்ந்தவர்களும் மீட்டவர்களும் வெற்றியைக் கொண்டாடும் விதமாக 'உண்டாட்டு' நிகழ்த்தியுள்ளனர். தன்னுடைய உயிரைப் பொருட்படுத்தாமல் போரிட்டு இனத்தினுடைய கால்நடைகளை மீட்டவர்கள் உண்டாட்டிலும், அப்போரில் இறந்தவர்களுக்கு நடுகல் வழிபாடும் வீரர்களை அங்கீகரிக்கும் நடைமுறையாக இருந்துள்ளன[43].

இத்தகைய போர்கள் மூலமாகப்பெற்ற ஆநிரைகளை, குழுக்கள் எவ்வாறு பயன்படுத்திக்கொண்டனர் என்பதைப் பின்வரும் புறநானூற்றுப் பதிவுகள் எடுத்துரைத்துள்ளன.

1. பிற பகுதியிலிருந்து கவர்ந்துவரப்பட்டப் பசுக்கள் வெள்ளிதோன்றும் முன்னரும், பானையில் மத்துறு தயிரின் ஒலி கேட்பதற்கு முன்னரும், பிறருக்குக் கொடுக்கப்பட்டது (புறம். 257).
2. பகைப்புலத்திலிருந்து கொண்டுவரப்பட்ட பசுக்கூட்டம் காந்தாரம் என்னும் மதுவிற்கு விலையாகக் கொடுக்கப்பட்டன (புறம். 258).

மேற்கண்ட பதிவுகளின்படி கவரப்பட்ட ஆநிரைகள் குழுவிற்குப் பகிர்ந்தளிக்கப்பட்டும், மதுவிற்காகவும் பயன்படுத்தப்பட்டிருப்பதை அறியமுடிகிறது.

சமூகத்தின் வாழ்வாதாரமாக விளங்கிய கால்நடைகளுக்காக நடந்த வெட்சி, கரந்தைப் போர்கள் அதனை மேற்கொண்ட குழுக்களின் வாழ்க்கை முறையை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன. அக்கால்நடைகளைக் கவர்ந்தவர்கள் தம்முடைய குழுக்களுக்கு அவற்றைப் பகிர்ந்தளித்தனர், கள்ளிற்காக விற்றனர் என்பதிலிருந்து இப்போர் வெட்சியாருக்கும் கரந்தையாருக்கும் கால்நடைகள் வாழ்வாதராமாக இருப்பதைப் புலப்படுத்துகின்றது.

**வேந்துவிடுதொழில்**

உணவு பற்றாக்குறையாக வாழ்ந்த புன்செய் வேளாண்மைச் சமூகம் அதன் தேவையை நிறைவுசெய்யும் பொருட்டு வேந்துவிடுதொழிலுக்குச் செல்லவைத்தது. இனக்குழுக்கள் முற்றிலும் அழிக்கப்பட்ட பின்னர், இனக்குழுத் தலைவர்கள் அரசர்களுக்குக் கீழ்ப்பட்ட படைத்தலைவர்கள், அதிகாரிகள் ஆயினர். வேறு சிலர்

தம்மை நாடி வரும் வேந்தர்க்குப் படை, உதவி, அதற்குரிய ஊதியம் பெற்று வாழ்ந்தனர். இதனை, சீறூர் மன்னன் பரிசிலர்க்குச் செல்வம் தந்ததோடு வேந்தர்க்குக் குறைவில்லாத வெற்றியையும் தந்தான்[44] என்று வேந்துவிடு தொழில்பற்றிக் குறிப்பிடுகிறார் கா. சுப்பிரமணியன். இத்தகைய சீறூர் மன்னனின் வாழ்க்கையைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது புறநானூறு.

வன்புலச் சீறூரில் ஒருவனாக வாழும்[45], காட்டொடு மிடைந்த சீயா முன்றிலில்[46] முதல் நாள் குடித்த கள்ளின் மயக்கத்தால் துயில் கொள்பவனே எம்முடைய தலைவன். அவன் நேற்றுவந்த விருந்தினருக்காக வாளையும், இன்றைக்கு யாழினையும் ஈடாக வைத்தவன்[47] இத்தகைய நிலையை மாற்ற வேந்துவிடு தொழிலுக்குச் சென்று வந்தான். வேந்துவிடு போருக்குச் சென்று வந்தபின்பு உறங்கப் பாய் இல்லாமல் உறங்குகின்றான். அங்குப் பெற்ற பொருளைத் தனக்கென வைத்துக் கொள்ளாமல் பரிசிலர்க்கே எந்நாளும் தருபவன்[48] சீறூர் மன்னன் என்பதை,

**அருஞ்சமம் ததையத் தாக்கி, பெருஞ்சமத்து**
**அண்ணல் யானை அணிந்த**
**பொன்செய் ஓடைப் பெரும் பரிசிலனே (புறம். 326:13-15)**

**பரிசில் மன்னும், குரிசில் கொண்டதுவே (மேலது. 333:19)**

என்னும் பாடல்வரிகளால் அறியமுடிகிறது. வேந்துவிடு தொழிலில் பெற்ற பொருட்கள் பரிசிலர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்டதை மேற்காணும் பாடல்கள் குறிப்பிடுகின்றன. வேந்தர்கள் நாட்டைத் தங்களுடைய ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்ததன் காரணமாக வேந்துவிடுதொழிலும் இந்நில மக்களுக்குரிய வாழ்வாதாரமாக மாறியிருப்பதை அறியமுடிகிறது. மேலும், இதன்மூலம் இனக்குழு வாழ்க்கை முறையிலிருந்த மக்கள் கால மாற்றத்திற்கு ஏற்ப எவ்வாறு தங்களைத் தகவமைத்துக்கொண்டு வாழ்க்கைச் சூழலை மாற்றிக்கொண்டுள்ளனர் என்பதையும் அறியமுடிகிறது.

## குறுநில மன்னர்கள் - போர்கள்

இயற்கை வளம்பெற்ற மலையை ஆண்ட ஆட்சியாளர்கள் குறுநில மன்னர்களாக அறியப்பட்டுள்ளனர். இந்நிலத்தின் வாழ்வாதாரம் மலை சார்ந்த இயற்கைப் பொருட்கள், உணவு உற்பத்தி, வேட்டை போன்றவை. இங்கு வேட்டை, பாதீடு, வேளாண்மை போன்றவை குழுத்தலைவனின் கட்டளைப்படி நடந்துள்ளது. இத்தகைய வாழ்க்கையிலிருந்த தலைவர்கள் குறுநில மன்னர்களாக மாறியுள்ளனர். இந்த வேடர் இனக்குழுச் சமூகங்களிலிருந்து மட்டுமல்ல, மலைப்பகுதிகளில் வாழ்ந்த வேட்டை—விவசாய

இனக்குழுக்களிலிருந்தும் சிறுசிறு வேடர் தலைவர்களும் மலைநாட்டு மன்னர்களும் உருவானார்கள்[49] என்னும் ராஜ் கௌதமன் அவர்களுடைய கூற்றும் குறுநில மன்னர்கள் உருவான முறையைக் குறிப்பிடுகின்றது. குறுநில மன்னர்களான ஏழு வள்ளல்கள் (பாரி, ஓரி, காரி, அதியன், பேகன், ஆய், நள்ளி), இளவிச்சிக்கோ, கொண்கானங்கிழான், ஏறைக்கோன், குமணன், பிட்டங்கொற்றன் போன்றோர் குறுநில மன்னர்களாக மலைப்பகுதிகளை ஆட்சி செய்துவந்துள்ளனர். வேந்தர்கள் இம்மன்னர்களின் நிலப்பரப்பைக் கவரும் வகையில் இவர்களுடைய ஆட்சி இருந்துள்ளது. இவர்கள் கொடைச்சிறப்பாலும், வீரத்தாலும் வேந்தர்களுக்கு இணையாகவும் அவர்கள் நெருங்க முடியாத நிலையிலும் இருந்துள்ளனர் என்று பெ.மாதையன் தமது இனக்குழு சமுதாயமும் அரசுருவாக்கமும் என்னும் நூலில் குறிப்பிடுகிறார்.

**குறுநில மன்னருடைய கொடையும் ஆட்சியும்**

செல்வமுடையவராய் இருக்கும்போது உணவு கொடுத்தும், இல்லாதபோது இருப்பதைப் பகிர்ந்து உடன் உண்ணும் வறியோர், அவ்வறியோர் சுற்றத்திற்குத் தலைவன் தலைமை சான்றவன் எம்தலைவன் மழவர் பெருமகனாகிய அதியன்[50] என்கிறது புறநானூற்றுப் பாடல்.

உழவர் உழாத பலன்களையுடைய பறம்பு மலையை ஆட்சிசெய்த பாரியின் கொடைத்திறத்தை பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார் கபிலர்,

**பறம்பு பாடினரதுவே; அறம் பூண்டு,**
**பாரியும், பரிசிலர் இரப்பின்,**
**'வாரேன்' என்னான், அவர் வரையன்னே (புறம்.108:4-6)**

எனும் இப்பாடலில் பரிசிலர்க்காக நாட்டையும், தன்னையும் கொடுக்கும் பாரியின் கொடைத்திறம் விளக்கப்பட்டுள்ளது. கடையெழு வள்ளல்களுடைய இறப்பிற்குப் பின்னர் அவர்களுடைய கொடைத்திறத்தைக் காத்தவனாக முதிரைமலையின் மன்னனாகிய குமணன் குறிப்பிடப்பட்டுள்ளான். குறுநிலமன்னர்கள் வேந்தர்களுடன் போரிட்டு அவர்களை எதிர்த்துள்ளனர். வேந்தர்களுக்காகவும் போரிட்டு உள்ளனர் (பிட்டங்கொற்றன் சேரமான் கோதையின் பொருட்டு போரிட்டான்)[51] .

இம்மன்னர்களுடைய வாழ்வாதாரமாக மலை, காடு ஆகியன இருந்துள்ளன. அதில் வேட்டை, உணவு உற்பத்திச்செய்யும் தொழிலோடு போரினால் வேந்துவிடு தொழில்செய்து திறையாகப் பொருட்களைப் பெற்றுள்ளனர். வேந்தர்களின் எழுச்சி காலப்போக்கில் இவர்கள் நாடுகளை இழந்து, படையினராக மாறி, வேந்தர்கள் கீழ்த் திறை செலுத்தி ஆட்சி செய்யும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளதையும் அறியமுடிகிறது.

## தொகுப்புரை

இனக்குழு மக்கள் வாழ்வாதாரம் ஐந்திணை மக்களின் நில அமைப்பிற்கு ஏற்ப மாற்றம் பெற்றுள்ளது. ஐந்திணை மக்கள் வாழ்க்கைமுறையில் காணப்படும் வேறுபாடுகளைப் போன்று அவர்களுடைய வாழ்வாதாரமும் வேறுட்பட்டுக் காணப்படுகின்றது.

குறிஞ்சி நிலத்தில் மலை, மலைசார்ந்த காட்டுப் பகுதிகளைச் சார்ந்து மக்களுடைய வாழ்வாதாரம் அமைந்துள்ளது. இயற்கை உணவுப் பொருட்கள், வேட்டையின்மூலம் பெற்ற உணவு ஆகியவை அப்பகுதிகளில் கிடைத்துள்ளது.

உணவு உற்பத்தியும் குறிஞ்சி நிலத்தில் முக்கிய வாழ்வாதாரமாக அமைந்துள்ளது. உற்பத்தி சார்ந்து தினை, ஐவனநெல் ஆகியன பயிரிடப்பட்டுள்ளன. குறிஞ்சி நிலத்தில் ஆண்களும் பெண்களும் இத்தகைய பணிகளில் ஈடுபட்டுள்ளனர். தம்முடைய பகுதியில் கிடைக்கக்கூடிய பொருட்களைப் பிற பகுதிகளில் வாழ்ந்த மக்களிடம் பண்டமாற்று முறையில் கொடுத்துப் பிற பொருட்களைப் பெற்றுள்ளனர்.

முல்லை நில மக்கள் கால்நடை வளர்ப்பும், புன்செய்வேளாண்மையும் ஆகிய தொழில்களை மேற்கொண்டுள்ளனர். கால்நடை மேய்ப்பது ஆண்களின் பணியாகவும், அவற்றிலிருந்து பெறக்கூடிய பால்படு பொருட்களைப் பண்டமாற்று முறையில் விற்பது பெண்களுடைய பணியாகவும் இருந்துள்ளது.

பெண்கள் பாலைத்தயிராக்கித் தயிர் கடைந்துப்பெற்ற மோர், நெய் போன்ற பொருட்களைப் பிறபகுதிகளுக்கு எடுத்துச்சென்று விற்று நெல், கால்நடை முதலான பொருட்களை வாங்கி வந்துள்ளனர். இத்தகைய பண்டமாற்று கால்நடை வளர்ப்பு சமூகத்தின் வாழ்வாதாரமாக விளங்குகிறது.

புன்செய் வேளாண்மையில் ஆண்களும் பெண்களும் பணி செய்துள்ளனர். அங்கு வரகு, அவரை முதலான பயிர்கள் வேளாண்மை செய்யப்பட்டுள்ளன. இதற்கு மழை நீரைப் பயன்படுத்தியுள்ளனர். இவ்வேளாண்மை முல்லை நிலத்தின் மற்றொரு வாழ்வாதாரமாக விளங்குகிறது.

மருத நிலத்தின் வாழ்வாதாரமாக நீர்வளமிக்க நெல்வயல்கள் விளங்குகின்றன. உழவில் ஆண் பெண் பணிப்பாகுபாடு காணப்படுகின்றது. உழவிற்காகக் கால்நடைகளை வளர்த்துள்ளனர். மருத வேளாண்மையின் மூலம் நெல் கிடைத்ததுபோல மீன் பிடிப்பதும் முக்கியத் தொழிலாக உள்ளது. மீன்பிடித்தொழில் உணவுத்தேவைக்காகவும், விற்பனைக்காகவும் செய்யப்பட்டுள்ளன. மீன்பிடித்து வாழும் தொழில் ஒன்றையே செய்யும் குழுவாகப் பாணர் என்னும் இனம் இருந்துள்ளது.

நெய்தல் நிலமக்கள் கடல் வளத்தை மூலாதாரமாகக் கொண்டு மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல் ஆகிய தொழில்களை வாழ்வாதாரமாகக் கொண்டுள்ளனர். மீன் பிடித்தல் ஆண்களின் பணியாகவும் அவற்றை விற்பனை செய்தல் பெண்களின் பணியாகவும் உள்ளது. பரதவர்கள் விளைவித்த உப்பை உமணர்கள் வண்டிகளில் ஏற்றிச்சென்று விற்பது அவர்களுடைய வாழ்வாதாரமாக உள்ளது. நெய்தல் திணையில் மருதத்திணையைப் போன்று பண்டமாற்று மற்றொரு வருமானத்தை ஈட்டித்தரும் வாழ்வாதாரமாக உள்ளது.

பாலை நில மக்கள் ஆநிரை கவர்தல், வழிப்பறி செய்தல், வேட்டையாடுதல் ஆகிய தொழில்கள் மூலமாகப்பெறும் வருமானத்தை வாழ்வாதாரமாகக் கொண்டுள்ளனர். வேட்டையின் மூலமாகப்பெறும் உணவு சேகரிப்பு ஆண்களாலும் பெண்களாலும் செய்யப்பட்டுள்ளன.

இனக்குழு மக்களுடைய வாழ்வாதாரம் புறப்பாடல்களில் சீறூர் மன்னர்களின் வாழ்க்கையிலிருந்தும் அறிந்துகொள்ளமுடிகிறது. இனக்குழு வாழ்க்கையின் எச்சங்களோடு காணப்படும் சீறூர் மன்னர்களின் வாழ்வாதாரம் இரண்டு வகைகளில் காணப்படுகின்றது.

கால்நடை வளர்ப்புடைய மக்கள் கால்நடைசார்ந்த வாழ்வாதாரத்தைப் பெற்றுள்ளனர். அவற்றைப் பிறபகுதியிலிருந்து கவர்ந்துச்சென்ற மக்களுக்கு அக்கால்நடைகள் ஒரு வாழ்வாதாரமாக இருந்துள்ளன.

புன்செய் வேளாண்மையில் வரகு, அவரை முதலியன பயிரிடப்பட்டுள்ளன. அவ்வுணவுப் பொருட்கள் அந்நில மக்களுக்கேயன்றி அவர்களை நாடிவரும் மக்களுக்கும் பொதுவானதாகக் காணப்படுகின்றன.

வேட்டையின்மூலம் உணவு பெறுவதும் அதுசார்ந்த காட்டுப்பகுதியும் இம்மக்களுடைய வாழ்வாதாரமாக விளங்குகின்றது. வேந்தர்களுக்காக வேந்துவிடு தொழிலில் ஈடுபட்டுப் பல பொருட்களைப்பெற்று வருவதும் சீறூர் மன்னர்களுடைய வாழ்வாதாரமாக இருந்துள்ளது.

குறுநில மன்னர்கள் வேந்தர்களுடன் போரிட்டும், அவர்களுக்கு படையுதவியும் பொருட்களைப் பெற்றதோடல்லாமல் இயற்கையான வளமுடனும் வாழ்ந்துள்ளனர்.

## குறிப்புகள்

1. புறம். 189
2. குறுந். 100
3. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.136
4. பெருமாள்சாமி,வெ., கானவர் தினைவிதைத்தல், கீற்று இணைய இதழ், ப.2
5. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும், ப.199
6. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.136
7. நற். 12,87
8. கலி. 106, பெரும். 155-167
9. பக்தவத்சல பாரதி, தமிழகப் பழங்குடிகள், ப.135
10. பெரும்பாண். 155-167
11. கலித். 106,108,109,110
12. மேலது. 108
13. மேலது. 111,116
14. மேலது. 116
15. மேலது. 108
16. பெருமாள்சாமி,வெ., தந்தைவழிச் சமூகம், கீற்று, இணைய இதழ், ப.2
17. குறுந். 221
18. பதிற். 22:15
19. மேலது. 77:10-11
20. குறுந். 117
21. நற். 266
22. மேலது. 192
23. பெருமாள்சாமி,வெ., தந்தைவழிச் சமூகம், கீற்று, இணைய இதழ், ப.1
24. நற். 210
25. மேலது. 60
26. குறுந். 178
27. அகம். 236
28. மேலது. 366
29. பெரும்பாண். 351-362
30. ஐங். 48,49
31. அகம். 126
32. ஐங். 47

33. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும், ப. 124

34. ஸ்டீபன். ஞா, தொல்காப்பியமும் இனவரைவியல் கவிதையியலும், பக். 19-20

35. மாதையன், பெ., சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப. 27

36. புறம். 321:7, 322:6

37. மேலது. 314:4

38. மேலது. 285

39. மேலது. 324:8

40. மேலது. 328:2

41. மேலது. 328

42. மேலது. 327

43. மேலது. 260, 261, 263, 270

44. சுப்பிரமணியன், கா., சங்ககால சமுதாயம், ப. 60-61

45. புறம். 314

46. மேலது. 316:2

47. மேலது. 316

48. மேலது. 320, 334

49. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும், ப. 103

50. புறம். 95

51. மேலது. 171

கலைகள் மக்களின் பொழுது போக்கிற்காகப் பயன்பட்டன. தங்களுடைய வேலைக்களைப்பைப் போக்கிக்கொள்ளவும், இனத்தின் அடையாளமாகவும் கலைகள் விளங்கின. சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள கலைகள் பெரும்பான்மை நிகழ்த்துக் கலைகளாகவே உள்ளன. சங்க இலக்கியத்தில் உள்ள நிகழ்த்துகலைஞர்களைத் தொழில்முறை அல்லாத கலைஞர்கள் என்றும் தொழில்முறைக் கலைஞர்கள் என்றும் இரண்டு வகையாகப் பிரித்துரைத்துள்ளார் காந்திதாசன்[1]. இத்தகைய பிரிவை அடிப்படையாகக் கொண்டு இனக்குழு கலைமரபு பின்வருமாறு பகுத்துக்கொள்ளப்படுகிறது.

ஐந்திணை மக்களின் கலை மரபு

ஆற்றுப்படை கலைஞர்களின் கலை மரபு

## ஐந்திணை மக்களின் கலை மரபு

இனக்குழு வாழ்க்கையில் கலைகளை நிகழ்த்துவதற்கென்று தனியாகத் தொழில் முறைக் கலைஞர்கள் என்னும் பிரிவு இல்லை. இசை, கூத்து போன்ற நிகழ்ச்சிகள் அவர்களுடைய அன்றாட வாழ்வில் நடைபெறும் நிகழ்வாகவே இருந்திருக்கின்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய திணைகளில் வேளாண்மை, சடங்கு, வேட்டை, உண்டாட்டு முதலான சமயங்களில் இசை, கூத்து முதலான கலைகளை மக்கள் நிகழ்த்தியுள்ளனர். இம்மக்களின் கலைமரபு இரண்டு வகைகளில் நோக்கப்படுகிறது. அவை,

1. இசை
2. கூத்து

என்பன.

### இசை

சங்ககால மக்களின் வாழ்க்கையில் இசை முக்கிய இடம்பெற்றுள்ளது. பல்வேறு இசைக்கருவிகளை இசைத்த மக்கள் பொழுதுபோக்கிற்காக மட்டுமல்லாமல் வேளாண்மை, வேட்டை, சடங்கு போன்ற நிகழ்வுகளின்போதும் இசைக் கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருவிகள் தோல், நரம்பு, மூங்கில் போன்ற பொருட்களால் உருவாக்கப்பட்டுள்ளன. வேளாண்மையில் பயிர்ப் பாதுகாப்பிற்காகவும், அறுவடையின்போதும் இசைக்கருவிகள் இசைக்கப்பட்டுள்ளன. வேட்டையில் காடுகளில் வழிதவறியவர்களை அழைப்பதற்காகவும், வேட்டையில் கிடைத்த வெற்றியைக் கொண்டாடும்போதும் இசைக்கருவிகள் இசைக்கப்பட்டுள்ளன. திணைமக்கள்

வாழ்க்கையில் இசை, கூத்து முதலனாவை தினசரி நிகழ்வாக விளங்கிய நிலையில் அவர்கள் வாழ்ந்த இருப்பிடங்களிலும் இசைக்கருவிகள் இசைக்கப்பட்டுள்ளன.

### குறிஞ்சி

குறிஞ்சித்திணையில் வேளாண்மை, வேட்டை, இருப்பிடங்களில் நடைபெற்ற நிகழ்ச்சிகளில் இசைக்கருவிகள் இசைக்கப்பட்டுள்ளன.

### வேளாண்மை

குறிஞ்சித்திணை வேளாண்மையாகிய தினைக்காவலின்போதும், தினை அறுவடையின் போதும் இசைக்கருவிகள் இசைக்கப்பட்டுள்ளன.

### தினைக்காவல்

தட்டை, தழல், குளிர் போன்ற கருவிகள் தினைக்கதிரைக் கவரவரும் கிளிகளை விரட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இக்கருவிகளைப் பெண்கள் தினைக் காவலின்போது பயன்படுத்தியுள்ளனர். தொண்டகச் சிறுபறை, கிணை முதலான கருவிகளையும் தினைக்காவலில் பயன்படுத்தியுள்ளனர்.

### தட்டை

தட்டை என்னும் கிளிகடியும் கருவி மூங்கிலால் செய்யப்பட்டுள்ளது. மூங்கிலால் செய்த தட்டையைப் புடைத்த மகளிரின் ஆரவாரம் மலைகளின் பக்கங்களில் ஒலித்தது[2]. தட்டை, மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளிடம் நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாகுமாறு ஒன்றில் தட்டும் கருவி என்பது உரை வழியாக அறியமுடிகிறது. மூங்கிலால் தட்டை செய்யப்பட்டதை,

**அமைஅறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின் (அகம். 388:2)**

என்ற பாடல்வரியால் அறியமுடிகிறது. தினைப்புனத்தில் தட்டை ஒலிக்கச் செய்ததினால் அருகில் உள்ள நெல்வயல்களில் தங்கிய பறவைகளும் பறந்துச் சென்றதாகப் புறநானூறு[3] குறிப்பிடுகிறது.

### தழல்

தினைப்புனத்தில் கிளிகளை விரட்டும் கருவிகளில் ஒன்று. இவற்றைப் பரண் மீதிருந்து பெண்கள் பயன்படுத்தியுள்ளனர். கையால் சுற்றிய காலத்து அதில் தோன்றும் ஓசையால் கிளிகள் விரட்டப்பட்டுள்ளன[4].

### குளிர்

தட்டை, தழல் போன்று தினைக்காவலுக்காகக் குளிர் என்னும் கருவி இசைக்கப்பட்டுள்ளது[5]. கொடிச்சியின் கிளிகடியும் இசையில் மயங்கிய கிளிகள், அவள்

கையிலுள்ள குளிர் என்னும் கருவி, கேட்பதற்கு இனிய தாளத்தை உடையது என்று புனத்தினை விட்டு நீங்காமல் நின்றதை,

**படுகிளி கடியும் கொடிச்சி கைக்குளிரே**

**இசையின் இசையா இன்பாணித்தே;**

**கிளி, 'அவள் விளி' என, விழல் ஓவாவே; (குறுந். 291:2-4)**

என்னும் பாடல்வரிகளால் அறியமுடிகிறது.

**ஏனல், உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே (குறுந். 360:5-6)**

**குளிர் படு கையள் கொடிச்சி (நற். 306:3)**

என்ற வரிகளால் 'குளிர் என்னும் கருவியைக் கொடிச்சி பயன்படுத்தியிருப்பது புலப்படுகின்றது.

குறிஞ்சி நிலப் பெண்கள் பாடல்களைப் பாடிக் கிளிகளை விரட்டியுள்ளனர். இதனை,

**புலர்குரல் ஏனல், கிளிகடி பாடலும் (அகம். 118:12-13)**

என்ற குறிப்பால் அறியலாம்.

கொடிச்சி மலைப்பக்கத்தில் குறிஞ்சிப்பண் பாடியதைக் கேட்ட யானை, தான் உண்ண விரும்பிய தினைக்கதிரை உண்ணவில்லை; நின்ற நிலையினின்றும் பெயரவில்லை; உறங்காதத் தன் கண்களில் உறக்கம் வரப்பெற்று அவ்விடத்திலேயே விரைந்து உறக்கம் கொண்டது. இதனை,

**ஒலியல் வார் மயிர் உளரினள், கொடிச்சி**

**பெருவரை மருங்கில் குறிஞ்சி பாட;**

**குரலும் கொள்ளாது, நிலையினும் பெயராது,**

**படாஅப் பைங் கண் பாடு பெற்று, ஓய்யென**

**மறம் புகல் மழ களிறு உறங்கும் நாடன் (அகம். 102:5-9)**

எனும் பாடல் தெரிவிக்கின்றது. குறிஞ்சிப் பண்ணின் இனிமையையும் அவற்றைப்பாடும் கொடிச்சியின் குரல்வளத்தையும் இப்பாடல் மூலம் அறியமுடிகிறது.

குறவர்களுடைய இளமைந்தர்கள் மலைப்பக்கங்களில் இசைத்தத் தொண்டகப் பறையினைக் கேட்டு தினைகளைக் கவரவந்த கிளிகள் அஞ்சி ஓடியுள்ளன[6]. தினைக் கொல்லையில் புகுந்த யானையைவிரட்டக் கிணைப்பறை பயன்படுத்தப்பட்டுள்ளது[7].

**அறுவடையும் இசையும்**

தினைக்கதிரை அறுவடை செய்யும்போது தொண்டகச் சிறுபறை ஒலிக்கப்பட்டது. இரவில் தினைக்கதிரை அரிவோர் இப்பறையை ஒலித்ததைக் குறுந்தொகை[8] குறிப்பிட்டுள்ளது. மேலும், சங்ககால மக்கள் இசையோடு இயைந்த

வாழ்க்கையை மேற்கொண்டவர்கள். அவர்களுடைய வாழ்க்கையில் நடந்த அனைத்துச் செயல்பாடுகளிலும் இசைக்கு முக்கியப்பங்கு இருந்துள்ளது. குறிஞ்சி நில மக்கள் அறுவடையிலும் இசைக்கருவிகளை இசைத்திருப்பதிலிருந்து வேளாண்மையில் இசைக்கருவிகளின் பயன்பாடு குறித்தறிய முடிகிறது.

**சிறுதினை விளைந்த வியன்கண் இரும்புனத்து**

**இரவு அரிவாரின், தொண்டகச் சிறுபறை**

**பானாள் யாமத்தும் கறங்கும் (குறுந். 375:3-5)**

இரவுப்பொழுதில் தினையின் தாள்களை அரிபவர் முழங்குகின்ற தொண்டகப்பறையின் ஓசையானது சிறுகுடியில் பக்கங்கள்தோறும் கேட்கும்.

**வேட்டை**

காட்டில் வேட்டைக்குச் சென்ற வேடர்கள், உடன் வந்தவர்கள் வழிதவறிச் சென்றுவிடின் அவர்களை அழைக்கக் கோடு எனப்படும் ஊதுகொம்பினை ஊதியுள்ளனர். இதனை,

**ஊதல் வேண்டுமால் சிறிதே - வேட்டொடு**

**வேய்பயில் அழுவத்துப் பிரிந்தநின்**

**நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே! (அகம். 318:13-15)**

இப்பாடல், வேட்டைக்குச் சென்று வழிதவறிய வேடர்களோடு நாய்களையும் ஊது கொம்பினால் அழைக்கும் இசைக்குறிப்பினைக் குறிப்பிட்டுள்ளது. முருகன் கோடு என்னும் இசைக்கருவியை யுடையவனாகக்[9] குறிப்பிடப்பட்டுள்ளான்.

**இருப்பிடங்கள்**

குறிஞ்சி நில மக்கள் தம்முடைய இருப்பிடங்களில் குரவைக்கூத்தாடியுள்ளனர். குரவைக்கூத்தின் போது மான் தோலால் போர்த்தப்பட்ட சிறுபறை என்னும் கருவி இசைக்கப்பட்டுள்ளது[10]. கானவர்கள் தொண்டகச் சிறுபறையினை ஒலித்து அதன் தாளத்திற்கு ஏற்ப குரவைக்கூத்தாடியதைத் திருமுருகாற்றுப்படையும்[11] ஆடவர்கள், மகளிரொடு கலந்து குரவைக் கூத்தாடும்போது தொண்டகச்சிறுபறை ஒலித்ததை[12] அகநானூறும் குறிப்பிட்டுள்ளன.

சிறுகுடிப் பாக்கத்தில், வேங்கைப்பூக்களைச் சூடி, தொண்டகப்பறையின் தாளத்திற்கு ஏற்ப ஆடவர், பெண்களுடன் கலந்து தெருக்களில் கூத்தாடுவர்.

**தேம்கமழ் இணர வேங்கை சூடி,**

**தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடு விரைஇ (அகம். 118:2-3)**

குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து,

தொண்டகச் சிறுபறைக் குரவை அயர (திருமுரு. 196-197)

**முல்லை**

மேய்ச்சல் தொழிலைச் சார்ந்திருந்த மக்கள் அத்தொழிலுக்கு ஏற்ற இசைக்கருவிகளை இசைத்துள்ளனர். குழல் அவர்களுடைய முதன்மைக் கருவியாக உள்ளது. காடு சார்ந்த நிலத்தினைப் பெற்றுள்ள இவர்கள் காட்டில் கிடைத்த பொருட்களைக் கொண்டு குழலினை உருவாக்கியுள்ளனர். முல்லைத்திணையில் மேய்ச்சலின்போது கிடைத்த ஓய்வினைப் பயன்படுத்திக் கருவிகளைச் செய்து குழலினை இசைத்ததாக அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். பறை ஏறுதழுவும் நிகழ்ச்சியை அறிவிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**பறை**

முல்லைத் திணையில் ஏறுதழுவும் நிகழ்ச்சியை மக்களுக்கு அறிவிக்கப் பறை ஒலிக்கப்பட்டுள்ளது[13]. பறை அறைந்து ஊர்ச்செய்தியைப் பொதுமக்களுக்கு அறிவித்திருக்கக்கூடிய முறையையும் அதனை பறையைக் கொண்டு செய்திருப்பதையும் கலித்தொகையின் மூலம் அறிய முடிகிறது. கால மாற்றத்தினால் முல்லைத்திணை மக்கள் ஏறுதழுவும் மரபை மேற்கொண்டனர். அதற்குத் தேவையான கருவியாகப் பறை அமைந்துள்ளது.

**குழல்**

குழல் காற்றுக் கருவியாகும். குழலில் துளைகளை உண்டாக்கி இசைத்துள்ளனர். மேய்ச்சல் தொழிலை மேற்கொண்ட கோவலர் குழல் இசைத்துள்ளனர். கால்நடைகளுக்கும் தங்களுக்குமானத் தொடர்பினைக் குழல் மூலமாகப் பரிமாறிக்கொண்டுள்ளனர். இதற்காக எந்த பயிற்சியும் இவர்கள் பெற்றதில்லை[14]. ஆநிரைகளை மேய்க்கும் போதும்[15], ஆநிரைகளைத் தண்ணீர் குடிக்க அழைக்கும் போதும், மாலை நேரங்களிலும்[16] குழல் இசைத்துள்ளனர்.

குழல் மூங்கிலால் செய்யப்பட்டுள்ளது. மேலும், கொன்றைப்பழத்தினால் ஆன குழலினையும்[17], ஆம்பலினால் ஆன குழலினையும்[18] கோவலர்கள் இசைத்துள்ளனர். பாண் சுற்றங்களும் குழலினை இசைத்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

முருகன் குழலுடையவனாகத் திருமுருகாற்றுப்படை காட்சிப்படுத்தியுள்ளது[19]. மேலும், திருப்பரங்குன்றத்து உள்ள முருகனைக் காணச் செல்வோர் மலைகளில்

கண்ட காட்சியில் குழலிசைக் கலைஞர்கள் மூங்கிலால் ஆன குழலிடத்தே விரல்களை வைத்து ஊதி இசையை அளவிடுவதாகப் பரிபாடல் குறிப்பிட்டுள்ளது[20].

முல்லைத் திணைக்குரிய இசைக்கருவியாகிய குழல் மேற்சொன்ன இவ்விரு இலக்கியக் காலங்களின்போது அக்கருவியை முருகன் வைத்திருந்ததாகவும், அதனை, அறிவுடையோரைக் கொண்டு இசைக்கப் பட்டிருப்பதிலிருந்தும் குழல், இனக்குழு மக்களிடம் இருந்து சமயத்திற்குரிய அடையாளமாகவும், கற்றறிந்தோர் இசைக்கும் கருவியாகவும் மாறியிருப்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

**கோடு**

கோவலர்கள் கோடு என்னும் ஊது கொம்பினை இசைத்து வறண்ட பாலை நிலத்தில் புகுந்த பசுக்கூட்டங்களை அழைத்துள்ளனர்[21].

**மருதம்**

மருதத்திணையில் உழவு சார்ந்து இசைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. பறவை முதலியவற்றிடமிருந்து நெற்கதிர்களைப் பாதுகாப்பதற்காக இசை இசைக்கப்பட்டுள்ளது.

**பயிர்ப் பாதுகாப்பும் இசையும்**

விளைந்த பயிர்களைப் பறவைகள் உண்ணாதிருக்கும் பொருட்டு இசைக்கருவிகளை இசைத்துள்ளனர்.

**பறை**

பறை என்பது தோல் கருவியாகும். இதனைக் கோலினைக் கொண்டும்[22], கையாலும்[23] அடித்து ஒலியெழுப்பியுள்ளனர். பறையைப் பறை, சிறுபறை, தொண்டகச் சிறுபறை என்ற பெயர்களில் குறிப்பிட்டுள்ளனர். மேலும், அது வேளாண்மையில் காவல் பொருட்டுப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

விளைந்த கதிர்களைக் கவரவரும் பறவைகளை விரட்டுவதற்காகப் பயன்படுத்தப்பட்டப் பறை அரிப்பறை என்று குறிப்பிடப்பட்டுள்ளது[24]. அரிப் பறை வினைஞர்[25], வன்கை வினைஞர் அரிபறை[26] என்ற சான்றுகளும் இதனை உறுதி செய்கின்றன.

**அறுவடையும் இசையும்**

தண்ணுமை, பறை முதலியகருவிகள் அறுவடையின் போது களைப்பினைப் போக்குவதற்காகவும், கதிர்களை உண்ணவரும் பறவைகளை விரட்டுவதற்காகவும் பயன்படுத்தப்பட்டன. நெற்கதிர்களை அறுவடைசெய்யும் உழவர்கள் தண்ணுமையை முழக்கியுள்ளனர். இதனை,

வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ

பழனப் பல் புள் இரிய, கழனி

வாங்கு சினை மருதத் தூங்குதுணர் உதிரும் ((நற். 350:1-3)

என்ற பாடல்வரியால் அறியமுடிகிறது. நெல் அரிவோர் இசைத்தத் தண்ணுமையின் ஓசையைக் கேட்டுப் பறவைகள் பயந்து பறந்து மருதமரத்தில் சென்றுத்தங்கியுள்ளன. நெல் அரிவோர் ஒலித்தத் தண்ணுமையின் ஒலியைக்கேட்டு அஞ்சிய நாரைகள் ஓடியதை அகநானூறும்[27] தேனடையிலிருந்து வண்டுகள் பிரிந்து ஓடியதைப் புறநானூறும்[28] குறிப்பிட்டுள்ளன. இந்த ஓசையைப் பயன்படுத்தி உழவர்கள் பறவைகளை விரட்டியுள்ளனர்[29]. தண்ணுமையின் ஒலியைக் கேட்டுப் பறவைகள் மட்டும் அஞ்சியோடவில்லை, சிவந்தக் கண்களையுடைய எருமைத் திரளைப் பிரிந்த கடாக்களும் அஞ்சி ஆரவாரத்துடன் விரைந்து ஓடியுள்ளன[30].

பரிபாடலில், வையை ஆற்றில் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கின் காரணமாகக் கரைகளை அடைக்கக் கரைக்காவலர்களை அழைக்கப் பறை அடிக்கப்பட்டுள்ளது[31], வெள்ளம் கரைக்காவலை உடைத்தன; உடைந்த கரைகளை அடைப்பதற்கு ஆள் எழுந்துவருக என்று கூறும் கரைக் காப்பாளரின் சொல்லோடு பறையின் ஒலியும் இணைந்து ஒலித்துள்ளது[32].

### முழவு

முழவு தோல் கருவியாகும். உழவர்கள் வையையின் வெள்ளப்பெருக்கினைக் கண்டு மகிழ்ந்து முழவினைக்கொட்டியுள்ளனர்[33].

### பாலை

பாலைத் திணையில் பாலை வழிகளிலும், ஆநிரைக் கவர்ந்த சூழல்களிலும், அவர்களுடைய இருப்பிடங்களிலும் இசைக்கருவிகளை இசைத்துள்ளனர். பாலை நில அமைப்பை விளக்கும் வகையில் பாலை நில மக்களின் உடல் அமைப்பு, பயன்படுத்திய கருவிகள், அவர்களைச் சுட்டும் பெயர்கள் அமைந்திருப்பதைப் போன்றே அவர்களுடைய இசைக்கருவிகளிலிருந்து எழும் இசையும் பிற மக்களை அச்சுருத்துவதாகவே புனையப்பட்டுள்ளது.

### தண்ணுமை

சிற்றூரில் வாழ்கின்ற மறவர்கள் ஏறுகோட்பறையாகத் தண்ணுமையை முழக்கியுள்ளனர். அவ்வொலியைக் கேட்டு ஆண் பருந்துகள் அஞ்சியோடியுள்ளன[34], ஆநிரைகளைக் கவரும் களவுத் தொழிலையுடைய மறவர், ஆநிரைகளோடு நிற்கும் ஏறுகளைப் பற்றிக் கட்டுவதற்காக, தண்ணுமையின் கண்ணை அறைந்து

முழக்கியுள்ளனர்[35]. பாலை வழிகளில் செல்லுகின்றவர்களின் நெஞ்சம் நடுங்கும்படியாக மறவர்கள் இசைத்த தண்ணுமையின் ஒலி இருந்துள்ளது[36].

### துடி

எயினர்கள், காட்டு வழியில் ஆடும்பொழுதெல்லாம் ஒலிக்கும் அகன்ற வாயினையுடைய அச்சத்தைச் செய்யும் துடியுடன் சென்றுள்ளதை,

**ஆடு தொறு கனையும் அவ் வாய்க் கடுந் துடிக்**
**கொடு வில் எயினர் கோட் சுரம் படர (அகம். 79:13-14)**

என்ற வரிகளால் அறியமுடிகிறது. மேலும், பகைநாட்டிலிருந்து ஆநிரைகளைக் கவர்ந்து வரும் வீரர்கள் துடியினை இசைத்துள்ளனர்[37].

மேற்கண்ட திணைமக்களுடைய இசை மரபானது நில அமைப்பிற்கு ஏற்ப மாற்றமடைந்து காணப்படுகிறது. அவர்களுடைய இசைக்கருவிகளும் இசைக்கும்முறையும் இசையின் தன்மையும் இசைக்கும் சூழலும் நிலத்திற்கு ஏற்ப வேறுபட்டிருப்பதை அறியமுடிகிறது.

### கூத்து

ஐந்திணை மக்கள் விழா காலங்களிலும், உண்டாட்டு முதலிய நிகழ்ச்சிகளிலும் கூத்தாடியுள்ளனர். இவ்வாறு குழுவாக இணைந்து இசையெழுப்பிப் பாடல்பாடி கூத்தாடுவது இனக்குழு பண்பாடாக இருந்துள்ளது. இத்தகைய கூத்துக்கள் அவர்களுடைய இருப்பிடங்களிலும், ஊர் மன்றங்களிலும் நடைபெற்றுள்ளன. குரவை, துணங்கை முதலியவை ஐந்திணை மக்களின் குழு நடனங்களாக இருந்துள்ளன. இதில் இனக்குழு மக்களனைவரும் பங்கு கொள்ளுவர். தனியான கலைஞர்களும் இரசிகர்களும் என்ற பிரிவில்லை. இக்கூத்தின் நோக்கம் ஏதாவது வாழ்க்கைப் பயன்பாடேயாகும். காமம், வெற்றி, செழிப்பு, மழை, வேட்டை முதலியவற்றிற்காகக் கூத்துக்கள் அமைந்தன[38]. இதுதவிர சங்க இலக்கியம் திணைமக்கள் ஆரவாரத்துடன் ஆடிப்பாடிய பதிவுகளையும் தருகின்றது.

### குரவைக் கூத்து

குரவை, திணை மக்களுக்குரிய கூத்தாகும். இக்கூத்தை மக்களே ஆடினர். ஆண்களும் பெண்களும் கைக்கோர்த்துக்கொண்டு எழுவர் அல்லது ஒன்பதின்மர் ஆடும் கூத்து. வட்டமாகக்கூடி பாட்டுப்பாடி ஆடுதல் குரவையின் முக்கிய அம்சம். சங்க இலக்கியத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய திணைமக்கள் குரவையாடிய குறிப்பு காணப்படுகின்றது. கள் அருந்திவிட்டுக் குரவை ஆடுவது திணைமக்களுடைய பொதுப்பண்பாடாக உள்ளது.

### குறிஞ்சி

குறிஞ்சி நில மக்கள் மனைகளிலும் பிற இடங்களிலும் குரவை ஆடியுள்ளனர். வேங்கைப் பூக்கள் உதிர்ந்துக்கிடக்கும் முற்றங்களில் குரவையாடிய குறிப்பைக் காணமுடிகிறது. குரவையின்போது கள்ளுண்டு மகிழ்ந்திருந்தனர். இதனை,

**குறி இறைக் குரம்பைக் குறவர் மாக்கள்**
**வாங்கு அமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து**
**வேங்கை முன்றில் குரவை அயரும் (புறம். 129:1-3)**

என்ற பாடலால் அறியமுடிகிறது. இவ்வாறே மூங்கில் குழாயில் ஊற்றி வைத்திருந்த பக்குவப்பட்ட கள்ளை குடித்துவிட்டு வேங்கைப்பூக்கள் உதிர்ந்து கிடக்கும் முற்றத்தில் குரவை ஆடியதைத் தலைவி பிற பகுதியிலிருந்து வந்த தலைவனைக் காணுமாறு குறிப்பிடுவதை,

**வாங்கு அமைப் பழுநிய நறவு உண்டு,**
**வேங்கை முன்றில் குரவையும் கண்டே (நற். 276:9-10)**

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகிறது.

வேங்கைப்பூக்கள் உதிர்ந்து கிடக்கும் பாறைகளால் ஆன முற்றத்தில், வயதில் முதிர்ச்சிப்பெற்ற மகளிரோடு குரவை ஆடியது விழாக்களத்தினைப் போன்று காட்சி அளிப்பதை,

**குறவர்**
**மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்**
**ஆர்கலி விழவுக் களம்கடுப்ப (அகம். 232:9-11)**

என்னும் அகநானூற்றுப்பாடல் சுட்டுகிறது. இப்பாடல், குழு நடனமான குரவையில் மனையில் உள்ள வயது முதிர்ந்த பெண்களும் பங்குபெற்றிருப்பதைத் தெரிவிக்கின்றது.

### குரவைக் கூத்தும் இசையும்

குரவைக் கூத்து இசையோடு நடத்தப்பட்டுள்ளது. அதனுள் குரவையாடும் நோக்கத்தினை வெளிப்படுத்தும் வகையில் பாடப்பட்டுள்ளன. மலையில் வாழுகின்ற குறவர்கள் மான்தோலால் செய்யப்பட்ட பறையைக் கொண்டு அடித்துக் குரவைக் கூத்தாடியதை,

**நறவு நாட் செய்த குறவர் தம் பெண்டிரொடு**
**மான் தோற் சிறுபறை கறங்கக் கல்லென,**
**வான் தோய் மீமிசை அயரும் குரவை (மலைபடு. 320-322)**

என்ற பாடலால் அறியமுடிகிறது.

குரவை விழாக் காலங்களில் ஆடப்பட்டதைத் திருமுருகாற்றுப்படை விவரிக்கின்றது. அதில் வில்லால் வேட்டைத் தொழிலைச் செய்யும் குறவர்கள், நீண்ட மூங்கில் குழாய்களில் ஊற்றி நெடுநாள் வைத்து முற்றிவிளைந்த தேனால் ஆன கள்ளின் தெளிவை, மலையிடத்துள்ள சிற்றூரில் வாழும் தம் சுற்றத்தாருடன் உண்டு மகிழ்ந்து, தொண்டகப் பறையை அடித்து, அதனது தாளத்திற்கு ஏற்ப குரவைக்கூத்தை ஆடினர். அதனைக் காண முருகன் எழுந்தருளியதாகப் பாடப்பட்டுள்ளது. இதனை,

**கொடுந்தொழில் வல்வில் கொலைஇய கானவர்**
**நீடுஅமை விளைந்த தேக்கண் தேறல்**
**குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து,**
**தொண்டகச் சிறுபறைக் குரவை அயர (திருமுரு. 194-197)**

என்னும் பாடல் உணர்த்துகின்றது.

வெறியாடும் வேலன் முருகனைவழிபட, மகளிர் தங்களுக்குள்ளே கைக்கோர்த்துக் கொண்டு மன்றுகள்தோறும் குரவைக் கூத்தாடியதை மதுரைக்காஞ்சி[39] குறிப்பிட்டுள்ளது.

வாழ்க்கையில் நடக்கும் நிகழ்ச்சிகளைப் பாடலுக்குரிய பொருண்மையாக்கிக் குரவையில் பாடப்பட்டுள்ளது.

**தெரியிழாய் நீயும் நின்கேளும் புணர,**
**வரை உறை தெய்வம் உவப்ப, உவந்து**
**குரவை தழீஇ யாம் ஆட, குரவையுள்**
**கொண்டு நிலை பாடிக்காண் (கலி. 39:26-29)**

என்னும் கலித்தொகைப்பாடல் பண் அமைத்துப் பாடப்பட்ட பாடலைக் குறிப்பிடுகின்றது.

**முல்லை**

முல்லை நில மக்களிடமும் குரவை அயரும் பழக்கம் இருந்துள்ளது. குரவை ஆடும் இடமாக ஊர்மன்றம் விளங்கியிருப்பதை கலித்தொகை குறிப்பிடுகிறது. ஏறுதழுவும் நிகழ்ச்சி நடந்துமுடிந்த பின்னர் குரவையாடப்பட்டுள்ளது. குரவையில் தலைவனின் கண்ணியையும், திண்ணிய தோளையும் வலிமையின் விளக்கத்தையும், மாயத்தையுடைய போர்த்தொழிலினையும், கரிய மேனியையும், அழகிய துவர் ஆடையினையும், அழகிய சிரிப்புடைய மெல்லிய தோளுடைய தலைவியையும் பாராட்டிப் புகழ்ந்து பாடியதை,

**பண்ணமைஇன் சீர்க் குரவையுள், தெண் கண்ணி,**
**திண்தோள், திறள்ஒளி, மாயப்போர், மாமேனி,**
**அம் துவர் ஆடைப் பொதுவனோடு, ஆய்ந்த**
**முறுவலாள் மென்தோள் பாராட்டி, சிறுகுடி**
**மன்றம் பரந்தது உரை! (கலி. 102:35-39)**

என்ற பாடல் தெரிவிக்கின்றது. குரவையுள் தலைவன் தலைவி பற்றிப் பாடுவதற்காக ஊர்மன்றத்தில் கூடியதைக் குறிப்பிடுகின்றது. முல்லைநில மக்களின் தொன்மையான மரபாகப் பின்பற்றப்பட்டு வரும் குரவையில் தெய்வத்தைப் பாடுவதும் உண்டு.

ஊர்மன்றத்தில் வெற்றிபெற்ற பொதுவனும் அவன் காதலியும் குரவை அயர்வர், நாமும் சென்றிடலாம் என தோழி தலைவியை அழைக்கின்றாள். ஆயர் குலத்தில் கொல்லேற்றுக்கோடு அஞ்சுவானை மறுமையும் புல்லாலே ஆயமகள் என்ற மணவழக்கத்தினை உரையாடிச் சென்ற இவர்கள் குரவைக்கூத்திலே கலந்துகொண்டு அரசன் பல்லாண்டுகாலம் வாழ தெய்வத்தைப் பாடிப் பரவினர்[40]. குரவையைக் காணும் பார்வையாளர்களாக ஊர்மக்கள் கூடியிருந்தனர் என்பதையும் அறியமுடிகிறது.

பொதுவனின் தழும்புடைய மார்பைப்பாடி ஆய மகளிர் சேர்ந்து குரவை அயர்ந்துள்ளனர். அக்குரவையில் பாண்டியனே உலகம் முழுவதையும் அடைய வேண்டும் என்று, திருமாலைப் போற்றிப் பாடியுள்ளனர்[41].

பாண்டியனுக்குப் பகைநிலம் ஏதுமின்றி எல்லாம் அவனுடைய நிலமாக வேண்டும் என்றும், எதிர்த்த பகைவர் அழிய அவர்களுடைய திறையைக் கைப்பற்றிப் பகைவரை வெல்ல வேண்டுமென்றும் ஆய்ச்சியர்கள் குரவையில் பாடல்பாடி ஆடியுள்ளனர்[42]. இத்தகைய குரவையின் மூலம் ஆயர் என்ற இனத்தினர் தம்முடைய குடிகளில் நிகழும் நிகழ்ச்சிகளில் ஆதிகால வழிபாட்டு (மரம், காடு, நீர்நிலை) முறைகளைப் பின்பற்றியிருப்பதையும், குடிக்கென்று தனிப்பட்ட நிகழ்ச்சியாக ஏறுதழுவுதல் எனும் நிகழ்வை நடத்தியிருப்பதையும் அறியமுடிகிறது. நன்மை வேண்டி செய்யப்பட்ட குரவையாட்டத்தில் மன்னன் நலம்பெறவும், அனைத்து நிலப்பகுதியும் மன்னனுக்குக் கீழ் வரவேண்டும் என்றும், வென்ற நாடுகள் திறை செலுத்தவேண்டும் என்றும் வழிபாடு நடத்தப்பட்டுள்ளது. இது அரச உருவாக்கத்தினைக் காட்டுவதோடு இனக்குழு மரபைப் பின்பற்றி வாழும் ஒருகுழு மன்னர் காலத்தில் எவ்வகையில் தங்களின் மரபுகுறையாமல் நிலைநிறுத்திக் கொண்டுள்ளது என்பதையும் உணர்த்துகிறது.

## மருதம்

மருத திணைக்கே உரிய தலைவனின் பரத்தமையைப் பெண்கள் பாடிக் குரவைக் கூத்து ஆடியுள்ளனர். இதனை,

**தெண்கட் தேறல் மாந்தி, மகளிர்**
**நுண்செயல் அம்குடம் இரீஇ, பண்பின்**
**மகிழ்நன் பரத்தைமை பாடி, அவிழ்இணர்க்**
**காஞ்சிநீழல் குரவை அயரும்** **(அகம். 336:6-9)**

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகிறது.

இப்பாடல், கள் அருந்திய நிலையில் நீர் எடுக்க வந்த பெண்கள் வேலைப்பாடமைந்த குடங்களைப் புறத்தே வைத்துவிட்டுத் தம் கணவரது பரத்தமை குறித்துப்பாடி, காஞ்சி மரத்தின் நிழலில் குரவைக் கூத்தாடியதைக் குறிப்பிட்டுள்ளது. பரத்தையர் விழாக்காலத்தில் தலைவன் காணுமாறு முழவு ஒலிக்கக் குரவைக் கூத்தாடியதை,

**முழவுஇமிழ் துணங்கை தூங்கும் விழவின்** **(அகம். 336:16)**

என்ற பாடல்வரி உணர்த்துகிறது.

வயல்களில் பயிரை அழிக்கின்ற நாரையைத் துரத்தும் மகளிர், பசிய பொன்னாற் செய்த ஆபரணங்களைக் களையாது, குரவைக்கூத்தை இரவிலும் பகலிலும் ஆடியதை பின்வரும் பதிற்றுப்பத்துப் பாடல் குறிப்பிட்டுள்ளது.

**மருதம் சான்ற மலர்தலை விளை வயல்**
**செய்யுள் நாரை ஒய்யும் மகளிர்**
**இரவும் பகலும் பாசிழை களையார்,**
**குறும்பல் யாணர்க் குரவை அயரும்** **(பதிற். 73:8-11)**

குறிஞ்சி நிலத்தில் கிளிகளை விரட்டிய பெண்களைப்போன்று மருத நிலத்தில் நாரைகளை விரட்டும் பணியைப் பெண்கள் செய்திருப்பதை மேற்கண்ட பாடல் மூலம் அறிந்துகொள்ளமுடிகிறது.

குரவைக் கூத்து அகம், புறம் இரண்டிற்கும் உரியது. வீரர்கள் ஆடிய குரவையை,

**பொலந் தோட்டுப் பைந் தும்பை**
**மிசை அலங்கு உளைய பனைப் போழ் செரீஇ,**
**சின மாந்தர் வெறிக் குரவை** **(புறம். 22:20-22)**

என்ற பாடல்வரிகள் தெரிவிக்கின்றன. இப்பாடல், தும்பையினையும் பனந்தோட்டினையும் சூடிய வீரர்கள் வெறியாடுதலாகிய குரவைக் கூத்தாடும் ஒலி கடலொலிபோல பாசறையில் கேட்டதாகக் குறிப்பிட்டுள்ளது. மேலும், இதன்மூலம் வீரர்கள் பாசறையில் தங்கியபோது குரவைக் கூத்தாடும் மரபு புலப்படுகின்றது.

**நெய்தல்**

கடற்கரையிலும், பரதவ இருப்பிடங்களிலும் குரவை ஆடப்பட்டுள்ளது. பெண்கள் தனித்தும், ஆண்களோடு சேர்ந்தும் குரவை ஆடியுள்ளனர். கடற்கரை மணற்பரப்பில் குரவை ஆடப்பட்டதைப் புறநானூறு[43] குறிப்பிட்டுள்ளது. நீலமணி நிறத்தில் கழிமுள்ளி மலர்கள் மலர்ந்திருக்கும் கடற்கரையில் பரதவ மகளிர் குரவையாடியதை மதுரைக்காஞ்சி,

**மணிப் பூ முண்டகத்து மணல்மலி கானல்**
**பரதவர் மகளிர் குரவையொடு ஒலிப்ப (மதுரைக். 96-97)**

என்னும் வரிகளால் உணர்த்துகின்றது.

**குப்பை வெண் மணல் குரவை நிறூஉம் (ஐங். 181:3)**
**கொண்டல் இடு மணல் குரவை முனையின் (அகம். 20:7)**

என்ற பாடல்வரிகளும் கடற்கரைப் பரப்பில் குரவையாடியதைக் குறிப்பிடுகின்றது. தைந்நீராடும் சடங்கில் பெண்கள் குரவைக் கூத்தாடியுள்ளதை,

**வண்டற் பாவை உண்துறைத் தரீஇ,**
**திருநுதல் மகளிர் குரவை அயரும் (அகம். 269:19-20)**

என்ற பாடல் குறிப்பிட்டுள்ளது. கடற்கரைச் சோலை சூழ்ந்த வாணனுடைய சிறுகுடியில் பெண்கள் ஊதுகொம்பு இசை முழங்க, வண்டல் விளையாட்டுக்குரிய பாவையை நீர்த்துறையில் வைத்துக் குரவைக் கூத்தாடியுள்ளனர். மேற்கண்ட பாடல்மூலம் தைந்நீராடும் சடங்கின்போது பெண்களிடம் குரவையாடும் மரபிருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.

பரதவர்கள் குரவைக் கூத்து ஆடியுள்ளனர். கடலில் சென்று மீன் பிடிக்கும் பரதவர்கள் நன்கு முற்றிய பக்குவப்பட்ட கள்ளை உண்டு குரவைக் கூத்தாடியதை,

**தெண் கடல் திரை மிசைப் பாயுந்து;**
**திண் திமில் வன் பரதவர்**
**வெப்பு உடைய மட்டு உண்டு,**
**தண் குரவைச் சீர் தூங்குந்து (புறம். 24:3-6)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

திணை மக்களுடைய வாழ்க்கையில் காமம், வெற்றி இவற்றின் வெளிப்பாடாக ஆடப்பட்ட குரவை காலமாற்றத்தால் வளர்ச்சியின்றி வீழ்ச்சியடைந்துள்ளது. அதற்கான காரணம் பற்றி கா. சிவத்தம்பி அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார். குரவையின் ஒரு பண்பு கவனத்துக்குரியதாகிறது. வீரயுகத்தில் இச்சொல் அரசர் தொடக்கம், வேட்டுவர் வரை எல்லா மக்களாலும் ஆடப்பட்ட ஆடல்களைக் குறித்தது. பிற்காலத்தில் இது வளர்ச்சியடையாத சமூகங்களிடையே மட்டும் உள்ளதாக அமைந்தது. குரவை தொழில்முறைக் கலை அல்லாத குழு நடனமானபொழுது நகர வாழ்க்கையில் எந்த இடத்தையும் பெற முடியாததாயிற்று. இவ்வாறிருக்க வளர்ச்சி குன்றிய பிரதேசங்களில் தங்கள் இனக்குழுவினதும் சமூகத்ததினதும் ஒருமைப்பாட்டினையும், ஒருங்கு சேர்தலையும் வெளிப்படுத்தியது. சமூக பொருளாதார நிலையில் வளர்ச்சியடைந்த குழுக்களிடையே குரவையின் வீழ்ச்சி பழைய இனக்குழு வாழ்க்கையின் உடைகைக் குறித்தது. நகரவாக்கத்தின் பெறுபேறு நடனம் நாடகம் இரண்டையும் குறிப்பிட்ட ஒரு குழுவினருக்கு உரியதாக்கியது[44] எனும் கூற்று இனக்குழு வாழ்க்கையின் மறைவு குரவைக் கூத்தினை வீழ்ச்சியடையச் செய்திருப்பதை வெளிப்படுத்துகிறது.

**துணங்கை**

பெண்கள், தமக்குரிய ஆடவரைத் தழுவி ஆடும் கூத்து, துணங்கை எனப்படும். வீரர்கள், விழாக்காலங்களில் விளையாட்டுப்போர் நிகழ்த்துவர். அந்நாளில், மகளிர்க்குத் தலைக்கை தந்து ஆடும் கூத்து, துணங்கை எனப்பட்டது. பரத்தையரும் துணங்கை ஆடியுள்ளனர் என்ற உரை விளக்கத்தினை அடிப்படையாகக் கொண்டு துணங்கை விழாக்காலத்தில் இசை முழங்க ஆடப்பட்டிருப்பது புலப்படுகிறது. துணங்கை கைகளைக் கோத்து ஆடப்பட்டுள்ளது[45]. மேலும், அகம், புறம் இரண்டிற்கும் இக்கூத்து பொதுவாக உள்ளது. போர்க்களத்தில் கொற்றவையும் பேய்களும், விழாக்களில் ஆண்களும் பெண்களும் ஆடியுள்ளனர்.

பரத்தையர் விழாக்காலத்தில் முழவு ஒலிக்கத் துணங்கைக் கூத்து ஆடியுள்ளனர்[46]. ஆண்களும் பெண்களுமாக சேர்ந்து ஆடியதை,

**மள்ளர் குழீஇய விழவினானும்,**
**மகளிர் தழீஇய துணங்கை யானும் (குறுந். 31:1-2)**

என்னும் பாடல் தெரிவிக்கின்றது.

**முழவு இமிழும், அகல் ஆங்கண்,**
**விழவு நின்ற வியல் மறுகின்**
**துணங்கை (மதுரைக். 327-329)**

என்னும் பாடல், முழவு முழங்குகின்ற விழா நடைபெறும் அகன்ற தெருக்களில் துணங்கை ஆடப்பட்டதைக் குறிப்பிட்டுள்ளது. பகை நாடு பாழ்படுத்தப்பட்ட நிலையில் அங்குத் துணங்கை மறக்கப்பட்டிருந்ததை,

**இலங்கு வளை மட மங்கையர்**
**துணங்கை அம் சீர்த் தழூஉ மறப்ப (மதுரைக். 159-160)**

என்னும் பாடல்வரிகள் உணர்த்துகின்றன.

வீரர்களும் பேய்களும் படைக்கு முன்னும் பின்னும் ஆடும் கூத்து, முன் தேர்க்குரவை, பின்தேர்க்குரவை என்ற புறத்துறைகளாகத் தும்பைத் திணையில் கூறப்பட்டுள்ளது. போரில் பெற்ற வெற்றியின் பொருட்டு மன்னனும் இத்துணங்கையில் ஈடுபட்டுள்ளான். இதனை,

**நிலம் பெறு திணி தோள் உயர ஓச்சி,**
**பிணம் பிறங்கு அழுவத்து, துணங்கை ஆடி, (பதிற். 45:11-12)**

**மன்பதை பெயர, அரசு களத்து ஒழிய,**
**கொன்று தோள் ஓச்சிய வென்று ஆடு துணங்கை**
**(மேலது. 77:3-4)**

என்ற வரிகளும், மன்னன் மகளிருடன் ஆடியதை,

**சுடரும் பாண்டில் திரு நாறு விளக்கத்து,**
**முழா இமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணை ஆக,**
**சிலைப்பு வல் ஏற்றின் தலைக் கை தந்து, நீ (பதிற். 52:13-15)**

என்ற வரிகளும் தெரிவிக்கின்றன.

முருகன் அசுரரை அழித்த போர்க்களத்தில் பேய்மகள் போர்க்களத்தைப் பாடிய வண்ணம் தோளை அசைத்து, துணங்கைக் கூத்தாடியதை,

**---------------------- அஞ்சுவரு பேய்மகள்**
**வென்றுஅடு விறற்களம் பாடி, தோள்பெயரா,**
**நிணம்தின் வாயள் துணங்கை தூங்க (திருமுரு. 51-56)**

என்னும் பாடல்வரிகளும், பிணங்களைத் தம்முடைய தந்தங்களில் கொண்ட யானை திரளின் நிணத்தைத் தின்ற பேய்மகளிர், போர்க்களத்தில் துணங்கை ஆடியதை,

**பிணக் கோட்ட களிற்றுக் குழும்பின்**
**நிணம் வாய்ப் பெய்த பேய்மகளிர்**
**இணைஒலி இமிழ் துணங்கைச் சீர்ப்**
**பிணையூபம் எழுந்து ஆட (மதுரைக். 24-27)**

என்ற பாடலும் விளக்குகின்றது. பேய்கள் ஆடும் துணங்கைக் கூத்தினையுடையவளாகக் கொற்றவை[47] குறிப்பிடப்பட்டுள்ளாள்.

## ஆற்றுப்படைக் கலைஞர்களின் கலை மரபு

சங்ககாலம் மாற்றங்களை எடுத்துரைப்பது. அம்மாற்றங்களைச் சங்ககால மக்களின் வாழ்வியற்கூறுகள் எடுத்தியம்புவதாக அமைந்துள்ளன. இத்தகைய மாற்றங்களை மக்களின் பண்பாட்டுக் கூறுகளில் ஒன்றாக விளங்கும் கலைகளிடம், அவற்றை நிகழ்த்தும் கலைஞர்களிடம் காணமுடிகிறது. அவ்வகையில் குழுக்களின் பொதுத் துய்ப்பிற்காக இருந்த கலைகள் நாளடைவில் சமூகத் தலைமைகளுக்கானதாக மாறியதோடு கலைஞர்கள் தொழில்முறைக் கலைஞர்களாக மாறியதை, குழு வளர்ச்சி பெறும் பொழுது, வேலைப் பரிவினை தோன்றுகிறது. அப்பொழுது, ஆடல் பாடல்களில் வல்லவர்களுக்கு, கூத்தும் பாட்டும் தொழிலாகி விடுகிறது. இந்நிலையிலேயே பாணர், கூத்தர், பொருநர், விறலியர் போன்ற கலையைத் தொழிலாகக்கொண்டவர்களான ஒரு சமூகப் பிரிவு தோன்றியது[48] என்று குறிப்பிட்டுள்ளார் கா. சுப்பிரமணியன். கலையை வளர்த்து அதன் மூலம் தங்களுடைய வாழ்க்கையை நடத்திய கலைஞர்கள் தொழில்முறைக் கலைஞர்கள் என்று அழைக்கப்பட்டுள்ளனர்.

பாணர், பாண்மகன், பாடினி, பாண்மகள், பாடுமகள், பாடுநர், பொருநர், அகவுநர், வயிரியர், இயவர், கண்ணுளர், கலப்பையர், கோடியர், துடியர், பறையர், பரிசிலர், முழவர், கூத்தர், ஆடுமகள், ஆடுநர், விறலியர் போன்ற சொற்களால் சங்க காலத்து நிகழ்த்துக் கலைஞர்கள் அழைக்கப்பட்டுள்ளனர். இக்கலைஞர்களின் கலைத் தொழிலும், வாழ்வியற் கூறுகளும் இனக்குழு வாழ்க்கையின் எச்சங்களோடு காணப்படுகின்றன.

சங்க காலத்தில் இசைக்கருவிகளை இசைத்த கலைஞர்களைத் தோல் இசைக் கலைஞர்கள், துளை இசைக் கலைஞர்கள், நரம்பிசைக் கலைஞர்கள், குரலிசைக் கலைஞர்கள் என்று வகைப்படுத்தலாம். சங்க இலக்கியத்தில் இக்கலைஞர்கள் தொல்குடியினராகக் குறிப்பிடப்பட்டிருப்பதை,

> **துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று**
> **இந்நான்கு அல்லது குடியும் இல்லை (புறம். 335:7-8)**

என்ற பாடல் தெரிவிக்கின்றது. இக்குடிகள்தவிர அந்த ஊரில் பிறகுடிகள் இல்லை என்று மாங்குடிக் கிழார் குறிப்பிடுவதிலிருந்து பாணர், துடியர், பறையர், கடம்பன் என்னும் நான்கு குடிகள் தமிழகத்தின் தொன்மைவாய்ந்த குடிகளாக

விளங்கியிருப்பதை அறிந்துகொள்ள முடிகிறது. பாணர் என்பார் தமிழ்நாட்டின் பழங்குடிகளுள் ஓர் குடியினராவர். ஆயர், குறவர், எயினர், உழவர், நுளையர் என்னும் திணை மக்களின் குடிகளும், பாணர், பறையர், துடியர், கடம்பர், வள்ளுவர், பழையர் முதலாயினோர் குடிகளும் தமிழ்த் தொல்குடிகளாம்[49] என்னும் சிவ. பார்வதியம்மையார் அவர்களுடைய கருத்து பாணர்கள் திணை மக்களைப் போன்று தொன்மை வாய்ந்தவர்கள் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

பாணர், பொருநர், கூத்தர், விறலியர், கோடியர், வயிரியர், உள்ளிட்ட சங்க கால நிகழ்த்துக் கலைஞர்கள் அனைவரையும் குறிப்பிட பயன்படும் பொதுச் சொல்லாகப் பாண்மரபினர் எனச் சுட்டப்பெறுகிறது[50] என்று குறிப்பிடும் காந்திதாசன், பல இனங்களைச் சேர்ந்த அக்கலைஞர்கள் கலையால் ஒன்றுபட்டுத் திகழ்ந்தனர் என்றும் கூறுகிறார்.

பாண்மரபு என்று சுட்டப்பட்டுள்ள கலைஞர்கள் தங்கள் வாழ்வாதாரமாகக் கலைகளைக் கொண்டிருந்தனர். கலைகளை வேந்தர்களிடமும், குறுநில மன்னர்களிடமும் சீறூர்த் தலைவர்களிடமும் நிகழ்த்திக்காட்டிப் பரிசு பொருளைப் பெற்றுள்ளனர். பிறரைச் சார்ந்து வாழ்ந்த இம்மக்களின் வாழ்க்கையில் வறுமைக்கு முக்கிய இடமிருந்துள்ளது. வறுமையைப் போக்கிக்கொள்ள நாடோடிகளாகத் திரிந்த இவர்களுக்கு நிலையான இருப்பிடம் காணப்படவில்லை. தம்முடைய கலையை நிகழ்த்திக் காட்டி வறுமையைப் போக்க நினைத்த கலைஞர்கள் பல இடங்களுக்குப் பயணித்த வழிநடை பற்றிய விரிவான பதிவுகளைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. எட்டுத்தொகையில் அவர்களுடைய வாழ்வியல் தொடர்ச்சியாக இல்லாமல் தனித்தனிப்பாடல்களில் பாடப்பட்டுள்ளது. இக்கலைஞர்கள் வறுமையைப் போக்கச் செய்த பயணங்களையும் அவர்களுடைய வாழ்க்கையினையும் நீண்ட பாடல்வரிகளில் பத்துப்பாட்டு ஆற்றுப்படை என்ற இலக்கியமரபாக பதிவு செய்துள்ளது.

பாண் சுற்றம் அக்காலத்தில் தங்களுடைய கலைத்திறமையினால் நாட்டையே பரிசாகப் பெறக்கூடிய நிலையில் இருந்துள்ளது. இதனை,

**பறம்பு பாடினரதுவே, அறம் பூண்டு, (புறம். 108:4)**
**சுகிர் புரி நரம்பின் சீறியாழ் பண்ணி,**
**விரை ஒலி கூந்தல் நும் விறலியர் பின்வர,**
**ஆடினிர் பாடினிர் செலினே,**
**நாடும் குன்றும் ஒருங்கு ஈயும்மே (மேலது. 109:15-18)**

முந்நூறு ஊர்த்தே தண் பறம்பு நல் நாடு;
முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர் (மேலது. 110:3-4)

என்னும் வரிகளால் அறியலாம்.

**பாணர்**

இசைக் கருவிகளை இசைத்துப் பண்ணோடு பாடும் மரபினரைப் பாணர் என்றனர். சங்க இலக்கியத்தில் பிற கலைஞர்களைவிட பாணர்கள் பற்றி மேலதிகமான பதிவுகளைக் காணமுடிகிறது. பாணர் என்பது ஆடவர், பெண்டிர் இருபாலரையும் குறிக்கும். ஆடவர் பாணர் எனப் பொதுவாகவும், இன்னிசைக்காரர், சென்னியர், வயிரியர், செயிரியர், மதங்கர் என்றெல்லாம் சிறப்பு நிலையிலும் பெயர் பெற்றிருந்தனர். கூத்தர் என்ற பெயரும் இவர்களுக்குப் பொருந்திற்று. இவர்களுள் பெண்டிர் பாடல் மகள், பாண்மகள், பாணிச்சி, பாட்டி, மதங்கி, விறலி, பாடினி என்று வழங்கப்பட்டனர்[51].

பாணர்கள் இசைப்பாணர், இசை பாடுவோர்; மிடற்றுப்பாடலால் பாடுவோர். யாழ்ப்பாணர் உடன் யாழும் வாசிப்பர். மற்றொரு வகையினர் மண்டைப்பாணர்[52]. பாணர்கள் பாடுவதில் வல்லவர்கள். இசைக் கருவிகளை இசைக்கும் திறமையுடையவர்கள். சங்க காலத்தில் நிலவிய உடைமையாளர்களிடம் பாடல்பாடி வாழ்க்கைக்கான வருமானத்தைப் பெற்றுக்கொண்டனர். பொதுமக்களிடமும் கலைகளை நிகழ்த்திக் காட்டியுள்ளனர். நிலையான வாழ்க்கைமுறை இவர்களுக்கு இல்லாததால் வருவாயைத் தேடி இடம்விட்டு இடம் பெயர்ந்துச் சென்றுள்ளனர்.

**பாண்கடன்**

சங்ககாலத்தில் பாண் சுற்றத்தைப் புரக்கும்செயல் கடமையாகக் கருதப்பட்டுள்ளது. இதனை, பாண் பசிப் பகைஞன்[53], பசிப்பிணி மருத்துவன்[54], பாண் கடன் ஆற்றிய[55], பாண் கடன் இறுக்கும் வள்ளியோய்![56], பாண் உவப்பச் பசி தீர்த்தனன்[57] போன்ற சான்றுகளால் அறியமுடிகிறது.

**பாணர் கலைத் தொழில்**

பாணர்கள் பல இடங்களுக்குச் சென்று பாடல் பாடியதைச் சங்க இலக்கியத்தின் வழி அறிந்துகொள்ளமுடிகிறது. பாணர்கள் தங்களுடைய சுற்றங்களுடன் இணைந்தேச் சென்றுள்ளனர். இப்பாணர்கள் சங்க இலக்கியத்தில் எப்போதும் கூட்டுக் குழுவினராகவே பேசப்படுகின்றனர். அவர்கள் குழுவாக ஊரூராகப் பாடிச் சென்றனர் என்பதை ஆற்றுப்படைப் பாடல்களும் ஏனைய சங்க இலக்கியப் பாடல்களும் காட்டுகின்றன[58].

**இசைக் கருவிகள் இசைத்தல்**

யாழ்பாணருள், யாழின் அளவையொட்டிச் சிறுபாணர், பெரும்பாணர் என இரு பிரிவினர் இருந்துள்ளனர். யாழ் இசைப்பதில் சிறந்திருந்த பாணர்கள் சிறிய யாழினை இசைத்தமையால் சிறுபாணர் என்றும் பெரிய யாழினை இசைத்தமையால் பெரும்பாணர் என்றும் அழைக்கப்பட்டனர். இப்பெயர்களாளேயே சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை என்னும் இரண்டு இலக்கியங்கள் எழுந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இவர்கள் எப்போதும் யாழினை இடப்பக்கம் வைத்திருந்ததை,

**இன்குரல் சீறியாழ் இடவயின் தழீஇ (சிறுபாண். 35)**

**இடனுடைப் பேர்யாழ் முறையுளிக் கழிப்பி (பெரும்பாண். 462)**

என்னும் வரிகள் உறுதிபடுத்துகின்றன.

பாணர்கள் இசைக்கருவிகள் இசைப்பதில் தேர்ச்சிப் பெற்றிருந்துள்ளனர். சுற்றங்களோடு சென்ற பாணர்கள் பதலை, முழவு, ஆகுளி, தடாரி, கிணை போன்ற இசைக்கருவிகளை இசைத்துள்ளனர். பாணர்கள் தண்ணுமை என்னும் கருவியை இசைத்துள்ளனர்[59], இவர்கள் இசைத்த யாழின் உறுப்பு குறித்து பெரும்பாணாற்றுப்படை மிகநீண்ட விளக்கத்தை அளித்துள்ளது.

**பாணர் பாட்டு**

பாணர்கள் தங்களுடைய வருமையைப் போக்கிக்கொள்ள உடைமையாளர்களிடம் சென்று பாடிப் பரிசில் பெற்றுள்ளனர். பாடல்பாடி வாழ்க்கைக்கான பொருட்களைப் பெற்றதோடு, அப்பொருட்களைக் கொடுத்துத் தங்களைப் பாதுகாத்தவர்களுக்காகக் கையறுநிலைப் பாடல்களையும் பாடியுள்ளனர். மேலும், போர்க்களத்திலும் பாடல்களைப் பாடியுள்ளனர். இவர்களுடைய பாட்டு மிகவும் இனிமை வாய்ந்ததாக இருந்ததை,

**களங்கனி அன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்**

**பாடு இன் பனுவற் பாணர் உய்த்தென (புறம். 127:1-2)**

என்ற பாடல் விளக்குகின்றது.

**பாணர் வறுமை**

பாணர்கள் உணவு, உடை, உறைவிடம் இன்றி உடல் இளைத்து, இனி தைப்பதற்கு இடமில்லாத கிழிந்த உடையும் கொண்டு ஊர் ஊராகத் திரிந்தனர் என்பதை,

**காரென் ஒக்கல், கடும் பசி, இரவல! (புறம். 141:6)**

**சிதாஅர் உடுக்கை, முதாஅரிப் பாண! (மேலது. 138:5)**

போன்ற வரிகள் குறிப்பிடுகின்றன. இவர்கள் பருந்தின் கரிய சிறகைப்போன்ற கந்தலாகிய ஆடையினை அணிந்திருந்ததாக[60] குறிப்பிடப்பட்டிருப்பதிலிருந்து பாணர்களுடைய வறுமையை அறிந்துகொள்ளமுடிகிறது.

பாணர்கள் மன்னர்களுடைய புறவாழ்க்கையில் இடம்பெற்றுள்ளதைப் போன்று அகவாழ்க்கையிலும் ஈடுபட்டுள்ளனர். அக இலக்கியத்தில் மருதத்திணைப் பாடல்களில் பாணர்கள் தலைவன், தலைவி இருவருக்கும் இடையே பரத்தமையால் வரும் ஊடலைப் போக்கும் வாயில்களாகச் சென்றுள்ளனர். பாணர்கள் தலைமக்களுடைய குடும்ப வாழ்க்கையில் நெருக்கமானவர்களாகக் காணப்படுகின்றனர். தலைவி பாணரைக் கடிந்துகொள்ளும் இடங்களும் உண்டு. மருதத்திணையில் பாணன் சில இடங்களில் உயர்ந்தவனாகவும் பல பாடல்களில் பாணன் பொய்யன்[61], பாணன் போலப் பல பொய்த்தல்லே[62], கள்வர் போல்வர்[63] என்றும் இகழப்பட்டுள்ளனர்.

தெய்வ விழாக்கள், அரசவை, போர் நிகழ்ச்சிகள் (போர் மேற்சென்றவர்களுடன் சென்றும்) போன்ற இடங்களுக்குச் சென்று பாடிய பாண்சுற்றம் வரவேற்கப்பட்டும் பரிசில் வழங்கப்பட்டும், சில இடங்களில் வறுமையால் உணவு மட்டும் அளிக்கப்பட்டும் காக்கப்பட்டுள்ளதை,

**“வரையா வாயில் செறாஅது” இருந்து,**
**‘பாணர் வருக! பாட்டியர் வருக!**
**யாணர்ப் புலவரொடு வயிரியர் வருக’ என**
**இருங்கிளை புரக்கும் இரவலர்க்கு எல்லாம்**
**கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசி (மதுரைக். 748-752)**

என்ற பாடல்வரிகளின் மூலம் அறியமுடிகிறது. வாயில்களில் தடுத்து நிறுத்தப்படாமல் பாண்சுற்றங்கள் வரவேற்கப்பட்டு நல்கித் தேர்களையும் யானைகளையும் பரிசிலாகக் வழங்கியதை மேற்காணும் பாடல் தெரிவிக்கின்றது.

### கூத்தர்

சங்க இலக்கியங்களில் கூத்தர் ஆடுநர், கோடியர், வயிரியர், கண்ணுளர் போன்ற பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளனர். இசைக்கேற்பப் பாடல்பாடி ஆடும் கலைஞர்களைக் கூத்துக் கலைஞர்கள் எனக் குறிப்பிடலாம். கூத்தர் பற்றிய இலக்கியமாக மலைபடுகடாம் விளங்குகிறது.

### கூத்தர் நாடோடிப் பயணம்

கூத்தர்கள், பாயால் வேயப்பட்ட ஒலிக்கின்ற வண்டியில் அமர்ந்துகொண்டு இஃது எம்மூர் என்று சொல்லும்படியாகத் தமக்கென்று ஓர் ஊர் இல்லாதவர்களாக

பாலைவழிகளில் தொடர்ந்து பயணித்துப் பல ஊர்களுக்குச் சென்றுள்ளனர். பல ஊர்களுக்குச் சென்று கூத்தாடிய இவர்கள் கூத்தாட்டம் முடிந்தவுடன் பல வாத்தியங்களுடன் அவ்விடத்தை விட்டுத் தம்முடைய பெரிய சுற்றங்களுடன் இடம்பெயர்ந்துச் செல்லும் வாழ்க்கையை உடையவர்கள் என்பதை,

**ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடத்து,**
**ஊர்இஃது என்னாஅர், தீதுஇல் வாழ்க்கை,**
**....**
**பல்ஊர் பெயர்வனர் ஆடி, ஒல்லென,**
**தலைப்புணர்த்து அசைத்த பல்தொகைக் கலப்பையர்,**
**இரும்பேர் ஒக்கல் கோடியர் இறந்த**
**புன்தலை மன்றம் காணின், வழிநாள்,**
**அழுங்கல் மூதூர்க்கு இன்னா தாகும்** **(அகம். 301:7-25)**

என்ற பாடல்வரிகளால் அறியமுகிறது. இப்பாடல் கூத்தர்களுடைய முழுமையான வாழ்வியலைச் சுட்டுவதாகவும் அமைந்துள்ளது. பாலை வழிகளில் சென்ற கூத்தர்கள் பல வாத்தியங்களை இசைத்துத் தங்களின் களைப்பினைத் தீர்த்துக்கொண்டுள்ளனர்[64].

**இசை**

கூத்தர்கள் பாலை வழிகளிலும், புரவலர்களிடமும், கடவுள் வழிபாட்டின்போதும் இசைக்கருவிகளை இசைத்து ஆடியுள்ளனர். பாலையில், வழிச்செல்லும் வருத்தம் போக்க யாழினைத் தீடீரென இசைத்துள்ளனர்[65]. புரவலர்களின் புகழைத் தொகுத்துக்கூறும் கூத்தர்கள் தூம்பு என்னும் கருவியினை இசைத்துள்ளனர்[66], மத்தளத்தினை ஒலித்துள்ளனர்[67]. இவர்கள் முழவு[68], கொம்பு[69], பறை[70] வங்கியம் என்னும் சிறுவங்கியம், பெருவங்கியம்[71] போன்ற கருவிகளை இசைத்துள்ளனர். கூத்தர்கள் இசைவாத்தியங்களை ஒருசேரத் தொகுத்து ஒரு பையில் போட்டுக் கட்டிக்கொண்டுச் சென்றுள்ளனர். அந்தப்பை, கலப்பை என்று அழைக்கப்பட்டுள்ளது[72]. மலைபடுகடாம், கூத்தர்கள் பல்வேறு வாத்தியங்களை எடுத்துச்சென்றதை மிகவிரிவாக எடுத்துரைத்துள்ளது. கூத்தர்கள் மத்தளம், ஆகுளி, கொம்பு, தூம்பு, குழல், எல்லரி, பதலை ஆகிய கருவிகளை இருபுறமும் சமமாக இருக்கும்படி கலப்பையில் வைத்துக் கட்டித் தூக்கிச் சென்றுள்ளனர். அவர்கள் இசைத்த பேரியாழ் குறித்து மலைபடுகடாமில்[73] மிகவிரிவான விளக்கம் தரப்பட்டுள்ளது.

**ஆடல் களம்**

பொதுமக்களுக்குரிய கூத்துகள் ஊர்மன்றங்களில் நடத்தப்பட்டுள்ளது. அக்கூத்தினை நிகழ்த்திய கூத்தர் சுற்றங்கள் அம்மன்றங்களில் தங்கியுள்ளன[74]. அத்தகைய மன்றம் இனக்குழு வாழ்க்கையில் பெற்றிருந்த முக்கியத்துவத்தை, இனக்குழுவினர் பொழுது போக்குமிடமாகவும் மன்றம் திகழ்ந்தது. பாணர்களும் கூத்தர்களும் மன்றத்தில் தங்கி கலை நிகழ்ச்சிகளை நடத்தினர்[75] என்பதிலிருந்து கலைஞர்களின் வாழ்க்கையில் மன்றம் பெற்றிருந்த இடம் குறித்து அறிந்துகொள்ளமுடிகிறது. மன்றத்தில் தங்கிய கூத்தரும் பாணரும் தெருவின் இருபுறத்தும் உள்ள வீட்டு வரிசைகளின் பக்கம் சென்று இசையெழுப்பிப் பாடிச் சென்றுள்ளதை,

**வாங்குபு தகைத்த கலப் பையர் ஆங்கண்**
**மன்றம் போந்து, மறுகு சிறை பாடும்**
**வயிரிய மாக்கள் கடும்பசி நீங்க (பதிற். 23:4-6)**

என்ற பாடல்வரிகள் தெரிவிக்கின்றன. திருவிழாக் காலங்களில் மன்றத்தில் கலை நிகழ்ச்சிகளை நிகழ்த்திய கூத்தர்கள் யாழில் இசையெழுப்பிப் பண்களை நன்கு அமைத்துள்ளதை,

**அழியா விழவின், இழியாத் திவவின்,**
**வயிரிய மாக்கள் பண் அமைத்து எழீஇ,**
**மன்றம் நண்ணி, மறுகு சிறை பாடும் (பதிற். 29:7-9)**

என்னும் பாடல்வரிகளால் அறியமுடிகிறது.

கூத்தர்களுடைய கலைவாழ்வை எடுத்துக்கூறும் மலைபடுகடாம் கூத்தரை உயர்வாக பாடியிருக்கின்றது. பொருநராற்றுப்படை, கூத்தர் தலைவனின் கலைத்திறமையைப் போற்றியுள்ளது. மிடற்றுப்பாடல், யாழ் இசைத்தல், இவற்றிற்கு ஏற்ப கூத்தாடுவது என மூன்று செயல்களிலும் வல்லவனாய் நீ இருப்பதைப் பார்த்தால் மூன்று வேந்தர்களும் தம்முள் பகைநீங்கி ஒற்றுமையுடன் இருப்பதைப் போலுள்ளது[76] என்பது கலைஞர்களை சமூகம் மதிப்புடையவர்களாகப் பார்த்திருப்பதை விளக்குகிறது. பல வழிகளைக் கடந்துச் சென்று நன்னனை அடைந்த கலைஞர்கள் தம்முடைய கலைத்திறனைக் காட்டி ஆடை, உணவு போன்றவற்றால் உபசரிக்கப்பட்டுள்ளனர். ஆபரணங்களும் தேர், யானை, குதிரை, பசுக்கூட்டம் இவற்றுடன் இன்னும் பிற பொருட்களை எல்லாம் கலைஞர்கள் பரிசிலாக பெற்றுள்ளதை மலைபடுகடாம் மூலம் அறியமுடிகிறது.

## பொருநர்

பொருநர் நிகழ்த்துகலை மரபைச் சேர்ந்தோராவர். பிறரைப் போன்று வேடம் புனைந்து கலையை நிகழ்த்தியவர்கள் பொருநர் எனப்பட்டனர். பொருநர்கள் என்றால் பிறர்போல் வேடம் புனைந்து ஆடல் நிகழ்த்துபவர்களாகவும் இசைக்கருவிகளை இசைப்பவர்களாகவும் இருந்தனர். ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் என இவர்களில் காணப்பட்ட பிரிவினால் மன்னனின் வெற்றி, போர் நடத்திச்செல்லும்போது கலை நிகழ்த்தல், வெற்றியைச் சிறப்பித்தல் ஆகிய நிலைகளில் போர்க்களம் சார்ந்து தங்கள் கலைகளை இவர்கள் நிகழ்த்தினர். போரும், கூச்சலும், ஆரவாரமும் நிறைந்த போர்க்களச் சூழலில் பொருநர்கள் வீரர்களின் மனதுக்கு உற்சாகம் அளிப்பவர்களாவும் இருந்தனர்[77]. எட்டுத்தொகையில் சில பாடல்கள் பொருநர்களுடைய வாழ்க்கையினைச் சுட்டுவதாக அமைந்துள்ளன. பத்துப்பாட்டில் பொருநர் என்ற பெயரில் ஆற்றுப்படை இலக்கியம் காணப்படுகின்றது.

பொருநராற்றுப்படையில் பாலையாழின் அமைப்பு, அதன் உறுப்புக்கள் முதலான செய்திகள் உவமைகூறி விளக்கப்பட்ட பின்னர் அவற்றை வாசிக்கும் பாங்கு குறித்தும் பாடப்பட்டுள்ளது. பொருநர்கள் யாழ், தடாரி முதலான கருவிகளை வாசித்துள்ளனர். இவ்விலக்கியம் பிற ஆற்றுப்படை இலக்கியம்போன்று ஐந்திணை மக்களுடைய வாழ்வியலை எடுத்துரைக்கவில்லை. மேலும், கலைஞர்கள் செல்லவேண்டிய வழியின் தன்மை குறித்தும் குறிப்பிடவில்லை. மன்னருடைய கொடை, வீரம் முதலானவற்றையே முதன்மைபடுத்திப் பாடப்பட்டுள்ளது. மன்னனுடைய கொடை மரபைச் சிறப்பிக்கும் நோக்கத்தில் பொருநர் கலை மரபு பாடப்பட்டதாகத் தெரிகிறது.

பொருநர்களும் பிற கலைஞர்களைப் போன்று பல ஊர்களுக்குச் சென்று விழா நடைபெறும் இடங்களில் தம்முடைய கலைத்திறமையைக் காட்டியுள்ளனர். வறுமையில் வாடினாலும் சோறு கிடைக்கும் ஊர்களிலேயே நிலையாகத் தங்கும் வழக்கம் இவர்களிடம் இல்லை. விழா முடிந்ததும் வேறு ஊர்களுக்குச் செல்லுவதே இவர்களுடைய வாழ்க்கை முறையாக இருந்துள்ளதை,

**அறாஅ யாணர் அகன்தலைப் பேர்ஊர்,**
**சாறுகழி வழிநாள், சோறுநசை உறாஅது,**
**வேறுபுலம் முன்னிய விரகுஅறி பொருந!** **(பொருந. 1-3)**

என்னும் பாடல்வரிகளால் அறியமுகிறது. இவர்கள் மன்னரை மட்டும் அணுகி வறுமையைப் போக்கிக் கொள்ளவில்லை. மக்களிடமும் உணவு பெற்றுள்ளனர்.

நாள்தோறும் உணவிற்காக வறண்ட பகுதிகளில் அலைந்த பொருநர்கள் உழவர்களிடம் சென்று நின்று உணவு கேட்டுள்ளனர்[78].

இக்கலைஞர்கள் ஈரும் பேனும் நிறைந்து, வேர்வையால் மிகவும் நனைந்து, வேறுபட்ட பல நூல்கள் கொண்டு தைக்கப்பெற்ற நைந்துபோன உடையினை அணிந்திருந்த பொருநர்[79] புத்தாடைகளைப் புரவலர்களிடம் பெற்றுக்கொண்டுள்ளனர்.

**விறலியர்**

சங்ககாலப் பெண்பாற் நிகழ்த்துக் கலைஞர்களுள் விறலியர் சிறப்புற்றிருந்தனர். ஆடல், பாடல் என கலைகளை நிகழ்த்துவதில் வல்லவர்களாக இருந்துள்ளனர். பாண் சுற்றத்துடன் இணைந்து சென்று கலைகளை நிகழ்த்தியுள்ளனர். விறலியர் தோற்றம் குறித்த வர்ணனைகள் சங்க இலக்கியங்களில் விரவிக்கிடக்கின்றன. விறலிபற்றி சிறுபாணாற்றுப்படை 13-33-அடி வரையிலும் மலைபடுகடாம் 38-50-அடி வரையிலும் வருணித்துள்ளது. புறநானூற்றில் விறலியை ஆற்றுப்படுத்தும் பாடல்களில் புலவர்கள் தம்முடைய வறுமையையும் சேர்த்துப் பாடியுள்ளனர். பதிற்றுப்பத்திலும் விறலியர்களுடைய கலை நிகழ்த்தும் திறம், அவர்கள் பயன்படுத்திய கருவிகள் போன்ற குறிப்புகள் காணப்படுகின்றன.

இசைக்கருவிகளை இசைத்து இனிமையாகப் பாடக்கூடியக் குரல்வளம் விறலியர்க்கு இருந்துள்ளது. பாடுவல் விறலியர்[80], பாடுவல், விறலி! ஓர் வண்ணம்[81] என்று விறலியர் பாடல் பாடும் திறம் உணர்த்தப்பட்டுள்ளது.

**ஆடு சிறை அறுத்த நரம்பு சேர் இன் குரற்**
**பாடு விறலியர் பல் பிடி பெறுக! (பதிற். 43:21-22)**

என்னும் பாடலில், விறலியர் யாழின் இசையோடு ஒன்றுபட்டுச் சேர்ந்த இனிய குரலையுடையவர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர். விறலியை ஆற்றுப்படுத்தும் பின்வரும் பாடலில் அவர்கள் வைத்திருந்த இசைக்கருவிகள் பற்றியக் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

**நல் யாழ், ஆகுளி, பதலையொடு சுருக்கி,**
**செல்லாமோதில் - சில் வளை விறலி! (புறம். 64:1-2)**

மேற்காணும் பாடல் பொருண்மை, யாழ், ஆகுளி, பதலை ஆகிய கருவிகளை வைத்திருக்கும் பையைச் சுருக்கிக் கொண்டு செல்வோமா என்று விறலியை அழைப்பதாக அமைந்துள்ளது.

**விறலியர் வறுமை**

நாடோடி வாழ்க்கைமுறையை மேற்கொண்டு பாண் சுற்றங்களுடனே பயணித்த விறலியர்கள் மன்னர்களை நோக்கிப் பல வழிகளைக் கடந்துச் சென்றுள்ளனர்.

தோளில் பதலை, முழவு போன்ற இசைக்கருவிகளைத் தொங்கவிட்டுச் சுமந்தவாறே, எமக்கு உணவு இட்டுக் கவிழ்ந்து கிடக்கும் உண்கலத்தை மலர்த்த வல்லார் யாரெனச் சொல்லிச் சுரத்திடையே பிற ஊர்களுக்குச் சென்றுள்ளனர்[82]. மலைவழியே நடந்து வந்த வருத்தத்தினை,

**கொடுவரி வழங்கும் கோடு உயர் நெடுவரை,**
**அரு விடர்ச் சிறு நெறி ஏறலின், வருந்தி,**
**தடவரல் கொண்ட தகை மெல் ஒதுக்கின்,**
**வளைக் கை விறலி (புறம். 135:1-4)**

எனும் பாடல் தெரிவிக்கின்றன. அவ்வாறு வருந்திச் சென்று வாழவேண்டிப் பொருட்களைக் கேட்டிருப்பதையும் கீழ்க்காணும் பாடல் தெரிவிக்கின்றது.

**அடி வருந்த நெடிது ஏறிய**
**கொடி மருங்குல் விறலியருமே,**
**வாழ்தல் வேண்டிப்**
**பொய் கூறேன்; மெய் கூறுவல்;**
**ஓடாப் பூட்கை உரவோர் மருக! (புறம். 139:2-7)**

இத்தகைய வறுமையுடைய விறலியர் மன்னர்களிடம் அணிகலன்கள், யானை போன்ற பரிசுகளைத் தங்களுடைய கலைத்திறமைக்காகப் பெற்றுள்ளனர்.

விறலி, பாண்சுற்றம் எனப்படும் குழுவுடனே சேர்ந்து பயணம் செய்துள்ளாள். அவர்களுடன் இணைந்து தம்முடைய கலைத்திறனை வெளிப்படுத்தியுள்ளாள். சங்ககாலப் பெண் கலைஞர்களில் சிறப்புற்றுத் திகழும் விறலியை ஆற்றுப்படுத்தும் பாடல்கள் எட்டுத்தொகையில் உள்ளன. அவர்கள் பிற கலைஞர்கள் குழுவில் இணைந்து செயல்பட்டதே இதற்குக் காரணமாக அமைந்துள்ளது. எட்டுத்தொகை நூல்களில் விறலியாற்றுப்படை பெருவழக்காக இருந்திருக்கிறது. ஆனால் இவ்வழக்கினைப் பத்துப்பாட்டில் காண இயலவில்லை. விறலி, பொருநன் முதலான கலைஞர்களுடன் சென்றதாகவே குறிப்பிடப்படுகிறாள். இதனால் விறலியாற்றுப்படை தனியாக எழவில்லை. ஆண்களின் ஆதிக்கம் மேலோங்கிப் பெண்கள் அவர்களுக்குக் கட்டுப்பட்டு வாழத் தொடங்கிய நிலையில் அவர்களின் சுதந்திரம் பறிபோனது. ஆண்களின் பாதுகாப்பில் செல்ல வேண்டிய சூழல் உருவானது. மலைபடுகடாம் கூத்தர் தலைவனைச் சூழ்ந்து விறலியர் நிற்பதனை எடுத்துக் காட்டுகின்றது[83]. கால மாற்றத்தினால் கலைத்தொழிலை மேற்கொண்டிருந்த பெண்களும் பிற பெண்களைப் போன்று ஆண் தலைமையின் கீழ் வந்திருப்பதையும் அறிந்துகொள்ள முடிகிறது.

## தொகுப்புரை

- மக்களுடைய போழுது போக்கு அம்சங்களில் கலைகளுக்கு முக்கிய இடம் இருந்துள்ளது. சங்க இலக்கியத்தில் பல கலைகள் இடம்பெற்றிருந்தாலும் அவற்றுள் நிகழ்த்துக் கலைகளே மிகுதியாக உள்ளன.
- சங்ககால நிகழ்த்துக் கலைஞர்கள் தொழில்முறை அல்லாத கலைஞர்கள் என்றும் தொழில் முறைக் கலைஞர்கள் என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளனர்.
- ஐந்திணை மக்களுடைய கலைமரபில் திணை மக்களுடைய கலைகள் ஆராயப்பட்டுள்ளன. இனக்குழு வாழ்க்கையில் கலைகளை நிகழ்த்துவதற்கு என்று தனியாக நிகழ்த்துக் கலைஞர்கள் இல்லை. எனவே இத்திணை சார்ந்த மக்களுடைய கலையை நிகழ்த்துபவர்கள் தொழில்முறை அல்லாத கலைஞர்களாகக் கூறப்பட்டுள்ளனர். திணைமக்களுடைய வாழ்க்கையில் அன்றாட நிகழ்வுகளின் ஒரு கூறாக கலைகள் இருந்துள்ளன.
- ஐந்திணை மக்கள் வேளாண்மை, வேட்டை, சடங்கு போன்ற நிகழ்வுகளின்போது இசைக்கருவிகளை பயன்படுத்தியுள்ளனர். இவர்கள் இசைத்த கருவிகள் மூங்கில், நரம்பு, தோல் முதலான பொருட்களால் உருவாக்கப்பட்டுள்ளன.
- குறிஞ்சித்திணையில் தினைப் பாதுகாப்பின்போதும், தினை அறுவடையின்போதும் இசைக்கருவிகள் இசைக்கப்பட்டுள்ளன. தினைக் காவலின்போது தட்டை, தழல், குளிர், தொண்டகச் சிறுபறை, கிணை போன்ற கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருவிகளை இசைத்து தினைப்புனத்தில் தினையைக் கவரவரும் கிளி, யானை, பன்றி முதலானவைகளை விரட்டியுள்ளனர். தினை அறுவடையின்போது தொண்டகச் சிறுபறை ஒலிக்கப்பட்டுள்ளது.
- வேட்டையில் ஊதுகொம்பு முதலான இசைக்கருவிகள் இசைக்கப்பட்டன. அக்கருவி வேட்டையில் வழி தவறியவர்களை அழைப்பதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.
- முல்லைத் திணையில் மேய்ச்சல்தொழில் சார்ந்தும், ஏறுழுவும் நிகழ்ச்சி சார்ந்தும் இசைக்கருவிகள் இசைக்கப்பட்டுள்ளன.
- மேய்ச்சலில் இருக்கும் ஆநிரைகளை அழைப்பதற்குக் குழல் இசைக்கப்பட்டுள்ளது. கோவலர்களை அடுத்துப் பாணர்களும் குழல்

பயன்படுத்தியுள்ளனர். கோவலர்கள் மேய்ச்சல் தொழிலின்போது ஆநிரைகளை அழைக்கக் கோடு என்னும் கருவியைப் பயன்படுத்தினர்.

- ❖ கலித்தொகையில் பறை ஏறுதழுவும் நிகழ்ச்சியை மக்களுக்கு அறிவிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது.
- ❖ மருதத்திணையில் வேளாண்மை சார்ந்து இசைக்கருவிகளின் பயன்பாடு மிகுதியாக உள்ளது. பயிர்ப்பாதுகாப்பிற்காகவும், அறுவடையின்போதும் களைப்பினைப் போக்கிக்கொள்ள தண்ணுமை, பறை முதலிய கருவிகள் இசைக்கப்பட்டுள்ளன. அறுவடையின்போது நெற்கதிர்களைக் கவரவரும் பறவைகளை இசை எழுப்பி விரட்டியடித்துள்ளனர்.
- ❖ பரிபாடலில் வையை ஆற்றில் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கின் காரணமாகக் கரைகளை அடைக்கக் காவலர்கள் பறையறைந்து அழைக்கப்பட்டுள்ளனர். வெள்ளப்பெருக்கினைக் கண்ட உழவர்கள் முழவு ஒலித்து தங்களுடைய மகிழ்ச்சியை வெளிப்படுத்தியுள்ளனர்.
- ❖ பாலைத் திணையில் மக்கள் வாழ்ந்த இருப்பிடம் சார்ந்தும், தொழில்சார்ந்தும் இசைக்கருவிகள் இசைக்கப்பட்டுள்ளன. தண்ணுமை, துடிமுதலான கருவிகளை இசைத்துள்ளனர். அம்மக்கள் இசைத்த இசை பிறரை அச்சம்கொள்ள வைக்கும் தன்மையினதாக இருந்துள்ளது.
- ❖ திணைமக்கள் காமம், வெற்றி, செழிப்பு, மழை, வேட்டை முதலியவற்றிற்காகக் குழுவாக இணைந்து பாடல் பாடிக் கூத்தாடியுள்ளனர். அக்கூத்து இருப்பிடங்களிலும், ஊர் மன்றங்களிலும் நடைபெற்றுள்ளது. குரவை, துணங்கை ஆகியவை ஐந்திணை மக்களுடைய குழு நடனங்களாகும்.
- ❖ குறிஞ்சித்திணையில் வேங்கை மலர்கள் உதிர்ந்துக் கிடக்கும் பாறைகளால் ஆன முற்றங்களில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து குரவைக் கூத்தாடியுள்ளனர். அக்குரவையில் இசையும் இடம்பெற்றிருந்தது.
- ❖ முல்லைத் திணையில் ஏறுதழுவும் நிகழ்ச்சி நடந்துமுடிந்த பின்னர் வெற்றி பெற்ற பொதுவனின் வீரத்தையும், அவனுடைய அழகினையும், அவன் பெற்ற தலைவியின் வனப்பினையும் வருணித்துப் பாடி ஊர் மன்றத்தில் குரவைக் கூத்தாடப்பட்டுள்ளது.

- மருதத் திணையில் பெண்கள் தலைவனுடைய பரத்தமையைப் பாடி காஞ்சி மரத்தின் அடியில் குரவையாடினர். விழாக்காலங்களில் தலைவன் காணுமாறு பரத்தையர் இக்கூத்தினை ஆடியுள்ளனர்.
- நெய்தல் திணையில் கடற்கரையிலும், இருப்பிடங்கள் சார்ந்தும் ஆண்களும் பெண்களும் இணைந்துக் குரவையாடியுள்ளனர்.
- துணங்கை, பெண்களும் ஆண்களும் தழுவி ஆடும் கூத்தாகும். அகம், புறம் இரண்டிற்கும் இக்கூத்து உரியதாக உள்ளது. போர்க்களவெற்றி சார்ந்து மன்னர்களும் வீரர்களும் ஆடுவர். போர்க்களத்தில் கிடக்கும் பிணங்களைக் கண்டு பேய்களும் துணங்கைக் கூத்தாடியுள்ளன.
- சங்ககால தொழில்முறைக் கலைஞர்களாகப் பாணர், கூத்தர், பொருநர், விறலி போன்றோர் விளங்குகின்றனர். இக்கலைஞர்களின் வாழ்வியலை எட்டுத்தொகை தனித்தனிப் பாடல்களில் பாடியிருக்கின்றது. பத்துப்பாட்டு நீண்ட நெடும்பாட்டாகத் தொடர்ச்சியாக ஆற்றுப்படை என்ற இலக்கிய மரபாகப் பாடப்பட்டுள்ளது.
- ஆற்றுப்படைக் கலைஞர்கள் ஆடல், பாடல் போன்ற அனைத்திலும் சிறப்புற்றிருக்கும் இக்கலைஞர்கள் வறுமையில் தத்தளித்துள்ளனர். தம்முடைய வறுமையைப் போக்கிக்கொள்ள மன்னர்களையும், வேந்தர்களையும் தலைவர்களையும், மக்களையும் நாடிச்சென்று தம்முடைய கலையை நிகழ்த்திக்காட்டிப் பொருள் பெற்றனர். இத்தகைய வாழ்க்கை முறையைக் கொண்டிருக்கும் இவர்கள் நிலையான வாழ்க்கையின்றி நாடோடிகளாக இருந்துள்ளனர்.
- பாணர்கள் இசைக்கருவிகளை இசைத்துப் பண்ணோடு பாடுவதில் வல்லவர்களாக இருந்துள்ளனர். பாணரில் இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் என்னும் பிரிவுகள் இருந்துள்ளன. யாழ்ப்பாணருள் சிறுபாணர், பெரும்பாணர் என்று தாம் பயன்படுத்திய யாழின் அளவை வைத்து அழைக்கப்பட்டுள்ளனர். சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை என்னும் இரண்டு இலக்கியங்களும் பாணர் வாழ்வியலைப் பாடியுள்ளது.
- இசைக்கேற்பப் பாடல்பாடி ஆடும் கலைஞர்கள் கூத்தர்கள் எனப்பட்டனர். இவர்கள் தமக்கென்று ஒர் ஊர் இல்லாது நாடோடிகளாக வாழ்ந்துள்ளனர். பல இசைக்கருவிகளை பையில் வைத்துச் சுருக்கிக் கட்டிக்கொண்டு வண்டிகளில்

பல ஊர்களுக்குச் சென்றுள்ளனர். இத்தகைய கலைஞர்களின் வாழ்வியலை மலைபடுகடாம் பாடியிருக்கின்றது.

- பிறரைப்போல வேடம் புனைந்து பொருநர்கள் ஆடினர். இப்பொருநர்களும் பிறக் கலைஞர்களைப் போன்றே வறுமைநிலையில் வாழ்ந்துள்ளனர். மன்னர்களுடைய போர்க்களம் சார்ந்து தம்முடைய கலைகளை நிகழ்த்தியுள்ளனர். இவர்களுடைய கலை போர்க்களத்தில் உள்ளவர்களுக்கும் உற்சாகம் தரக்கூடிய வகையில் அமைந்திருந்தது. பொருநராற்றுப்படை பொருநர்களுடைய வாழ்வியலைப் பாடியிருக்கின்றது.
- பெண்பாற் நிகழ்த்துக் கலைஞர்களுள் விறலிக்கு முக்கிய இடம் இருந்துள்ளது. பாடல், ஆடல் இரண்டிலும் வல்லவர்களாக விறலியர் இருந்துள்ளனர்.

## குறிப்புகள்

1. காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப. 57
2. முல்லைப். 328-329
3. புறம். 49:6-4
4. குறிஞ்சிப். 43-45
5. மேலது. 43
6. நற். 104. 4-6
7. மேலது. 10:4
8. குறுந். 375:4-5
9. திருமுரு. 208-209
10. மலைபடு. 320-322
11. திருமுரு. 194-198
12. அகம். 118:3-4
13. கலி. 104
14. மேலது. 399
15. மேலது. 354
16. மேலது. 74,124
17. மேலது. 54:10-11
18. கலித். 108:62
19. திருமுரு. 2-8-209.
20. பரி. 19:41.
21. அகம். 399:8-9
22. மேலது. 151:3
23. மதுரைக். 262
24. புறம். 396:3-4
25. ஐங். 81:2
26. மதுரைக். 262
27. அகம். 40:12-15
28. புறம். 348:1-3
29. அகம். 204:10-11
30. மலைபடு. 471-473

31. பரி. 10:7

32. மேலது. 6:24

33. மேலது. 7:16

34. அகம். 297:16-17

35. மேலது. 63:18

36. மேலது. 87:7-8

37. மேலது. 372

38. சுப்பிரமணியன்,கா., சங்க கால சமுதாயம், ப. 97

39. மதுரைக். 615

40. கலித். 103

41. மேலது. 104,105

42. மேலது. 106,108.

43. புறம். 396-9

44. சிவத்தம்பி,கா., பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் நாடகம், பக். 342-343

45. பெரும்பாண். 235

46. அகம். 336:15-16, குறுந். 364:6

47. பெரும்பாண். 459

48. சுப்பிரமணியன்,கா., சங்க கால சமுதாயம், ப. 97

49. பார்வதியம்மையார்,சிவ., பாண் பெரியார் மூவர், ப. 9

50. காந்திதாசன்,முனைவர் க., சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப. 59

51. அருணாசலம்,மு., தமிழ் இசை இலக்கண வரலாறு, ப. 578

52. அருணாசலம்,மு., தமிழ் இசை வரலாறு, ப. 567

53. புறம். 180:7

54. மேலது. 173:11

55. மேலது. 201

56. மேலது. 203

57. மேலது. 239

58. அம்மன்கிளி முருகதாஸ், சங்கக் கவிதையாக்கம்: மரபும் மாற்றமும், ப. 192.

59. அகம். 381, நற். 310

60. புறம். 150

61. ஐங். 43:4

62. மேலது. 47:5

63. குறுந். 127:3-5

64. அகம். 45,359

65. நற், 212

66. அகம். 111

67. மேலது. 155

68. குறுந். 78, அகம், 328

69. அகம். 378.

70. மேலது. 151

71. மேலது. 301

72. பதிற். 23:4

73. மலைபடு. 21-37

74. புறம். 135.11, மலைபடு. 492

75. சிவசுப்பிரமணியன்,ஆ., பழந்தமிழகத்தின் இனக்குழு மன்றம், ப.8

76. பொருந. 53-60.

77. சத்யா,தே., நிதழ்த்துக்கலைஞர்கள் மரபு – பழந்தமிழ் இலக்கியங்கள், முனைவர் பட்ட ஆய்வேடு, ப.86

78. புறம். 375

79. பொருந. 74-89

80. புறம். 172:3

81. மேலது. 152:13

82. மேலது. 103

83. சத்யா.தே, நிதழ்த்துக்கலைஞர்கள் மரபு – பழந்தமிழ் இலக்கியங்கள், முனைவர் பட்ட ஆய்வேடு, ப.216

**சங்க இலக்கியத்தில் இனக்குழு** மரபு - என்னும் தலைப்பிலான இவ்வாய்வு கண்ட முடிவுகள் பின்வருமாறு தொகுத்துரைக்கப்படுகின்றன.

மனித இனத்தின் தோற்றம், வளர்ச்சி, சமூக அமைப்பு, பழக்க வழக்கம், பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றை அறிவியல் அடிப்படையில் ஆராயும் வகையில் மானிடவியல் துறை தோன்றியது. இது மனிதனைப் பற்றிய முழுமையான படிப்பாக விளங்குகிறது. மேற்கத்திய ஆய்வுப்புலங்களில் ஒன்றான இத்துறையை வளர்த்தெடுத்தவர்களும் மேலைநாட்டினராகவே உள்ளனர். தொடக்ககால மானிடவியல் ஆய்வுகள், பயணிகளாலும், சமயப்பரப்பிகளாலும், அரசு அதிகாரிகளாலும் நிகழ்த்தப்பட்டன. அதன் பின்னர் கல்வி சார்ந்து மானிடவியல் துறை உருவானது. கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் முழுநேர மானிடவியலாளர்கள் தோன்றி திணைக்குடிகள் பற்றிய ஆய்வுகளைச் செய்தனர். கி.பி. 20-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட புதிய கண்டுபிடிப்புகளின் விளைவாக மனித தொடர்புகள் பெருகின. பல்வேறு துறைசார்ந்து கோட்பாடுகள் உருவாகின. இவற்றின் பயனாக மானிடவியல் துறை துல்லியமான ஆய்வு நெறிமுறைகளை உருவாக்கிக்கொண்டது.

ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னரே இந்தியாவில் மானிடவியல் துறை உருவானது. மானிடவியல் கல்வி சார்ந்து முதன்முதலில் கொல்கத்தா பல்கலைக்கழகத்தில் 1920-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டடது. மானிடவியல் ஆய்வுக் கழகங்கள் பல உருவாகிய சூழலில் இந்திய மானிடவியலின் தந்தையாக சரத் சந்திர ராய் விளங்கினார். இந்திய மானிடவியல் அறிஞர்கள் ஆற்றிய பணிகள் நூல்களாகவும் கட்டுரைகளாகவும் வெளிவந்தன. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் இந்திய மானிடவியல் அறிஞர்கள் அமெரிக்க மானிடவியல் அறிஞர்களோடு இணைந்து புதிய ஆய்வுகளை நிகழ்த்தினர்.

பல்துறை சார்ந்த அறிவுத்தேடலாக விளங்கும் மானிடவியல் பல உட்பிரிவுகளைத் தோற்றுவித்தது. அவற்றுள் ஒன்றாகிய பண்பாட்டு மானிடவியல் இனக்குழுவியல், இனக்குழு ஒப்பாய்வியல் என்னும் இரண்டு முக்கிய உட்பிரிவுகளைக் கொண்டிருந்தது. உலக மக்கள் உடலாலும் வாழும் இடச்சூழலாலும் தோற்றத்தில் வேறுபாடுகளுடன் காணப்படுகின்றனர். அத்தகைய இனங்களின் பண்பாட்டை முழுமையாகப் புரிந்துகொண்டு தொகுத்து வழங்குவது இனக்குழுவியல். அவ்வாறு தொகுக்கப்பட்ட கூறுகளை பிற குழுக்களுடன் ஒப்பிடுவது இனக்குழு ஒப்பாய்வியல்.

இலக்கியத்தைத் தரவாகக் கொண்டு மானிடவியல் ஆய்வு நிகழ்த்தும் முறையை இலக்கியமானிடவியல் என்றனர். இத்தகைய இலக்கிய மானிடவியல் இலக்கியம் எழுந்த காலத்தின் சமூகக் கூறுகளை அறிவிப்பதோடு அவற்றை சமகாலத்தோடு

பொருத்திப்பார்க்கவும் பயன்படுகிறது. அவ்வகையில் சங்க இலக்கியம் இனக்குழுவியல் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டு, சங்ககால ஐந்திணை மக்களுடைய வாழ்க்கைக் கூறுகள் ஆராயப்பட்டுள்ளன.

தமிழகத்தில் மானிடவியல் ஆய்வுகள் தொடக்க காலத்தில் நாட்டார் வழக்காற்றியல் துறைசார்ந்து அறிமுகமானது. பின்னர் மானிடவியல் அறிமுகத்தை ஏற்படுத்தும் வகையில் பல நூல்களும் கட்டுரைகளும் எழுந்தன. தற்காலத்தில் மானிடவியல் துறை சார்ந்த அறிமுகத்தை கோட்பாடு சார்ந்து பக்தவத்சல பாரதியின் நூல்கள் ஏற்படுத்துகின்றன.

சங்க இலக்கியத்திலுள்ள ஐந்திணை சார்ந்த பாடல்கள் திணைவாரியாக பகுக்கப்பட்டு திணை சார்ந்த மக்களின் வாழ்வியற் கூறுகள் பிரித்துரைக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஐந்திணை மக்களுடைய தொழில், உணவு, வாழிடம் உள்ளிட்ட கூறுகள் இடம்பெற்றுள்ளன.

குறிஞ்சிநில மக்கள் வேட்டை, இயற்கை உணவு சேகரிப்பு, உணவு உற்பத்தி ஆகிய தொழில்களைச் செய்தனர். யானை, பன்றி, முள்ளம்பன்றி ஆகிய விலங்குகள் உணவிற்காகவும், மதிப்புடைய பொருட்களுக்காகவும் வேட்டையாடப்பட்டுள்ளன. பலா, மா கிழங்குகள், தேன், மூங்கில் நெல் ஆகியவை உணவிற்காக சேகரிக்கப்பட்ட இயற்கை உணவுகள். தினை, ஐவன நெல் ஆகியன மலை மற்றும் அது சார்ந்த பகுதிகளில் பயிரிடப்பட்டன. தினை விதைப்பதிற்குரிய நிலம் காட்டெரிப்பு மூலமாகவும், வெட்டி எறிந்தும், பன்றி உழுத நிலமும் பயன்படுத்தப்பட்டுள்ளன. தினை விதைப்பு ஆண்கள் செய்துள்ளனர். ஆண்களும் பெண்களும் தினைக்காவல் இருந்துள்ளனர். தினை அறுவடை இரவு நேரங்களில் நடைபெற்றுள்ளது. தினை உலர்த்துதல், தினைக் குற்றுதல் ஆகிய பணிகளை பெண்கள் செய்துள்ளனர். குறிஞ்சி நில மக்கள் தேன், கிழங்கு, மா, பலா, கள், பன்றி, முள்ளம்பன்றி, தினை, ஐவன நெல், மூங்கில் அரிசி ஆகிய உணவுகளை உண்டுள்ளனர். அவர்கள் வாழ்ந்த குடியிருப்பு குரம்பை என்று அழைக்கப்பட்டுள்ளது. கல், பாறை, மரம் ஆகியவை சூழ்ந்த பகுதியில் மக்கள் வாழ்ந்துள்ளனர்.

முல்லை நிலத்தில் கால்நடை வளர்ப்பு, புன்செய் வேளாண்மை ஆகிய தொழில்கள் மேற்கொள்ளப்பட்டன. கால்நடை வளர்ப்பில் இடையர், கோவலர் ஈடுபட்டிருந்தனர். இடையர் ஆடுமேய்ப்பவராகவும், கோவலர் பசு முதலானவற்றை மேய்ப்பவராகவும் இருந்துள்ளனர். புன்செய் வேளாண்மையைக் கொல்லை உழவர் செய்தனர். அவர்கள் வரகு, அவரை முதலானவற்றை விளைவித்தனர். பால், தயிர்,

மோர், நெய், வரகு, தினை, கொள், அவரை முதலானவை அவர்களுடைய உணவாகும். புறப்பாடல்களில் புன்செய் வேளாண்மை செய்வோர் இறைச்சி உண்டுள்ளனர். அவர்களுடைய இருப்பிடம் மேய்ச்சல் தொழில் சார்ந்து காடுகளிலும், உழவு சார்ந்து சிற்றூர்களிலும் காணப்படுகின்றன.

மருதத்திணை வயல் வளம் நிறைந்தது. நீர் வளம் கொண்டு நெல் மிகுதியாக விளைவிக்கப்பட்டது. வேளாண்மை சார்ந்து உழவர், உழத்தியர் உழுதல், நாற்றுநடுதல், களையெடுத்தல், கதிர் அரிதல், கடாவிடுதல் ஆகிய தொழில்களைச் செய்தனர். உழவிற்காக கால்நடைகளை வளர்த்தனர். நெல் சோறு, வயல்களில் பிடிக்கப்பட்ட மீன், கள் ஆகியன இவர்களுடைய முக்கிய உணவாக உள்ளன. பாணர் என்ற இனம் மீன் பிடித்து விற்று பண்டமாற்று மூலமாக பொருட்களைப் பெற்று வாழ்ந்துள்ளது.

நெய்தல் திணை பரதவர்கள் மீன் வேட்டையாடுதல், உப்பு விளைவித்தல் ஆகிய தொழில்களைச் செய்தனர். பரதவர்கள் பிடித்த மீன்களை பெண்கள் விற்றனர். பரதவர் விளைவித்த உப்பினை உமணர்கள் வண்டிகளில் ஏற்றிச் சென்று பிற பகுதிகளில் பண்டமாற்று முறையில் விற்றனர். நெய்தல் சார்ந்த பகுதிகளில் வாழ்ந்த பரதவர்கள் மீன் உணவை மிகுதியாக கொண்டிருந்தனர். கள் குடித்தனர். மீன் பிடிக்கப் படகும், மீன் பிடி கருவிகளும் பெற்றிருந்தனர். இரவில் மீன் பிடிக்கச் செல்லும்போது விளக்குகளை எடுத்துச் சென்றனர்.

பாலை மக்கள் ஆநிரை கவர்தல், வழிப்பறிக் கொள்ளை, வேட்டையாடுதல் ஆகிய தொழில்களைச் செய்தனர். நில அமைப்பால் வறண்ட பகுதிகளில் வாழ்ந்த இம்மக்கள் உணவிற்காக இத்தகைய தொழில்களைச் செய்துள்ளனர். மறவர், மழவர், எயினர், வடுக வேடர், திருவேங்கட வேடர் ஆகியோர் பற்றிய குறிப்புகள் பாலைப் பாடல்களில் காணப்படுகின்றன. வேட்டை, இவர்களுக்கு முக்கியத்தொழிலாக இருந்துள்ளது. வேட்டையாடிய உணவை சுட்டும், நீரில் வேக வைத்தும் உண்டனர். பெண்கள் உணவு சேகரிப்பாளர்களாக விளங்குகின்றனர். வறண்ட நீர் இல்லாத கற்கள் நிறைந்த இடங்களில் அவர்களுடைய இருப்பிடமான குறும்பு அமைந்திருந்தது.

திணைமக்களுடைய தொழில், உணவு, இருப்பிடம் முதலான கூறுகள் அவர்கள் அடைந்திருந்த சமூக படிநிலை வளர்ச்சியை எடுத்துரைப்பதாக உள்ளன. இத்தகைய கூறுகளின் அடிப்படையில் தொன்மையான மரபுகளைப் பின்பற்றி வாழ்ந்தவர்களுள் குறிஞ்சி, பாலை ஆகிய திணை மக்கள் பிற திணை மக்களைக்காட்டிலும் முதன்மையானவர்களாக திகழ்கின்றனர். முல்லை நில மக்கள்

அடுத்தகட்ட வளர்ச்சியை அடைந்து உடைமையாளர்களாக மாறி கால்நடை வளர்ப்பு, வேளாண்மை ஆகியவற்றில் முன்னேற்றம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். மீன்பிடித்தல் தொழிலில் வேட்டையாளர்களாக வாழ்ந்த நெய்தல் நில மக்கள் பிற்காலத்தில் ஏற்பட்ட வணிக துறைமுகங்களின் வளர்ச்சியினால் வணிகம் சார்ந்த வாழ்க்கைச் சூழலை அடைந்துள்ளனர். மேற்கூறிய திணை மக்களுடைய வாழ்வியல் கூறுகளிலிருந்து முழுமையான வளர்ச்சியடைந்த வாழ்க்கைச் சூழலுடையவர்களாக மருதத் திணை மக்கள் காணப்படுகின்றனர். அவர்களுடைய தொழில், உணவு, இருப்பிடம் முதலானவை் அவற்றை எடுத்துரைக்கின்றன.

இனக்குழுச் சடங்குகளாக உள்ள மழை வேண்டல், வெறியாட்டு, திருமணம், நடுகல் ஆகியன மந்திரச் சடங்குகளாகவும், மந்திரமும் சமயமும் கலந்த சடங்குகளாகவும் உள்ளன. குறவன் செய்த மழைச்சடங்கு குறிஞ்சி நிலத்தில் உள்ளது போல ஒவ்வொரு திணை சார்ந்தும் மழைச்சடங்கு செய்யப்பட்டுள்ளது. திணை மக்கள் குழுவாக இணைந்துசெய்த மழைச் சடங்கு இலக்கியம் தோறும் அடைந்த மாற்றம், வளர்ச்சி ஆகியன சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. குறிஞ்சித் திணைக்குரிய வெறியாட்டு நிகழ்த்தப்படும் முறை, அதற்கு பயன்படுத்தப்பட்ட பொருட்கள், சடங்கு நிகழ்த்துநர் போன்ற தகவல்கள் காலந்தோறும் பெற்ற மாற்றத்தை இலக்கியங்கள் வாயிலாக விளக்கப்பட்டுள்ளது. திருமணம்பற்றி மிகுதியான பதிவுகள் கிடைக்கப்பெறாத நிலையில் கிடைத்த குறிப்புகளின் அடிப்படையில் மருதம், முல்லை ஆகிய மக்களின் திருமணமுறை ஆராயப்பட்டுள்ளது. மருதநில திருமணச் சடங்குகள் தொத்து மந்திரங்களாக விளங்குகின்றன. முல்லை நிலத்தில் ஏறுதழுவுதல் மூலமாக மணமகனைத் தேர்ந்தெடுக்கும் புதியமணமுறை காணப்படுகின்றது. போரில் உயிர்நீத்த வீரர்களுக்காக எடுக்கப்பட்ட நடுகற்கள் பாலை வழிகளில் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஆநிரை போரில் இறந்தவர்களுக்காக எடுக்கப்பட்டதே மிகுதியாக உள்ளன. நடுகல்லிற்கு மாலை சூட்டினர். வேல், கேடயம் முதலானவற்றைச் சார்த்தி வைத்தனர். பந்தல்போட்டனர். இறைச்சி, கள் ஆகியவற்றை பலிகொடுத்தனர். நாள்தோறும் வழிபடும் வழிபாட்டு முறைக்கு நடுகல் வழிபாடு மாறியுள்ளது.

இனக்குழு வாழ்வாதாரம் திணைவாரியாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஐந்திணை மக்கள் அவர்கள் வாழ்ந்த நிலப்பகுதி அடிப்படையில் அவர்களுக்குரிய வாழ்வாதாரங்கள் எடுத்துக்கூறப்பட்டுள்ளன.

வேட்டை, தினை விதைப்பு, இயற்கை பொருட்கள் சேகரிப்பு ஆகியவற்றைப் பெறும் மலையும் காடும் குறிஞ்சித்திணை மக்களின் வாழ்வாதாரமாக உள்ளன. கால்நடை வளர்ப்பை மேற்கொண்ட முல்லை நிலத்தில் பால்படு பொருட்களை விற்று பண்டமாற்றாக பொருட்களைப் பெற்றனர். புன்செய் வேளாண்மையின் மூலம் வரகு, தினை, அவரை முதலானவற்றை விளைவித்தனர். முல்லைத் திணையில் கால்நடை வளர்ப்பும் புன்செய் வேளாண்மையும் வாழ்வாதாரங்களாக உள்ளன. மருதம் வயல் சார்ந்த நெல்வளத்தை வாழ்வாதாரமாகக் கொண்டுள்ளது. நெய்தல் திணையில் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல் அவற்றை விற்றுப் பண்டமாற்று செய்தல் ஆகியன அம்மக்களுடைய வாழ்வாதாரமாக விளங்குகின்றன. வறண்ட நிலப்பகுதியில் வாழ்ந்த பாலை நில மக்களுக்கு ஆநிரை கவர்தல், வழிப்பறிக் கொள்ளை, வேட்டை ஆகியவை வாழ்வாதாரங்களாக உள்ளன.

புறப்பாடல்களில் இனக்குழு எச்சங்களோடு வாழ்ந்த சீறூர் மன்னர்களின் வாழ்வாதாரமாக ஆநிரைகவர்தல், புன்செய் வேளாண்மை, வேந்துவிடு தொழில் ஆகியன அமைந்துள்ளன.

இனக்குழு கலைமரபு ஐந்திணை சார்ந்தும், ஆற்றுப்படை கலைஞர்கள் சார்ந்தும் பார்க்கப்பட்டுள்ளது. ஐந்திணை மக்கள் தொழில்முறை சாராத கலைஞர்களாவர். இவர்களின் அன்றாட வாழ்க்கையில் இசையும், கூத்தும் கலந்திருந்தன. தங்களுடைய மகிழ்ச்சியை வெளிப்படுத்த ஐந்திணை மக்கள் ஆடிப்பாடி இசைக்கருவிகளை இசைததுள்ளதனர். ஐந்திணை மக்கள் இசைக்கருவிகளை வேட்டை, வேளாண்மை, மகிழ்ச்சி சார்ந்து இசைத்துள்ளனர். குரவை, துணங்கை முதலான கூத்துக்கள் இவர்களால் ஆடப்பட்டுள்ளன.

தொழில்முறை கலைஞர்களாக விளங்கக்கூடிய ஆற்றுப்படைக் கலைஞர்களான பாணர், பொருநர், கூத்தர், விறலி ஆகியோர் பாடல் பாடுவதிலும், இசைக்கருவிகளை இசைப்பதிலும், ஆடற்கலையிலும் சிறந்திருந்துள்ளனர். இவர்கள், நாட்டை ஆண்ட ஆட்சியாளர்களிடமும் பொது மக்களிடமும் கலையை நிகழ்த்திக்காட்டி அதன்மூலம் பெற்ற வருமானத்தை வைத்து வாழ்க்கையை நடத்தியுள்ளனர். நாடோடிகளாகப் பல ஊர்களுக்குப் பயணம் செய்துள்ள இவர்கள் மிகவும் வறுமையான வாழ்க்கைச் சூழலுடன் வாழ்ந்துள்ளனர். இக்கலைஞர்களின் வாழ்வயியலை நெடும்பாட்டுக்களாகிய ஆற்றுப்படை இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

**முதன்மை நூல்கள்**

| | | |
|---|---|---|
| அகநானூறு | 2004 | **நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை** |
| ஐங்குநுறூறு | 2004 | ” |
| கலித்தொகை | 2004 | ” |
| குறுந்தொகை | 2004 | ” |
| நற்றிணை | 2004 | ” |
| பத்துப்பாட்டு | 2004 | ” |
| பதிற்றுப்பத்து | 2004 | ” |
| பரிபாடல் | 2004 | ” |
| புறநானூறு | 2004 | ” |

**துணைமை மூலங்கள்**

| | | |
|---|---|---|
| அம்மன்கிளி முருகதாஸ் | 2006 | **சங்கக் கவிதையாக்கம்: மரபும் மாற்றமும் குமரன் புத்தக இல்லம் கொழும்பு- சென்னை** |
| அருணாசலம். மு. | 2009 | **தமிழ்இசை இலக்கண வரலாறு (தொகுதி- 2) கடவு பதிப்பகம்** |

| | | |
|---|---|---|
| | | மதுரை |
| அறவாணன். க. ப. | 1978 | அற்றை நாள் காதலும் வீரமும்<br>தமிழ்க் கோட்டம்<br>சென்னை |
| எங்கல்ஸ்,<br>(தமிழ். தர்மராஜன். நா) | 2008 | குடும்பம், தனிச்சொத்து<br>அரசு ஆகியவற்றின் தோற்றம்<br>கருத்து = பட்டறை<br>மதுரை |
| காந்தி. க. | 2003 | தமிழர் பழக்க வழக்கங்களும்<br>நம்பிக்கைகளும்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை |
| காந்திதாசன். க. | 2011 | சங்க இலக்கியத்தில்<br>பாணர் வாழ்வியல்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை |
| கிருஷ்ணமூர்த்தி. ச. | 2004 | நடுகற்கள்<br>மெய்யப்பன் பதிப்பகம்<br>சிதம்பரம் |
| குருநாதன். இராம. | 1998 | குறிஞ்சி வளம்<br>வெற்றி மங்கை வெளியீட்டகம்<br>சென்னை |
| கோபாலகிருஷ்ணன். ம. சு. | 1963 | மானிடவியல்<br>தமிழ் வெளியீட்டுக் கழகம்<br>சென்னை |
| சிதம்பரனார். சாமி. | 2006 | பத்துப்பாட்டும்<br>பண்டைத் தமிழரும்<br>அறிவுப் பதிப்பகம்<br>சென்னை |

| | | |
|---|---|---|
| சிவசுப்பிரமணியன். ஆ. | 2010 | மந்திரமும் சடங்குகளும்<br>காலச்சுவடு பதிப்பகம்<br>நாகர்கோவில் |
| சிவத்தம்பி. கா. | 2005 | பண்டைத் தமிழ்ச்<br>சமூகத்தில் நாடகம்<br>குமரன் புத்தக நிலையம்<br>கொழும்பு- சென்னை |
| ” | 2010 | பண்டைத் தமிழ்ச சமூகம்<br>நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்<br>சென்னை |
| சுப்பிரமணியன். கா. | 1982 | சங்க கால சமுதாயம்<br>என். சி. பிஎச்<br>சென்னை |
| செல்வராசு. சிலம்பு. ந. | 2005 | சங்க இலக்கிய மறுவாசிப்பு<br>காவ்யா<br>சென்னை |
| பக்தவத்சல பாரதி | 1990 | பண்பாட்டு மானிடவியல்<br>மணிவாசகர் பதிப்பகம்<br>சென்னை |
| ” | 2008 | தமிழர் மானிடவியல்<br>அடையாளம்<br>சென்னை |
| ” | 2007 | தமிழகப் பழங்குடிகள்<br>அடையாளம்<br>சென்னை |
| பரமசிவன். அரு. | 2004 | தென்னிந்திய இன ஒப்புமையியல்<br>காவ்யா<br>சென்னை. |
| பார்வதியம்மையார். சிவ. | 1983 | பாண் பெரியார் மூவர்<br>மகாலிங்கம் பதிப்பகம் |

| | | |
|---|---|---|
| | | தஞ்சை |
| பாலுச்சாமி. எ. | 2011 | மருதத்தில் மக்கள் வாழ்வியல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை |
| பெருமாள் சாமி. வெ. | 2006 | சங்க காலத் தமிழகத்தின் சமூக நிலை பாரதி புத்தகாலயம் சென்னை |
| மாதையன். பெ. | 2009 | தமிழ்ச்செவ்வியல் படைப்புகள் நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை |
| ” | 2004 | சங்க கால இனக்குழுச் சமுதாயமும் அரசுருவாக்கமும் பாவை பப்ளிகேஷன்ஸ் சென்னை |
| ” | 2010 | சங்க இலக்கியத்தில் வேளாண்சமுதாயம் நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை |
| ” | 2009 | அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும் பாவை பப்ளிகேஷன்ஸ் சென்னை |
| முத்துசாமி. ஆ. | 1993 | சங்க இலக்கியத்தில் ஆயர் இராணி பதிப்பகம் சென்னை |
| ராஜ் கௌதமன். | 2009 | ஆகோள் பூசல் |

| | | |
|---|---|---|
| | | தமிழினி |
| | | சென்னை |
| ,, | 2006 | பாட்டும் தொகையும் |
| | | தொல்காப்பியமும் |
| | | தமிழ்ச் சமூக உருவாக்கமும் |
| | | தமிழினி |
| | | சென்னை |
| ஸ்டீபன். ஞா | 2010 | தொல்காப்பியமும் |
| | | இனவரைவியல் |
| | | கவிரையியலும் |
| | | என். சி. பி எச் |
| | | சென்னை |

**அகராதி**

English Tamil dictionary 1992 , Unisity of madras

Tamil lexicon , Unisity of madras

**ஆய்வேடு**

சத்யா. தே. நிகழ்த்துக்கலைஞர்கள் மரபு- பழந்தமிழ் இலக்கியங்கள்

WORD INDEX FOR CANKAM LITERATURE , 2007

INSTITUTE OF ASIAN STUDIES, Chennai.

**இதழ்**

செல்லப்பெருமாள், இலக்கியத்திற்கான மானிடவியல் அணுகுமுறை, தமிழ் ஆய்வு மையம், பாளையங்கோட்டை, ஆய்வு மலர் 1994

பக்தவத்சல பாரதி சாலினி வாக்குரைத்தல்: இனவரைவியல் நோக்கு, பனுவல்8 அக்டோபர், 2010

பெருமாள் சாமி. வெ. கானவர் தினைவிதைத்தல், கீற்று இணைய இதழ்

பெருமாள் சாமி. வெ. தந்தை வழிச் சமூகம்,, கீற்று இணைய இதழ்

**கட்டுரை**

சிவசுப்பிரமணியன். ஆ. பழந்தமிழகத்தின் இனக்குழு மன்றம்

வானமாலை, நடுகற்களும், நம்பிக்கைகளும் hero stons published by Archaeology, Tamil nadu 1974

மகாதேவன். வே. hero stons published by Archaeology, Tamil nadu 1974 A

தமிழர் நாகரிகம், தொகுதி, 4 எண். 154

**களஞ்சியங்கள்**

வாழ்வியற் களஞ்சியம், தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை

# சங்க இலக்கியத்தில் இனக்குழு மரபு

முனைவர் பட்டப்பேற்றிற்காக

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு

அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**ப. கோமளா**

நெறியாளர்

**முனைவர் கோ. பழனி**

உதவிப் பேராசிரியர்



**தமிழ் இலக்கியத்துறை**

சென்னைப் பல்கலைக்கழகம்

பரிதிமாற் கலைஞர் வளாகம்

சென்னை – 600 005.

செப்டம்பர்- 2013

**சங்க இலக்கியத்தில் இனக்குழு** மரபு - என்னும் தலைப்பிலான இவ்வாய்வு கண்ட முடிவுகள் பின்வருமாறு தொகுத்துரைக்கப்படுகின்றன.

மனித இனத்தின் தோற்றம், வளர்ச்சி, சமூக அமைப்பு, பழக்க வழக்கம், பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றை அறிவியல் அடிப்படையில் ஆராயும் வகையில் மானிடவியல் துறை தோன்றியது. இது மனிதனைப் பற்றிய முழுமையான படிப்பாக விளங்குகிறது. மேற்கத்திய ஆய்வுப்புலங்களில் ஒன்றான இத்துறையை வளர்த்தெடுத்தவர்களும் மேலைநாட்டினராகவே உள்ளனர். தொடக்ககால மானிடவியல் ஆய்வுகள், பயணிகளாலும், சமயப்பரப்பிகளாலும், அரசு அதிகாரிகளாலும் நிகழ்த்தப்பட்டன. அதன் பின்னர் கல்வி சார்ந்து மானிடவியல் துறை உருவானது. கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் முழுநேர மானிடவியலாளர்கள் தோன்றி திணைக்குடிகள் பற்றிய ஆய்வுகளைச் செய்தனர். கி.பி. 20-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட புதிய கண்டுபிடிப்புகளின் விளைவாக மனித தொடர்புகள் பெருகின. பல்வேறு துறைசார்ந்து கோட்பாடுகள் உருவாகின. இவற்றின் பயனாக மானிடவியல் துறை துல்லியமான ஆய்வு நெறிமுறைகளை உருவாக்கிக்கொண்டது.

ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னரே இந்தியாவில் மானிடவியல் துறை உருவானது. மானிடவியல் கல்வி சார்ந்து முதன்முதலில் கொல்கத்தா பல்கலைக்கழகத்தில் 1920-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டடது. மானிடவியல் ஆய்வுக் கழகங்கள் பல உருவாகிய சூழலில் இந்திய மானிடவியலின் தந்தையாக சரத் சந்திர ராய் விளங்கினார். இந்திய மானிடவியல் அறிஞர்கள் ஆற்றிய பணிகள் நூல்களாகவும் கட்டுரைகளாகவும் வெளிவந்தன. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் இந்திய மானிடவியல் அறிஞர்கள் அமெரிக்க மானிடவியல் அறிஞர்களோடு இணைந்து புதிய ஆய்வுகளை நிகழ்த்தினர்.

பல்துறை சார்ந்த அறிவுத்தேடலாக விளங்கும் மானிடவியல் பல உட்பிரிவுகளைத் தோற்றுவித்தது. அவற்றுள் ஒன்றாகிய பண்பாட்டு மானிடவியல் இனக்குழுவியல், இனக்குழு ஒப்பாய்வியல் என்னும் இரண்டு முக்கிய உட்பிரிவுகளைக் கொண்டிருந்தது. உலக மக்கள் உடலாலும் வாழும் இடச்சூழலாலும் தோற்றத்தில் வேறுபாடுகளுடன் காணப்படுகின்றனர். அத்தகைய இனங்களின் பண்பாட்டை முழுமையாகப் புரிந்துகொண்டு தொகுத்து வழங்குவது இனக்குழுவியல். அவ்வாறு தொகுக்கப்பட்ட கூறுகளை பிற குழுக்களுடன் ஒப்பிடுவது இனக்குழு ஒப்பாய்வியல்.

இலக்கியத்தைத் தரவாகக் கொண்டு மானிடவியல் ஆய்வு நிகழ்த்தும் முறையை இலக்கியமானிடவியல் என்றனர். இத்தகைய இலக்கிய மானிடவியல் இலக்கியம் எழுந்த காலத்தின் சமூகக் கூறுகளை அறிவிப்பதோடு அவற்றை சமகாலத்தோடு

பொருத்திப்பார்க்கவும் பயன்படுகிறது. அவ்வகையில் சங்க இலக்கியம் இனக்குழுவியல் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டு, சங்ககால ஐந்திணை மக்களுடைய வாழ்க்கைக் கூறுகள் ஆராயப்பட்டுள்ளன.

தமிழகத்தில் மானிடவியல் ஆய்வுகள் தொடக்க காலத்தில் நாட்டார் வழக்காற்றியல் துறைசார்ந்து அறிமுகமானது. பின்னர் மானிடவியல் அறிமுகத்தை ஏற்படுத்தும் வகையில் பல நூல்களும் கட்டுரைகளும் எழுந்தன. தற்காலத்தில் மானிடவியல் துறை சார்ந்த அறிமுகத்தை கோட்பாடு சார்ந்து பக்தவத்சல பாரதியின் நூல்கள் ஏற்படுத்துகின்றன.

சங்க இலக்கியத்திலுள்ள ஐந்திணை சார்ந்த பாடல்கள் திணைவாரியாக பகுக்கப்பட்டு திணை சார்ந்த மக்களின் வாழ்வியற் கூறுகள் பிரித்துரைக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஐந்திணை மக்களுடைய தொழில், உணவு, வாழிடம் உள்ளிட்ட கூறுகள் இடம்பெற்றுள்ளன.

குறிஞ்சிநில மக்கள் வேட்டை, இயற்கை உணவு சேகரிப்பு, உணவு உற்பத்தி ஆகிய தொழில்களைச் செய்தனர். யானை, பன்றி, முள்ளம்பன்றி ஆகிய விலங்குகள் உணவிற்காகவும், மதிப்புடைய பொருட்களுக்காகவும் வேட்டையாடப்பட்டுள்ளன. பலா, மா கிழங்குகள், தேன், மூங்கில் நெல் ஆகியவை உணவிற்காக சேகரிக்கப்பட்ட இயற்கை உணவுகள். தினை, ஐவன நெல் ஆகியன மலை மற்றும் அது சார்ந்த பகுதிகளில் பயிரிடப்பட்டன. தினை விதைப்பதிற்குரிய நிலம் காட்டெரிப்பு மூலமாகவும், வெட்டி எறிந்தும், பன்றி உழுத நிலமும் பயன்படுத்தப்பட்டுள்ளன. தினை விதைப்பு ஆண்கள் செய்துள்ளனர். ஆண்களும் பெண்களும் தினைக்காவல் இருந்துள்ளனர். தினை அறுவடை இரவு நேரங்களில் நடைபெற்றுள்ளது. தினை உலர்த்துதல், தினைக் குற்றுதல் ஆகிய பணிகளை பெண்கள் செய்துள்ளனர். குறிஞ்சி நில மக்கள் தேன், கிழங்கு, மா, பலா, கள், பன்றி, முள்ளம்பன்றி, தினை, ஐவன நெல், மூங்கில் அரிசி ஆகிய உணவுகளை உண்டுள்ளனர். அவர்கள் வாழ்ந்த குடியிருப்பு குரம்பை என்று அழைக்கப்பட்டுள்ளது. கல், பாறை, மரம் ஆகியவை சூழ்ந்த பகுதியில் மக்கள் வாழ்ந்துள்ளனர்.

முல்லை நிலத்தில் கால்நடை வளர்ப்பு, புன்செய் வேளாண்மை ஆகிய தொழில்கள் மேற்கொள்ளப்பட்டன. கால்நடை வளர்ப்பில் இடையர், கோவலர் ஈடுபட்டிருந்தனர். இடையர் ஆடுமேய்ப்பவராகவும், கோவலர் பசு முதலானவற்றை மேய்ப்பவராகவும் இருந்துள்ளனர். புன்செய் வேளாண்மையைக் கொல்லை உழவர் செய்தனர். அவர்கள் வரகு, அவரை முதலானவற்றை விளைவித்தனர். பால், தயிர்,

மோர், நெய், வரகு, தினை, கொள், அவரை முதலானவை அவர்களுடைய உணவாகும். புறப்பாடல்களில் புன்செய் வேளாண்மை செய்வோர் இறைச்சி உண்டுள்ளனர். அவர்களுடைய இருப்பிடம் மேய்ச்சல் தொழில் சார்ந்து காடுகளிலும், உழவு சார்ந்து சிற்றூர்களிலும் காணப்படுகின்றன.

மருதத்திணை வயல் வளம் நிறைந்தது. நீர் வளம் கொண்டு நெல் மிகுதியாக விளைவிக்கப்பட்டது. வேளாண்மை சார்ந்து உழவர், உழத்தியர் உழுதல், நாற்றுநடுதல், களையெடுத்தல், கதிர் அரிதல், கடாவிடுதல் ஆகிய தொழில்களைச் செய்தனர். உழவிற்காக கால்நடைகளை வளர்த்தனர். நெல் சோறு, வயல்களில் பிடிக்கப்பட்ட மீன், கள் ஆகியன இவர்களுடைய முக்கிய உணவாக உள்ளன. பாணர் என்ற இனம் மீன் பிடித்து விற்று பண்டமாற்று மூலமாக பொருட்களைப் பெற்று வாழ்ந்துள்ளது.

நெய்தல் திணை பரதவர்கள் மீன் வேட்டையாடுதல், உப்பு விளைவித்தல் ஆகிய தொழில்களைச் செய்தனர். பரதவர்கள் பிடித்த மீன்களை பெண்கள் விற்றனர். பரதவர் விளைவித்த உப்பினை உமணர்கள் வண்டிகளில் ஏற்றிச் சென்று பிற பகுதிகளில் பண்டமாற்று முறையில் விற்றனர். நெய்தல் சார்ந்த பகுதிகளில் வாழ்ந்த பரதவர்கள் மீன் உணவை மிகுதியாக கொண்டிருந்தனர். கள் குடித்தனர். மீன் பிடிக்கப் படகும், மீன் பிடி கருவிகளும் பெற்றிருந்தனர். இரவில் மீன் பிடிக்கச் செல்லும்போது விளக்குகளை எடுத்துச் சென்றனர்.

பாலை மக்கள் ஆநிரை கவர்தல், வழிப்பறிக் கொள்ளை, வேட்டையாடுதல் ஆகிய தொழில்களைச் செய்தனர். நில அமைப்பால் வறண்ட பகுதிகளில் வாழ்ந்த இம்மக்கள் உணவிற்காக இத்தகைய தொழில்களைச் செய்துள்ளனர். மறவர், மழவர், எயினர், வடுக வேடர், திருவேங்கட வேடர் ஆகியோர் பற்றிய குறிப்புகள் பாலைப் பாடல்களில் காணப்படுகின்றன. வேட்டை, இவர்களுக்கு முக்கியத்தொழிலாக இருந்துள்ளது. வேட்டையாடிய உணவை சுட்டும், நீரில் வேக வைத்தும் உண்டனர். பெண்கள் உணவு சேகரிப்பாளர்களாக விளங்குகின்றனர். வறண்ட நீர் இல்லாத கற்கள் நிறைந்த இடங்களில் அவர்களுடைய இருப்பிடமான குறும்பு அமைந்திருந்தது.

திணைமக்களுடைய தொழில், உணவு, இருப்பிடம் முதலான கூறுகள் அவர்கள் அடைந்திருந்த சமூக படிநிலை வளர்ச்சியை எடுத்துரைப்பதாக உள்ளன. இத்தகைய கூறுகளின் அடிப்படையில் தொன்மையான மரபுகளைப் பின்பற்றி வாழ்ந்தவர்களுள் குறிஞ்சி, பாலை ஆகிய திணை மக்கள் பிற திணை மக்களைக்காட்டிலும் முதன்மையானவர்களாக திகழ்கின்றனர். முல்லை நில மக்கள்

அடுத்தகட்ட வளர்ச்சியை அடைந்து உடைமையாளர்களாக மாறி கால்நடை வளர்ப்பு, வேளாண்மை ஆகியவற்றில் முன்னேற்றம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். மீன்பிடித்தல் தொழிலில் வேட்டையாளர்களாக வாழ்ந்த நெய்தல் நில மக்கள் பிற்காலத்தில் ஏற்பட்ட வணிக துறைமுகங்களின் வளர்ச்சியினால் வணிகம் சார்ந்த வாழ்க்கைச் சூழலை அடைந்துள்ளனர். மேற்கூறிய திணை மக்களுடைய வாழ்வியல் கூறுகளிலிருந்து முழுமையான வளர்ச்சியடைந்த வாழ்க்கைச் சூழலுடையவர்களாக மருதத் திணை மக்கள் காணப்படுகின்றனர். அவர்களுடைய தொழில், உணவு, இருப்பிடம் முதலானவை் அவற்றை எடுத்துரைக்கின்றன.

இனக்குழுச் சடங்குகளாக உள்ள மழை வேண்டல், வெறியாட்டு, திருமணம், நடுகல் ஆகியன மந்திரச் சடங்குகளாகவும், மந்திரமும் சமயமும் கலந்த சடங்குகளாகவும் உள்ளன. குறவன் செய்த மழைச்சடங்கு குறிஞ்சி நிலத்தில் உள்ளது போல ஒவ்வொரு திணை சார்ந்தும் மழைச்சடங்கு செய்யப்பட்டுள்ளது. திணை மக்கள் குழுவாக இணைந்துசெய்த மழைச் சடங்கு இலக்கியம் தோறும் அடைந்த மாற்றம், வளர்ச்சி ஆகியன சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. குறிஞ்சித் திணைக்குரிய வெறியாட்டு நிகழ்த்தப்படும் முறை, அதற்கு பயன்படுத்தப்பட்ட பொருட்கள், சடங்கு நிகழ்த்துநர் போன்ற தகவல்கள் காலந்தோறும் பெற்ற மாற்றத்தை இலக்கியங்கள் வாயிலாக விளக்கப்பட்டுள்ளது. திருமணம்பற்றி மிகுதியான பதிவுகள் கிடைக்கப்பெறாத நிலையில் கிடைத்த குறிப்புகளின் அடிப்படையில் மருதம், முல்லை ஆகிய மக்களின் திருமணமுறை ஆராயப்பட்டுள்ளது. மருதநில திருமணச் சடங்குகள் தொத்து மந்திரங்களாக விளங்குகின்றன. முல்லை நிலத்தில் ஏறுதழுவுதல் மூலமாக மணமகனைத் தேர்ந்தெடுக்கும் புதியமணமுறை காணப்படுகின்றது. போரில் உயிர்நீத்த வீரர்களுக்காக எடுக்கப்பட்ட நடுகற்கள் பாலை வழிகளில் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஆநிரை போரில் இறந்தவர்களுக்காக எடுக்கப்பட்டதே மிகுதியாக உள்ளன. நடுகல்லிற்கு மாலை சூட்டினர். வேல், கேடயம் முதலானவற்றைச் சார்த்தி வைத்தனர். பந்தல்போட்டனர். இறைச்சி, கள் ஆகியவற்றை பலிகொடுத்தனர். நாள்தோறும் வழிபடும் வழிபாட்டு முறைக்கு நடுகல் வழிபாடு மாறியுள்ளது.

இனக்குழு வாழ்வாதாரம் திணைவாரியாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஐந்திணை மக்கள் அவர்கள் வாழ்ந்த நிலப்பகுதி அடிப்படையில் அவர்களுக்குரிய வாழ்வாதாரங்கள் எடுத்துக்கூறப்பட்டுள்ளன.

வேட்டை, தினை விதைப்பு, இயற்கை பொருட்கள் சேகரிப்பு ஆகியவற்றைப் பெறும் மலையும் காடும் குறிஞ்சித்திணை மக்களின் வாழ்வாதாரமாக உள்ளன. கால்நடை வளர்ப்பை மேற்கொண்ட முல்லை நிலத்தில் பால்படு பொருட்களை விற்று பண்டமாற்றாக பொருட்களைப் பெற்றனர். புன்செய் வேளாண்மையின் மூலம் வரகு, தினை, அவரை முதலானவற்றை விளைவித்தனர். முல்லைத் திணையில் கால்நடை வளர்ப்பும் புன்செய் வேளாண்மையும் வாழ்வாதாரங்களாக உள்ளன. மருதம் வயல் சார்ந்த நெல்வளத்தை வாழ்வாதாரமாகக் கொண்டுள்ளது. நெய்தல் திணையில் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல் அவற்றை விற்றுப் பண்டமாற்று செய்தல் ஆகியன அம்மக்களுடைய வாழ்வாதாரமாக விளங்குகின்றன. வறண்ட நிலப்பகுதியில் வாழ்ந்த பாலை நில மக்களுக்கு ஆநிரை கவர்தல், வழிப்பறிக் கொள்ளை, வேட்டை ஆகியவை வாழ்வாதாரங்களாக உள்ளன.

புறப்பாடல்களில் இனக்குழு எச்சங்களோடு வாழ்ந்த சீறூர் மன்னர்களின் வாழ்வாதாரமாக ஆநிரைகவர்தல், புன்செய் வேளாண்மை, வேந்துவிடு தொழில் ஆகியன அமைந்துள்ளன.

இனக்குழு கலைமரபு ஐந்திணை சார்ந்தும், ஆற்றுப்படை கலைஞர்கள் சார்ந்தும் பார்க்கப்பட்டுள்ளது. ஐந்திணை மக்கள் தொழில்முறை சாராத கலைஞர்களாவர். இவர்களின் அன்றாட வாழ்க்கையில் இசையும், கூத்தும் கலந்திருந்தன. தங்களுடைய மகிழ்ச்சியை வெளிப்படுத்த ஐந்திணை மக்கள் ஆடிப்பாடி இசைக்கருவிகளை இசைததுள்ளதனர். ஐந்திணை மக்கள் இசைக்கருவிகளை வேட்டை, வேளாண்மை, மகிழ்ச்சி சார்ந்து இசைத்துள்ளனர். குரவை, துணங்கை முதலான கூத்துக்கள் இவர்களால் ஆடப்பட்டுள்ளன.

தொழில்முறை கலைஞர்களாக விளங்கக்கூடிய ஆற்றுப்படைக் கலைஞர்களான பாணர், பொருநர், கூத்தர், விறலி ஆகியோர் பாடல் பாடுவதிலும், இசைக்கருவிகளை இசைப்பதிலும், ஆடற்கலையிலும் சிறந்திருந்துள்ளனர். இவர்கள், நாட்டை ஆண்ட ஆட்சியாளர்களிடமும் பொது மக்களிடமும் கலையை நிகழ்த்திக்காட்டி அதன்மூலம் பெற்ற வருமானத்தை வைத்து வாழ்க்கையை நடத்தியுள்ளனர். நாடோடிகளாகப் பல ஊர்களுக்குப் பயணம் செய்துள்ள இவர்கள் மிகவும் வறுமையான வாழ்க்கைச் சூழலுடன் வாழ்ந்துள்ளனர். இக்கலைஞர்களின் வாழ்வயியலை நெடும்பாட்டுக்களாகிய ஆற்றுப்படை இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.